உ

# திருக்குறட் குமரேச வெண்பா

மூலமும்—உரையும்

# பொருட்பால்

(இரண்டாம் பாகம்)

ஆசிரியர்
ஜெகவீரபாண்டியனார்

மூன்றும் பதிப்பு

மதுரை,
வாசுகி அச்சகத்தில் பதிப்பிக்கப் பெற்றன.
விசுவாவசு ௵ ஆவணி ௴
1965

## இதில் அடங்கி யுள்ளவை.

ஆன்ற அறிவு நலமுடைய சான்ரூேர் உறவுறின் அரிய பல நன்மைகள் எவ்வழியும் வளமாய் உளவாம்.

இவ்வுண்மை அத்திபதிபால் அறிய வந்தது

சரிதம்.

இவன் காந்தார நாட்டிலுள்ள பூருவ தேசத்து வேந்தன். **இடவயம்** என்னும் நகரிலிருந்து இவன் அரசு புரிந்து வந்தான். இவனுடைய மனைவி பெயர் நீலபதி. பேரழகுடைய அவளோடமர்ந்து இனிய போகங்களை நுகர்ந்து அரிய காரியங்களை ஆராய்ந்து ஆட்சியை இவன் மாட்சியோடு புரிந்தான். சிறந்த நீதிமானுன இவன் உயர்ந்த மதிமான்களையே தனக்கு உறுதித் துணையாகக் கருதி எவ்வழியும் உரிமையுடன் பேணி வந்தான். **பிரமதருமா்** என்னும் பெரியவர்பால் இவன் பேரன்பு பூண்டு ஒழுகினுன். முன்பு இவனுக்கு உறவினராயிருந்த அவர் பின்பு யாவும் துறந்துபோய் அருந்தவம் புரிந்து சிறந்த முனிவராய் உயர்ந்து விளங்கினுர். எல்லாம் துறந்த அவரது உள்ளம் உவந்து வர உரிமை கூர்ந்து வந்தமையால் இம் மன்னன்பால் அம் மாதவர் ஆதரவு புரிந்து வந்தார். வருங்கால் ஒருநாள் தமது யோக சித்தியால் உணர்ந்ததை இவனுக்கு அவர் உணர்த்தி யருளினுர்: "அரசே! இற்றைக்கு ஏழாம் நாளில் இங்கே ஒரு பூகம்பம் உண்டாம்; இந்நகரும் நாடும் பாதலத்தில் பதிந்து பாழாம்; முன்னதாக நின் குடியோடு வேறிடம் செல்க" என்று கூறினுர். அப் பெரியவர் கூறியபடியே உரியவர்களோடு இவன் அயலிடம் போய் அமைவுடன் இருந்தான். அவர் உரைத்தபடியே குறித்த நாளில் அந்த அழிவு நேர்ந்தது. முன்பு இடம் பெயர்ந்து உய்ந்துபோன யாவரும் அவரைத் தொழுது துதித்து வியந்து புகழ்ந்து போற்றினர். ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் இது நிகழ்ந்துளது. அயலே வருவது ஈண்டு அறிய வுரியது.

காந்தாரம் என்னும் கழிபெரு நாட்டுப்
பூருவ தேயம் பொறைகெட வாழும்

அத்தி பதியெனும் அரசாள் வேந்தன்
மைத்துனன் ஆகிய பிரம தருமன்!
ஆங்கவன் தன்பால் அணைந்தறன் உரைப்போய்
தீங்கனி நாவல் ஓங்குமித் தீவிடை
இன்றேழ் நாளில் இருநில மாக்கள்
நின்றுநடுக் கெய்த நீணில வேந்தே!
பூமி நடுக்குறூஉம் போழ்தத் திந்நகர்
நாக நன்னாட்டு நானூறு யோசனை
வியன்பா தலத்து வீழ்ந்துகே டெய்தும்
இதன்பால் ஒழிகென, இருநில வேந்தனும்
மாபெரும் பேரூர் மக்கட் கெல்லாம்
ஆவும் மாவும் கொண்டுகழி கென்றே
பறையிற் சாற்றி நிறையருந் தானையோடு
இடவயம் என்னும் இரும்பதி நீங்கி
வடவயின் அவந்தி மாநகர்ச் செல்வோன்,
காயங் கரையெனும் பேரியாற் றடைகரைச்
சேயுயர் பூம்பொழிற் பாடிசெய் திருப்ப
எங்கோன் நீயாங் குரைத்தவந் நாளிடைத்
தங்கா தந்நகர் வீழ்ந்துகே டெய்தலும்
மருளறு புலவநின் மலரடி யதனை
அரசொடு மக்கள் எல்லாம் ஈண்டிச்
சூழ்ந்தனர் வணங்கித் தாழ்ந்துபல ஏத்திய:''

(மணிமேகலை 9)

நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளை இதில் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். அரிய ஞானமுடைய பெரியாரைப் பேணித் துணைக்கொண்டமையால் அல்லல் யாதும் உறாமல் நல்ல நிலைமையில் இவ்வேந்தன் தலைமையாய் வாழ்ந்தான். மாந்தர் எல்லாரும் இவனை மகிழ்ந்து வாழ்த்தினர். அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மையைத் திறன் அறிந்து அரசன் தேர்ந்து கொள்ள வேண்டும்; அதனால் ஆர்ந்த இன்பம் உண்டாம் என்பதை உலகம் இவன்பால் ஓர்ந்து கொண்டது.

**தரும நெறிதெரிந்த தக்கவரைச் சாரின்**
**இருமையும் இன்பம் தரும்.**

ஆன்ற அறிஞரை ஆதரித்துக் கொள்க.

442. கண்டான் உயர்சோம காந்தன் பிருகுவையேன்
கொண்டான்பின் பேணிக் குமரேசா—தண்டாமல்
உற்றநோய் நீக்கி உறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். (உ)

இ-ள்

குமரேசா! பிருகு முனிவரைச் சோமகாந்தன் என்னும் வேந்தன் ஏன் உரிமையுடன் பேணிக்கொண்டான்? எனின், உற்ற நோய் நீக்கி உறுஅமை முற்காக்கும் பெற்றியார்ப் பேணிக் கொளல் என்க.

நேர்ந்த துன்பத்தை நீக்கி வேறு துயரம் நேராமல முன் அறிந்து காக்க வல்ல நல்ல தன்மையாளரை உண்மையான உறவாப் போற்றிக் கொள்ளுக.

தெளிந்த அறிவுடையாரைத் தேர்ந்துகொள் என்று முன்பு குறித்தார்; இதில், இடர் களைந்து இதம் புரிவாரைச் சார்ந்து கொள் என்கின்றார்.

உற்றநோய் என்றது முன்னதாக மூண்டு பற்றிய துன்பங்களை. உறுமை = பின்பு உறுதபடி. அளபெடை செய்யுள் ஓசையை நிறைக்க வந்தது.

பெற்றி=தன்மை: பான்மை. இயல்பாகப் பெற்றுள்ள சீர்மையான நீர்மை பெற்றி என வுற்றது.

பேணல்=விரும்பிப் போற்றல்.

பெரியோர்களை ஏன் பேணிக்கொள்ள வேண்டும்? என்பார்க்கு, அவரால் விளைந்து வருகிற உறுதிநலன்களை இதில் உணர்த்தி யருளினர். நோயை நீக்கியருளும் மருந்தும், மருத்துவரும்போல் சிறந்த பெருந்தகைமையாளர் ஒதுங்கி யுறைந்துள்ளனர். அவரை நாடித் தேடி நயந்து கொள்பவர் நலம்பல பெறுகின்றார்.

நீக்கிக் காக்கும் பெற்றியார் என்றதனால் அவரது நிலைமையும் தலைமையும் தெரிய வந்தன. இத்தகைய பெரியோர்கள் உள்ளம் உவந்து தன்பால் அன்பு புரிந்து வரப் பண்பு புரிந்து வேந்தன் ஒழுகி வர வேண்டும்.

நாடு கேடுறுமல் நன்கு காக்க உரிய அரசன் பீடை யாதும் உறுமல் பேணிக் காக்க வல்லவர் பெரியோரே. அவரை உரிமையோடு போற்றிக் கொள்பவர் சிறுமை யாதும் நேராமல் யாண்டும் பெருமை பெற்று வருகின்ருர். ஆன்ற பெரியோர்கள் அதிசய ஆற்றல்கள் உடையவர் ஆதலால் அவரைச் சேர்ந்தவர்கள் யாவரும் சிறந்த மேன்மைகளை அடைந்து கொள்ளுகின்றனர்.

கங்கைநதி பாவம் சசிதாபம் கற்பகம்தான்
மங்க லுறும்வறுமை மாற்றுமே—துங்கமிகும்
இக்குணமோர் மூன்றும் பெரியோ ரிடம்சேரின்
அக்கணமே போமென் றறி. (நீதிசாரம், 99)

கங்கை நதி பாவத்தை நீக்கும்; கற்பகதரு வறுமையைப் போக்கும்; திங்கள் வெப்பத்தை ஒழிக்கும். தெய்வத் திரவியங்களான இவை தனித்தனியே நின்று செய்வதைப் பெரியோர் ஒருங்கே செய்தருளுவர். நோய் வறுமை தாபங்களை நீக்கி, சுகம் செல்வம் இதங்களைத் தம்மைச் சார்ந்தவர்க்குச் செம்மையா யருளுவர் ஆதலால் பெரியோரை உரிமையுடன் பேணிக் கொள்பவர் அரிய நன்மைகள் யாவும் பெற்று மகிழ்கின்ருர். பெரியாரது பெருமையை விளக்கித் தெளிவாய் வந்துள்ள இக்கவியின் சுவை இங்கே கருதி யுணர வுரியது.

நெறி நின்று ஒழுகி வருதலால் பெரியோர்களிடம் தெய்வத் திருவருள் நிறைந்து வருகிறது. வரவே அவரை உறவா யடைந்தவர்களும் துயர்நீங்கி உயர்ந்தவர்களாய் ஒளிபெற்று உவந்து நிற்கின்ருர்.

தவங்களால் தெய்வ நீரால் சாத்திரங் களினல் போகாப்
பவங்களை உயர்ந்தோர் பாதம் பணிந்துபற்றறுக்கவேண்டும்
அவங்களாம்காமம் கோபம்அறவும் தேய்ந்து இயற்கையான
சுவங்களினடந்துநன்னூற்றுறைநின்ரேர்உயர்ந்தமேலோர்.
(வாசிட்டம்)

உயர்ந்தோரைப் பணிந்து பேணிக்கொண்டால்

பிழைகள் ஒழிந்து போம்; பிறவி நோய் நீங்கும்; பேரின்பம் ஓங்கும் என இது குறித்துள்ளது.

அல்லலை நீக்கியருளும் நல்லவரை நாடித் தெளிந்து நயந்து சேரின் நலன்கள் பல விளைந்து வரும்.

இவ்வுண்மை சோமகாந்தன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் சவுராட்டிர தேசத்து வேந்தன். அருந்திறலும் பெருந்தகவும் பேரறிவும் உடையவன். கலைகள் பல பயின்றவன். நீதிமுறைகளை நன்கு தெரிந்தவன். தனது ஆட்சிக்கு மாட்சியாகத் தேர்ந்த அமைச்சர் நால்வரை நன்கு அமைத்துக்கொண்டான். **உருவவான், வித்தியா தீசன், கேமங்கரன், சுபலன்** எனப் பேர்பெற்ற மந்திரிகளை நேர் வைத்து யாண்டும் சீர்மை தோய்ந்துவர இவன் கூர்மையாய் அரசு புரிந்து வந்தான். வருங்கால் பழவினை வயத்தால் இவனுடலில் தொழுநோய் தோன்றியது. அதனால் உள்ளம் வருந்திய இவன் அரசுரிமையைத் தனது புதல்வன்பால் தந்துவிட்டு அருந்தவமுடைய பெரியோர்களை நாடி வனம் புகுந்தான். அங்கு பிருகு முனிவரைக் கண்டான். அவரடியில் விழுந்து தொழுது உற்ற துயரை உரிமையுடன் உரைத்தான். உரைகள் அறிவு நலன்கள் சுரந்து பரிவு தோய்ந்து வந்தன.

இம்மையிலே பாவவினை யாதுமிழைத் தேனல்லேன்;
அம்மையிலே பெரும்பாவம் ஆற்றினேன்; ஆதலினால்
உம்மையிலே பெருங்கதிக்காம் உறுதியுமிங் கேயழியச்
செம்மையிலாக் கொடும்பிணிஎன் தேகமடர்த் தெழுந்ததுவே.

அருந்தவத்தால் தானத்தால் அவுடதமந் திரங்களினால்
வருந்தியவிப் பிணிவருந்த வருந்தியுந்தான் வருந்தாமல்
இருந்தவையெ லாம்எருநீர் எனவளர்ந்து விளைந்ததினிப்
பெருந்தவ! நின் அருளன்றிப் பெயர்க்குமொரு மருந்தில்லை.

விலங்குபற வைகள்மற்றும் விழுத்தவநின் ஆச்சிரமத்
திலங்குபகை வயிரமுரு தின்பமுறக் காண்டலினால்

துலங்கவரும்பிணிப்பகையும்தொழுதகையேன்தனைவருத்தா
தலங்கியினி அழியுமெனக் கையமிலை ஐயமிலை. (3)

எனவுரைப்பப் பிருகுளனும் இருந்தவத்தோன் அருள்கூர்ந்து
தனதுளத்துத் தியானித்துச் சார்ந்தபிணி முதல்நாடி
நினதுவிழை வினைமன்னா! நின்மலனார் அருள்கூட்டும்
மனமுனைந்து வருந்தாது வருமிளைப்பா றுதியென்றான்.
(விநாயக புராணம்)

அரசனுடைய பரிவுரைகளைக் கேட்டு உளம் மிக இரங்கி முனிவர் இவ்வாறு ஆற்றித் தேற்றினர். நோய் புகுந்த காரணத்தைத் தமது யோக சித்தியால் உணர்ந்து அதனை அறவே நீக்கியருளினர். பிணி நீங்கிய மன்னன் பெரு மகிழ்வடைந்து அவரைப் போற்றித் துதித்தான். பின்பு ஆட்சியை மாட்சியாய் நடாத்தினன். உற்ற நோயை நீக்கிக் காக்கும் பெற்றியாரை அரசன் பேணிக் கொள்ள வேண்டும்; அங்ஙனம் கொண்டால் கொடிய துயரங்கள் யாவும் நீங்கி நெடிய மகிழ்ச்சி யடைவன் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

**அல்லல் அகற்றி அருள்புரியும் நல்லோரை**
**ஒல்லையில் சேர்க வுணர்ந்து.**

உயர்ந்தாரை ஓர்ந்து போற்றுக.

---

443. திண்டோள் உயர்தக்கன் தேர்ந்தேனோ முற்கலரைக்
கொண்டான் தமராக் குமரேசா—கண்ட
அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். (ங)

இ-ள்.

குமரேசா! முற்கல முனிவரைத் தக்கன் ஏன் உறவாக உவந்து போற்றி உரிமையுடன் பேணிக் கொண்டான்? எனின், பெரியாரைப் பேணித் தமராக் கொளல் அரியவற்றுள் எல்லாம் அரிதே என்க.

பெறலரிய பெரும்பேறு தெரிய வந்தது.

மேலான பெரியோர்களைத் தனக்கு இனிய உறவினராக அரசன் போற்றிக்கொள்வது அரிய செயல்கள் எவற்றினும் மிகவும் அரியதே யாம்.

தமர் = தம்மவர்; உறவினர். தமக்கு இதம்புரியும் நீர்மையர் தமர் என வந்தார். அரிய பெரியாரை உரியவராகப் பெறுவது பெரிய பேறும்.

அரியவற்றுள் = அரிய பொருள்களுள். வருந்தி முயன்று உரிமையோடு பெறவுரிய அருமையான செல்வங்களுள்ளே மிகவும் பெருமையான திருவை ஈண்டு அறிய நேர்ந்துள்ளோம்.

மனிதன் விழைந்து யாண்டும் உவந்து பெறவுரிய பொருள்கள் பல. தெளிந்த கல்வி, சிறந்த செல்வம், நல்ல மனைவி, அழகான இல்லம் முதலிய பல்வகைகளினும் உயர்ந்தது பெரியோர்களுடைய உறவே. பெரியோர் யார்? செயற்கு அரிய செயல்களைச் செய்பவர்; அரிய பல குண நீர்மைகள் உடையவர்; தத்துவங்களைத் தெளிந்த உத்தமர். இத்தகைய மேலோரை உறவாகப் பெற்றவன் எத்தகைய இடர்களையும் எளிதே நீங்கி இம்மையும் மறுமையும் இன்பம் மிகப் பெறுகின்றான்.

உள்ளத்தில் மாசு இன்றி உயர்ந்துள்ளவர் ஆதலால் தம்மைத் தமராகப் பெற்றவரையும் மாசுநீக்கித் தேசுமிகச் செய்கின்றார். மாசில்லாமணிகளான மேலோரை மருவினவர் குற்றங்கள் நீங்கிக் குணங்கள் ஓங்கி எவ்வழியும் செவ்வியராய்ச் சிறந்து உயர்ந்து திகழ்கின்றார்.

மறவற்க மாசற்றார் கேண்மை. (குறள், 106)

முன்னமும் இன்னவாறு குறித்துள்ளார். யாண்டும் மறவாமல் பெரியோரை உறவாகப் பெறுபவரே பெறலரிய பேறு பெற்றவராய்ப் பெருமகிமை யுறுகின்றார். இன்னலுறாமல் எவ்வகையும் நன்னயமுற நன்கு நடத்துபவர் ஆதலால் நல்லோரே என்றும் எங்கும் நட்பாகக் கூடி நயந்து போற்றிக் கொள்ளத் தக்கவர்.

நட்டாரை வேண்டின் நறுமமன் கதுப்பருய்!
விட்டாரை யல்லால் கொளல்வேண்டா—விட்டார்
பொறிசுணங்கு மென்முலைப் பொன்னன்னுய்! உய்ப்பர்
மறிதர வில்லாக் கதி. (அறநெறி 46)

தமராகத் தழுவிக் கொள்ளவுரிய பெரியாரை **முனைப்பாடியார்** இப்படிக் குறித்துக் காட்டியிருக்கிருர்.

இரும்பின் இரும்பிடை போழ்ப; பெருஞ்சிறப்பின்
நீருண்டார் நீரான்வாய் பூசுப;—தேரின்
அரிய அரியவற்ருல் கொள்ப; பெரிய
பெரியாரான் எய்தப் படும். (நான்மணி, 36)

பெரிய பேறுகள் பெரியாராலேயே பெறப் பெறுகின்றன; ஆகவே அவரை உரிமையோடு பேணிக் கொண்டு பெரியராய் உயர்ந்து கொள்ளுங்கள் என்று **விளம்பிநாகனர்** இங்ஙனம் விளம்பியுள்ளார்.

இறப்ப நினையுங்கால் இன்னுது எனினும்
பிறப்பினை யாரும் முனியார்—பிறப்பினுள்
பண்பாற்றும் நெஞ்சத் தவர்களோ டெஞ்ஞான்றும்
நண்பாற்றி நட்கப் பெறின். (நாலடி 174)

இறப்பு துன்பம் மிக வுடையது; முனிவரால் முனியத்தக்கது. ஆயினும் பண்புடைய பெரியோர்களின் நண்பு அமையப்பெறின் துன்பமான பிறப்பும் இன்பமாம் என்று இது குறித்துள்ளது. இதில் அமைந்துள்ள பொருள் நயங்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுக.

அரிய பெரிய செல்வங்களையெல்லாம் இயல்பாக எய்தியுள்ள அரசன் பெரியாரைத் துணையாகப் பெற வில்லையாயின் பெரிய குறையே. அருமையுடையதைப் பெற்றவர் பெருமை அடைகின்ருர்.

பெரியாரைத் தமராகப் பேணிக் கொண்டவனுக்கு எல்லா இன்பப் பேறுகளும் எளிதே உளவாம்.

இது தக்கன்பால் அறிய வந்தது.

சரிதம்.

இவன் கருநட தேசத்து வேந்தன் மகன். சாந்த சீலங்கள் நிறைந்தவன். தெளிந்த மெய்யுணர்வு இள

மையிலேயே இவனிடம் வளமையாய் விளங்கியிருந்தது. இளவரசனா யிருக்கும் பொழுது பழவினை விளைவாய்த் தொழுநோய் சிறிது இவனுடலில் தோன்ற நேர்ந்தது. அதனை ஓர்ந்து நெஞ்சம் வருந்தி இவன் நெடிது மறுகினன்; "சிறந்த செல்வங்கள் நிறைந்துள்ளேன்; உலகாளும் தலைமையும் அடைந்துள்ளேன்; இருந்தும் இந்த ஈனநோய் என் ஊனுடலை ஊறு செய்துளதே!" என்று உள்ளம் நொந்து வந்தவன் ஒருநாள் முற்கல முனிவரை அடைந்தான். அரிய தவநிலையில் சிறந்து பெரிய ஞான சித்தராய்ப் பெருகியுள்ள அவரது பெருமையை அறிந்தே அவர்பால் வந்து இவன் தொழுது துதித்து உழுவலன்புடன் வணங்கி நின்றான். இவனுடைய நிலைமை நீர்மைகளை யுணர்ந்து அவர் கருணை புரிந்து ஆதரித்துப் பிரணவ மந்திரத்தை உபதேசித்தார். அவர் கூறியபடியே மனம் மொழி மெய்கள் தூயனாய் அதை நாளும் இவன் செபித்து வந்தான். பற்றியிருந்த பிணி முற்றும் அகன்றது. பேரழகோடு பெருகி விளங்கினான். ஆர்வத்தோடு இவனைத் தேடி வந்த தாய் தனது அருமை மகன் பீடை யாதுமின்றிப் பேரழகனாய் நிற்பதைக் கண்டு பேரன்புடன் பேரின்பம் மீதூர்ந்து உள்ளம் பூரித்து மாதவரை உவந்து போற்றினாள். அவர் ஆதரவுடன் யாவும் தெளிய அருள் சுரந்தருளினார்.

முருகனோ காமவேளோ முகுந்தனோ வென்னத் தக்கன்
பெருகொளி அழக னாகி யுறுப்பெலாம் பிறங்க நற்றாய்
இருவிழி களிப்ப நோக்கி எடுத்தணைத் துச்சி மோந்துள்
உருகிய ஆர்வக் கண்ணீர் ஒழுகமெய் பூரித் தாளே. (1)

வணங்கினள் முனிவன் பாதம் வழுத்தினள் இருடிநோக்கி
அணங்கனை யிவனும் நீயும் அருமறை யளந்தும் எட்டாக்
குணங்குறி கடந்த நாதன் கொழியருட்கு இலக்க மானீர்
பிணங்குபல் வினையும்வென்றீர் பெறுவதென் இனிமேலென்
[றான்.

மந்திர மான ஏக வன்னம்நின் மகற்குச் சொன்னேம்
சிந்தையில் கணித்து முற்றின் திகிரிஒன் றுருட்டி மண்மேல்

இந்திரன் முதலோர் எண்ண இருந்தர சாளும் வாழ்க்கை
தந்திடும் இறைவன் என்று சாற்றினன் இதுவு மேலோன்.
(பார்க்கவம்)

தக்கன் அடைந்துள்ள அதிசய நலன்களை இவற்ருல் அறிந்து கொள்ளுகிறேம். பெரியாரைப் பேணித் தமராக் கொள்பவன் அரியவற்றுள் எல்லாம் அரிய பாக்கியங்களை யடைந்து பெரியவனுய் உயர்ந்து பெரும் புகழோடு விளங்கி உவந்து வாழ்வான் என்பதை உலகம் காண இவன் நன்கு உணர்த்தி நின்ருன்.

ஆன்ற பெரியார் உறவா யமையினது
வான்ருேய் திருவாய் வரும்

பெரியாரைப் பேணி உயர்.

---

441. நாடி விசயனும் நந்தனும் நல்லாரைக்
கூடியேன் நின்ருர் குமரேசா—தேடியே
தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை. (சு)

இ-ள்

குமரேசா! விசயனும் நந்தனும் பெரியாரை உறவாகப் பேணி ஏன் உரிமையுடன் ஒழுகி வந்தார்? எனின், தம்மின்பெரியார் தமரா ஒழுகுதல் வன்மையுள் எல்லாம் தலைஎன்க.

தம்மினும் மேலான பெரியோர்களைத் தமராகத் தழுவி ஒழுகி வருதல் வலிமைகள் எல்லாவற்றினும் உயர்ந்த வலிமையாம்.

இன் உருபு எல்லைப் பொருளது. தம் என்றது அரசர் முதல் அனைவரையும் ஒருங்கே தழுவி நின்றது.

அறிவு ஆற்றல் பண்பு தவம் முதலிய நிலைகளையுடையவர் பெரியோர்களாய் உயர்ந்து வருகின்ருர். அத்தகைய மேலோரைக் காண்பது, அவருடைய உணர்வுரைகளைக் கேட்பது, அவரோடு நெருங்கிப் பழகுவது,

அவர் உள்ளம் உவந்துவர இதமாய் நடந்து வருவது முதலிய தொடர்புகள் எவர்க்கும் மதிமாண்புகளை நல்கி அதிசய உயர்வுகளை உளவாக்கி வரும்.

மனிதன் எதைச் சார்ந்தானோ அதன்படி நேர்ந்து வருகிறான். நல்லோரைச் சார்ந்தால் நல்லவனாகிறான்; தீயோரைச் சார்ந்தால் தீயவன் ஆகிறான்; கீழோரைச்சாரின் கீழா யிழிகிறான்; மேலோரைச் சேர்ந்தால் மேலாய் உயர்கிறான். அந்த வண்ணமே ஆகி விடுகிறான்.

தான் மேன்மை அடைய விரும்புகிறவன் நல்ல மாண்புகளுடைய பெரியோர்களையே யாண்டும் சார்ந்து பழகவேண்டும். அத்தகைய சார்பு எத்தகையோரையும் உத்தம நிலையில் உயர்த்தி யருளும்.

அளிமிகு மனத்த ராகி ஐம்புலன் அடக்கி என்றும்
ஒளிமிகு புனித மேன்மை யுவப்பருஞ் சமனுற் றுள்ளம்
தெளிவுறு பெரியோர் தம்மைச் சேரின்நல் லன்பு கூரும்
களிதரும் அன்பு கூரிற் கலக்குநல் லறிவு தானே.
(பாகவதம்)

பெரியோரைச் சேரின் பெரிய நன்மைகள் உளவாம் என இது குறித்துளது. புலன்களை அடக்கிய நலன்களுடையார் பெரியராய்த் திகழ்கின்றனர். அவரைச் சேர்ந்தவரும் சிறந்தவராய் உயர்ந்து விளங்கி வருகின்றார்.

ஒழுகுதல் தலை என்றது, அந்த ஒழுக்கத்தால் உளவாகும் உயர் நலங்களை உய்த்துணர வந்தது. இனிய தன்மைகள் வழியே அரிய வன்மைகள் அமைந்து வருகின்றன. நல்லவர்களைத் தமராக் கொண்டவன் எல்லா வலிமைகளையும் எளிதே அடைந்து கொள்கின்றான்.

பொருள் வன்மை படை வன்மை அரண் வன்மை தேக வன்மை மன வன்மை மதி வன்மை முதலாகப் பல வன்மைகள் ஒருவனுக்கு உளவாயிருப்பினும் பெரியார் துணைவன்மை யில்லையேல் அவ்வன்மைகளெல்லாம் புன்மையடைய நேரும். பெரியார் உறவே அரிய பெரிய உரமாய் அதிசய மேன்மைகளை அருளி வரும்.

பெரியாரை உரிய தமராகப் போற்றிக் கொள்பவர் பேராற்றல் உடையராய்ச் சீருடன் உயர்கின்றார்.

இது விசயனிடமும் நந்தன்பாலும் தெரிய வந்தது.

சரிதம்.

விசயன் அதிசய ஆற்றல்களுடையனுயினும் கண்ணனைத் துணைக்கொண்டே எண்ணரிய மேன்மைகளை எய்தியுள்ளான். பாரதப் போர் மூண்டபொழுது தனக்குப் படைத்துணையாகக் கண்ணனை அழைக்க விரும்பித் துரியோதனன் துவாரகைக்கு வந்தான். விசயனும் அவன் பின்னே வந்து சேர்ந்தான். இருவரையும் மாயன் விநயமாய்உபசரித்து வந்த காரியங்களை விசாரித்தான். சுயோதனன் சொன்னன். "முன்னமே தருமனுக்கு நான் வாக்களித்துள்ளேன்; அண்ணன் பலராமனோடு எனது படைகள் முழுவதையும் நீர் துணையாகச் சேர்த்துக் கொள்ளும்" என்று கண்ணன் கழறினன். அம்மன்னன் இசைந்தான்; ஒரு வரமும் கேட்டான்: "நீர் ஆயுதம் எடுத்துப் போர் செய்யக் கூடாது; எப்பொழுதும் நிராயுத பாணியாகவே நிற்க வேண்டும்" என்றான். கண்ணன் இசைந்து அருச்சுனனை நோக்கினன்: "விசயா! யாதொரு ஆயுதமும் ஏந்தாமல் போரில் நான் உனக்கு என்ன உதவி செய்ய முடியும்? எனது துணையால் யாது பயன்?" என இவ்வாறு மாதவன் ஓதவே விசயன் வீறோடு நேரே கூறினன். வில் வாள் வேல் முதலிய கருவிகள் எதையும் நீங்கள் தொட வேண்டா; என் தேரில் சும்மா இருந்தால் போதும்; ஈரேழு புவனங்களையும் நான் வென்றுவிடுவேன்" என்று இவ்வீரன் கூறவே அங்கு நின்றவர் யாவரும் அதிசயம் மீதூர்ந்து துதி செய்து இவனது மதிநலனை வியந்தனர்.

**கண்ணன் கழறியது.**

முடைகமழ் முல்லை மாலை முடியவன் தன்னைப் போரில்
படையெடா தொழிமின்! என்று பன்னக துவசன் வேண்ட
நெடியமா முகிலும் நேர்ந்து நினக்கினி விசய! போரில்
அடுபடை யின்றிச் செய்யும் ஆண்மையென்? அறைதி
[என்றான்.

**விசயன் விளம்பியது.**

செருமலி ஆழி யங்கைச் செழுஞ்சுடர் நின்றென் தேரில்
பொருபரி தூண்டு கின்ற இந்தப் படதலத் தரசர் ஒன்றே
வெருவரும் இயக்கர் விண்ணோர் விஞ்சையர் எனினும் [என்கை
வரிசிலை வளைய வாங்கி மலைத்தலை துமிப்பன் என்றான். (2)
[பாரதம்: வாசுதேவனை]

நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இதில் வியந்து காண்கின்றோம். அரிய துணையால் விசயன் அடைந்துள்ள அதிசய ஆற்றல்களை உலகம் அறிந்து உவந்து வந்துள்ளது. தம்மினும் பெரியாரை தமராகத் தழுவி வர ஒழுகி வருவார் வன்மையுள் எல்லாம் மேலான வன்மையுடையராய் விளங்குவர் என்பதை இவன் விளக்கி நின்

**ந ந் த கோ ன்.**

இவன் ஒரு குறுநில மன்னன். இடையர்கட்குத் தலைவன். கோகுலம் என்னும் நகரில் இருந்தவன். வசுதேவருக்கு நண்பன். மனைவி பெயர் யசோதை. கஞ்சனுக்கு மறைந்து வந்து தன் இல்லில் வளர்ந்த கண்ணனைக் கண்ணினும் அருமையாக எண்ணிப் போற்றினவன். இவனது புண்ணியப் பேற்றைக் கருதி மகிழ்ந்து விண்ணும் வியந்து நின்றது.

அள்ளிலை வயிரப் பைம்பூண் நந்தகோன் அகிலம் ஈன்ற
பிள்ளையை யுச்சி மோந்து பிறந்துழி இயற்று கின்ற
தள்ளருங் கருமம் ஆற்றித் தன்கிளைத் தலைவரோடும்
வெள்ளணி யணிந்து கோடிவிழுநிதி மறையோர்க்கீந்தான்.
(கூர்மபுராணம்)

தன்பால் வந்த அந்தப் பிள்ளையைக் கண்டபொழுது அன்பால் உருகி இவன் செய்துள்ள தரும தானங்களை இதில் அறிந்து கொள்கிறோம். உத்தவர், சத்தியகர் முதலிய பெரியோர்களையே உறவாக இவன் பேணி வந்தான். இவனது அமைதி நிலையையும் தமரின் தலைமையையும் அறிந்து அமரர்கோனும் அதிசயமடைந்து நின்றான். தம்மினும் பெரியாரைத் தமராகத் தழுவி ஒழுகுப

வன் விழுமிய மேன்மைகளை அடைந்து கொள்வான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

**அரிய பெரியார் அகமகிழச் செய்யின்**
**பெரிய மகிமை யுறும்.**

மேலோரைப் பேணி மேன்மை பெறுக.

---

445. வெள்ளி வெறுத்தும் விடப்பன்மன் ஏன்சூழ்ந்து
கொள்ளலுற்றான் கேண்மை குமரேசா-உள்ளவெல்லாம்
சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். (ரு)

இ-ள்.

குமரேசா! வெள்ளி வெறுத்து விலகியும் விடபபன் மன் ஏன் அவரை விழைந்து கொண்டான்? எனின் சூழ்வார் கண் ஆக ஒழுகலான் மன்னவன் சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் என்க.

கண் எனக் கருதிப் பேண வுரியாரை இதில் காண வந்துள்ளோம். உரிமையை ஓர்ந்து தெளிக.

ஆராய்ந்து வினைசெய்யும் அமைச்சர் கண் ஆக அரசியல் நடத்தலால் அவரை அரசன் உறுதித் துணையாக அணைத்துக் கொள்ளுக.

சூழ்வார் என்றது அமைச்சரை. சூழ்தல்=ஆராய் தல். சூழ்ந்துள்ள காரியங்களை ஆழ்ந்து ஆராய்ந்து அரசுக்கும் நாட்டுக்கும் உறுதிநலன்களைச் செய்பவர் ஆதலால் மந்திரிகள் இந்தவாறு பேர்பெற்று வந்தனர்.

அமைச்சர் சூழ்ச்சியில் வல்லவராயிருப்பினும் அவரது குடிப்பிறப்பு குணச் சிறப்பு நேர்மை சீர்மை நெறி முறை வினையாண்மை வாய்மை தூய்மை முதலிய நிலைமைகளையெல்லாம் கூர்ந்து ஆராய்ந்து அரசன் தேர்ந்து கொள்ள வேண்டும் ஆதலால் சூழ்ந்து கொளல் என்றார்.

மலரதலை உலகிற்கு மன்னவன் உயிர். அந்த உயிர்க்குக் கண் மந்திரி. அமைதியை ஆய்ந்து உணர்க.

உயிரினங்கள் கண்களைக் கொண்டே பொருள்களைக் கண்டு ஆவன ஆற்றி யாண்டும் உலாவி வருகின்றன. அதுபோல் அரசன் அமைச்சரைக் கொண்டே யாவும் தெளிவாத் தெரிந்து ஆட்சி புரிந்து வருகிறான்.

தெளிவான மந்திரி இல்லையானால் அந்த அரசு ஒளி இழந்த விழிபோல் இழிவுற நேரும்; அவ்வாறு நேராதபடி எவ்வழியும் சீரோடு சூழ்வாரைச் சூழ்ந்து தேர்ந்து கொள்வது வேந்தியல்பாய் விளங்கி யுள்ளது.

நாற்றிடங் கொடுத்த கேள்வி நுண்செவி மண்கொள் ஞாட்பில்
வேற்றிடங் கொடுத்த மார்பின் வில்வலான் தோழர் மக்கள்
நாற்கடல் வரைப்பிற் காக்கும் தந்திரம் கண் களாகப்
பாற்கடற் கேள்வி யானைப் பதிப்பட நாட்டி னானே.

(சீவகசிந்தாமணி 2916)

சீவக மன்னன் தன் மகனை அரசனாக்கியபொழுது அரசனுக்குத் துணையாக அமைச்சரை அமைத்திருக்கும் காட்சியை இது காட்டியுள்ளது. தந்திரம் கண்களாக காட்டினான் என்பது இங்கே கருதிக் காண வுரியது. பாற்கடற் கேள்வியார் என்று அமைச்சரைக் குறித்திருப்பது, அவரது பரந்த அறிவு நலன்களையும் சிறந்த நிலைமைகளையும் இனிய பண்புகளையும் கருதியுணர வந்தது.

மந்திரக் கிழவர் கண்ணா மக்கள்தன் தாள்க ளாகச்
சுந்தர வரைத்த டந்தோள் தோழராச் செவிகள் ஒற்றா
அந்தமில் படைகை யாக அரசெனும் உருவு கொண்ட
மந்திரம் இதற்கு வாயாத் தூதுவர் இயற்றப் பட்டார்.

(சூளாமணி)

அரசனுக்கு உறுப்புகளாக அமைந்துள்ள சீர்மைகளை இது நன்கு உணர்த்தியுளது. மந்திரக் கிழவர் கண்ணா என்று முந்துற வந்திருப்பது சிந்திக்கத் தக்கது.

காட்சிக்கு உரிய கண்ணை மனிதர் உரிமையோடு பேணிக் கொள்ளுதல்போல் ஆட்சிக்கு உரிய அமைச்சரை அரசர் ஆர்வமாய்ப் பேணிக்கொள்ள வேண்டும்.

மக்கள் இனம் மகிழ்ந்துவர யாண்டும் மாண்புடன் ஆண்டு வரும் மன்னவன் தன் ஆட்சிக்குத் தக்க துணை

களைத் தகவாய்த் தழுவிக் கொண்ட அளவே எங்கும் விழுமிய நிலையில் அவன் விளங்கி வருகிறான். தழுவா விடின் அது பெரிய வழுவாய்ப் பிழை மிகுந்து விடும்.

ஆயின்மறை முதற்கலைகள் அனைத்துமுணர்ந் தறமறம்பாத்
தேயினிது நன்றிதுதீ தென்று உணர்த்து மவர்நட்பை
வீயினும்தான் மறப்பர்களோ மேதையோர் மறப்பரேல்
நாயினுங்கீழ்ப் பட்டவர்கள் அவர்காண் இந் நானிலத்தே.
(குசேலம்)

கலையறிவு நிறைந்து அறநெறிகளை ஓர்ந்து உணர்ந்துள்ள பெரியோர்களை அரசன் துணையாகச் சூழ்ந்து கொள்ள வேண்டும் என்று கண்ணன் இன்னவாறு உரைத்திருக்கிறார்.

ஆன்ற அறிவுடையாரை எவ்வகையிலும் செவ்வையாக வேந்தர் விழைந்து பேணிக் கொள்வர்.

இவ்வுண்மை விடபன்மன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் அசுரகுல வேந்தன். அருந்திறலாளன். அரிய பல கலைகள் பயின்று தெளிந்தவன். ஆட்சிக்குரிய சூழ்ச்சித் துறைகளில் மிகவும் தேர்ச்சி பெற்றவன். இவனுடைய மனைவி பெயர் கன்கமாலை, அவளோடு அமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து உரிய வினைகளை ஓர்ந்து யாண்டும் அதிசய நிலையில் இவன் ஆட்சிபுரிந்து வந்தான். இவனது அருமைத் திருமகள் பெயர் **சன்மிட்டை**. இப் புதல்விக்கும் சுக்கிராச்சாரியார் மகளான **தெய்வயானை**க்கும் ஒருநாள் வாக்கு வாதங்கள் நேர்ந்தன. "நான் சக்கரவர்த்தித் திருமகள்; நீ என் தந்தைக்கு ஏவல் புரியும் மந்திரி மகள்; என்னோடு எந்த வகையிலும் நீ இணையாக மாட்டாய்" என்று இந்தவாறு நிந்தையாய் இவள் கூறினாள். கூறவே வெள்ளி மகள் உள்ளம் கனன்றுபோய்த் தந்தையிடம் உரைத்தாள். அவர் சிந்தை வெறுத்து மந்திரி பதவியைத் துறந்து விட்டு அயலே மறைந்து போனார். அவர் அவ்வாறு போகவே இம் மன்னன் மறுகி வருந்தினான். அவரைத்

தேடிக் கண்டான்; உவந்து அழைத்தான். சுக்கிரன் பக்குவமாய்ப் பதில் உரைத்தார்: "உமது மகள் என்னுடைய மகளுக்குப் பன்னிரண்டு திங்கள் அடியவளாயிருந்து ஏவல்புரிந்து வருவாளேல் நும்பால் வந்து நான் மந்திரியா யமைந்திருப்பேன்" என்று இன்னவாறு அவர் நன்னயமாய் நவின்றார். இம் மன்னவன் இசைந்தான். அன்னவரும் வந்து அமைச்சராய் அமர்ந்து ஆட்சித் தொழில் புரிந்தார். சொன்னபடியே தன் மகளை அவரது புதல்விக்கு ஏவல்புரியப் பணித்து இக்காவலன் கடமையைச் செய்தான். இவ்வேந்தனுடைய பெருந்தகைமையையும் பெரியாரைத் துணையாகப் பேணிக்கொள்ளும் பெற்றியையும் யாவரும் அறிந்து வியந்து புகழ்ந்தனர். சூழ்வார் கண் ஆக ஒழுகலான் சூழ்வாரை அரசன் சூழ்ந்து கொள்ள வேண்டும் என்பதை மண்ணும் வேந்தர்கள் இம் மன்னன்பால் ஓர்ந்து தேர்ந்து கொண்டனர்.

ஆட்சி புரிவார்க் கமைச்சர்கள் கண்களாய்க்
காட்சி புரிவார் கலந்தென்று—மாட்சியுறு
மன்னன் விடமன் மதிநிலைமெல் லாமறிய
முன்னம் புரிந்தான் முதல்.

**காணும்கண் ணாகக் கருதிப் பெரியோரைப்**
**பேணி வருக பெரிது.**

விழுமியோரை விழிகளாக் கருதுக.

---

446 செற்றார் திரண்டிருந்தும் செய்யவில்லை பாண்டியன்பால்
குற்றமொன் றும்என்னே குமரேசா—முற்றறிந்த
தக்கார் இனத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில். (௬)

இ-ள்.

குமரேசா! தக்கவரை இனமாகத் தழுவி ஒழுகிய பாண்டிய மன்னன் எதிரே பகைவர் ஏன் அடங்கி நின்றார்? எனின், தக்கார் இனத்தனாய்த் தான் ஒழுக வல்லானைச் செற்றார் செயக் கிடந்தது இல் என்க.

பகையை வெல்லும் வகை தெரிய வந்தது.

தக்க பெரியாரைத் தமராகத் தழுவி ஒழுக வல்ல மன்னனைப் பகைவர் திரண்டு மிகைபுரிய நேரினும் யாதொரு இடறும் செய்ய முடியாது.

அறிவு சீலம் ஆற்றல் முதலிய தகுதிகளை மிகுதி யாக வுடையவர் **தக்கார்** என வந்தார். **தக்கவரைச்** சார்ந்த பொழுதே அவர் மிக்க வன்மைகளை யடைந்து மேன்மையாய் விளங்குவர் ஆதலால் **வல்லானை** என்றார்.

முன்னம் சூழ்வாரைச் சூழ்ந்துகொள் என்றார்; இங்கே தக்காரைச் சார்ந்துகொள் என்கின்றார். அறிவும் ஆற்றலும் அவரால் முறையே பெருகி வரும் ஆதலால் இந்த நெறி நியமங்களை இவ்வாறு நினைவுறுத்தினர்.

செற்றார் = பகைவர். செறுத்தலையுடையவர் என்பது தெரிய வந்தது. செறுத்தல் = சினத்தல்; பகைத்தல்; கொல்லல். அல்லல் புரிபவரை அடக்கி ஒழிக்க.

நாடாளும் மன்னருக்குக் கேடுசூழும் பகைவர் யாண்டும் இயல்பாய் எழுவர். அவரது வஞ்சமும் சூழ்ச்சியும் வன்மமும் மிக்க வன்மையும் தக்காரைச் சார்ந்த வரைச் சாரமாட்டாமல் தேய்ந்து மாய்ந்தே போம்.

பொல்லாத பகைவரை ஒல்லையில் வெல்ல விரும்பினால் அவர் நல்லவரை நன்கு சார்ந்து கொள்ளவேண்டும்.

கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபுல்
ஒல்காவே யாகும் உழவர் உழுபடைக்கு
மெல்லியரே யாயினும் நற்சார்வு சார்ந்தார்மேல்
செல்லாவாம் செற்றார் சினம். (நாலடி 178)

மரத்தின் வேர்க்கட்டையை அடுத்திருக்கும் புல்லைக் கலப்பை எழுப்ப முடியாது; அதுபோல் தக்க வலியாரைச் சார்ந்திருப்பவரைச் **செற்றார் சினம்** யாதும் செய்ய முடியாது என இது குறித்துள்ளது.

மிகவும் மெலியரேயாயினும் தகவுடையாரை அடுத்தவர் வலிய கொடிய பகைக்கும் அஞ்சாமல் வளமாய்

வாழ்ந்து வருவர் என்பதை உவமைக் குறிப்பால் ஓர்ந்து உறுநிலையைத் தேர்ந்து கொள்கிறோம்.

செற்றார் செயக்கிடந்தது இல்.
செல்லாவாம் செற்றார் சினம்.

ஒத்து வந்துள்ள இந்த இரண்டையும் உய்த்துணர்ந்து உண்மை நுண்மைகளைத் தெளிந்து கொள்ளவேண்டும்.

மெலியோர் வலிய விரவலரை அஞ்சார்
வலியோர் தமைத்தாம் மருவில்—பலியேல்
கடவுள் அவிர்சடைமேல் கட்செவியஞ் சாதே
படர்சிறைப் புள்ளரசைப் பார்த்து. (நன்னெறி, 9)

சிவபெருமான் சடை மேலுள்ள பாம்பு கருடனைக் கண்டு அஞ்சாது; அதுபோல் மிக்க மெலியவரா யிருந்தாலும் தக்க வலியவரைச் சாரின் தொக்க பகைவருக்கும் அஞ்சார் என்னும் இது ஈண்டு அறிய வுரியது.

சிறிய ராயினும் சார்பினை விழையன்மின்
திறல்கெழு பெரியோராம்
அறிஞ ராயினும் சார்பினை விழைமினோ
அலரிதழ் விரிகொன்றை
வெறிநறுந்தொடை எம்பிரான் சார்பினை
விழைதலால் உரகங்கள்
மறுவி லாற்றல்சால் கலுழனை வினாயின
வாழ்ந்தனையோ? வென்ன. (காஞ்சிப்புராணம்)

கருடனைக் கண்டால் பாம்பு அஞ்சி நடுங்கும். அத்தகைய பாம்பு பரமனைச் சேர்ந்தபின் அந்தப் பயம் நீங்கிப் போயது. திருமால் வாகனமாகிய தெய்வக் கருடனுக்கும் அது சிறிதும் அஞ்சவில்லை.

மாயவன் ஒருநாள் அத்தூயவனைக் காணப்போனார். அங்கே வந்த கருடனை அந்த அரவம் கண்டது; "கருடா! சுகமா?" என்று கேட்டது. "இருக்கும் தானத்தில் இருந்தால் எல்லாருக்கும் சுகம்தான்" என்று அப்பறவை வேந்தன் குறிப்பாகப் பதில் உரைத்தது. பெரியோரைத் துணைக்கொள்ளுங்கள்; அதனால் மகிமையும் வலிமையும் உளவாம் என உலக மக்களுக்கு அது போதித்துள்ளது என்று இக்கவி மிகவும் சுவையாக உணர்த்தியுளது.

தக்கார் இனத்தனாய் ஒழுகுபவன் மிக்க வலியாளனாய் மேவி எங்கும் வியனாய்விளங்குவான். இவ்வுண்மை இராசேந்திரபாண்டியன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவ்வேந்தன் மதுரையம்பதியிலிருந்து அரசு புரிந்தவன். குலபூடண பாண்டியனுடைய அருமைத் திருமகன். அரிய பல குணநலங்கள் நிறைந்தவன். ஆட்சி முறைகளையும் துறைகளையும் நன்கு தெரிந்தவன். பெரியோர்கள்பால் பேரன்பும் தெய்வ பத்தியும் உடையவன். நெறிநியமங்களோடு இவன் அரசு புரிந்து வந்தான். சிறந்த கீர்த்திமானாய் இவன் விளங்கி வருங்கால் காஞ்சீபுரத்திலிருந்த சோழ மன்னன் இவன் மேல் பொறாமை கொண்டான். அது பகைமையாய் மூண்டது. செற்றம் மீதூர்ந்து நின்றும் யாதும் செய்ய முடியாமல் வெய்துயிர்த்திருந்த அவன் விரகு சூழ்ந்தான். இம் மன்னன் தம்பியை வசம் செய்து கொண்டான். இராசசிங்கன் என்னும் பேருடைய அவனுக்குத் தன் மகளை மணம் செய்து கொடுத்தான். மாமன் அரண்மனையிலேயே அம்மருமகன் மருவியிருந்தான். காமச்சுவையில் ஆழ்ந்து கருத்தழிந்திருந்தான். அந்தப் புதிய மருகனைத் துப்பாக் கொண்டு பெரிய படைகளோடு அவ்வளவன் இவ்வழுதிமேல் போருக்கு வந்தான். போரில் படைகளை இழந்து தோல்வியடைந்தான். இருவரையும் சிறையாகப்பற்றிச் சேனைத் தலைவர்கள் இவனிடம் கொண்டு வந்தனர். அவர் மறுகி நின்றனர். இவன் பரிவு கூர்ந்தான். இறைவன் சந்நிதியில் நிறுத்தி அறிவுரைகள் கூறிப் பரிசு பல தந்து அவரை இவன் அருள் புரிந்து விடுத்தான்.

கடலுடைந் தென்னப் பொன்னி காவலன் தானை சாய
மடலுடை வாகை வேய்ந்து வளவனை மருக னோடு
மிடலுடைத் தறுகட் சேனை வீரர்வெங் கையால் பற்றி
அடலுடைக் கன்னிநாடர்க் கரசன்முன் கொண்டுபோந்தார்.

கொடுவந்தவளவன்தன்னைக்கோப்பெருஞ்செழியர்கோமான்
வடுவந்த தம்பி யோடு மாடம்நீள் கூடல் மேய

கடுவந்த மிடற்றார் முன்போய் விடுத்தெந்தை கருத்தியாது [என்ன
நடுவந்த நிலையான கேட்ப நாயகன் நிகழ்த்து மன்னே. (2)

அறவன்நீயல்லையோவுன்அகத்தினுக் கிசைந்த செய்கென்று
இறைவனதருளால் வானின் றெழுமொழி கேட்டு வையைத்
துறைவனும் அறத்தி னாற்றாச் சோழனைச் சிலமால் யானை
மறவயப் பரிபூண் மற்றும் வழங்கினான் விடுத்தான் பின்னர்.

வள்ளல்தன் தம்பி என்னும் மன்னவர் சிங்கம் தன்னைத்
தள்ளருந் தறுகண் ஆண்மைத் தருக்கறத் தாளுள் செல்வம்
உள்ளன சிறிது மாற்றி ஒதுக்கியெவ் வுயிர்க்குந் தாயாய்ப்
பள்ளநீர் அகலங் காத்துப் பல்வளம் பழுக்க வாழ்ந்தான். (4)
(திருவிளையாடல், 35)

நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளை இதில் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். சிவ பரம்பொருளின் திருவருளை இவன் உரிமையாய்ப் பெற்றுள்ளான். அவ்வுண்மையை ஈண்டு நுண்மையா யுணர்ந்து கொள்கிறோம். தக்க பெரியோர்களைத் துணையாகத் தழுவி யாண்டும் ஒழுகி வந்துள்ளமையால் என்றும் எங்கும் இவன் மிக்க வெற்றியாளனாய் விளங்கி நின்றான். தக்கார் இனத்தனாய் ஒழுக வல்லவனைச் செற்றார் யாதும் செய்ய முடியாது என்பதை வையம் இவன்பால் தெளிந்து நின்றது.

மேலோரைச் சேர்ந்தவர் மேன்மை யுடன்விளங்கி
மேலோங்கி நிற்பர் விரிந்து.

தக்காரைத் தழுவி ஒழுகு.

---

447 அன்றிடித்தார் தம்மையுவந் தாதரித்த கிள்ளிநலம்
குன்றாத தென்னே குமரேசா—நன்றா
இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர். (எ)

இ-ள்

குமரேசா! இடித்து அறிவு கூறியவரை இனிது பேணி வந்த கிள்ளிவளவன் ஏன் வள்ளியனாய் வாழ்ந்

தான்? எனின், இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே கெடுக்கும் தகைமையவர் என்க.

கேடுறாமல் வாழ இது வழி கூறியுளது.

அடுத்து வற்புறுத்தி அறிவு கூறுவாரை அன்புடன் ஆதரித்து வரும் அரசரைக் கெடுக்கும் வலிமையாளர் யாரும் இலர்.

இடிக்கும் துணையார் என்றது தக்க புத்திமதிகளை வலியுறுத்திக் கூறும் நல்ல நட்பாளரை. இத்தகைய உத்தமர்களை உரிமையாகத் தழுவி வருபவர் விழுமியராய்ப் பெருமை பெற்று வருகின்றனர்.

அரசர்பால் இடித்துச் சொல்பவர் அரியர். இனிமையாய் இச்சகம் பேசி வீணே முகத்துதி செய்து நளினமா நடிக்கும் துணையாரே அவரைச் சுற்றி நிற்க நேர்வர். அந்தச் சிறுமையாளரை விலக்கிப் பெருமையாளரைத் துணைக்கொண்டவரே இருமையும் நலமாப் பெரு மேன்மை பெறுவர்.

மாந்தருள்ளே தலைமையாய் நிலவி நிற்கும் வேந்தரை இடித்து நீதிகளைச் சொல்ல வல்லவர் அரிய தவ நெறிகளையுடைய பெரியோர்களும், மதிமந்திரிகளுமே யாவர். **இடிக்கும் துணையார்** என்னும் குறிப்பால் அவருடைய தலைமையும் நிலைமையும் தகைமையும் வகைமையும் நன்கு தெரிய வந்தன.

இடித்துவரை நிறுத்தலும் அவர தாகும்
கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்.
(தொல்காப்பியம் கற்பு, 14)

நெறிமுறைகளை வலியுறுத்திச் சொல்லி நல்ல வழியில் தலைவரை நிலை நிறுத்த வல்லவர் அறநலமுடைய பெரியோர்களே என ஆசிரியர் **தொல்காப்பியர்** இங்ஙனம் குறித்துள்ளார். இடித்தல் இதில் குறித்து நிற்கும் பொருளைக் கூர்ந்து அறிக.

நகுதற் பொருட்டன்று நட்டல்; மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு. (குறள், 784)

உண்மையான நண்பரின் திண்மையான உரிமையை இதில் தெளிவாய் உணர்ந்து கொள்கிறோம். இடித்து அறிவுறுத்துவோரே இனிய பெரிய துணைவர்.

பிள்ளைகளை அடித்துத் திருத்துவர்.

பெரிய மனிதரை இடித்து அறிவுறுத்துவர்.

அறிவோர் இடித்துச் சொல்வதைப் பொறுத்துக் கேட்பவனே பொறையுடைய மன்னனாய் அரசுமுறையில் துறைதோறும் உயர்ந்து வருகிறான். மருந்து முதலில் அருந்தக் கசக்கும். அக் கசப்பைப் பொறுத்து அதனை உட்கொண்டால் நோய் நீங்கிச் சுகமுண்டாம். அதுபோல் பெருந்தகைமையாளர் அறிவுரை முதலில் வெறுப்பாயிருந்தாலும் விரும்பியுட்கொள்ளின் அதனால் அல்லல்கள் நீங்கி எல்லா நலங்களும் உளவாம்.

படிபுரக்கும் முடிமன்னர் தனி நிலையில் உயர்ந்துள்ளனர்; ஆகவே செம்மையுறத் தம்மை இடிக்கும் துணையாரை ஆளாதொழியின் அஃது அவர்க்குக் கொடிய கேடாம்.

கடிக்கும்வல் அரவும் கேட்கும் மந்திரம் களிக்கின்றாயை
அடுக்குமீ தடாதென்று ஆன்ற ஏதுவோ டறிவு காட்டி
இடிக்குநர் இல்லை; உள்ளார் எண்ணிய தெண்ணி யுன்னை
முடிக்குநர்; என்றபோது முடிவன்றி முடிவது உண்டோ?
(இராமா, சுந்தர-4-59)

தன்னை நச்சி நின்ற இராவணனை நோக்கிச் சீதை இவ்வாறு உள்ளம் கொதித்து எள்ளியிகழ்ந்துள்ளாள். **இடிக்குநர் இல்லை** என்றது பெரியாரைத் துணைக்கொள்ளாமல் வெறிகொண்டு நிற்கின்ற அவனது விபரீத நிலையை வெறுத்து வந்தது. இந்தக் கற்பரசியின் அற்புத மனவுறுதியும் மதிநலனும் விதிமுறைகளை விளக்கும் திறனும் ஈண்டு வெளியாயுள்ளன.

புல்லறிவு அகற்றி நல்லறிவு கொளீஇ
எம்மனோரையும் இடித்துவரை நிறுத்திச்
செம்மைசெய் தருளத் திருவுருக் கொண்ட

நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க் குண்டோ? பெறத்தகா தனவே!
(சிதம்பர மும்மணி)

**இடித்து அறிவுறுத்தி** நல்ல நெறியிலே நிறுத்தி யருளும் பெரியாரைத் துணைக்கொண்டவர்க்குப் பெறத் தகாத பொருள் யாதுமில்லை; பெறலரிய பேறுகள் எல்லாம் அத்துணையால் உளவாம்; அவரைப் பேணி ஒழுகுவதே நலமாம் என இஃது உணர்த்தியுளது.

சமையம்வரின் இடித்துரைப்பார்; தக்கவழிச்செலச்
[செய்வார்;
இமையவர்தம் உலகுறவும் இருளுலகம் பகையுமாய்
அமையஅறி வுறுத்துவார்; அந்தோ நூல் கற்றுணர்ந்த
கமையுடையார் நட்பெவர்க்குக் காண்கிடைக்கும்?
[அரிதரிது. (குசேலம்)

பெரியாரைத் துணைக்கொண்டால் அதனால் விளைந்து வருகிற ஊதியங்களை இது வரைந்து காட்டியுளது. குற்றங்கள் நீங்கி ஒழியக் குணங்கள் ஓங்கி வரவே அவர் யாண்டும் பேசி வருவர் ஆதலால் அவரது வாய்ச் சொல் வாழ்க்கைக்கு நல்ல வழித் துணையாம்.

வடுச்சொல் நீங்கிய வயங்கிய வருணத்து
இடிச்சொற் பொருஅ இலக்கண வினையர்.
(பெருங்கதை 1, 38)

இடிக்கும் சொல் இதில் இங்ஙனம் வந்துள்ளது.

செயல்வேண்டா நல்லவை செய்விக்கும்; தீய
செயல்வேண்டி நிற்பின் விலக்கும்;—இகல்வேந்தன்
தன்னை நலிந்து தனக்குறுதி கூறலால்
முன்இன்னா மூத்தார்வாய்ச் சொல். (பழமொழி, 357)

இடித்து அறிவுறுத்தலால் பெரியார் வாய்ச்சொல்லை அரசர் பொறுத்துக் கேட்டுப் போற்றி வர வேண்டும் என இஃது உணர்த்தியுளது.

உறுதி நலம் கூறும் பெரியாரைப் பேணி வருபவர் எவ்வழியும் சிறந்து உயர்ந்து ஒளி பெற்று வருவார்.

இவ்வுண்மை நலங்கிள்ளி பால் தெரிய வந்தது.

## சரிதம்.

இவன் கருவூரிலிருந்து அரசுபுரிந்த சோழ மன்னன். அதிசய ஆற்றல்களுடையவன். சிறந்த மதிமான். பல கலைகளையும் பயின்று தெளிந்தவன். அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் முதலிய அரச நீர்மைகள் எல்லாம் இவனிடம் சீர்மையாய் நிறைந்திருந்தன. அறிவு நலம் சுரந்த புலமையாளர்கள்பால் இவன் பேரன்புடையவன். அவர்களை யாண்டும் தலைமையாகப் போற்றி வந்தான். அரச திருவுடன் தமிழ்மொழியில் தெளிவான புலமையும் கவி இயற்றும் தகைமையும்இவனிடம் மருவியிருந்தமையால் அறிஞர்களிடையே இவனது புகழ் ஒளிமிகுந்து நின்றது. ஈகையும் இரக்கமும் உடையவனாயினும் செருக்கு மீக்கூர்ந்து மாறுபட்டவர்களைக் கடுமையாய்க் கடுத்து அடக்குவது இவன் வழக்கமாயிருந்தது. ஒருமுறை சிற்றரசர் சிலரைத் துணை சேர்த்துக்கொண்டு பேரரசர் இருவர் இவனோடு இகலி நின்றனர். அவரது நிலையினை அறிந்ததும் இவன் நெடிது சீறி வீர வாதம் கூறினான்; அவ் வீர உரைகள் வீறோடு விளங்கி நின்றன. பாட்டாகவே வந்த அவை அயலே காண வருகின்றன.

மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி
ஈயென இரக்குவர் ஆயின், சீருடை
முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்;
இன்னுயிர் ஆயினும் கொடுக்குவென்; இந்நிலத்து,
ஆற்றல் உடையோர் ஆற்றல் போற்றாதென்
உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே; மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்றிணி நீள்முளை போலச் சென்றவண்
வருந்தப் பொரேஎன் ஆயின், பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே. (புறம் 73)

என்னிடம் வந்து வணங்கி இரந்தால் என் உயிரையும் ஈவேன்; மாறுபட்டுப் போராட நேர்ந்தால் மதயானையின் காலிடையே அகப்பட்ட புல்முளைபோல் சிதைந்து அழிந்து ஒழிவர்; அவ்வாறு ஒல்லையில் வெல்லேன் ஆயின், அயலான மங்கையரைத் தோய்ந்த பழியாளனுய் இழிவேனுக என்று கூறியுள்ள இவ்வுரைகளால் இவனுடைய வீரமும் கொடையும் விவேகமும் சீலமும் தெளிவாய் வெளியாகியுள்ளன. வீரவேகமாய் யாரையும் பொருதடக்கி வந்த இவன் பின்பு பெரியோர்களின் அறிவுரைகளைக் கேட்டு அமைதியுற்று மறுமை நோக்கோடு மருவி யிருந்தான். உறையூர் முதுகண்ணனுர், ஆலத்தூர் கிழார், கோவூர் கிழார் என்னும் ஆன்ற அறிவுடைய சான்றேர்கள் வலியுறுத்திக் கூறிவந்த உறுதிமொழிகள் இம்மன்னனுடைய உள்ளத்தில் நன்கு பதிந்து நின்றன. செவித்துளை வருந்த உரைத்து வந்த அவர்களை இவன் உயிர்த்துணைவராகவே உவந்து பேணி வந்தான். இடிக்கும் துணையாரை ஆள்பவர் யாதொரு தீதுமின்றி இருமையிலும் பெருமகிமை பெறுவர் என்பதை உலகம் அறிய இவன் உணர்த்தியருளினன்.

பொல்லாதவர்களால் நேர்கின்ற அல்லல்களை நீக்கித் தனக்கு நல்ல உறுதி நலன்களைப் புரிபவர் பெரியோர்களே ஆதலால் அவரை வேந்தன் விழைந்து பேணிக் கொள்ள வேண்டும் என்பதை இவன் விளக்கி நின்ருன்.

மழையின் மிகுதி மழையின்மை
வலிதீப் பிணியால் வந்ததுயர்
குழைவில் அமரர் தக்கோரைக்
குறித்துச் சாந்தியால் கடியா
விழைவில் பகைவர் கள்வர்வினை
செய்வார் சுற்றம் இவர்களின்ஆம்
பிழையை உபாயம் நான்காலும்
பெயர்க்கும் பெரியர் எனுந்துணையே. (1)

நற்பான் மையினுல் தேவர்களால்
நண்ணலாகும் எதிர் வினையை

உற்பாதங்க ளான் அறிந்தே
ஒழிப்பர்; மனிதரால் வருவ
பொற்பார் அவர் இங் கிதர் குணம் ஆ
சாரம் செயலால் புக்கறிந்து
நிற்பால் உறச்செய் குவர் அதனால்
பெரியோர் துணையே துணையாகும். (2)
(விநாயக புராணம் : அரசியல்)

பெரியாரைத் துணைக்கோடலே உனக்குப் பெரிய நன்மையாம் என ஓர் அரசன் தனது அருமை மகனுக்கு இன்னவாறு அறிவு நலன்களை அருளி யிருக்கிறான்.

**மதிநலம் கூறுகிற மாண்புடையார் கேண்மை அதிநல மாகி வரும்.**

உரவோர் உரைகளை உவந்து கேள்.

---

448. கோதில் அறிவோரைக் கொள்ளாக் கயமுகனேன்
கோதுகொண்டு மாண்டான் குமரேசா—ஏதும்
இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும். (அ)

இ-ள்.

குமரேசா! நல்ல அறிஞரைத் துணைக்கொள்ளாத கயமுகன் ஏன் அல்லலாய் அழிவுற்றான்? எனின், இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பார் இலானும் கெடும் என்க.

நல்லது சொல்லுவார் இல்லையேல் நாசம் வரும் என்கின்றது. அரசு அறிய வுரியது தெரிய வந்தது.

அறிவு நலன்களை இடித்து அறிவுறுத்துவார் இல்லாத சேமமற்ற அரசன் கேடு செய்வார் இன்றித் தானாகவே கெட்டு அழிவான்.

முன்பு இடிப்பாரை உடையாரைக் கெடுப்பார் இலர் என்றார்; இதில் அத்தகைய உறுதித் துணைவரை இல்லாதவர் தாமாகவே கெடுவர் என்கின்றார்.

இடிப்பார் என்றது தரும நீதிகளை நன்கு தெரிந்த பெரியோர்களை. அவர்களே அரசனுக்கு இடித்து அறிவு கூற வல்லவர். அத்தகைய மேலோரை மதித்து உபசரித்து மன்னன் எவ்வழியும் இனிது பேணிக்கொள்ள வேண்டும்; அவ்வாறு பேணவில்லையானல் அவர் பிரிய நேர்வர்; பிரிந்தால் வேலியில்லாத பயிர்போல் அவன் வாழ்வு விரைந்து பாழ்படும்.

மன்னன் கெடும் என அஃறிணை வாய்பாட்டால் முடித்தது ஏன்? எனின், பெரியோர் துணையை இழந்த பொழுதே அவன் இழிந்து கழிந்தமை தெரிய.

ஏமரா = காவலற்ற; களிப்புறுகின்ற.

ஏமரல் என்னும் வினையடியாக இது பிறந்துள்ளது.

ஏமரல் = காத்தல்; களித்தல்; மயங்கல்; மருளல்.
ஏமராது ஏமராவாறு. (கலி, 145)

இதில் ஏமரா குறித்திருத்தலைக் கூர்ந்து காணுக.

இடிப்பாரை இல்லாத, களிப்புறுகின்ற மன்னன் என்று பொருள் கொண்டால் புறத்தும் அகத்தும் புரையோடியுள்ள புலைநிலைகள் தெரிய வரும். உறுதி நலன்களை வலியுறுத்திக் கூறும் நல்ல துணைவர் அருகே இல்லையாயினும் ஏமரலுறாத மன்னன் கேடு அடையான்.

யானையை அங்குசத்தால் இடித்து அடக்கி நடத்தும் பாகன் வெளியே நில்லாது ஒழியினும் உள்ளே மதக்களிப்பு இல்லையாயின் அந்த யானை அல்லலுறாது வாழும். அதுபோல் புறத்தே உரத்தோடு இடிப்பார் இல்லாது போயினும் அகத்தே ஏமாப்புக் கொள்ளானாயின் அவன் கேடுறாது இனிது வாழ்வான்.

ஏமுற்றவரினும் ஏழை. (குறள், 873)

இதனை இங்கே நன்கு கருதியுணர்க.

உறுதி கூறுவாரும் இல்லாமல், உள்ளத்தருக்கும் கூடினல் அந்த மன்னன் எள்ளலடைந்து அல்லல் உழந்து இழிந்து விரைந்து கெடுவான்.

நட்பாய் இடிப்பார் இன்மை பகையாய்க் கெடுப்பார் கேட்டுக்கும், தானே களித்து மூர்க்கமாய் நிற்றல், கெடுப்பார் இல்லாமலே கெடுதற்கும் ஏதுவாம். ஒருவன் அடைகிற இன்பங்களுக்கும் துன்பங்களுக்கும் அவனுடைய செயல் இயல்களே காரணங்களாம். நல்வினைகளால் சுகமும், ஆக்கமும் உளவாகின்றன; தீவினைகளால் துக்கமும், கேடும் வருகின்றன. இந்த உண்மையைத் தெளிவாகத் தெரிந்தவர்கள் மதிநலமுடைய பெரியோர்கள் ஆதலால் அவர் பரிவுடன் அரசனுக்கு உறுதிகளை இதமாக மொழிகின்றனர்: அந்த அறிவுரைகளை விழைந்து கொள்ளாமல் செல்வச் செருக்கால் அவன் களித்து நிற்க நேர்ந்தால் இடித்து அறிவுறுத்துகின்றார். இடிப்பார் என்றதனால் அவர் நடிப்பவர் அல்லர் என்பது தெளிவாய் நின்றது. தக்காருடைய தகவுரைகள் விலக நேரின் மிக்க கேடுகள் விரைவில் விளைய நேரும்.

நட்புப் பிரித்தல் பகைநட்டல் ஒற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையும் ஐயுறுதல்—தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிரி தாதல்
கெடுவது காட்டும் குறி. (நீதிநெறி, 35)

அரசனுக்கு வருகிற கேடுகளை இது வரைந்து காட்டியுளது. மேலோர் கூறும் உறுதிமொழிகளைப் பொறுதியோடு கொள்ளா தொழியின் அவன் ஒல்லையில் கெடுவான் என்னும் இது ஈண்டு எண்ணி உணர வுரியது.

அருந்திறலாண்மையும், அதிசய ஆற்றலும், நெடிய படை வலிமைகளும் உடையனா யிருந்தும், மதிநலமுடைய முதியோரின் அறிவுரைகளைக் கேளாமையால் அரிய பெரிய செல்வங்களை எல்லாம் அடியோடு இழந்து இராவணன் அழிந்து ஒழிந்தான்.

முதல்நாள் போரில் இராமனோடு மூண்டு பொருது தோல்வியடைந்து மீண்டு வந்து அரண்மனை புகுந்து தனியே அமர்ந்து நேர்ந்த நிலைகளையும் கொலைகளையும் நினைந்து நினைந்து நெஞ்சம் உளைந்து நெடுந்துயருழந்தான். அவனது பரிதாப நிலையை அறிந்து வருந்திய

**மாலியவான்** மறுபடியும் வலிய வந்து மனம் மிக மறுகி உரிமையுடன் மதிநலம் கூறினன்.

முன்னம் சொன்ன உறுதிமொழிகளை யாதும் கேளாமல் இறுமாந்து இகழ்ந்து போனன் ஆதலால் அம் முதியவன் இம் மன்னனுக்கு அம் மூதுரைகளைச் சுட்டிக் காட்டிப் பின்னும் பேரன்போடு பேச நேர்ந்தான். தன் பேரனை நோக்கி அப் பெரியவன் உரைத்த உரைகள் இருவர் நிலைகளையும் தெளிவா விளக்கி வந்தன.

**மாலியவான் உரைத்தது.**

முன்உரைத் தேனைவாளா முனிந்தனை; முனியா உம்பி
இன்உரைப் பொருளும் கேளாய்! ஏது உண்டுஎனினும் [ஓராய்!
நின்உரைக்கு உரைவேறு உண்டோ? நெருப்புரைத்தாலும் [நீண்ட
மின்உரைத் தாலும் ஒவ்வா விளங்கொளி அலங்கல் வேலாய்!

**விளைந்துள்ள விளைவு.**

உளைவன எனினும், மெய்ம்மை யுற்றவர்
முற்றும் ஓர்ந்தார்
விளைவன சொன்ன போதும் கொள்கிலை!
விடுதி கண்டாய்!
கிளைதரு சுற்றம் வெற்றி கேண்மைநம்
கல்வி செல்வம்
களைவரு தானையோடு கழிவது
காண்டி என்ருன். (இராமா: 6; 15; 32; 33)

மதிநலமுடைய முதியவன் இவ்வாறு மனம்நொந்து மொழிந்துள்ளான். இவ்வுரைகளால் உற்றுள்ள விளைவுகளை ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம். பாட்டன் இடித்து அறிவுறுத்தியிருக்கிருன்; தம்பி விபீடணன் அன்போடு அறிவுரைகளை நெறிமுறையே கூறியிருக்கிருன். யாதொன்றும் கேளாமல் தீதுவழியிலேயே செருக்கி நின்றமையால் **இலங்கை வேந்தன்** அல்லல்களை அடைந்து எல்லாம் இழந்து அழிந்திருக்கிருன்.

கிளையோடு கெட்டழிந்தது. உழையோர் உரைத்த உறுதி உணர்வுகளைக் கருதித் தெளியாமல் கடுந்தருக்குடன் நிமிர்ந்து அவன் களித்திருந்தமையாலே யாம்.

அடுத்திருந்து இடித்து அறிவு கூறும் அறிஞர்களை எந்த அரசன் பேணிக் கொள்கிறானோ அவனது ஆட்சி மாட்சியுடன் நீட்சியடைந்து வரும்; பேணாது ஒழியின் அவன் பெருங்கேடுகளை அடைந்து ஒருங்கே அழிவான் என்பதை இராவணனது அழிவு தெளிவாக்கியுளது.

இடிப்பார் என்ற குறிப்பால் பெரியாரின் சிறப்பு உணர வந்தது. அவர் தந்நலம் கருதித்தாழார்; உலக நலம் கருதியே வாழ்வார்; வேந்தனும் மாந்தரும் சுகமாய் வாழ்ந்து வர வேண்டும் என்றே வாழ்பவர் ஆதலால் ஏதேனும் குற்றம் காண நேரின் கொற்றவன் என அஞ்சாமல் நெஞ்சம் துணிந்து இடித்து அறிவுறுத்துவர். அதனை உணர்ந்து திருந்தினவர் உயர்வர்; உணராமல் ஒழிந்தவர் இழிந்து அழிவர்.

முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப உடுத்துண்ப உண்ணு—இடித்துஇடித்துக்
கட்டுரை கூறின் செவிக்கொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போடு உற்ற பிணம். (நீதிநெறி: 31)

மணிமுடி புனைந்து சிறந்த அணிகலன்களை அணிந்து உயர்ந்த சுகபோகங்களை நுகர்ந்துவரினும் இடித்து அறிவுறுத்தும் பெரியோர்களுடைய உறுதிமொழிகளைக் கேளான் ஆயின், அந்த அரசன் உயிரோடு செத்த ஒரு நடைப்பிணமே என இது குறித்துள்ளது. குறிப்பிலுள்ள வெறுப்புகளையும் கொதிப்புகளையும் பொறுப்புகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

பெரியாரைத் துணையாகப் பேணிக்கொள்ளாதவன் பேதையாயிழிந்து பிழையாயழிந்து படுவான்.

இது கயமுகன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் அதிசய ஆற்றல்களுடையவன். இவனுடைய தாய் பெயர் விபுதை. தந்தை மாதவமுடைய மாகதர்.

இவன் பருவம் அடைந்த பின் பரமனை நினைந்து அருந் தவம் புரிந்தான். இவனது தவநிலைக்கு இரங்கிச் சிவ பெருமான் நேரே தோன்றி அருள் புரிந்தார். அந்த ஆண்டவனிடம் இவன் வேண்டியுள்ள வர பலன்கள் நீண்ட வியப்புகளுடையனவாய் நிறைந்து வந்தன.

மிக்கதோர் அமரரால் வியப்பின் மானுட
மக்களால் அவுணரால் மற்றை யோர்களால்
தொக்குறு விலங்கினுல் துஞ்சிடா வகை
இக்கணம் தமியனேற் கீதல் வேண்டுமால். (1)

என்னிக ராகிவந் தொருவன் என்னொடு
முன்னுற வெஞ்சமர் முயலு மென்னினும்
அன்னவன் படையினும் அழிவு ருவகை
பொன்னவிர் வேணியாய் புரிதல் வேண்டுமால்! (2)

வரந்தரு கடவுளர் முனிவர் மற்றையோர்
இருந்திடும் உலகெலாம் என்ன தாணையில்
திரிந்திடும் ஆழியும் கோலும் சென்றிடப்
புரிந்திடும் அரசியல் புரிதல் வேண்டுமால். (3)

அன்றியும் ஒன்றுள தடியன் சூழ்ச்சியால்
பொன்றினும் பிறவியுட் புகாமை வேண்டுமால்
என்றலும் நோற்றவர்க் கேதும் ஈபவன்
நன்றவை பெறுகென நல்கி ஏகினன். (4)

(கந்தபுராணம்)

பரம்பொருளிடம் இவன் பெற்றுள்ள பெரும் பொருள்களை இவற்றால் அறிந்து கொள்கிறோம். இன்ன வாறு பலவகை வளங்களோடு உலகம் ஆளும் தலைமை யையடைந்து மதங்கபுரி என்னும் தலைநகரிலிருந்து இவன் ஆட்சி புரிந்தான். வானவரும் தானவரும் மான வரும் வழிபட மன்னர் மன்னவனாய் மாட்சி மிகுந்து நின்றான், இவனுடைய மனைவி பெயர் **விசித்திர காந்தி**. அவளோடு அமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து பெரிய மகிமைகளோடு பெருகி வந்தான். இன்னவாறு பலவகை நிலைகளிலும் தலைமையாய் நிலவி வந்த இவ னிடம் நாளடைவில் செருக்கும் களிப்பும் மிகுந்து வந் தன. தேவர் முதல் யாவருக்கும் அல்லல்கள் புரிந்தான்.

வெள்ளி முதலிய நல்லோர்கள் சொல்லையும் கேளாமல் அல்வழிகளில் எல்லைமீறி ஊக்கி நின்றான். அதனால் அறிஞர்கள் விலகிப் போயினர். போகவே ஏகமாய்த் தருக்கி எங்கும் இடர்கள் இயற்றினன். முடிவில் தேவ கோபத்தால் மங்கி மடிந்தான். இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பார் இல்லாமலே கெடுவான் என்பதை உலகம் இவன்பால் தெளிந்து நின்றது.

பெரியார் துணையிலரேல் பேரரசும் பேர்ந்து
பரிவாய் அழிந்து படும்.

இடிப்பார் இலரேல் கெடுப்பார் பலர்.

———

449. சார்பில்லாச் சுந்தனுயர் தன்னிலையை ஏனிழந்து
கூர்துயரம் கொண்டான் குமரேசா—நேரும்
முதலிலார்க் கூதியம் இல்லை மதலையாம்
சார்பிலார்க் கில்லை நிலை. (கூ)

இ-ள்

குமரேசா! நல்ல சார்பு இல்லாமையால் சுந்தன் ஏன் தனது நிலையை இழந்தான்? எனின், முதல் இலார்க்கு ஊதியம் இல்லை; மதலையாம் சார்பு இலார்க்கு நிலை இல்லை என்க.

அரிய பெரிய இலாபம் இதில் தெரிய வந்தது.

மூலதனம் இல்லாதவர்க்கு வாணிகத்தில் இலாபம் இல்லை; உறுதியான நல்ல துணையில்லாதவர்க்கு அரச வாழ்வில் உயர்வில்லை.

இருவகை நிலைகள் ஒரு தொகையா யுணர வந்தன.

முதல் என்றது நிலையான தலைமைப் பொருளை. வாணிகம் முதலிய தொழில்களை நடாத்துதற்கு உறுதிப் பொருளாக முதலில் சேமமாய் வைக்கப்படுவது முதல் என வந்தது. மூலதனம் என இதனை வழங்கி வருவர். வட்டிக்குக் கொடுக்கும் பொருளையும் இது சுட்டி நின்றது. வரவுக்கு உரிய வழி உறவா உணர வந்தது.

முதல் இல்லாதவனுக்கு வட்டியும் இல்லை என்பது முதுமொழி. பொருள் பொருளால் விளைகின்றது.

பின்னே குறித்த பொருளைத் தெளிவாக விளக்குவதற்கு உவமையாய் முன்னே இந்த வாக்கியம் வந்துள்ளது. உவமேய நிலை ஓர்ந்து உணர வுற்றது.

முதல் இலார்க்கு ஊதியம் இல். (பழமொழி 312)
மதலை = உறுதியாய்த் தாங்கி நிற்கும் தூண்.
மதலையாய் வீழூன்றி. (நாலடியார் 197)
வானம் ஊன்றிய மதலைபோல. (பெரும்பாண் 346)
மதலையைக் காமின். (சீவகசிந்தாமணி 1895)
மதலையின் தாங்கி. (பெருங்கதை 2-10)

இவற்றுள் மதலை குறித்துள்ளமை காண்க.

மதலையாம் சார்பு என்றது உரிமையோடு உறுதியாய் ஆதரித்து வரும் துணையை. சார்ந்து இதம்புரிந்து வருவது சார்பு என வந்தது. நல்ல சார்புகள் அமைந்தவன் எவ்வழியும் நன்மை யடைந்து வருகிறான். அவ்வாறு அமையப் பெறுதவன் மெலியனாய் யாண்டும் அல்லலடைய நேர்கின்றான்.

மூல முதலுள்ள வணிகன் தொழிலை வளமாக நடத்தி மிகுதியான ஊதியங்களை அடைகிறான். அவ்வாறு முதல் இல்லாதவன் யாதும் செய்ய இயலாது தேம்பி நிற்கின்றான்.

சால்புடைய பெரியோரைத் துணைக்கொண்ட அரசன் தனது ஆட்சியை மாட்சியாக நடத்தி என்றும் மகிமை மிகப் பெறுகின்றான். அத்தகைய சார்பு இல்லாதவன் செயலிழந்து அயலே அயர்ந்து நிற்கின்றான்.

பண்டம் மாற்றும் வணிகருக்கு மூலதனம்போல் ஞாலம் காக்கும் மன்னருக்குப் பெரியார் இனம். அரசருக்கு உறுதி நலம் கூறவந்தவர் வணிகருக்கும் சேர்த்து ஈண்டு அதனை வழங்கியுள்ளார். யாண்டும் யாருக்கும் ஆவதொரு நன்மையை அறிவுறுத்தி உறுதி நலன்களை உணர்த்தி யருளுவதே தேவர் இயல்பு.

எத்துணை ஆற்றல்கள் உடையவராயினும் தக்க துணைவர்களை அரசர் சார்ந்து கொள்ள வேண்டும் என்பதை ஈண்டு ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம். அச் சார்பால் அதிசய ஆற்றல்களும் அரிய நலன்களும் உளவாம்.

கணையுலாம் சிலையி னீரைக் காக்குநர் இன்மை யேனும்
இணையிலாள் தன்னை நாடற்கு ஏயன செய்தற் கேற்கும்
புணையிலா தவர்க்கு வேலை போக்கரிது அன்ன தேபோல்
துணையிலா தவர்க்கு மின்னு பகைப்புலம் தொலைத்துநீக்கல்.

ஆயது செய்கை என்பது அறத்துறை நெறியின் எண்ணித்
தீயவர்ச் சேர்க்கிலாது செவ்வியோர்ச் சேர்த்துச் செய்தல்
தாயினும் உயிர்க்கு நல்கும் சவரியைத் தலைப்பட்டு அன்னாள்
ஏயதோர் நெறியின் எய்தி இரலையின் குன்றம் ஏறி. (2)

கதிரவன் சிறுவன் ஆய கனகவாள் நிறத்தி னானை
எதிரெதிர் தழுவி நட்பின் இனிதமர்ந்து அவனி னீண்ட
வெதிர்பொருந் தோளினானை நாடுதல் விழுமிது என்றான்
அதிர்கழல் வீரர் தாமும் அன்னதே அமைவ தானார். (3)
(இராமா, 3-10)

துணையின் வலிமையைக் குறித்து ஒரு கந்தருவன் இராமலக்குவரிடம் இவ்வாறு கூறியிருக்கிறான். **தீயவர்ச் சேர்க்கிலாது செவ்வியோர்ச் சேர்த்து** என்றது சிற்றினஞ் சேராமல், பெரியாரைத் துணைக்கொள்ளல் வேண்டும் என்பது தெரிய வந்தது. இங்கே குறித்துள்ள பொருள் நயங்களைக் கூர்ந்து நன்கு ஓர்ந்து கொள்ள வேண்டும்.

நல்லார் சார்பு இல்லாதவன் எல்லா வல்லமைகளும் உடையனாயினும் அல்லல்கள் அடைந்து அழிவான்.

இவ்வுண்மை சுந்தன்பால் தெரிய நின்றது.

சரிதம்.

இவன் ஓர் இயக்கர் தலைவன், வியக்கத் தக்க அழகும் அறிவும் ஆண்மையும் உடையவன். வசுமதி என்னும் நகரிலிருந்து இவன் அரசு புரிந்து வந்தான். இவனுடைய மனைவி பெயர் அனங்கலீலை. அவளோடமர்ந்து காம போகங்களை நுகர்ந்து கரும தருமங்களை மறந்து கடுந் தருக்குடன் இவன் களித்து வந்தான்.

காமனும் இரதியும் கலந்த காட்சியி
தாமென இயக்கனும் அணங்க னும்வேறு
யாமமும் பகலும்ஓர் ஈறின் றென்னலாய்த்
தாமுறு பெருங்களிச் சலதி மூழ்கினர். [இராமாயணம்]

தனது மனைவியுடன் காமச் சுவைகளில் திளைத்துக் களித்து உலக நிலையை மறந்து இரவு பகலறியாது மையல் வெறியனாய் இவன் மூழ்கிக் கிடந்துள்ள நிலைமையை இதனால் அறிந்து கொள்கிறோம். கல்வி செல்வம் முதலிய பல்வகை நலங்களும் இவனிடம் நன்கு நிறைந்திருந்தன. இருந்தும் நல்லவர்கள் தொடர்பை யாதும் கொள்ளாமல் யாண்டும் உள்ளம் செருக்கி எவரையும் மதியாமல் தவறான வழிகளில் இவன் ஊக்கித் திரிந்தான். எல்லார்க்கும் அல்லல்கள் புரிந்து வந்த இவன் ஒருநாள் அகத்திய முனிவரது ஆச்சிரமத்தை அடைந்தான். சாந்த சீலராயமர்ந்திருந்த அவரது குறுகிய உருவ நிலையைக் கண்டு இகழ்ந்து சிரித்தான். அவ்வளவோடு அமையாமல் அந்தப் புனித நிலையத்தில் இனிது வளர்ந்திருந்த கொடி செடிகளைச் சிதைத்து ஒழித்து முடிவில் அம் முனிவருக்கும் இடர் புரிந்தான். அம்மாதவர் முனிந்து நோக்கினர்; இவன் எரிந்து அழிந்தான். இவனுடைய குடும்பமும் குலைந்து தொலைந்தது. எவ்வளவு வளங்கள் ஒருவனுக்கு அமைந்திருந்தாலும் மதலையாம் சார்பு இல்லார்க்கு நல்ல நிலையில்லை என்பதை இவனது நிலை எல்லாரும் அறியத் தெளிவுறுத்தி நின்றது.

சந்த னசல மாதவன் தன்னெதிர்
சுந்தன் நின்று துயரங்கள் செய்தனன்;
அந்த மாமுனி சீறி விழிக்கவே
இந்த மூர்க்கன் எரிந்தழிந் தானரோ.

**பெரியார் உறவு பெருந்திரு வாகும்**
**பிரியின் பெரிய பிழை.**

ஊதியம் என்பது மேதையர் உறவே.

---

450. கற்றறிந்த நற்குருவைக் கைவிட்டான் இந்திரன்பின்
குற்றமுற்ருன் என்னே குமரேசா—சுற்றிநின்று
பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். (ய)

இ-ள்

குமரேசா! தனது குருவின் உறவை இழந்த இந்திரன் பின்பு ஏன் பெரிய துயரம் அடைந்தான்? எனின், நல்லார் தொடர் கைவிடல் பல்லார் பகைகொளலின் பத்து அடுத்த தீமைத்தே என்க.

பெரியார் உறவு ஒழியின் பேரிழவாம் என்கிறது.

நல்லவருடைய நட்பை நழுவவிடின் அது பலருடைய பகையைக் கொள்வதினும் பத்து மடங்கு தீமையுடையதே.

யாண்டும் நன்மையான தன்மையுடையார் ஈண்டு **நல்லார்** என வந்தார். நல்ல எண்ணங்களும், நல்ல மொழிகளும், நல்ல செயல்களும் உடையராய் எவ்வழியும் நலமாய் ஒழுகி வரும் விழுமியோரே **பெரியோர்** என்பது தெரிய **நல்லார்** என்ருர்.

நல்லாரைத் துணைக்கொண்டால் நலன்கள் பல உளவாம் ஆதலால் எல்லா வகையிலும் அவரை உரிமையோடு பேணி வருபவர் பெரிய பயன்களைப் பெற்று அரிய நயன்களுடன் உயர்ந்து வருகின்ருர்.

நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றேயாம்—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
இணங்கி யிருப்பதுவும் நன்று. (மூதுரை 8)

நல்லாருடைய தொடர்பால் விளையும் நல்ல மாண்புகளை ஒளவையார் இவ்வாறு குறித்துள்ளார்.

நல்லார்சொல் விரும்புவதும், நல்லாரைக் காண்பதுவும்,
நல்லார்க்கு ஒன்று உதவுவதும், நல்லாரைப் புகழ்வதுவும்,
நல்லார்நன் றென்றுரைப்ப நவிற்றியஇவ் வெலாம் அடங்க
நல்லார்நட் பென்றுமுறல் நன்றன்றே நான்மறையோய்!
(குசேலம்)

கண்ணன் குசேலரை நோக்கி நல்லார் நட்பை நயந்து வர இவ்வாறு வியந்து கூறியிருக்கிறார்.

நல்லார் இணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுளதோ? அகமும் பொருளும்
இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக்கே இறைவாகச்சி ஏகம்பனே!
(பட்டினத்தார்)

நல்லார் உறவைப் புகழ்ந்து பாராட்டிப் பட்டினத்தடிகள் இங்ஙனம் உணர்த்தி யுள்ளார்.

நல்லார் செயுங்கேண்மை நாடோறும் நன்றாகும்;
அல்லார் செயுங்கேண்மை யாகாதே;—நல்லாய்கேள்!
காய்முற்றின் தின்தீங் கனியாம்; இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்னாகிப் போம்? (நன்னெறி 38)

நல்லாருடைய தொடர்பின் நயங்களை இன்னவாறு நூலோர் பலரும் வியந்து புகழ்ந்துள்ளனர். நல்லதை விரும்பி வருபவர் நல்லவராய் உயர்ந்து வருகின்றார்.

அறன் அறிந்தார், மூத்தார், அறிவுடையார், நோய் நீக்கிக் காப்பார், அரியன புரிவார், ஆய்ந்து சூழ்வார், தக்கார், இடிக்கும் துணையார், மதலையாம் சார்பார், நல்லார் என இந்த அதிகாரத்தில் பெரியாரைக் குறித்திருக்கிறார். பெயர்க் குறிப்புகளால் அவருடைய இயல்புகளையும் செயல் முறைகளையும் உயர்நிலைகளையும் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும்.

பெரியாரது கேண்மையின் அதிசய மேன்மைகளைத் தெளிவாக விளக்கப் பகைவரை இணைத்து உணர்த்தினார். நல்ல ஒருவரது நட்பைக் கைவிடின் எல்லையில்லாத அல்லல்களை அடைந்து அந்த அரசன் வருந்துவான் என்பார் **பல்லார் பகைகொளலின் பத்து அடுத்த தீமைத்தே** என்றார். ஏகாரம் தேற்றம் குறித்து நிற்பினும் பரிதாபநிலை அதன் தொனியுள் மருவியுள்ளது. பத்து என்றது மிகுதியான அளவுக்கு ஒரு தகுதியான எண்ணமாய் ஒத்து நின்றது.

பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி யுறும். (குறள், 639)

உள்ளேயிருந்து பழுது எண்ணுகின்ற ஒரு மந்திரி, வெளியே நின்று வெல்ல முயல்கின்ற எழுபது கோடி பகைவரினும் தீயவன் என இது குறித்துள்ளது.

பழுதில்லாத ஒரு நல்லவரைக் கைவிடுவது பல்லாயிரம் பேர்களைப் பகைத்துக் கொள்வதினும் தீமையாம் என இஃது உணர்த்தியுளது. இந்த இரண்டையும் இணைத்து எண்ணி அரசுக்குரிய வரிசையான அமைதி நிலைமைகளை ஆய்ந்து கொள்ள வேண்டும்.

அறிவு நலம் நிறைந்த பெரியோர் அரசனுக்குக் கண் போன்றவர்; அவரைக் கைவிடின் விழியிழந்த குருடனாய் ஒளியிழந்து அவன் இழிவடைய நேர்வன்; அவ்வாறு நேராதபடி எவ்வழியும் இதமான சீரிய மதிநலனை இவ்வாறு தெளிவுறுத்தி யுள்ளார்.

ஒருவன் பல்லாரைப் பகைகொளினும் கொள்ளலாம்; ஒரு நல்லார் தொடர்பைக் கைவிடலாகாது. எல்லா நலன்களையும் ஈய வல்லது பெரியார் தொடர்பு; அது பிரிய நேரின் பெரிய துயரமேயாம்.

பெரியார்தங் கேண்மை பெருந்துணையாம்; ஈண்டும்
அரிதே மறுமையினும் அஃதொப்ப தொன்றில்;
பெரியார் தொடர்கை விடலிற் பெருங்கேடு
எரிபோல் பகையானும் இல். (இன்னிசை)

பெரியார் கேண்மை பெறலரிய ஒரு பெரும்பேறு; இருமையினும் இன்பம்தரும் பெருமையுடையது; யாண்டும் உரிமையுடன் இதனைப் போற்றிக்கொள்ள வேண்டும்; போற்ரு தொழியின் பொல்லாத அல்லலாம்; தீயைப் போன்ற தீய பகைவரும் செய்ய முடியாத கொடிய துன்பத்தை அது செய்துவிடும் என்று இது குறித்துள்ளது **பெரியார் தொடர்கைவிடல் பெருங்கேடு** என்னும் இக்கவி இந்தக் குறளையே எண்ணி வந்துளது.

பெரியாரோடு யாத்த தொடர்விடுதல் இன்னு;
அரியவை செய்தும் என உரைத்தல் இன்னு;
பரியார்க்குத் தாம்உற்ற கூற்றுஇன்னு; இன்னு
பெரியார்க்குத் தீய செயல். [இன்னுநாற்பது 27]

பெரியார் தொடர்பைக் கைவிடின் அது பெரிய துயரமாம் எனக் **கபிலர்** இவ்வாறு கூறியுள்ளார்.

பேயோடு பழகுறினும் பிரிவது அரிதுஅரிது என்று
தூயோர்கள் மொழிவரால் தூயோரும் புகழ்தூயோர்
ஆயோர்கள் பெருநட்பை அருந்தவத்தால் பெறல்அன்றி
ஏயோஎண் மையில்கிடைப்பின் இகழ்வரோ இகழ்வில்லார்.
(குசேலம்)

உள்ளம் தூய நல்லாருடைய உறவு அரிய புண்ணியத்தால் பெறவுரிய பெரிய திரு; அதனைப் பெற்றவர் எவ்வழியும் நழுவாமல் பேணிக்கொள்ள வேண்டும்.

பெரியாரைப் பேணுமல் பிழையாய்க் கைவிடின் அவ்வேந்தன் நொந்து வெந்துயருழந்து வருந்துவான்.

இவ்வுண்மை இந்திரன்பால் அறிய வந்தது.

சரிதம்.

தேவராசனுன இந்திரன் யாவரும் தொழுது ஏவல் புரிந்துவர விழுமிய நிலையில் விளங்கி வருங்கால் ஒரு நாள் உல்லாச ஆடல்களில் உள்ளம் களித்திருந்தான். அதிசய அழகுடைய தெய்வ சபையில் தருண மங்கையர் நடனம் புரிந்தனர். அரம்பை ஊர்வசி மேனகை திலோத்தமை என்னும் பேரழகிகள் பெருமித நிலையில் புரிந்த நாட்டியங்களைக் கண்டு களித்துப் பாட்டுக்களைக் கேட்டு மகிழ்ந்து அரியணையில் அமர்ந்திருந்தான். அப்பொழுது அங்கே தேவகுருவான வியாழ பகவான் வந்தார். அவரைக் கண்டும் யாதும் மரியாதை செய்யாமல் அரச மமதையில் அமரர்கோன் களிமீதூர்ந்திருந்தான். இவனது நிலைமையை அறிந்ததும் அவர் நெஞ்சம் திரிந்தார். விரைந்து வெளியேறி அயலகன்று மறைந்து போனர். அவ்வாறு அவர் போகவே மதியிழந்த வான்

போல் வானுலக ஆட்சி மாட்சி குன்றி மழுங்கி நின்றது. தனது பிழையை உணர்ந்து இவன் அவரைத் தேடநேர்ந்தான். பீடைகள் யாண்டும் பெருகி நீண்டன. நீளவே இவன் மறுகி நொந்தான். பல்லார் பகையினும் நல்லார் ஒருவர் தொடர் கைவிடல் அல்லலாம் என்பதை எல்லாரும் காண இந்திரன் உணர்த்தி நின்றான்.

முன்னதா முகத்தில் வண்டு மூசுமந்
தார நீழல்
பொன்னவிர் சுணங்குண் கொங்கைப் புலோமசை
மணாளன் பொற்பூண்
மின்னவிர்ந் திமைப்பச் சிங்கம் சுமந்தமெல்
லணைமேல் மேவி
அன்னமென் னடையார் ஆடும் ஆடல்மேல்
ஆர்வம் வைத்தான். (1)

மூவகை மலரும் பூத்து வண்டுளே முழங்கத் தெய்வப்
பூவலர் கொடிபேர்ந்தன்ன பொன்னனார் கூத்தும் அன்னார்
நாவலர் அமுதம் அன்ன பாடலும் நாக நாட்டுக்
காவலன் கண்டு கேட்டு களிமதுக் கடலில் ஆழ்ந்தான். (2)

பையரா வணிந்த வேணிப் பகவனே யனைய தங்கள்
ஐயனும் வியாழப் புத்தேள் ஆயிடை அடைந்தா னாகச்
செய்யதாள் வழிபா டின்றித் தேவர்கோன் இருந்தான்
[அந்தோ
தையலார் மயலில் பட்டோர் தமக்கொரு மதியுண் டாமோ?

ஒல்லெனக் குரவன் ஏக உம்பர்கோன் திருவின் ஆக்கம்
புல்லெனச் சிறிது குன்றப் புரந்தரன் அறிந்து இக்கேடு
நல்லதொல் குரவற் பேணா நவையினால் விளைந்த தென்னா
அல்லலுற் றறிவன் தன்னைத் தேடுவான் ஆயினானே. (4)
(திருவிளையாடல் 1)

நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளை இவற்றால் ஓர்ந்துகொள்கிறோம். **நல்ல தொல் குரவற் பேணா நவையினால்விளைந்த அல்லல்** என்று இந்திரன் உள்ளம் கவன்றுள்ளான். பெரியாரைப் பேணித் துணைக்கொள்ளவில்லையானால் பேரரசரும் பெருந்துயர் அடைவர் என்பதைத் தேவராசன் யாவரும் அறியத் தெளிவுறுத்தி யருளினான்.

உறுவாப் பேணல், உவர்ப்பின்மை,
 உலையா இன்பம் தலை நிற்றல்,
அறிவர் சிறப்பிற்கு எதிர்விரும்பல்,
 அழிந்தோர் நிறுத்தல், அறம்பகர்தல்,
சிறியார் இனத்தில் சேர்வின்மை,
 சினம்கை விடுதல், செருக்கவித்தல்,
இறைவன் அறத்து ளார்க்கெல்லாம்
 இனியர் ஆதல், இது தெளிவே.

(சீவக சிந்தாமணி 2816)

பெரியாரைப் பேணித் துணைக் கொள்க; சிறியார் இனத்தைச் சேராதே என இது குறித்துள்ளது.

பத்து நீர்மைகள் சீர்மைகளாய் இதில் வந்துள்ளன. உண்மைகளை உய்த்து உணர்ந்து கொள்க.

நல்லார் உறவினை நாடி நயந்துகொளின்
எல்லா நலமும் எளிதெய்தும்—நல்லார்தம்
உள்ளம் திரியினோ ஒல்லாத் துயரங்கள்
வெள்ளமென நேரும் விரைந்து.

**நல்லார் உறவு நழுவின் அதுகொடிய**
**பொல்லாத் துயரம் புலை.**

பெரியாரைப் பிரியாதே.

**இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.**

1 அறிவுடையாரை ஆய்ந்து கொள்ளுக.
2 பாதுகாப்பாளரைப் பார்த்துப் பேணுக.
3 பெரியாரைப் பேணல் பெறலரும் பேறும்.
4 அவரைத் தமராத் தழுவித் தகவாய் ஒழுகுக.
5 கண்ணுக் கருதிக் கொண்டு கருமம் புரிக.
6 தக்காரைச் சாரின் மிக்க வெற்றி சேரும்.
7 இடித்து அறிவுறுத்துவாரை என்றும் போற்றுக.
8 இடிப்பார் இலரேல் கெடுப்பார் பலர் நேர்வர்.
9 ஆதர வாளரை அணைத்து வாழுக.
10 நல்லார் தொடர்பை நாளும் நயந்து கொள்.

45-வது பெரியாரைத் துணைக்கோடல் முற்றிற்று.

# நாற்பத்தாருவது அதிகாரம்

## சிற்றினஞ்சேராமை

அஃதாவது சிறியார் இனத்தைச் சேராதிருக்கும் சீர்மை. பெரியார் இனத்தைத் துணையாகப் பேணிக் கொண்டவர்க்கே இந்த மேன்மை இனிது அமையும் ஆதலால் அதன்பின் இது இனமாய் இணைந்து நின்றது. மேலோரைச் சார்ந்து மேன்மை பெறுக; கீழோரைச் சேர்ந்து கீழ்மையுருதே என்று உணர்த்தியுள்ளார். முன்னது விதியாய் நின்றது. இது விலக்காய் வந்தது. அதிகார முறைமையும் இதனல் நயமா அறியலாகும்.

451 வீடணனேன் அஞ்சி விலகினன் சிற்றினத்தைக்
கூடினனேன் முன்னேன் குமரேசா—மூடமுறு
சிற்றினம் அஞ்சும் பெருமை; சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும். (க)

இ-ள்.

குமரேசா! சிறிய இனத்தை வெறுத்து வீடணன் விலகினன்; இராவணன் ஏன் அதனை விரும்பி நின்ருன்? எனின், பெருமை சிற்றினம் அஞ்சும்; சிறுமைதான் சுற்றமாச் சூழ்ந்துவிடும் என்க,

இது பெருமை சிறுமைகளின் பெற்றி கூறுகிறது.

பெரியார், சிறியார் இனத்தை அஞ்சி விலகுவர்; சிறியாரோ, அவரை உறவாகத் தழுவி உரிமையோடு உவந்து கொள்ளுவர்.

குணம் செயல்களால் இழிந்துள்ள சிறியவர்கள் கூட்டம் **சிற்றினம்** என வந்தது. சிறுமை என்னும் பண்பினடியாக இது பிறந்துளது. ஈறு போய்த் தன் ஒற்று இரட்டி வருமொழியோடு இயைந்து ஒரு பெயராய்ச் சிறியார் இனத்தைக் குறித்து நின்றது.

ஈறு போதல் இடையுகரம் இய்யாதல்
ஆதி நீடல் அடியகரம் ஐயாதல்
தன்ஒற்று இரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே. (நன்னூல்)

இந்த இயல் விதி இங்கே சிந்திக்க வுரியது.

சிற்றினத்தைச் சேர்வதால் விளையும் இழிநிலைகளை யும் பழிதுயர்களையும் பெரியோர்கள் நன்கு தெரிவராத லால் பெருமை அஞ்சும் என்றார். பெரியார் அஞ்சுவர் என்னமல், பண்பின் மேல் வைத்து இவ்வாறு கூறியது ஏன்? எனின், அவ்வாறு அஞ்சுவதே அவரது இயல்பு; அந்த அச்சத்தின் அளவே அவருடைய பெருந்தகைமை உச்சமாய் உயர்ந்து ஓங்கி வரும் என்பதை ஊன்றி ஓர்ந்து உணர்ந்து கொள்ள வந்தது.

சிறியார் இனத்தைச் சேர ஒட்டாதபடி பெரியாரைத் தடுத்துப் பாதுகாத்து வரும் கருவிகள் எவை? அவை அறிவு அச்சம் வெறுப்பு அருவருப்புகளாம். தெளிந்து உயர்ந்துள்ள பெரியோர்கள் இழிந்து தாழ்ந்துள்ள சிறியோர்களை எவ்வகையிலும் சேர மாட்டார்கள்.

சிற்றினத் தவரொடும் செறிதல் சீரிதோ?

(இராமா: 6: 4-74)

சிற்றினத்தாரோடு யாதும் சேர லாகாது என இவ்வாறு **சாம்பவன்** இராமபிரானிடம் கூறியுள்ளான்.

இழுக்கல் இயல்பிற் றிளமை; பழித்தவை
சொல்லுதல் வற்றாகும் பேதைமை;—யாண்டும்
செறுவொடு நிற்கும் சிறுமை;இம் மூன்றும்
குறுகார் அறிவுடை யார். (திரிகடுகம் 14)

சேரக்கூடாதவரை இது தெளிவாத் தெரிவித்துளது.

சிறுமைக்கு நேரே மாறாகி நிற்பது பெருமை. ஆகவே சிறுமையாளரைப் பெருமையாளர் அணுகாது அகன்று போவது இயல்பாய் நேர்ந்தது.

**அஞ்சும்** என்ற குறிப்பால் சிற்றினத்தின் நஞ்சுத் தன்மை நன்கு தெரிய நின்றது. இழிபுலைகளான தீமை களையே பழகிவருபவராதலால் சிறியரோடு சேரநேரின் பழிபாவங்களே நேரும்; நேரவே இம்மையும் மறுமை யும் இழந்து எவ்வழியும் அழிதுயரங்களே அடைய வரும். புல்லரை அணுகின் பொல்லாப் புலையே புகும்.

**அற்பர் உறவு பிராண சங்கடம்** என்பது பழமொழி. இத்தகைய புல்லரைப் புல்லர் உவந்து புல்லிக்கொள்ளு வர். இனம் இனத்தோடு சேரும் என்பது மானச தத்து வம். பெரியார் பெரியாரைச் சேர்ந்து மகிழ்வர்; சிறியார் சிறியாரைச் சேர்ந்து சிறுமையாய்க் களிப்பர்.

நற்ரு மரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்
கற்ருரைக் கற்ருரே காமுறுவர்;—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்; முதுகாட்டில்
காக்கை யுகக்கும் பிணம். (மூதுரை 24)

பேரினம் சிற்றினங்களின் சேர்க்கைகளைக் குறித்து **ஔவையார்** இவ்வாறு செவ்வையாய்க் கூறியிருக்கிருர். உவமை நயங்களையும் பொருளின் நிலைகளையும் இதில் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும்.

ஆயிரம் சொன்னலும் அறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடின் பிழைகாண் பராபரமே.

சிற்றினம் சேராதே என்று **தாயுமானவர்** இங்ஙனம் குறித்துள்ளார். சிறுமையைப் பெருமை மருவாது.

பெருந்தன்மையாளர் சிறிய புன்மையாளரைச் சேராதகலுவர். பெரியாரையே அவர் பேணிக் கொள்வர்.

இவ்வுண்மை வீடணன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இலங்கை வேந்தன் தம்பியாகிய இவன் சிறந்த குண நலன்கள் நிறைந்தவன். அண்ணன்பால் பேரன்புடைய வன். அவன் தீமையாய்ச் சீதையைக் கவர்ந்து வந்தபின் இவன் உள்ளம் வருந்திஞன். அவனுக்கு நல்ல பல புத்திமதிகளை நயமாய்ச் சொல்லிஞன். யாதும் கேளா மல் அவன் இவனை மோதி முனிந்தான். **துன்முகன், வச்சிரதந்தன், தூமிரன், மகரக்கண்ணன், தூமாக்கன்,** முதலிய தீயவர்களையே அவன் நேயமாய்த் தழுவிக் கொண்டு இத்தூயவனை இகழ்ந்து வந்தான். வரவே இவன் யாவரையும் வெறுத்து விலகி அயலகன்று போஞன். போனவன் மானவீரனை இராமனுடைய

மகிமை மாண்புகளை அறிந்து வியந்து அப்பெருமானிடம் அடைக்கலம் புகுந்து கொண்டான். போர் மூண்ட பொழுது இந்திரசித்து ஒருநாள் இவனை நிந்திக்க நேர்ந்தான். தங்கள் இனத்தைவிட்டு விலகி எதிரியிடம் போய்ச் சேர்ந்திருப்பது இழிவாம் என்று அவன் இகழ்ந்து கூறினன்; மிகுந்த சினத்துடன் அவன் பழித்ததற்கு இவன் தகுந்த பதில் உரைத்தான். உரைகள் உணர்வு நலன்கள் சுரந்து வந்தன. அயலே காணுக.

அறந்துணை யாவது அல்லால் அரநரகு அமைய நல்கும்
மறந்துணை யாக மாயாப் பழியொடும் வாழ மாட்டேன்
துறந்திலேன் மெய்ம்மை எய்தும் பொய்ம்மையே துறப்ப [தல்லால்
பிறந்திலேன் இலங்கை வேந்தன் பின்அவன் பிழைத்த போதே. (1)

உண்டிலன் நறவம்; பொய்ம்மை உரைத்திலன்; வலியால் [ஒன்றும்
கொண்டிலன்; மாய வஞ்சம் குறித்திலன்; யாரும் குற்றம்
கண்டிலர் என்பால்; உண்டே நீயிரும் காண்டி ரன்றே
பெண்டிரில் திறம்பி னுரைத் துறந்தது பிழையிற்றுமோ? (2)

அறத்தினைப் பாவம் வெல்லாது என்னும தறிந்து ஞானத்
திறத்தினு முறுமென் றெண்ணித் தேவர்க்கும் தேவைச் [சேர்ந்தேன்
புறத்தினிற் புகழே யாக பழியொடும் புணர்க போதச்
சிறப்பினிப் பெறுக தீர்க என்றனன் சீற்றம் தீர்ந்தான். (3)
(இராமா, நிகும்பலை)

இந்தப் பெருந்தகையின் அறிவுநலன்களையும் நெறிமுறைகளையும் உறுதியுண்மைகளையும் இவை தெளிவா உணர்த்தியுள்ளன. பிறன்மனைவியை விழைந்து பிழை புரிந்த பொழுதே இலங்கை வேந்தனோடு நான் பிறந்திலேன் என்று மொழிந்துள்ளமையால் இவனுடைய நீர்மை சீர்மைகளைக் கூர்மையாய் ஓர்ந்து கொள்ளுகிறோம். சிற்றினத்தை வெறுத்து இவன் வெளியேறியுள்ளான். அதனைச் சுற்றமாய்ச் சூழ்ந்து நின்று குற்றமே புரிந்து இராவணன் தாழ்ந்து மாய்ந்து ஒழிந்தான்.

**தீயவரைத் தூயவர் சேராரே; தீயவரே**
**தீயவரைச் சேர்வர் செறிந்து.**

*தீயாரைச் சேரேல்.*

———

452. கோடாத கைகேசி கோடினளே கூனியுடன்
கூடியதால் என்னே குமரேசா—கூடும்
நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு. (உ)

இ-ள்

குமரேசா! கோடாத மனமுடைய கைகேசி கூனியுடன் கூடியதால் ஏன் நிலை திரிந்து மாறினாள்? எனின், நிலத்து இயல்பால் நீர் திரிந்து அற்று ஆகும்; மாந்தர்க்கு அறிவு இனத்து இயல்பு ஆகும் என்க.

நிலத்தின் தன்மையால் நீர் நிலைமாறி அதன்படியே உருவாம்; அதுபோல் மனிதர்க்கு உரிய அறிவு தாம் சேர்ந்த இனத்தின் தன்மையாய் நேரும்.

சிற்றினத்தைச் சேராதே; அஞ்சி விலகுக என்று முன்னம் உரைத்தார்; சேர்ந்தால் என்னும்? என்பதை இதில் தெளிய உணர்த்துகின்றார்.

பொருளைத் தெளிவாக விளக்குதற்கு உவமை உரிமையாய் வந்துளது. நிலம் இனத்துக்கும், நீர் அறிவுக்கும், சேர்தல் நேர்தலுக்கும் ஒப்பாம்.

நீர் தனியே இருக்கும்பொழுது வெண்ணிறமாய் இனிய சுவை தோய்ந்துள்ளது. அத்தகைய நீர் எந்த நிலத்தோடு சேர்ந்ததோ அந்த நிலத்தின் சொந்த இயல்பின்படியே நிறம் மாறும்; சுவையும் வேறுபடும்.

செந்நீர் வெண்ணீர் உவர்நீர் சவர்நீர் நன்னீர் தெளிநீர் கழிநீர் என இன்னவாறு நீர் பேர் பெறுவது அது சேர்ந்த நிலத்தின் வகையாலே யாம்.

செம்புலப் பெயல்நீர் போல. (குறுந்தொகை, 40)

செம்மண் வாய்ந்த புலத்தில் பாய்ந்த நீர் தானகவே உருமாறிக் கலந்தது போலக் காதலர் இருவர் தாமாகவே கலந்து கொண்டதை இது காட்டியுள்ளது.

அப்பென்றும் வெண்மையதாயினும்ஆங்கந் நிலத்தியல்பால்
தப்பின்றி யேகுண வேற்றுமை தான்பல சார்தலினல்
செப்பில் அபக்குவம் பக்குவ மாயுள்ள சீவனிலும்
இப்படி யேநிற்பன் எந்தை பிரான்கச்சி ஏகம்பனே!
(பட்டினத்தார்)

**நிலத்தியல்பால் நீர் திரிந்து** வருதல்போல் சீவர்களின் நிலைமை யளவே ஈசனும் நேர்ந்தருளுகிருன் எனப் **பட்டினத்தார்** இவ்வாறு குறித்துள்ளார். அப்பு=நீர். இந்தக் குறளின் கருத்து அந்தப் பெரியவர் உள்ளத்தே புகுந்து இப்படிப் பெரிய பரம்பொருளை விளக்கியுளது. நீரின் இயல்பான நிறம் வெண்மையே என்னும் உண்மையை இங்கே நன்கு தெரிந்து கொள்கிறோம்.

நிலத்தியல் நீரியல் என்னும் நீரதால்.
(இராமா: கும்ப 82)

நிலத்தியல் பற்றே கொண்மூ நீரியல்பு.
(அரிச்சந்திரம்: மீட்சி 76)

நிலத்தினல் நீரின்தன்மை குன்றிய திறம்போல்.
(மெய்ஞ்ஞான: 2-20)

நிலத்தின் இயல்பால் நீர் திரிந்து நிறமும் குணமும் மாறி வரும் என்பதை இவை வரைந்து காட்டியுள்ளன. குறிப்புகள் யாவும் கூர்ந்து ஓர்ந்து உணர வுரியன.

சிப்பி முளரிசுரம் ஆறு திரைவீழ்நீர்
ஒட்பத் தரளமஃ தொப்பழிவுண் ணீருவராம்;
அப்படியே மாந்தர் அறிவும் இனத்தியல்பால்
பற்பல மாறு படும். (இன்னிசை)

தான் சார்ந்த சார்புகளின்படியே நீர் நிலை திரிந்து வெளியே தோன்றும்; அதுபோல் **மாந்தர் அறிவும் இனத்தியல்பால்** மாறுபடும் என இது கூறியுளது.

இனத்தியல் பாம்அறிவு என்பது உண்மையே
மனத்துயர் செயுமயல் மாற்றும் நீறுதான்
அனிச்சமெல் லடியினர் நுதல் அடுத்தலும்
பனித்துடல் வெதும்புமால் படுத்தலால் என்பார்.
(பிரபுலிங்க, மாயை, 34)

பருவ மங்கையர் நெற்றியில் பூசியுள்ள திருநீறு ஆடவர்க்கு மிகுந்த மையலை விளைத்தது. பாச மயலை நீக்க வல்ல நீறு இவ்வாறு நிலைதிரிந்தது, சார்ந்த இனத்தாலாயது; ஆகவே இனத்தியல்பதாகும் அறிவு என்னும் அருள்மொழி உண்மையே என்பது அனுபவத்தால் அறிய வந்தது என இது உரைத்துளது. தேவர் வாய் மொழியைக் கவிகள் எவ்வாறு போற்றி வருகின்றனர் என்பதை இடங்கள்தோறும் கண்டு வருகிறோம்.

அறிவு உயிரொளியாய் மனிதர்க்கு உயர்வருளி வருகிறது. அத்தகைய ஆன்ம ஒளியை எவ்வழியும் மேன்மையாகப் பேணி வரவேண்டும். நல்லவரோடு சேர்ந்துவரின் அறிவு நல்லதாய் ஓங்கி வரும். தீயவரோடு சேரின் அது தீதாய்த் தீங்கு புரியும். துன்பம் உறாமல் இன்பமாய் வாழ விரும்புகிறவன் தீய இனத்தை யாண்டும் அணுகலாகாது. நல்லினமே நலம் பல நல்கி யருளும். அதனைச் சேர்வதே சீர்மையாம்.

பாலோடு அளாயநீர் பாலாகும் அல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம்—தேரின்
சிறியார் சிறுமையும் தோன்றாதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து. (நாலடி 177)

பாலோடு கலந்த நீர் பால் ஆதல்போல் பெரியாரோடு சேர்ந்தவர் பெரியராய் உயர்வர் என இது உணர்த்தியுளது. மேலினம் கீழினம் என்பன மேலான நன்மையும் கீழான புன்மையுமே நோக்கி வந்துள்ளன.

சின்னத்தனமான செயல் இயல்களை யுடையது சிற்றினம் என வந்தது. அந்த இனத்தோடு சேரின் எந்த வகையிலும் இழிவுகளையே அடைந்து நிந்தையுற நேரும். சிறியாருடைய பழக்க வழக்கங்கள் அறியா

மையோடே தொடர்ந்து வருதலால் அவரது தொடர்பு அவகேடுகளையே எவ்வழியும் விளைத்து விடும்.

நல்ல வினைக்கு நற்பயனும் தீய வினைக்குத் தீப்பயனும்
இல்லை எனும்வல்இழுதையரும்எள்ளும்விடரும்தூர்த்தர்களும்
சொல்லுநடரு முதலாகத்தொக்க குழுவைச்சேர்ந்தொழுகின்
புல்லும் அறிவைத் திரித்திருமைப் பொருளும் கெடுக்கும்
[புகழோடே
(விநாயக புராணம்)

சிற்றனத்தின் புலைநிலைகளைச் சுட்டிக்காட்டி அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தால் அறிவு திரிந்து பெருமை இழந்து பேதையா யிழிந்து இருமையும் சிறுமையுற வரும் என இஃது உணர்த்தி யுளது.

மண்ணியல் பால்குணம் மாறும் தண்புனல்
கண்ணிய பொருள்மணம் கலந்து வீசும்கால்
புண்ணியர் ஆதலும் புல்லர் ஆதலும்
நண்ணினத் தியல்பென நவிலல் உண்மையே. (நீதிநூல்)

நிலத்தின் இயல்பால் நீர் திரியும்; தான் கலந்த பொருள்களின் நாற்றத்தைக் காற்று வீசும்; அதுபோல் சேர்ந்த இனத்தின் இயல்பின்படியே எவரும் குணம் செயல்கள் அமைய நேர்வர் என இது குறித்துளது.

நல்ல அறிவுடையவரும் பொல்லாதவரோடு சேர்ந்தால் புலையாய் இழிந்து நிலைதிரிந்து விடுவர்.

இவ் வுண்மை கைகேசிபால் காண வந்தது.

சரிதம்.

தசரத மன்னனுடைய அருமைத் திருமனைவியாகிய இப் பெண்ணரசியிடம் அரிய பல குணநலன்கள் இயல்பாய் அமைந்திருந்தன. இருந்தும் அந்தப்புரத்தில் வேலைக்காரியான **மந்தரை** என்பவளோடு நெருங்கிப் பழகி வந்தாள். அவள் கொடிய வஞ்சகி. முதுகில் சிறிது வளைவு இருந்தமையால் **கூனி** என்றே பேர் பெற்று நின்றாள். இராமன் முடிசூட நேர்ந்தபோது அக் கொடியவள் குலைக்க மூண்டாள். இக்குணவதியிடம் வந்தாள். கோள் மூட்டினாள்: "**அம்மா!** உன் மகனே

அரசாள உரியவன்; இராமன் முடிசூடி நின்ருல் பரதன் அடிமையாய் நிற்பன்; இப்பொழுதே அதைத் தடுத்து நிறுத்தாவிட்டால் எப்பொழுதும் நீ துன்பம் அடைந்து இழிந்து வருந்துவாய்!'' என்று இப்படிக் கலக்கினுள். அவளுடைய உரைகளைக் கேட்டதும் இவள் உள்ளம் கொதித்தாள்: "என் கண்ணினும் உயிரினும் இனிய இராமனுக்கு இடையூறு கூறுகின்ற நீ மிகவும் கொடியவள்; பொல்லாத புலேகளைப் புகல்கின்ருய்! என் எதிரே நில்லாதே! அயலேஓடிப்போ'' என்றுஉருத்துரைத்தாள்.

வாய்கயப்புற மந்தரை வழங்கிய வெஞ்சொல்
காய்கனற்றலே நெய்சொரிந் தெனக்கதம் கனற்ற
கேகையர்க்கிறை திருமகள் கிளரிள வரிகள்
தோய்கயற்கண்கள் சிவப்புற நோக்கினள் சொல்லும்: (1)

வெயில்முறைக்குலக் கதிரவன் முதலிய மேலோர்
உயிர்முதற்பொருள் திறம்பினும் உரைதிறம் பாதோர்
மயில்முறைக்குலத் துரிமையை மனுமுதல் மரபைச்
செயிருறப்புலேச் சிந்தையால் என்சொனுய் தீயோய்! (2)

எனக்கு நல்லேயும் அல்லே நீ என்மகன் பரதன்
தனக்கு நல்லேயும் அல்லேஅத் தருமமே நோக்கில்
உனக்கு நல்லேயும் அல்லேவந் தூழ்வினே தூண்ட
மனக்கு நல்லன சொல்லினே மதியிலா மனத்தோய்! (3)

பிறந்திறந்துபோய்ப் பெறுவதும் இழப்பதும் புகமேல்
நிறந்திறம்பினும் நியாயமே திறம்பினும் நெறியின்
திறந்திறம்பினும் செய்தவம் திறம்பினும் செயிர்தீர்
மறந்திறம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ? (4)

போதி என்எதிர் நின்றுநின் புன்பொறி நாவைச்
சேதி யாதிது பொறுத்தனன்; புறஞ்சிலர் அறியின்
நீதி யல்லவும் நெறிமுறை யல்லவும் நினேந்தாய்
ஆதி யாதலின் அறிவிலி அடங்குதி! என்ருள். (5)

(இராமா, மந்தரை 63-67)

கைகேசியினுடைய குணநலன்களேயும் அறிவு நிலேயையும் இராமன்பால் வைத்துள்ள பேரன்பையும் இவற்ருல் நன்கு தெரிந்துகொள்கிருேம். இத்தகைய நல்லாள் அந்தப் பொல்லாதவள் சேர்க்கையால் பின்பு உள்ளம்

திரிந்தாள். தன் கணவனைக் கபடமாய் வஞ்சித்து இராமனைக் கானகத்துக்கு அனுப்பினாள். அதனால் நாயகனை இழந்தாள்; கொடிய துயரங்களையும் நெடிய பழிகளையும் நிலையா யடைந்தாள். தான் சேர்ந்த இனத்தின் இயல்பால் யாரும் நிலைதிரிவர் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

கல்லும்வல் லிரும்பும் வெண்ணெய்என்றுரைப்பக்
காழ்படு மனத்தகை கேசி
மல்லடு திணிதோட் பரதனுக்கு உலகம்
வழங்கிநீ ஏழிரு பருவம்
கொல்புலி வழங்கு கானிடைத் திரியக்
கூறினை னுந்தையென் றுரைப்ப
வில்விழுங் குயர்தோட் செம்மல்நீ பணித்த
விலக்கலன் எனத்தொழுது அகன்றான்.

(கூர்மபுராணம்)

புலையான சேர்க்கையால் நிலைமாறி இவள் புலைபடிந்து பழி யிழிவுகள் அடைந்துள்ளமையை இன்னவாறு நூல்கள் பல இன்னலுடன் கூறியுள்ளன.

புல்லர் உறவு புலையாம்; அவாருகே
செல்லல்; செலினே துயர்.

நல்லவரைச் சேருக.

---

453. உற்ற இனத்தால் உயர்தரும சாமியேன்
குற்றமிக வுற்றான் குமரேசா—பெற்ற
மனத்தானும் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானும்
இன்னான் எனப்படுஞ் சொல். (ந)

இ-ள்.

குமரேசா! தருமசாமி ஏன் சிறியாரைச் சேர்ந்து சிறுமை யுற்றான்? எனின், மாந்தர்க்கு உணர்ச்சி மனத்தான் ஆம்; இன்னான் எனப் படுஞ்சொல் இனத்தான் ஆம் என்க.

இனமும் மனமும் இனமாய் அறிய வந்தன.

மனிதர்க்கு உணர்வு பொதுவாகத் தம் மனத்தால் உளதாம்: சிறப்பாகச் சுட்டிக் கூறப்பெறும் சொல் சேர்ந்த இனத்தால் உளதாம்.

அறிவு இனத்தியல்பதாகும் என்று முன்பு குறித்தார்; மனிதனும் இனத்தின்படியேயாவான் என இதில் உணர்த்துகின்றார்.

விலங்கு பறவை முதலிய வேறு பிராணிகள் எவற்றினும் மனிதன் உயர்ந்துள்ளான்; அந்த உயர்ச்சி மனவுணர்ச்சியால் அமைந்துள்ளது. இயல்பான அவ்வுணர்ச்சி மற்ற உயிர்களினும் மனிதன் மேலானவன் என உயர்த்தி யிருப்பினும் மனித மரபுள்ளே அவன் உயர்ந்தவனா? அல்லது தாழ்ந்தவனா? என்பதைச் சேர்ந்த இனமே தெளிவாக நன்கு விளக்கி விடுகிறது.

நல்லவரைச் சேர்ந்தவன் நல்லவனாகின்றான்; தீயவரைச் சேர்ந்தவன் தீயவனாகின்றான். மேலோன், கீழோன், பெரியவன், சிறியவன், சாது, மூர்க்கன், வீரன், பேடி என இன்னவாறு பேர்பெற்று வருவது பெரும்பாலும் சேர்ந்த இனத்தாலேயே நேர்ந்து வருகிறது. ஆகவே இன்னான் எனப்படும் சொல் இனத்தான் ஆம் என்றார். இனத்தின் வலிமை இனிது தெரிய வந்தது.

மனம் இயற்கையுரய் இயைந்தது; இனம் செயற்கையாய் அமைந்தது. அது உள்ளே உயிரை ஒட்டி நுட்பமாயுளது; இது வெளியே உடலை ஒட்டித் திட்பமாய் நிற்கிறது. அதனினும் இதுவே மனிதனை இன்னான் என்று உலகம் அறிய நேரே உருவாக்கி விடுகிறது.

ஒருவன் மனம் நல்லதா யிருப்பினும் கெட்டவர்களோடு சேர்ந்திருந்தால் கெட்டவன் என்றே அவன் சொல்லப்படுகிறான். கேடும் அடைகிறான்.

மனத்தால் மறுவில ரேனும்தாம் சேர்ந்த
இனத்தால் இகழப் படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனம் தீப்பட்டக் கால். (நாலடியார் 180)

மனம் மாசின்றி யிருப்பினும் சேர்ந்த இனம் நீசமாயின் அதனல் நாசமே யாம் என இது குறித்துளது. இந்தக் குறளின் பொருளைத் தெளிவாக விளக்க ஓர் உவமை தோய்ந்து வந்துள்ளது. அவ்வுண்மையை இதில் நுண்மையாய் ஓர்ந்து உணர்ந்து கொள்கிருேம்.

சந்தன மரம் நல்லது; நறுமணமுடையது; யாரும் பிரியமாய் உவந்து கொள்வது. அத்தகைய தரு அருகே சேர்ந்த செத்தைகளில் தீப்பற்றியபோது எரிந்து கரிந்துபோம். எத்தகைய உத்தமராயினும் சிற்றினத்தைச் சேர்ந்து நின்ருல் சீரிழந்து பேரிழிந்து அழிந்தே போவர் என்பதை இங்கே தெளிந்து கொள்கிருேம். சிற்றினம் சேராமையோடு அதன் அருகேயும் நிற்கலாகாது; அயலே விரைந்து விலகி நீங்கிவிட வேண்டும்.

கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. (நீதிசாரம் 20)

விலங்கினங்களைக் காட்டிலும் **சிற்றினம்** தீயது; அழிதுயர் புரிவது; அதனை அஞ்சி அயலே நீங்க வேண்டும் என இஃது உணர்த்தியுளது.

நிந்தையிலாத் தூயவரும் நிந்தையரைச் சேரிலவர்
நிந்தையது தம்மிடத்தே நிற்குமே—நிந்தைமிகு
தாலநிழற் கீழிருந்தான் தன்பால் அருந்திடினும்
பாலதெனச் சொல்லுவரோ பார். [நீதிசாரம் 79]

தூய மேலோரும் தீய கீழோரைச் சேரின் அவரையும் தீயவர் என்றே உலகம் இகழ்ந்து சொல்லும்; பனையடியிலிருந்து பாலைப் பருகினுலும் கள்ளைக் குடித்தான் என்றே யாவரும் எள்ளுவர்; ஆகையால் சிற்றினத்தைச் சேர்ந்து நில்லாதே என்று இது தெளிவுறுத்தியுள்ளது.

நல்லொழுக்கம் இல்லார் இடஞ்சேர்ந்த நல்லோர்க்கும்
நல்லொழுக்கம் இல்லாச்சொல் நண்ணுமே—கொல்லுவிடப்
பாம்பெனவுன் ருரோ பழுதையே யானுலும்
தூம்பமரும் புற்றடுத்தால் சொல். (நீதிசாரம் 86)

நல்ல ஒழுக்கமுள்ளவரும் கெட்டவரிடம் சேர்ந்தால் கெட்டவர் என்றே உலகம் சுட்டிச் சொல்லும்; புற்றின் அருகே வைக்கோல்புரி கிடந்தாலும் அதனைப் பாம்பு என்று கூறுவர். ஆகவே சிற்றினத்தை எவ்வகையிலும் யாதும் அணுகலாகாது என இஃது அறிவுறுத்தியுளது.

சேராத இடந்தனிலே சேரலாகாது; சேர்ந்தால் அது தீராத இடும்பையாம். சிறுமையுறாமல் யாண்டும் பெருமையாக வாழவேண்டும் என்றே யாவரும் விரும்புகின்றனர். தாம் கருதியபடி உயர்வாய் வாழ விழைபவர் கீழான இனத்தைக் கூடாமல் மேலான இனத்தையே மேவி யாண்டும் இதமா ஒழுகி வரவேண்டும்.

மொய்சிதைக்கும் ஒற்றுமை யின்மை; ஒருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போலு மேனியைப்—பெய்த
கலன்சிதைக்கும் பாலின் சுவையைக் குலஞ்சிதைக்கும்
கூடார்கட் கூடி விடின். [நான்மணி 21]

பாலின் சுவை பாத்திர பேதத்தால் கெடுவதுபோல் மேலான குலத்தலைமை கீழான புலைச் சேர்க்கையால் சிதைந்துபோம்என **விளம்பிநாகனார்** இங்ஙனம் விளம்பியுள்ளார். பால் அனைய இனியரும் கீழால் பாழாவர்.

முய்லவோ வேண்டா முனிவரை யானும்
இயல்பினர் என்ப தினத்தான் அறிக;
கயலியலுண் கண்ணாய்! கரியரோ வேண்டா
அயலறியா அட்டூணோ இல். (பழமொழி 237)

மனிதர் இன்னார் என்பதை அவர் எவராயினும் சேர்ந்த இனத்தால் தெளிவாக அறிந்து கொள்ளலாம் என **முன்றுறையரையர்** இவ்வாறு குறித்துள்ளார்.

தொன்னாட்டவம் முயன்றோர்களும் தொழில்வெய்யவர் [உறையும்
அன்னாட் டிடை புக்கார்குணம் அம்மூர்க்கரொடு ஒப்பார்;
முன்னாட்டிய மதுரக்கனி முதிருப்பளம் உற்றால்
பின்னாட்டன துருவத்தொடு பேரும்பிறி தாமால்.
[மெய்ஞ்ஞான விளக்கம் 5 : 28]

இனிய மாங்கனி உப்பளத்தை யுற்ருல் சுவை ஒழிந்து உருமாறிப்போம்; அரிய தவமுடைய பெரியோரும் சிறியோரினத்தைச் சேர்ந்தால் குணம் திரிந்து இழிந்து கழிந்து போவர் என இது மொழிந்துளது.

தன்னைச் சேர்ந்தவர் எவராயினும் அவரைச் சிறுமைப்படுத்திச் சீரழித்துக் கெடுத்து விடுதலால் **சிற்றினம்** எவ்வளவு இழி பழியுடையது! எத்துணைத் தீமையது! என்பதை உய்த்து உணர்ந்து கொள்ளலாம்.

இயல்பாகவே நல்லவனுயினும் சிற்றினத்தைச் சேரின் அவன் தீயவனு யிழிந்து அழிவுறுவன்.

இது தருமசாமிபால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் பாண்டி நாட்டிலே அகரம் என்னும் ஊரில் இருந்தவன். வேதியர் மரபினன். தந்தை பெயர் சிவசாமி. தாய் பேர் புனிதவதி. அரிய நோன்புகள் புரிந்து அரிதில்பெற்ற ஒரே மகன் ஆதலால் இந்த மைந்தனைத் தந்தை தாயர் இருவரும் சிந்தை உவந்து சீரும் சிறப்புமாகப் பேணி வந்தனர். நல்ல செல்வக்குடியில் பிறந்த இவன் கல்வியிலும் உயர்ந்து சிறந்து விளங்கினுன். அழகிய ஒரு கன்னியைத் தக்க பருவத்தில் மணம் புரிந்து மிக்க இன்பமாய் வாழ்ந்து வந்தான். உருவ அழகும் திருவும் மருவி யிருந்தமையால் பருவ மங்கையர் பலரை இவன் விழைந்து திரிய நேர்ந்தான். அதற்கு உரிய தூர்த்தர்களோடு சேர்ந்தான். **அனங்க மோகினி** என்னும் தாசியின் மையலில் சிக்கி அவளது காமக்களிப்பில் மூழ்கிக் கிடந்தான். மதிகெட்டு மதுவும் அருந்தினுன்.

அழகினுல் உயர்குலத்தான் ஆனுலும் பெருங்காமக்
குழகினுல் சீருணத்தின் குடப்பால்போல் குணம்திரிந்து
பழகிடா மூர்க்கரொடும் பழகினுன்; கல்விளனும்
கழகமாம் பெரும்பயிர்க்கு மூடமெனும் களைமூட. (1)

முதியமறை நூல்விடுத்து மோகமத நூல்பயிற்றி
அதரமுதல் பதினொன்றும் அமுதநிலை பதினைந்தும்
இதமுறுமா லிங்கனமும் எண்ணில்கர ணமுந்தெரிப்பான்
பதுமினிசித் தினிமுதலாம் பாவையரைத் துருவுவான். (2)

ஓமமே மந்திரமே ஒவ்வொன்றுக் குறைந்துவரக்
காமமே நிறைவாகக் கருமமெனும் துணைபிரிந்து
பூமலர்வெங் கணைமதனை வென்றபுரி நூல்மார்பன்
வாமமே கலைநிதம்ப வாளரவால் மதிதோற்றான். (3)

தந்தையாம் சிவசாமி சங்கிரகத் தனம்போயும்,
முந்தையார் தேடிவைத்த முதல்போயும், தான்வேட்ட
சிந்தையார் மனைவிபொருட் சீதனங்கள் போயும் உடை
கந்தையாய்ப் போயும் ஒரு கணிகையார் மயல்போக்கான்.
[திருக்குற்றாலத்தல புராணம்]

பொல்லாத இனத்தால் இவன் புலையடைந்து இழிந்துள்ள நிலைகளை இவை வரைந்து காட்டியுள்ளன. நல்ல குடியில் பிறந்து பெருமையாய்ச் சிறந்திருந்தவன் சிற்றினத்தைச் சேர்ந்தமையால் சிறுமையடைய நேர்ந்தான். இன்னான் எனப்படும் சொல் இனத்தானும் என்பதை உலகம் அறிய இவன் நேரே உணர்த்தி நின்றான்.

**மனத்தின் அளவே மனிதன்; எனினும்**
**இனத்தின் அளவே இசை.**
புனித இனத்தைப் பொருந்தி உயர்க.

---

454 தோடகரும் பாணினியும் சூழ்ந்தவினத் தாலறிவு
கூடினார் என்னே குமரேசா—நாடும்
மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்
கினத்துள தாகும் அறிவு. (சு)

இ-ள்

குமரேசா! தோடகரும் பாணினியும் தாம் சேர்ந்த சிறந்த இனத்தால் ஏன் உயர்ந்த அறிவுமிகப் பெற்றார்? எனின், ஒருவற்கு அறிவு மனத்து உளது போலக் காட்டி இனத்து உளதாகும் என்க.

மனித அறிவின் மருமம் தெரிய வந்தது.

ஒருவனுக்கு அறிவு மனத்துள் இருப்பதுபோல் வெளியே தோன்றச் செய்து அவன் சேர்ந்த இனத்துள் உளதாய் இனிதே எழும்.

மனம் இனம் இரண்டும் அத்துச்சாரியை பெற்று உருபுகளைப் பெறாமல் தொகையாய் நின்றன.

எண்ணம் சொல் செயல்களுக்கெல்லாம் மூலநிலையமாய் எதையும் அறிந்து நடத்துவது எதுவோ அது அறிவு என வந்தது. ஒருவனுக்கு என்றது மனித மரபுக்கெல்லாம் தனியுரிமையாய் நின்றது. மோனை நயம் கருதி **மனிதற்கு** என்று குறித்திருக்கலாம். அவ்வாறு கூறவில்லை. தெளிந்த அறிவுடையனாய்ச் சிறந்து வருகிற **ஒருவற்கு** எனப் பெருமை தோன்ற உரைத்தார்.

நினைவுக்கு நிலையம் நெஞ்சம்.

அறிவுக்கு நிலையம் உள்ளம்.

உள்ளத்திலிருந்தே உணர்வு ஒளியாய்க் கிளர்ந்தெழுந்து கருமங்களை மருமமாய்ப் புரிந்து வருகிறது. மனத்துள் மருவி யிருப்பது இயற்கை யறிவு; இனத்துள் பெருகி வருவது செயற்கை அறிவு.

நல்ல இனத்தோடு சேரின் அறிவு நல்லதாய் வரும்; கெட்ட இனத்தோடு கூடின் அறிவு கேடாய்த் திரிந்து போம். படித்து வருகிற நூல்களின்படியே அறிவு தடித்து வருதல்போல் அடுத்து வருகிற இனத்தின்படியே அறிவு பெருத்து வருகிறது. காமநூல் பயின்றவன் காமி; ஞான நூல் பயின்றவன் ஞானி. நல்லவரைச் சார்ந்தவன் நல்லறிஞன். புல்லரைச் சேர்ந்தவன் புல்லறிவன். மருவியபடியே அறிவு உருவாகிறது.

அறியாப் பருவத்து அடங்காரோடு ஒன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வும்—நெறியறிந்த
நற்சார்வு சாரக் கெடுமே வெயில்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு. (நாலடியார் 171)

இளமைப் பருவத்தில் துட்டரோடு சேர்ந்து கெட்டிருந்த அறிவு பின்பு நல்லவரோடு சேர்ந்து நல்லறிவாய்த் திருந்தி ஒருவன் உயர்ந்து வந்துள்ளதை இது உணர்த்தியுள்ளது. நல்ல சார்பால் எல்லா நலன்களும் பெருகி எவ்வழியும் இனிமைகளாய் வருகின்றன.

எல்லா உடைமைகளையும் எளிதே அடைந்துகொள்ள அறிவுடைமை இனிது அமைந்துள்ளது. அரிய பெரிய திருவாகிய அந்த அறிவு மனத்தாலும் இனத்தாலும் மருவி வருகிறது, சேர்ந்த இனத்தின்படியே அறிவு நேர்ந்துவிடும் ஆதலால் சிற்றினத்தைச் சேராமல், பேரினத்தையே எவ்வகையும் யாண்டும் இனிது பேணிச் செவ்வையாய்ச் சேர்ந்து கொள்ள வேண்டும்,

*சீலமுற் றுயர்ந்தவர்ச் சேரின் வீடுறும்;*
*மாலையுற் றறிவிலார் மருங்கு அடைந்திடின்*
*வேலையுற் றலைதுரும் பென்ன வெம்பவக்*
*கோலமுற் றிறந்திறந் துழலல் கூடுமால். (பாகவதம்)*

சீலமுடைய மேலோரைச் சேரின் பேரின்ப வீடு பெறலாம்; கீழோரைக்கூடின் துன்பப் பிறப்பே உளதாம் என இது குறித்துளது.

சேர்ந்த இனத்தின்படியே அறிவு எங்கும் நேர்ந்து திகழ்கின்றது. இவ்வுண்மை தோடகரிடமும் பாணினிபாலும் நன்கு தெரிய வந்தது.

சரிதம்.

தோடகர் என்பவர் ஆதிசங்கரருடைய சீடருள் ஒருவர், அடக்கம் உடையவர். இனிய பண்பினர். ஆசிரியர்பால் பேரன்புடையவர். சுரேசனர் சதானந்தர் முதலிய பேரறிவாளர்கள் குருவினிடம் பாடம்கேட்டு ஞான தீரர்களாய் விளங்கி வந்தனர். இவர் சிறிது மந்த மதியினராதலால் நூல்களின் பொருள் நயங்களை நுனித்து உணர முடியாமல் ஆசிரியருடைய பணிவிடைகளையே செய்து வந்தார். சீரிய பெரியோர்களைச் சார்ந்தும் தனக்குக்கூரிய அறிவில்லையே என்று உள்ளம் உளைந்து

நின்ருர், இவரது நிலைமையை அறிந்து ஆசிரியர் அருள் புரிந்து பொருள் பொதிந்த மொழிகளைப் போதித்து வந்தார். அந்தப் போதனையால் இவர் போதம் மிகப் பெற்ருர். வடமொழியில் கவிகள் பாடவும் நேர்ந்தார். இவருடைய கவிகளின் சுவைகளையுணர்ந்து யாவரும் வியந்து புகழ்ந்தனர். தோடகம் என்னும் ஒருவகைப் பாவினம் இவரால் பீடும் பெருமையும் பெற்றது.

ஏடெழுதிப் படியாமல் ஏற்றமுறும்
இனநலத்தால் ஞான மெல்லாம்
கூடகம்போல் சூழ்ந்துவரச் சுரேசனரே
முதலானோர் துதித்து நிற்கத்
தோடகரும் பாடகராய்த் தோலாத
மொழிப்புலமை தோய்ந்து நின்ருர்
தேடரிய மேலோரைச் சேர்ந்தாரைச்
சேராத செல்வம் உண்டோ?

எல்லாரும் இவ்வாறு புகழ்ந்துவர இவர் அறிவில் உயர்ந்து விளங்கினுர். நல்ல இனத்தால் நல்லறிவு பெருகி யாவரும் புகழ்ந்து போற்ற வரும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து மகிழ்ந்தது.

சரிதம்—2.

பாணினி என்பவர் பரிணதன் என்னும் வேதியன் புதல்வர். இளமையிலேயே தந்தை தாய் இருவரையும் இவர் இழந்தார். வறுமையில் உழந்தார். வாழ வழியின்றி மறுகி யலைந்து முடிவில் பாடலிபுரத்தை அடைந்தார். அங்கே வாசர் என்னும் பெரியவரைக் கண்டார். அவர் அரிய கலைகள் பல பயின்றவர். பெரிய பண்டிதர்; வேத விதிகளை நன்கு தெளிந்தவர். பல மேதைகள் அவரிடம் வந்து உயர் கலைகளை ஓதி யுணர்ந்தனர். இவரும் அவரை அணுகி ஊழியும் புரிந்து நாளும் பழகி வந்தார். அறிவு நூல்களையும் ஆன்ம தத்துவங்களையும் நுணுகி யுணர்ந்தார். மந்த மதியினராயிருந்தும் அந்த மாதவருடைய ஆதரவினுல் சிந்தை தெளிந்து தேர்ச்சி மிகப் பெற்ருர். இறைவன் திருவருளை எண்ணி இடை

யிடையே யுருகிவந்தமையால் இவருடைய உள்ளத்தில் அறிவொளி ஓங்கி வந்தது. வடமொழியில் அருமை யான ஓர் இலக்கண நூலைத் துலக்கமா இயற்றி யருளி ஞர். அதிசய நிலையுடைய அதன் விதிமுறைகளையும் மதிநுட்பங்களையும் வியந்து அறிஞர் யாவரும் துதி செய்து நின்றனர். ஆரிய மொழியின் சீரிய ஒளியான அந்த வியாகரண நூல் **பாணினீயம்** என இவர் பெய ரால் விளங்கி வருகிறது. பதஞ்சலி முனிவர் அந்நூலுக் குச் சால்பான ஒரு பெரிய விரிவுரையைச் செய்திருக் கிருர். இவரது மேதையை உணர்ந்து உவந்து **பாணினி முனிவர், பாணினி பகவான்** என மேதாவிகள் இவரைப் போற்றி வருகின்றனர். அறிவு மனிதன் மனத்தில் உள்ளதுபோல் தோன்றினும் அது அவன் சேர்ந்த இனத்தின் வழியே ஒளிபெற்று உயர்ந்து வருகிறது என்பதை எவரும் இவர்பால் தெளிவுற்று நின்றனர்.

**உற்ற இனத்தின் வழியே உணர்வொளி**
**முற்றி வருங்காண் முதிர்ந்து.**

பெரியாரைச் சார்ந்து பேரறிவு பெறுக.

---

455. சார்ந்த இனத்தால் சசிவன்னன் தூய்மையுற்றுக்
கூர்ந்தான் புகழேன் குமரேசா—ஆர்ந்த
மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும்
இனந்தூய்மை தூவா வரும். (ரு)

இ-ள்

குமரேசா! தூய இனத்தைச் சேர்ந்து சசிவன்னன் ஏன் தூயனுய உயர்ந்தான்? எனின், மனம் தூய்மை செய்வினை தூய்மை இரண்டும் இனம் தூய்மை தூவா வரும் என்க.

புனித மனத்தர் இனிய இனத்தர் என்கிறது.

மனத்தின் தூய்மையும் செய்கின்ற செயலின் தூய் மையும் ஆகிய இரண்டும் இனத்தின் தூய்மை யிடமாய் இணைந்து வரும்.

தூ = பற்று; சார்பு. தூய்மை = பரிசுத்தம்.

இரண்டும் வரும் என்றது தாமாகவே அவை தொடர்ந்து வருதல் கருதி. செவ்வெண் ஆதலால் தொகையும் உம்மையும் ஈற்றில் வந்தன.

செவ்வெண் ஈற்றதாம் எச்ச வும்மை. (நன்னூல்)

இந்த இயல் விதி ஈண்டு எண்ண வுரியது.

அறிவு இனத்தியல்பாம் என முன்பு குறித்தார். எண்ணமும் செயலும் அதன் இயல்பின்படியே உயர்வாய் உருவாகி வரும் என இதில் உரைத்துள்ளார்.

மனத்துக்குத் தூய்மையாவது, வஞ்சம் கரவு முதலிய தீமைகள் தோயாமல் யாண்டும் நேர்மை நீர்மைகளோடு வாய்மை தோய்ந்து வருவது.

செய்வினைக்குத் தூய்மையாவது பிறர்க்கு அல்லல் நேராமல் எவ்வழியும் நல்லனவே செய்து வருதல்.

மனமும் செயலும் கூறினமையால் வாக்கும் இவற்ரேடு இனமாய் எண்ண வந்தது. உள்ளம் தூயனுய், உரை தூயனுய், செயல் தூயனுய் ஒருவன் உயர்ந்துவர வேண்டின் அவன் தூய இனத்தாரைத் தொடர்ந்து தோய்ந்து கொள்ள வேண்டும்.

மனத்தின் கண் மாசு இல்லையானல் அந்த மனிதன் தெய்வத் தேசுடன் சிறந்து விளங்குகிருன்; ஈசனுடைய திருவருள் அவனிடம் நேரே பெருகி வருகிறது. வரவே அதிசய மகிமைகளுடையனுய் அவன் ஒளிபெற்று நிற்கிருன். அத்தகைய உத்தமர்களைச் சேர்ந்தால் மனம் வாக்கு காயங்கள் சுத்தமாம்: ஆகவே பிறவித் துன்பங்கள் நீங்கிப் பேரின்பம் ஓங்கி வரும்.

மனம்வாக்குக் காயத்தால் வல்வினை மூளும்;
மனம்வாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னு;
மனம்வாக்குக் கெட்டவர் வாதனை தன்னல்
தனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே. (1)

தன்னை அறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்

பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே. (2)
(திருமந்திரம்)

தத்துவ ஞானிகளுடைய நிலைமை தலைமைகளை இவற்றால் அறிந்து கொள்ளுகிறோம். மனம் மொழி மெய்கள் தூய்மையாயுள்ள அவரைச் சேர்ந்தவரும் தூயராயுயர்ந்து துயர் நீங்கி உயர் கதி பெறுகின்றார்.

ஊரங் கணநீர் உரவுநீர்ச் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்—ஓரும்
குலமாட்சி யில்லாரும் குன்றுபோல் நிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து. (நாலடியார் 175)

அங்கணநீர் கங்கையைக் கலந்தவுடன் தூய தீர்த்தமாம்; அதுபோல் கீழோரும் மேலோரைச் சேர்ந்தால் மேன்மையுற்று விளங்குவர் என இது குறித்துளது.

தூயவரைச் சேரின் தீயவரும் தூயவராவார்.

இது சசிவன்னன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் வேதியர் மரபினன். பாகளச்சன் என்னும் மறையவன் புதல்வன். நெறிமுறைகள் யாதுமின்றி மதிகேடனாய் இவன் அதிபாதகங்களைச் செய்து வந்தான். இவனுடைய கொடிய செயல்கள் யாவருக்கும் நெடிய துயர்களாய் நீண்டு வந்தன. ஊரும் நாடும் எள்ளி யிகழ்ந்துவர எவ்வழியும் பொல்லாத புலைகளை எல்லா வகையிலும் புரிந்து இவன் இழிந்து திரிந்தான். இவன் இழைத்து வந்த தீமைகள் அளவிடலரியன; பழி பாவங்கள் படிந்தன.

நிறைத்தபொய் ஓலை காட்டி
நிலங்களும் தனமும் கொண்டு
மறைத்தவ வேடம் பூண்டு
வழிக்கரை வருத்தி வாட்டிப்
பறைச்சியை மணைவி யாக்கிப்
பாதகர் இணக்கம் செய்தும்
இறைச்சியும் மீனும் கள்ளும்
ஈயலும் அருந்தா நின்றான். (1)

சுரர்களாய் இவன்றன் வர்க்கம்
சுவர்க்கத்தை அடைந்தோ ரெல்லாம்
தரமிலா நரகில் வீழ்ந்தார்
**சசிவன்னன்** செய்த பாவம்
முரண்முய லகநோய் ஆதி
நோய்களும் மொய்த்து வீழ்ந்தான்
நரகமும் வருவன்என்று
நடுங்கிடத் தொடங்கிற் றம்மா! (2)
(விருத்தாசல புராணம்)

இவன் செய்த பாவங்களால் இவனுடைய முன்னோர்களான பிதிரர்களும் துயர்களை யடைந்தனர். தன்பால் இவன் வந்து சேர்வானே! இவனை எப்படிச் சகித்து வைத்திருப்பது! என்று நரகமும் மறுகி அஞ்சியுள்ளது. இவ்வளவு தீயவனான இவன் வெவ்விய நோய்கள் பல படிந்து பின்பு சிறிது உள்ளம் தெளிந்து நந்தி பாராயணர் என்னும் பெரியவரை அடைந்து அவரது அடியில் விழுந்து தொழுது உருகி யழுதான்: "அடியேன் மடமையால் செய்த தீமைகளை மன்னித்து உய்யும் வழியை அருள வேண்டும்" என்று கண்ணீர் சொரிந்து அழுத இவனை அவர் கருணையுடன் நோக்கி ஆதரித்தார். மருள் நீங்கி மாசறு காட்சியன் ஆகும்படி இவனுக்கு அம் மாதவர் ஆன்ம தத்துவங்களைப் போதித்தார். அந்தப் போதனைகளால் இவன் வேதனைகள் நீங்கினன். உலக ஆசைகள் யாவும் துறந்து மாதவனாய் மருவி நின்றான்.

ஆவல் செய்தென தாக்கையுள் ளளவும்நின் அடியார்க்கு
ஏவல் செய்வதே யன்றிமற் றென்றுநான் அறியேன். 1)

இறவில் எப்பத மும்பெற வேண்டிலேன்; என்றும்
பிறவி வேண்டுவன் நின்திருப் பணிசெயப் பெறினே. (2)
(மோகவதைப்பரணி)

தனது அவல நிலையை நீக்கி யருளிய அந்தப் பெரியவரை நோக்கி இவன் இவ்வாறு நன்றியறிவோடு உள்ளம் உருகி உரையாடியிருக்கிறான். தீயனாயிருந்த இவன் தூயனானதை யறிந்து யாவரும் வியந்தார். மனம் தூய்மை செய்வினை தூய்மை இரண்டும் இனம்

தூய்மையால் இனிது வரும் எனபதை உலகம் இவன் பால் உணர்ந்து வியந்து தெளிந்து நின்றது.

**பாலொடு சேர்ந்தநீர் பாலாம்; பதிதனும்**
**மேலொடு மேவினே மேல்.**

தூய இனத்தைத் தொடர்ந்து வாழுக.

---

456. வெற்றி வசுதேவர் மேலான நன்மகவும்
கொற்றமுமேன் பெற்ருர் குமரேசா—உற்ற
மனந்தூயார்க் கெச்சம்நன் ருகும் இனந்தூயார்க்
கில்லைநன் ருகா வினை. (சு)

இ-ள்.

குமரேசா! மனம் தூயரான வசுதேவர் நல்ல மகவுடன் எல்லா நலன்களும் ஏன் எய்தினர்? எனின் மனம் தூயார்க்கு எச்சம் நன்று ஆகும்; இனம் தூயார்க்கு நன்று ஆகா வினை இல்லை என்க.

தூய இனத்தைச் சேர்க என்கிறது.

மனம் தூய்மை யுடையார்க்கு நல்ல மக்கள் தோன்றுவர்; இனம் தூயார்க்கு எல்லா நன்மைகளும் ஒருங்கே உளவாம்.

ஆகும் என்றது அந்த ஆக்கத்தின் ஏற்றத்தைக் கருதி யுணர. ஆகா வினை இல்லை என்றது யாவும் எளிதே இனிது வினையும் என்பது தெளிய வந்தது.

எச்சம் என்றது மக்களை. தந்தை தாயர் இறந்த பின்னரும் எஞ்சி நின்று வழிவழியே காலூன்றி வருபவர் ஆதலால் எச்சம் என நேர்ந்தார். இத்தகைய நல்ல எச்சம் உள்ளம் தூய நல்லார்க்கே நலமா யுண்டாம். தக்க மகவைப் பெறுபவர் தகவுடைய ராகின்றார்.

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும். (குறள், 114)

பிறந்த எச்சத்தைக் கொண்டு பெற்றோரின் தகுதியை அறிந்து கொள்ளலாம் என முன்னமும் இன்னவாறு

கூறி யுள்ளார். **மனம் தூயார்க்கு எச்சம் நன்ருகும** என்னும் இதனை அதனோடு இணைத்து எண்ணி ஒற்றுமை நிலையை உய்த்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

மனிதனுடைய வாழ்க்கையில் மக்கட்பேறு மிகவும் சிறந்த பாக்கியமாம்; அரிய நோன்புகள் புரிந்து பெரிய தவங்களால் பெறவுரிய பேருய் அது மருவியுளது. உச்சமான செல்வங்கள் எவ்வளவு நிறைந்திருந்தாலும் நல்ல எச்சம் இல்லையாளுல் அவை யாவும் துச்சமா யிழிந்து நிற்கின்றன.

இம்மை யின்பொடு மறுமையின் இன்பமென் றிரண்டும்
அம்மென் மைந்தரை யில்லவர்க்கு இல்லை; மற்றதனுல்
எம்மை யாளுடை முருகவேள் அடிமல ரிறைஞ்சிச்
செம்மை நன்மகற் பெறுதவம் எனச்சிந்தை செய்தான்.
(சீகாளத்திப் புராணம்)

மகவே மேலாம் கதியாக்கும்;
மகவான் உலகம் தனைவெல்லும்;
மகவின் மகவால் முடிவின்மை
எய்தும் மகவின் மகவழித்த
மகவான் மேலைப் பதமுறுந்தென்
புலத்தார் கடனை மாற்றுவது
மகவான் அன்றி யில்லையென
வகுத்தான் தெரித்துக் கண்ணுவனே.
(காஞ்சிப் புராணம்)

மகவின் மாட்சிகளை இவை தகவா யுணர்த்தி யுள்ளன. குறித்துள்ள பொருள் நயங்களைக் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

உள்ளத் தூய்மை யுடையார்க்கு நல்ல பிள்ளை உளவாம் என்றதனுல் இந்த இரண்டு உடைமைகளின் பெருமைகளை உணர்ந்து கொள்கிறேம். மனிதன் மகிமையுறுவது மனத்தால்; மனம் மாண்புறுவது தூய்மையால். தூய மனம் தோய்ந்தபோதே அந்த உயிர் பேரின்ப நிலையமாய்ப் பெருகி மிளிர்கிறது.

தன் மனம் தூய்மையாயிருப்பதோடு தான்சேர்ந்த இனமும் தூய்மையாயிருந்தால் அந்த மனிதன் எல்லா

நன்மைகளையும் எளிதேபெற்று இம்மையும் மறுமையும் இன்பம் மிகப் பெறுகின்றான்.

மனம் புனிதமானால் மனிதன் தனி மகிமையுறு கிறான். எண்ணரிய மேன்மைகளை எளிதே எய்துகிறான்.

தான் சேர்ந்த இனம் தூயது ஆனால் அவனுடைய எண்ணம் சொல் செயல்கள் எல்லாம் தூயனவாய் உயர்ந்து திகழ்கின்றன.

நல்ல சந்ததிகள் உளவாம்; நலம் பல பெருகிவரும் என இனம் தூயார்க்கு எய்தும் மேலான ஊதியங்களை இவ்வாறு நயமா எடுத்துக் காட்டி யிருக்கிறார்.

தக்கார் வழிகெடா தாகும்; தகாதவர்
உக்க வழியராய் ஒல்குவர்;—தக்க
இனத்தினான் ஆகும் பழியும் புகழும்;
மனத்தினான் ஆகும் மதி. (சிறுபஞ்சமூலம் 81)

தக்கவர்க்கே எச்சம் நல்லதாய் வரும்; தகாதவர்க்கு அது கொச்சையாய் அழிவுறும்; தூய இனத்தால் புகழ் உண்டாம்; தீய இனத்தால் பழியே தொடரும்; மனம் தூய்மையானால் மதி தெளிவாய் ஒளிமிகுந்து விளங்கும் எனக் காரியாசான் இவ்வாறு கூறியுள்ளார்.

தூய மனமும் தூயஇனமும் அதிசய செல்வங்கள்; அவற்றை உரிமையாகவுடையவர் பெருமேன்மை அடைகின்றார். அவரது புகழ் எங்கும் ஒளி வீசி வருகிறது.

இவ்வுண்மை வசுதேவர்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவர் சூரசேனன் என்னும் அரசனுடைய அருமைப் புதல்வர். தரும குண நீர்மையர், பொறுமை அடக்கம் இரக்கம் நேர்மை முதலிய குணநலன்கள் இவரிடம் இயல்பா யமைந்திருந்தன. கலைகள் பயின்று பருவம் அடைந்தபின் தேவகன் என்னும் மன்னன் மகளாகிய தேவகியை மணந்து யாவரும் மகிழ்ந்து வர இவர் உவந்து வாழ்ந்து வந்தார். யாண்டும் நல்லவர்களோடேயே பழகி வந்தமையால் எவ்வழியும் செவ்வியராய்

இவர் சிறந்து விளங்கினர். இவருடைய பெருமகிமை களை வியந்து திருமாலே இவர்க்கு ஒரு மகனாய் உதய மாயினர். அந்த மணிவண்ணன் **கண்ணன்** என்று பின்பு உலகம் அறியப் பேர்பெற்று நின்றாலும் **வாசுதேவன்** என்பதே அவற்கு முதலில் உரிமையான நாமமாய் ஒளி பெற்று வந்தது. **வசுதேவன்** மகன் ஆதலால் **வாசு தேவன்** என நேர்ந்தான். அகிலமும் காத்தருளும் பக வானைத் தனக்கு மகவாகப் பெற்றுள்ள இவரது அதிசய மாட்சியை வியந்து அமரரும் துதிசெய்து நின்றனர்.

அல்லியங் கமலம் பூத்த
அஞ்சனப் புயலில் தோன்றும்
மல்லலைத் தெழுந்த திண்டோள்
மாயனைக் கண்ணில் கண்டும்
புல்லியும் மோந்தும் அன்பு
பூத்துளம் களிப்பப் பெற்றாய்!
சொல்லரும் நெறிநீ சேர்தல்
சொல்வதென் சுடர்செய் வேலோய்! (பாகவதம்)

நாரத முனிவர் இவரை இவ்வாறு உவந்து புகழ்ந் துள்ளார். இவ்வுலகத்தில் எல்லா நன்மைகளையும் எய்தி மறுமையிலும் இவர் பேரின்ப நலனைப் பெற்றுள்ள மையை இதில் உய்த்து உணர்ந்து கொள்ளுகிறோம். அரச திருவும் அரிய மகவும் பெறலரும் பேறுகளும் இவர் பெற்று மகிழ்ந்துள்ளார். மனம் தூய்மையும் இனம் தூய்மையும் மருவி நின்றமையால் இத்தகைய மகிமைகள் பல இவரிடம் பெருகி வந்தன. மனம் தூயார்க்கு எச்சம் நன்றாகும்; இனம் தூயார்க்கு எல்லா நலன்களும் எளிதே உளவாம் என்பதை உலகம் அறிய இவர் நேரே உணர்த்தி நின்றார்.

நவையறு செங்கோல் திசைதிசை போக்கி
நானிலம் முழுவதும் விளர்ப்பத்
தவலரும் சீர்த்தி வெண்சுதை தீற்றும்
தாமவேல் சூரன்நன் மைந்தன்
உவவுவெண் திங்கட் கவிகைபா ரேழும்
நிழற்றிட ஆழியொன் றுருட்டிக்
கவனவாம் பரித்தேர் பார்த்தனுக் கூரும்
கண்ணனைத் தரும் வசுதேவன். (கூர்மபுராணம்)

வசுதேவருடைய தந்தை அரசுமுறை புத்திரப்பேறு முதலிய நிலைகளை இது தெளிவாய் விளக்கியுள்ளது. வாசுதேவர் என்பது புனிதமான மந்திரத் திருநாமமாய் எங்கும் மதிக்கப்பட்டு வருகிறது.

**உள்ளம் புனித முறினே உயர்நலன்கள்**
**வெள்ளமென மேவும் மிகுந்து.**

மனமும் இனமும் புனிதம் ஆகுக.

---

457. திண்டோள் அனுமான் செயகீர்த்தி கேதினத்தால்
**கொண்டார் புகழேன் குமரேசா—கண்ட**
**மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்**
**எல்லாப் புகழும் தரும்.** (எ)

இ-ள்

குமரேசா! அனுமானும் கீர்த்திகேதும் இன நலத்தால் எல்லா நலன்களும் எய்தி ஏன் உயர் புகழ் பெற்றார்? எனின், மனநலம் மன் உயிர்க்கு ஆக்கம்; இனநலம் எல்லாப் புகழும் தரும் என்க.

திருவும் சீர்த்தியும் தருவதை இதில் தெரிகிறோம்.

மனத்தின் நன்மை நிலைபெற்ற உயிர்கட்குத் தலையாய செல்வமாம்; இனத்தின் நலம் எல்லாக் கீர்த்திகளையும் இனிது அருளும்.

ஆக்கமும் புகழும் யாவரும் விரும்புவன ஆதலால் அவை விளைந்து வரும் நிலையை இங்ஙனம் விளக்கியருளினர்.

விலங்கு பறவை முதலிய பிற உயிரினங்களைவிட மனிதன் அறிவால் உயர்ந்து பலவகையிலும் தலை சிறந்து நிற்கின்றான். சிறந்த அந்த நிலை நிறைந்த வளமும் உயர்ந்த புகழும் பொருந்தி ஒளிமிகுந்து வருவது உள்ளத்தின் நன்மையாலேயாம். ஆகவே உயிர்க்கு உயர்வான உயிர் அமுதமாய் அந்த மனநலம் மருவியுள்ளமை இங்கே மருமமா யுணர வந்தது.

உள்ளம் புன்மையாய்த் தீமையுறின் அந்த மனிதன் எவ்வழியும் இழிந்து கழிந்து ஒழிந்தே போகின்றான். புலையான போக்கை அறிந்துகொள்ள முடியாமையால் மனநலத்தை யிழந்து மனிதன் வழிவழியே பழிதுயரங்களில் அழுந்திப் பாழா யுழல்கின்றான்.

**மன் உயிர்** என்றது இங்கே மனித இனத்தின் மேல் நின்றது. மனநலத்தின் பலனை மருவி மகிழ்வது இந்த இனமே ஆதலால் அந்த உரிமையும் உறவும் பெருமையும் தகவா உணர வந்தன.

**மன்பதைக்கு** என்றோ, அல்லது **மாந்தருக்கு** என்றோ கூறியிருக்கலாம்; அவ்வாறு கூறவில்லை; **மன்னுயிர்க்கு** என்றே குறித்திருக்கிறார். ஏன் இவ்வாறு குறித்தார்? **மனநலம்** உயிர் புக்குழி எல்லாம் புகுந்து எவ்வழியும் திவ்விய ஒளிகளை யுதவி உய்தி தருவது கருதி.

**மனநலம் உயிர்க்கு ஆக்கம்** என்றதனால் அதனை அடையாதவர் வேறு எவற்றை அடைந்திருந்தாலும் அவர் ஆக்கங்கெட்ட மூதேவிகளே என்பதை இஃது ஊக்கமாய் உணர்த்தி நின்றது.

உடலுக்கு உரிய ஆக்கம் ஊனமாய்த் தேய்ந்து எவ்வழியும் கழிந்து ஈனமாய் மாய்ந்து போம்.

உயிர்க்கு உரிய ஆக்கம் வான ஒளியாய் வளர்ந்து என்றும் கிளர்ந்து இன்ப நலனை அருளி வரும்.

ஆக்கம் அறத்தான் வரும்; அந்த அறம் மனத்துக்கண் மாசு இன்மையாலாம். மாசுபடியாமல் தேசுபடிந்து வரின் அந்த மனம் ஈசனுக்கு இனிய இடமாய் அதிசய மேன்மைகளை அடைந்து விளங்கும்.

மனநலம் மனிதனுக்கு உயர்நலங்களை அருளுகிறது.

**மனம்போல வாழ்வு** என்பது பழமொழி.

செல்வ வாழ்வும் சீரிய புகழும் நல்ல மனம் நல்கி வரும் என்றதனால் அதன் மாட்சியும் ஆட்சியும் காட்சியாய்க் காண வந்தன. மனம் நலமாய் வாய்த்தபோது அந்த மனிதன் நல்லவனாய் உயர்ந்து திகழ்கிறான். அது

தீதாய்த் திரிந்தபொழுது அவன் தீயவனாய்த் தாழ்ந்து யாண்டும் எவ்வழியும் இழிந்து படுகின்றான்.

மனத்தின் அளவே மனிதன்.

மக்கள் மானிடர் என்று மனத்தினால்
மிக்க மேன்மை விளங்கினர்; இல்லெனின்
பொக்க மேவும் பொறிகளோர் ஐந்தினால்
ஒக்கு மாவினை ஒத்துயர் வுற்றிடார். (1)

நல்ல செய்து நரரை உயர்த்தவும்,
அல்ல செய்தங் களற்றிடை ஆழ்ப்பவும்,
வல்ல திந்த மனமலது ஐயனே!
இல்லை என்ன இயம்பும் மறையெலாம். (2)

மன்னு காம வெகுளி மயக்கம் என்று
இன்ன கூடி எறிவளி முன்சுடர்
என்ன வாடும் இயல்மனம் தீமனம்;
தன்னை யாரும் தடுக்கத் தகாதரோ. (3)

மறிந்தி டாது மனபவ னங்கள்தாம்
செறிந்த வாயின் சிவமயம் ஆகுமால்
அறிந்து வாயுவை அங்ஙனம் எய்தினேன்
இறந்தி டாத இலிங்கப் பிராணியாம். (4)

(பிரபுலிங்க லீலை 18)

மனம் நலமாய் அமையின் அவர் மனிதராய் உயர்ந்து வருகின்றார்; அவ்வாறு அமையவில்லையாயின் மாக்களாய் இழிந்து போகின்றார்; மனிதரை உயர்த்தவும் தாழ்த்தவும் வல்லது மனமே. மனம் தீயது ஆனால் யாண்டும் நோய்களே நீண்டு விளையும். மனம் புனிதமானால் அந்த மனிதன் புண்ணியவானாய் எண்ணரிய மகிமைகளை எய்தி என்றும் மகிழ்கின்றான் என இவை குறித்துள்ளன. குறிப்புகள் யாவும் கூர்ந்து ஓர்ந்து சிந்திக்க வுரியன.

தன் மனம் தூய்மை தோய்ந்து நன்மையாக ஒருவனுக்கு அமையுமாயின் அவன் அதிசய பாக்கியவானாய் எல்லா இன்ப நலன்களையும் எளிதே எய்துகின்றான்.

மந்திரி எனலாம் உண்மை மருவுறும் விசாரத் தாலே
இந்திரி யங்கள்என்னும் இடர்ப்பகை அறுத்த லாலே

தந்திரி எனலாம் இட்டம் சமைத்தலால் ஏவ லாளாம்
நொந்திரிகிலாத உள்ளம் நோக்கிய விவேகத் தோர்க்கே.

ஆலிக்கும் இன்பத் தாலே அன்புறு மனைவி யாகும்;
பாலிக்கும் இயல்பி னாலே பாவன தந்தை யாகும்;
சீலிக்கும் உறுதி யாலே தேடரு நட்பும் ஆகும்;
தூலிக்கும் வினைகள் இல்லாத் தூய்மனம் விவேகத்தோர்க்கே.

நல்லன நூல்க ளாலே நல்லன நெறியை நோக்கி
நல்லன தியானம் செய்து நல்லனு பவத்தை நண்ணி
நல்லன சித்தி நல்கும் நல்லதாய்த் தன்னை மாய்க்கும்
நல்லதோர் தாதை யாகி நல்லவர்க்கு உள்ளம் தானே. (3)

(ஞானவாசிட்டம்)

மனநலத்தால் உளவாம் மகிமைகளை வசிட்ட முனிவர் இராமபிரானுக்கு இவ்வாறு போதித்திருக்கிறார். மனைவி தந்தை மந்திரி தளபதிபோல் உரிமை கூர்ந்து நின்று நல்லமனம் நலம் பல நல்கும் என முனிவர் புகன்றுள்ளமை நுணுகி நோக்கி இனிது உணர வுரியது.

கடல்சார்ந்தும் இன்னீர் பிறக்கும்; மலைசார்ந்தும்
உப்பீண் டுவரி பிறத்தலால் தத்தம்
இனத்தனையர் அல்லர்; எறிகடற் றண்சேர்ப்ப
மனத்தனையர் மக்களென் பார். (நாலடியார் 245)

பிறந்த இனத்தால் எவரையும் மதிக்கலாகாது; சிறந்த மனத்தைக் கொண்டே மனிதரை மதிக்க வேண்டும் என இது குறித்துளது. **மனத்து அனையர் மக்கள்** என்றது, உண்மையான உயர்ந்த மனிதரை அது நன்கு உண்டாக்கி யருள்வதை உணர்த்தி நின்றது.

அகத்தே இருந்து மனநலம் ஆக்கம் தருதல்போல் புறத்தே நின்று இனநலம் புகழ் நலன்களையருளுகிறது. கீர்த்திகள் பலவகை நிலைகளில் உளவாதலால் எல்லாப் புகழும் என்றார்.

நல்லவர்கள் நன்மையே கருதி நலமே புரிவர். அத்தகைய தன்மையாளரைச் சேர்ந்துகொளின் எவ்வழியும் மதிப்பும் மாண்பும் யாண்டும் நீண்டு வரும்.

மனநலமும் இனநலமும் மருவப்பெற்றவர் அறிவும் திருவும் சீர்த்தியும் நன்கு சேரப் பெறுவர். இவ்வுண்மை அனுமானிடமும், கீர்த்திகேது பாலும் அறிய நின்றது.

சரிதம்.

அனுமான் அதிசய ஆற்றல்கள் உடையவன். அரிய பல கலைகள் பயின்று தெளிந்தவன். அறிவு செறிவு அமைதி ஆண்மை ஆற்றல் வீரம் முதலிய நிலைகளில் தலைசிறந்தவன். அவ்வாறு சிறந்திருந்தும் வானரர்களோடு கூடியிருக்கும் வரையும் இவன் உயர்ந்து விளங்கவில்லை. இராமமூர்த்தியைச் சேர்ந்தான். அதிசய கீர்த்திமானுய் உலகமெல்லாம் துதிசெய்து போற்ற இவன் ஒளிமிகுந்து யாண்டும் ஓங்கி நின்றுன். விண்ணவரும் இவனை வியந்து புகழ்ந்து வந்தனர்.

மறவாலி கொற்ற மதுவோ கிடக்க
மருவார் வெருக்கொள் வலியால்
நிறைவான் மிசைப்பொன் வரையீ டழிந்து
நெகிழாது நிற்கும் நிலையால்
குறையாத விச்சை யதனுல் அளப்பில்
குணநீதி கொற்ற மொடுகூ
டறிவால் இவற்றில் அனுமானை ஒக்கு
மவரார் சகத்தில் இனியே. (1)

இவனுல் அருக்கன் மகனோ டெமக்கும்
இனிதாய நட்பு மியல்பும்
இவனுல் அளப்பில் பெருநீரடைத்தது
இணையா வயத்தனுமனும்
இவனுல் அரக்கர் பொருசேனையிற்சென்
றிடையூ றகற்றியவெலாம்
இவனுல் அரக்கர் குலம்வேர் அறுத்தது
இனியான் உரைப்ப தெவனோ? (2)

(உத்தரகாண்டம், 11)

அனுமானுடைய பெருமேன்மைகளைக் குறித்து இராமன் இவ்வாறு உவந்து புகழ்ந்துள்ளான். இத்தகைய பெருங்கீர்த்திகள் அக்கோமகனை இவன் சேர்ந்த பின்பே நேர்ந்து வந்தன. இனநலம் எல்லாப் புகழும் தரும்

என்பதை எல்லாரும் நேரே அறிந்து நெஞ்சம் தெளிய இவன் சீரோடு நன்கு உணர்த்தி நின்றான்.

சரிதம்—2.

கீர்த்திகேது என்பவன் மகத தேசத்து வேந்தன். மாகதம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்து வந்தான். சிறந்த நீதிமான். நிறைந்த கல்விமான். இறைவன்பால் பேரன்புடையவன். நல்ல நீர்மைகள் பல இவனிடம் சீர்மையா யமைந்திருந்தன. உள்ளப் பண்பு உடைய இவன் நல்ல பெரியோர்களையே தனக்கு உறுதுணையாக் கொண்டு முறை புரிந்து வந்தமையால் இவனுடைய ஆட்சி யாண்டும் மாட்சியாய் நீட்சியடைந்து வந்தது. காசிப முனிவரைச் சார்ந்து அரிய தத்துவப் பொருள் களை உய்த்துணர்ந்து தெளிந்தான். மனநலத்தாலும் இனநலத்தாலும் அதிசய மேன்மைகளை அடைந்து வந்த மையால் உலகம் துதிசெய்து வர இவன் ஒளிமிகுந்து நின்றான். இருமையும் பெருமையாய் இன்பமுற இவன் இசை மிகுந்து வாழ்ந்தான். மனநலம் ஆக்கம் தரும்; இனநலம் எல்லாப் புகழும் இனிது நல்கும் என்பதை உலகம் தெளிய இவன் உணர்த்தி நின்றான். இவனு டைய சீவிய சரித்திரத்தைச் **சிவரகசியம்** என்னும் இதி காசம் மிகவும் சுவையாய் விளக்கியுள்ளது.

**மனமும் இனமும் மகிமை மருவின்**
**எனைவகையும் இன்பம் வரும்**

தக்க இனத்தைத் தழுவி வாழ்.

---

458. தேசார் உடையவரும் தேடி இனநலத்தைக்
கூசாதேன் கொண்டார் குமரேசா—மாசில்
மனநலம் நன்குடைய ராயினும் சான்றோர்க்
கினநலம் ஏமாப் புடைத்து. (அ)

இ-ள்

குமரேசா! நல்ல மனம் உடைய உடையவரும் ஏன் இனநலத்தை நாடிக் கொண்டார்? எனின், மனநலம்

நன்கு உடையர் ஆயினும் சான்றோர்க்கு இனநலம் ஏமாப்பு உடைத்து என்க.

இருவகை நலன்கள் இங்கு அறிய வந்தன.

மனத்தின் நன்மை சிறப்பாக அமைந்திருந்தாலும் சால்புடைய மேலோர்க்கு இனத்தின் நன்மை இனிய பாது காப்பாம்.

சான்றோர் = அறிவொழுக்கங்களால் நிறைந்தோர்.

ஏமாப்பு = உறுதி; அரண்; பாதுகாப்பு.

குணநலன்கள் நிறைந்து மனம் தெளிந்து மாண்பு வாய்ந்துள்ள சான்றோர்க்கும் இனநலம் இனிய அரணும் என்றதனால் அந்த உறவுரிமையின் அருமையையும் பெருமையையும் ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகிறோம்,

சுற்றியுள்ள சூழலின்படியே மனிதன் உருவாகி வருதலால் எத்துணை மேலோரும் இனநன்மையால் உயர் மேன்மைகளை யடைந்து ஒளிபெற்று வருகின்றார். நல்ல அவயவங்கள் உடலுக்கு உறுதி தருதல்போல் நல்ல இனம் உயிர்க்குச் சேமமாய் உரம் தருகிறது.

உள்ளே உள்ளம் நல்லதாய் அமைந்திருந்தாலும் வெளியே சார்ந்துள்ள, இனம் நலமா யில்லையாயின் அந்த மனித வாழ்வு இனிமையாயிராது. சார்ந்த இனத்தின்படியே பெரும்பாலும் மாந்தர் நேர்ந்து வருதலால் அந்தச் சார்பு நல்லதா? தீயதா? என்று முன்னதாகவே ஓர்ந்து உணர்ந்து நன்மையையே நாடித் தேர்ந்து கொள்ளவேண்டும். ஓராது சேரநேரின் தீராத நோயாய் அது தீங்கு புரிய நேரும்.

பாரினில் பிறந்தபோது எவரும் பண்பினர்
பூரியர் எனப்பெயர் பூண்ட தில்லையால்;
சீரியர் என்னலும், தீயர் என்னலும்,
சேரினத் தியல்பினால் சேர்ந்த நாமமே. (நீதிநூல்)

சேர்ந்த இனத்தின் இயல்பினாலேயே நல்லவர் தீயவர் என எவரும் எய்தி வருகிறார் என இது குறித்துளது.

நல்ல நீர்மையாளரோடு சேரின் எவ்வழியும் நன்மையாம்; அத்தகைய இனமே எத்தகையோர்க்கும் வித்தக நிலையமாய் விழுமிய இன்பம் சுரந்து வரும்.

உணர உணரும் உணர்வுடை யாரைப்
புணரப் புணருமாம் இன்பம்—புணரின்
தெரியத் தெரியும் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய். (நாலடியார் 247)

அறிவுள்ள நல்லோரைச் சேரின் இன்பம்; அல்லாத புல்லரைச் சாரின் துன்பம் என இஃது உரைத்துள்ளது.

நல்ல இனத்தையே நல்லோர் நாடிக் கொள்ளுவர்.
இவ்வுண்மை உடையவர்பால் உணர வந்தது.

சரிதம்.

இவர் மறையவர் மரபினர். திருப்பெரும்புதூர் என்னும் நகரில் பிறந்தவர். தாயார் பெயர் பூமிநங்கை. தந்தை பெயர் கேசவப்பெருமாள். இளமைப் பருவத்திலேயே திருமால் பால் இவர் பெருமால் கொண்டிருந்தார். நுண்ணறிவும் தண்ணளியும் இவரிடம் இயல்பாகவே நண்ணியிருந்தன. வேதம் முதலிய கலைகளை நன்கு ஓதி யுணர்ந்து உள்ளம் தெளிந்து உயர் ஞான சீலராய் இவர் ஒளிமிகுந்து நின்றார். உலக பந்தங்கள் ஒழிந்து பரமனையே கருதி யுருகும் பாகவதர்களை ஆவலோடு தழுவி இவர் ஆதரித்து வந்தார். திருமலைநம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருக்கச்சி நம்பி, மாறனேறி நம்பி, திருமோகூர் ஆழ்வார், பெரிய நம்பி முதலிய பெரியோர்களைப்பேணி அரிய தத்துவங்களை ஆராய்ந்து தெளிந்தார். நாராயணனே பரம்பொருள்; அப்பெருமானை எண்ணி வழிபடுவதே புண்ணியம்; அதுவே பிறவிப் பேரும் என யாவருக்கும் இவர் போதித்து வந்தார். அதனால் வைண மதத்துக்கு இவர் பரம குருவாய் விளங்கினர். எம்பெருமானர், இளையாழ்வார், இராமாநுசர் என எல்லாரும் இவரை உரிமையோடு போற்றி வந்தார். திருவரங்கத்தமுதனர் என்னும் பெரியார் இவர் மீது பேரன்பு பூண்டு ஒரு பிரபந்தம் பாடியுள்ளார். இராமானுச நூற்றந்தாதி என அது விளங்கி வருகிறது.

படிகொண்ட கீர்த்தி இராமாயணம்
என்னும் பத்திவெள்ளம்
குடிகொண்ட கோயில் இராமானுசன்
குணம் கூறும் அன்பர்
கடிகொண்ட மாமலர்த் தாள்கலந்
துள்ளம் கனியும் நல்லோர்
அடிகண்டு கொண்டுகந்து என்னையும்
ஆளவர்க் காக்கினரே. (1)

வண்மையி னாலும்தன் மாதக வாலும் மதிபுரையும்
தண்மையி னாலுமித் தாரணி யோர்கட்குத் தான்சரணாய்
உண்மைநல் ஞானம் உரைத்த இராமானு சனையுன்னும்
திண்மையல் லாலெனக் கில்லைமற் றோர்நிலை தேர்ந்திடிலே.

கண்டுகொண் டேன்எம் இராமானுசன்
தன்னைக் காண்டலுமே
தொண்டுகொண் டேன்அவன் தொண்டர்பொற்
றாளில்என் தொல்லை வெந்நோய்
விண்டுகொண் டேன்அவன் சீர்வெள்ள
வாரியை வாய்மடுத்தின்று
உண்டுகொண் டேன்இன்னம் உற்றன
ஓதில் உலப்பில்லையே. (3)

இன்னவாறு அறிஞர்கள் இவரை மதித்துத் துதித்திருக்கின்றனர். இயல்பாகவே நல்ல மனமுடைய இவர் நல்லோர் இனத்தை நயந்து மகிழ்ந்துள்ளார். மனநலம் நன்கு உடையராயினும் சான்றோர்க்கு இனநலம் ஏமாப்பு உடைத்து என்பதை உலகம் அறிய இவர் நலமாய் உணர்த்தி யருளினர்.

**நல்ல இனத்தோடு நண்ணிவரின் புண்ணியங்கள் எல்லாம் பெருகி வரும்.**

மேலோரைச் சேர்ந்து மேன்மை பெறுக.

---

459. உள்ளநலம் உற்றிருந்தும் உத்தவரேன் நல்லினத்தால்
கொள்ள நின்றார் இன்பம் குமரேசா—துள்ளும்
மனநலத்தி னாகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடைத்து. (கூ)

இ-ள்.

குமரேசா! உத்தவர் மனநலம் உடையராயிருந்தும்

ஏன் இனநலத்தால் இனிய இன்பம் எய்தினர்? எனின், மனநலத்தின் மறுமை ஆகும்; மற்று அஃதும் இனநலத்தின் ஏமாப்பு உடைத்து என்க.

மனத்தின் நலத்தால் மாந்தர்க்கு மறுமையின்பம் உண்டாம்; அந்த நலமும் இனத்தின் நலத்தால் வலிமையடைந்து வரும்.

மறுமை என்றது புண்ணிய வுலகத்தை.

இம்மை மறுமை என்னும் இருவகை நிலையங்கள மன்பதைக்கு உரிமையாயுள்ளன. இந்த உடலோடுகூடி இவ்வுலகில் சுகதுக்கங்களை அனுபவித்து வருகிறோம். உடல் ஒழிந்தபின் உயிர் செய்திருந்த புண்ணிய பலனை நுகரும் உலகம் சுவர்க்கம் எனப் பேர் பெற்றுள்ளது.

நல்ல மனம் உடையவர் யாருக்கும் அல்லலை நினையார்; நல்லதே கருதுவார். அவருடைய சொல்லும் செயலும் எவ்வழியும் இனியனவாய் நன்மை தோய்ந்தே வரும். வரவே நல்ல புண்ணிய சீலரான அவர்க்குப் புத்தேளுலகம் உரிமையாய் இன்பம் ஊட்டும் ஆதலால் **மனநலத்தின் ஆகும் மறுமை** என்றார்.

அஃதும் = அந்த மனநலமும். மறுமையின்பத்தைத் தரவல்ல பெருமையுடைய அம்„மனநலமும் இனநலத்தால் இனிய பாதுகாப்பை யடைந்துள்ளது.

ஒருவன் மனநலம் நன்கு உடையனாயினும் தீய இனத்தோடு அவன் சேரநேரின் அது நிலைகுலைந்து போம். அவ்வாறு இழிந்து போகாதபடி எவ்வழியும் செவ்வையாக இனிது பேணி வருவது நல்ல இனமே ஆதலால் **இனநலம் ஏமாப்பு உடைத்து** என்றார்.

ஏமம் = சேமம்; காவல்.

**ஏமாப்பு** என்பது இதனடியாய்ப் பிறந்து வந்துளது.

இன்பமும் நீறும் பொன்னும் காவலும்
இரவும் சேமமும் ஏமாப்பும் மயக்கமும்
என்பன ஏமப் பெயரன வாகும். (பிங்கலந்தை)

ஏமப் பேரூர். (தொல்காப்பியம், அகம் 37)

ஏமமுரசம் இழுமென முழங்க (புறம், 3)
ஏமம் ஆக. (பெரும்பாண் 66)
ஏமம் ஈத்த இம்மா. (கலி 139)
ஏம நெறி. (நாலடி 13)
ஏம நன்னெறி. (நீலகேசி 557)
ஏமச் செங்கோல். (பெருங்கதை 2, 6)
ஏமமாக வந்தனள். (ஐங்குறுநூறு 393)
ஏமம் எய்துக. (பரிபாடல் 11)
ஏமம் இல் மூதூர். (இன்னாநாற்பது 25)
ஏமம் சார. (இராமா, அங்கதன் 41)
ஏமம் பெற வையம். (இயற்பா, 27)

இவற்றுள் **ஏமம்** உணர்த்தி நிற்கும் பொருள்களை ஓர்ந்து இனங்களைத் தேர்ந்து கொள்க.

ஏமாப்பு இறுமாப்பு செம்மாப்பு என்பன உற்ற பற்றுக்கோட்டின் உறுதி நிலைகளைக் கருதி எழுந்த பெருமித வுரைகள்.

எழுமையும் ஏமாப்புடைத்து. (குறள் 398)

முன்னரும் இன்னவாறு வந்துள்ளது.

சேர்ந்த இனத்தின் வண்ணமாய் மனிதன் திரிய நேர்வன் ஆதலால் தான் சேரும் இனம் நல்லதாக நாடிக் கொள்வதே யாண்டும் நலமாம்.

மனநலம் இருமையும் இன்பம் தரவுரியது; ஆயினும் அது நல்ல இனத்தோடே கூடியிருக்கவேண்டும். பொல்லாத இனத்தைச் சேர்ந்தால் புலையாய் அது மாற நேரும். அவ்வாறு மாறுதபடி பாதுகாத்து வருதலால் இனநலம் ஏமாப்பு உடையது என ஏத்த வந்தது.

நெருப்பழற் சேர்ந்தக்கால் நெய்போல் வதூஉம்
எரிப்பச்சுட் டெவ்வநோய் ஆக்கும்—பரப்பக்
கொடுவினையர் ஆகுவர் கோடாரும் கோடிக்
கடுவினையர் ஆகியார்ச் சார்ந்து. (நாலடியார் 124)

நெருப்பைச் சேர்ந்த நீர் வெப்பமாய்ச் சுடும்; அது போல் தீயவரைச் சேர்ந்த நல்லவரும் தீயராய் மாறித் தீங்கு புரிவர் என இது குறித்துள்ளது.

கயவரைச் சேர்ந்தவன் கலந்த போதவர்
செயலினை எள்ளுவன்; தினம் செலச்செல
மயல்மிகுந் தவர்செயல் மகிழ்ந்து அனுட்டிப்பன்
இயவரைச் சேர்தல்போல் இல்லை தீமையே. [நீதிநூல்]

மனநலமுடைய நயவரும் கயவரைச் சேர்ந்தால் மயலடைந்து இழிந்து கெடுவர் என இது உரைத்துளது. இயவர்=கீழ்மக்கள். தீமையான சிற்றினத்தைச் சேரலாகாது; நன்மையான நல்லினத்தையே யாண்டும் நாடிக் கூடிக்கொள்ள வேண்டும்.

மனமும் இனமும் நலமாய் அமையப் பெற்றவர் எவ்வழியும் இனியராய் மகிமை மிகப் பெறுவர்.

இது, உத்தவர்பால் உணர வந்தது.

சரிதம்.

இவர் யது மரபினர். வசுதேவன் தம்பியாகிய தேவபாகன் புதல்வர். வடமதுரையில் இருந்தவர். பெருந்திருவுடையவர். சிறந்த குணநலன்கள் நிறைந்தவர். செல்வச் செருக்கு முதலிய சிறுமைகள் யாதுமின்றி உள்ளப்பண்போடு எவ்வுயிர்க்கும் இரங்கி இதம்புரிந்து வந்தமையால் அறிஞர் யாவரும் இவர்பால் ஆர்வம் மீதூர்ந்து வந்தார். சிறந்த விவேகியாகிய விதுரர் இவர்பால் பெரு நண்பு பூண்டிருந்தார். மதிமாண்பும் மனநலமும் வாய்ந்த இவர் புலகர், வற்சர் முதலிய மாதவர்களோடு பழகி ஞான நெறிகளைத் தெளிந்து வந்தார். இவரது உள்ளத் தூய்மையை உணர்ந்து கண்ணனும் வியந்தான். உறவுரிமையுடன் பல வுண்மைகளை இவரிடம் உரைத்தான். யாதவர்கள் யாண்டும் அகந்தை மண்டிக் காமக் களிப்பில் மூழ்கித் தீமைகள் புரிந்து வருதலால் விரைந்து அழிந்துபடுவர் என்று உரைத்தான். பொறி புலன்களை அடக்கிப் பரமனைக் கருதி யடைவதே அறிவுடைமைக்குப் பயனும் என்று உணர்த்தினன்.

அந்த மணிவண்ணன் மதி தெளிந்து வர மொழிந்த மணிமொழிகளை அயலே காண வருகிறோம்.

ஊற்றினில் களிறு துஞ்சும்;
ஒளியினில் பதங்கம் மாயும்;
நாற்றத்தின் வண்டு வீயும்
சுவையில்மீன் நாசம் எய்தும்;
ஏற்றதோர் இசையி னாலே
இறக்குமால் அசுணம்; கல்வி
ஆற்றலிற் புலன்கள் ஐந்தும்
அடக்கிடல் வேண்டு மன்றே. (1)

ஐயமில் அறிவி னாலே
அழிவின்றி அகண்ட மாகி
மெய்யெனும் பொருளாம் எம்மை
மேவுவான் கானல் நீர்போல்
வையகம் ஆதி யாய
வழங்கிய வுலகம் எல்லாம்
பொய்யறு பகுதி நின்று
போந்த என்று எண்ணல் வேண்டும். (2)

கண்ணுறு பவற்றி னாலும் கருத்தநு மானத் தாலும்
எண்ணியுட் டெளிவு பெற்றிங்கு ஏதமாம் இவைகள் என்றும்
நண்ணுநற் குணங்கள்என்று நாடுதல் ஒழிந்து யாவும்
தண்ணறைதுளித்ததாரோய்! சமமெனக் காணல்வேண்டும்!

இனிவரும் ஏழாம் நாளில்
யாதவர் பொருது மாய்வர்;
பனிவரு கடலும் இந்தப்
பதியினை மறைக்கும்; வெய்ய
துனிவரு கலியும் பூமான்
துயருறப் பொருதும் என்னத்
தனிவரும் அரசு மாழ்கச்
சாற்றினன் மாயப் பெம்மான். (4)

[பாகவதம் 11, 3]

உத்தமரான இவ்வுத்தவரிடம் கண்ணன் இவ்வண்ணம் போதித்திருக்கிறார். பாசுரங்களில் பதிந்துள்ள பொருள்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். இயல்பாகவே மனநலம் வாய்ந்துள்ள இவர் இனநலத்

தால் உயர்ந்து விளங்கினர். மனநலத்துக்கு இனநலம் இனிய பாதுகாப்பு; இருமை இன்பமும் தருவது; என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து தெளிந்தது.

**சார்ந்தஇனம் நல்லதேல் சாரும் நலன்களெலாம்**
**நேர்ந்து வருமே நிறைந்து.**

நல்ல இனம் நலம் பல தரும்.

---

460 பண்டல்லற் பட்டகூன் பாண்டியன்பின் நல்லினத்தால்
கொண்டானேன் இன்பம் குமரேசா—உண்டாகும்
நல்லினத்தின் ஊங்கும் துணையில்லை; தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல். (ம)

இ-ள்

குமரேசா! தீய இனத்தால் அல்லல் உற்ற கூன் பாண்டியன் பின்பு ஏன் நல்ல இனத்தால் நலம் அடைந்தான்? எனின், நல்இனத்தின் ஊங்கும் துணை இல்லை; தீ இனத்தின் அல்லல் படுப்பதூஉம் இல் என்க.

இருவகை இனங்கள் இதில் தெரிய வந்தன.

நல்லவரைச் சேர்தலினும் இனிய சுகம் வேறில்லை; தீயவரைச் சார்தலினும் கொடிய துன்பப் படுத்துவது பிறிது யாண்டும் இல்லை.

ஊங்கு என்பது எல்லையின் அளவைப் பாங்கோடு உணர்த்தி யுள்ளது. அளபெடை இனிய இசையை நிறைத்து இனிமை பயந்து நின்றது.

சிற்றினத்தை யாதும் சேராதே; நல்லினத்தையே எவ்வழியும் நயந்து செவ்வையாய்ச் சேர்ந்துகொள்ளுக.

விலக்கும் விதியும் துலக்கமாய் ஈண்டு உணர வந்தன. அல்லல் உறாமல் நல்ல சுகம் உறுக.

நல் இனம்=நல்ல குணநலன்கள் நிறைந்த மக்கள்.

தீ இனம்=தீய செயல்களை யுடைய தீக் கூட்டம்.

நல்லவர்களுடைய மனம் மொழி மெய்கள் எவ்வழி

யும் செவ்வையா யிருத்தலால் அவரோடு சேர நேர்ந்தவர்கள் யாண்டும் இனியராய் உயர்ந்து திகழ்கின்றனர்.

தீயவர்கள் எங்கும் தீமையே பொங்கியிருத்தலால் அவர்களோடு சேர்ந்தவர்கள் தீயராயிழிந்து ஒழிகின்றனர். தீய இனம் தீய நோயே.

நல்ல இனம் இனிய அமுதம்போல் இன்பம் தரும்; தீய இனம் கொடிய நஞ்சுபோல் துன்பமே விளைக்கும் ஆதலால் அத்தீயினத்தினும் அல்லற்படுத்துவது வேறு யாதும் இல்லை என்று சொல்லி யருளினர்.

உள்ளத்தைக் கலக்கிப் பலவகையிலும் உயிரைத் துயர் உறுத்துவது அல்லல் என வந்தது. நல்ல பாலில் கொஞ்சம் நஞ்சு படியினும் அது பாழாம்; நல்லவர் இடையே தீயவர் சிறிது சேர நேரினும் அவர் தீயராய்த் திரிந்து இழிவர். நீச இனம் நாசமே புரியும்.

தீயவர் கூட்டுறவு தீயினும் தீயது; நஞ்சினும் கொடியது; நாசமே புரிவது; ஆதலால் அந்த நீச இனத்தை யாதும் அணுக லாகாது; காணவும் கூடாது.

தீயாரைக் காண்பதுவும் தீதே; திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவும் தீதேயாம்;—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோ
டிணங்கி யிருப்பதுவும் தீது. (மூதுரை 9)

தீய இனத்தைக் குறித்து ஒளவையார் இவ்வாறு அஞ்சி வெறுத்து அருவருத்து உரைத்திருக்கிறார். தீயவர் தொடர்பு எவ்வளவு கொடியது! எத்துணை அழிவு! என்பதை இதனல் உய்த்து உணர்ந்து கொள்கிறோம்.

ஆயிடை அலகைத் தேரும் அடைந்தவர் வெயர்வும் அன்றித்
தூயநீர் வறந்த அந்தச் சுடுபுலம் தோய்ந்த காலும்
வீயுயர் மதிநிலாவும் வெய்யவாய்ச் சுடும்; நல்லோரும்
தீயவர் தம்மைச் சேர்ந்தால் தீயவர் ஆவர் அன்றே?
(திருவிளையாடல்)

கொடிய பாலை நிலத்தில் வீசுகின்ற இனியதென்றல் காற்றும் குளிர்ந்த நிலாவும் வெப்பமாயிருந்தன; நல்ல

வரும் தீயவரைச் சேர்ந்தால் தீயவராய் மாறித் தீங்கு புரிவர் என இது பாங்குடன் குறித்துள்ளது.

தீயவரொ டொன்றிய திறத்தரு நலத்தோர்
ஆயவரை அந்நிலை அறிந்தனர் துறந்தாங்கு
ஏயவரு நுண்பொடி படிந்துடன் எழுந்து ஒண்
பாய்பரி விரைந்துதறி நின்றன பரந்தே.
(இராமா, வரைக்காட்சி 20)

குதிரைகள் தரையில் விழுந்து புரண்டு எழுந்தன; தம் உடல்களில் ஒட்டிநின்ற புழுதிகளை உடனே உதறி நின்றன. தீயவரோடு சேர்ந்த நல்லவர் அந்தச் சேர்க்கையின் தீமையை அறிந்ததும் விரைந்து வெறுத்து விலகுவது போல் அவ் வாசிகளின் செயல் நிலை நயமாய் விளங்கி யிருந்தது என இது விளக்கியுளது.

இழிந்த மண் தீயவர்க்கும், உயர்ந்த குதிரை நல்லவர்க்கும், ஒட்டிய புழுதி உற்ற தீமைக்கும், அது. உதறி நின்றது அவர் பதறிச் சென்றதற்கும் ஒப்பாம்.

காவியக் கதையை நடத்திவரும் பொழுதே இடையிடையே **கவிஞர்பிரான்** நீதி நெறிகளை இவ்வாறு ஓதி வருவது உவகை சுரந்து வருகிறது. தீய இனத்தைச் சேரலாகாது என்பதை இங்ஙனம் சுவையா யுணர்த்தி யுள்ளார். உயிரினங்கள் துயர் நீங்கி உயர வேண்டும் என்றே உயர்ந்த கவிகள் நயமா யுணர்த்தி வருகின்றார்.

**நல்லினத்தின்** நலனை நாயனார் இங்கே முதலில் குறித்தது, விதிநியமத்தின் தலைமை கருதி. எது நல் இனம்? அது எப்படியிருக்கும்? அதனை அறிவது எவ்வாறு? அறிய வுரிய கருவிகள் எவை?

மனத்தாலும் வாக்காலும் மன்னஒண்ணு மோன
இனத்தாரே நல்ல இனத்தார்;—கனத்தபுகழ்
கொண்டவரும் அன்னவரே; கூறரிய முத்திநெறி
கண்டவரும் அன்னவரே காண். (தாயுமானவர்)

நல்ல இனத்தாருடைய நீர்மை சீர்மைகளைத் **தாயுமானவர்** இவ்வாறு குறித்திருக்கிறார். உள்ளம் தூயரா

யுயர்ந்துள்ள மேலோரே நல்லவர். அந்த நல்ல இனத்தைச் சேர்ந்து கொண்டால் எல்லா நன்மைகளையும் மேன்மைகளையும் இனிதே அடைந்து கொள்ளலாம்.

அடைந்தார்ப் பிரிவும் அரும்பிணியும் கேடும்
உடங்குடம்பு கொண்டார்க் குறலால்—தொடங்கிப்
பிறப்பின்னு தென்றுணரும் பேரறிவி னாரை
யுறப்புணர்க வம்மாவென் நெஞ்சு. (நாலடி 173)

உலகப் புலைகளை உணர்ந்து தெளிந்து பிறவியை நீக்க முயல்வோரே பெரியோர்; அந்தப் பேரறிவாளரைச் சேர்ந்து உய்தி பெறுக என்று தன் உள்ளத்தை நோக்கி ஒரு புலவர் இவ்வாறு உரிமையுடன் வேண்டியிருக்கிறார்.

சிற்றினம் என்றதற்கு ஏற்பப் பேரினம் என்று நேரே குறியாமல் நல்லினம் என்று குறித்துள்ளார். பெருமை மேன்மை சால்பு என்பன எல்லாம் நன்மை தரும் தன்மையால் நன்கு நேர்ந்துள்ளன.

நிலநலத்தால் நந்திய நெல்லேபோல் தத்தம்
குலநலத்தால் ஆகுவர் சான்றோர்—கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினம் சேரக் கெடும். (நாலடி 179)

தீக்காற்று கப்பலைச் சிதைத்தல்போல் செப்பமுடைய சான்றாண்மையையும் தீயினம் கெடுத்து விடும்; அந்தப் புலை இனம் கொடியது என இது குறித்துளது. அல்லற் படுப்பதூஉம் இல் என்றது தீயினத்தின் பொல்லாத அழிதுயரங்கள் அறிய நின்றது.

நல்லிணக்கம் அல்லது அல்லற் படுத்தும்.
(கொன்றைவேந்தன் 48)

பொன்னே எனினும், புகுமிட னற்கழல்
மன்னர் முடிபோல் மதிப்புறல் இல்லையால்;
என்ன பெருமை யிருப்பினும், சிற்றினம்
மன்னிற் கெடுமே மதிப்பு. (இன்னிசை)

மணமணை சேர்மண மாலை மாண்புறும்;
பிணவனத் தார்இழி வெய்தும்; பெற்றியார்
கணமதிற் சேர்ந்தவர் கணங்கொண் டோங்குவர்;
குணமிலார் இனமுறல் குறையுண் டாக்குமே. (நீதிநூல்)

பன்றியொடு கூடிஞல் பசுங்கன்றும்
ஈனமலம் படிந்து தின்னும்
என்றெழுந்த பழமொழிதான் இழிதொடர்பின்
விளைவுகளை எளிது காண
ஒன்றிவந்தோர் போதனையாய் ஓங்கியுளது;
உண்மைதனை உணர்ந்து நாடி
நன்றுயர்ந்த வழிகளிலே என்றுமே
பழகிநீ நலமாய் வாழ்க. (இந்தியத்தாய்நிலை)

சிற்றினத்தைச் சேராமல் விலகி நல்லினத்தைச் சார்ந்து உயர்ந்து கொள்ளுக என இவை உணர்த்தி யுள்ளன.

Villainous company hath been the ruin of me.
(Shakespeare)

தீயினம் என்னைக் கெடுத்துவிட்டது என இது குறித்துளது. குறிப்பைக் கூர்ந்து ஓர்க.

A bad neighbour is as great a misfortune as a good one is a great blessing. (Hesiod)

நல்லவுறவு பெரிய பாக்கியம்; கெட்ட சார்பு கொடிய கேடு என்னும் இது இங்கே ஓர்ந்து உணர வுரியது.

நல்இனம் இன்பமாம்; தீய இனம் துன்பமே தரும்.

இவ்வுண்மையை நெடுமாறன் அறிந்து தெளிந்தான்.

சரிதம்.

இவன் மதுரையிலிருந்து அரசு புரிந்த பாண்டிய மன்னன். உருவ அழகிலும் உலகியலறிவிலும் சிறந்தவன். பெரிய போர் வீரன். முதுகில் சிறிது கூன் இருந்தமையால் **கூன்பாண்டியன்** என்று இவன் பேர்பெற்று நின்ருன். அக்காலத்தில் கல்வியறிவிலும் துறவுநிலையிலும் தலைசிறந்திருந்த சமணர் பலருடன் இவன் பழகி வந்தான். அந்தப் பழக்க வாசனையால் சமண சமயக் கொள்கைகளை இவன் தழுவ நேர்ந்தான். பரம்பரையாய் உவந்து பேணிவந்த சைவ சமயத்தை ஒருவி அருகமதத்தை இவன் மருவி வருதலை அறிந்து அரசி உளம்மிக மறுகினுள். **மங்கையர்க்கரசி** என்னும் பெயருடைய அவ்

வுத்தமி தன் கணவன் உள்ளம் திருந்தி உரிய சைவனாய் உய்யவேண்டும் என்று பரமனை வேண்டி வந்தாள். அவ்வாறு ஆண்டவனை வேண்டி வருங்கால் **திருஞான சம்பந்தர்** மதுரைக்கு வந்தார். தெய்வத் திருவருள் பெற்றுச் சைவ சமய குரவராய் வந்துள்ள அவரைக் கண்டதும் **சமணர்கள்** பொருமை கொண்டனர். அல்ல லிழைத்து அச்சுறுத்தி அவரை ஊரைவிட்டு ஓட்டிவிட வேண்டும் என்று அவர் மூண்டனர். பிள்ளையார் தங்கி யிருந்த மடத்தில் நள்ளிரவில் வந்து அவர் தீயை வைத் தனர். தீ பற்றி எரிந்தது. அவர் விரைந்து வெளியேறி விளைவினை எண்ணி வெய்துயிர்த்தார். தீயினத்தார் இட்ட தீயின் வெப்பம் வேந்தனைச் சேரட்டும் என்று அவர் கருதினர். கருதவே எரியின் சுரத்தால் மன்னன் மறுகித் துடித்தான். மந்திர சித்திகளில் வல்ல சமணக் குருக்கள் ஆனவரையும் முயன்று பார்த்தார். சுரத்தின் வேகம் யாதும் தணியவில்லை. அரசியார் வேண்டுகோ ளால் ஞானசம்பந்தர் அணுகித் திருநீறு எடுத்து அரசன் மீது பூசினர். பூசவே சுரம் முழுவதும் ஒழிந்தது; ஒழி யவே மன்னன் உள்ளம் உவந்து பிள்ளையாரைப் போற் றிப் புகழ்ந்தான். சைவநெறியைத் தழுவினன்; வெய்ய வரை வெறுத்து ஒழித்தான். பொல்லாதவர்களைச் சேர்ந்து உள்ளம் திரிந்து அல்லல் பல அடைந்தவன் நல்லவரைச் சேர்ந்து நலம் மிகப் பெற்றான். **நல்இனம்** இருமைக்கும் துணையாய் இன்பம் தரும்; **தீயினம்** அல்லற்படுத்தி அழிதுயரில் ஆழ்த்தும் என்பதை உலகம் தெளிய இவன் நேரே உணர்த்தி நின்ருன்.

மெய்யில் இட்டனர் வருடலும் வெஞ்சுரம் துறந்த
மையில் சிந்தையோர் வெகுளியிற் றணிந்தது; வாசம்
செய்த தண்பனி நீர்விரைச் சந்தனம் திமிர்ந்தால்
எய்து தண்மைய தாயினது இறைவலப் பாகம். (1)

பொழிந்த தண்மதுத் தார்புனை பூழியர் கோனுக்கு
இழிந்த செய்கையர் கைதொட எரியிடு சுரத்தால்
கழிந்த துன்பமும் கவுணியர் கைதொடச் சுரந்தீர்ந்து
ஒழிந்த இன்பமும் இருவினை ஒத்தபோல் ஒத்த. (2)

ஐய இச்சுரம் ஆற்றரிது ஆற்றரிது என்ஞை
வையை நாடவன் வல்லமண் மாசுதீர்ந் தடியேன்
உய்ய வேண்டுமேல் அதனையும் அடிகளே ஒழித்தல்
செய்ய வேண்டுமென் றிரந்தனன் சிரபுரக் கோனை. (3)

பிள்ளை யாரிடப் பாகமும் பண்டுபோல் பெருமான்
வெள்ளை நீறுதொட் டங்கையால் நீவுமுன் மேனை்
உள்ள கூனொடு வெப்புநோய் ஒழிந்து மீனுயர்த்த
வள்ளல் மாசறக் கடைந்தவிண் மணி எனப் பொலிந்
[தான்.
(திருவிளையாடல் 62)

தீயஇனத்தால் மாசுபடிந்திருந்த **பாண்டிய மன்னன்** நல்லினத்தால் மாசுநீங்கித் தேசு மிகுந்து நெடுமாறனாய் நெடிது விளங்கி யுள்ளமையை இவை விளக்கியுள்ளன.

தடுமாறும் நெறியதனைத் தவமென்று தம்முடலை
அடுமாறு செய்தொழுகும் அமண்வலையில் அகப்பட்டு
விடுமாறு தமிழ்விரகர் வினைமாறும் கழலடைந்த
நெடுமாற ஞர்பெருமை உலகேழும் நிகழ்ந்ததால். (1)

வளவர்பிரான் திருமகளார் மங்கையருக் கரசியார்
களபமணி முலைதிளைக்குந் தடமார்பிற் கவுரியனர்
இளவளவெண் பிறையணிந்தார்க் கேற்றதிருத் தொண்
[டெல்லாம்
அளவில்புகழ் பெறவிளக்கி அருள்பெருக அரசளித்தார்.

திரைசெய்கட லுலகின்கண் திருநீற்றின் நெறிவிளங்க
உரைசெய் பெரும் புகழ்விளக்கி ஓங்குநெடு மாறனர்
அரசுரிமை நெடுங்காலம் அளித்திறைவன் அருளாலே
பரசுபெருஞ் சிவலோகத் தின்புற்றுப் பணிந்திருந்தார். (3)
[பெரிய புராணம் 56]

சிற்றினத்தால் சிறுமை யுற்றிருந்த அரசன் பின்பு பேரினத்தால் பெற்றுள்ள பேரின்ப நிலைமையைச் **சேக்கிழார்** இவ்வாறு செவ்வையாத் துலக்கி யிருக்கிறார்.

சேராமல் சிற்றினத்தைப் பிரிந்தெந் நாளு
திருவடிப்பே ரினத்துடனே சேரா வண்ணம்
ஆராக நான்அலைந்தேன் அரசே! நீதான்
அறிந்திருந்தும் மாயையிலேன் அழுந்த வைத்தாய்!
(தாயுமானவர்)

**சிற்றினத்தைச் சேராமல்** விலகி நல்ல பேரினத்தைச் சேர்ந்தவரே பேரின்ப நிலையைப் பெறுகிற பெரிய மகான்கள் ஆகின்றார் என்பதை இதில் ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம். தீயவர் தொடர்பு யாதும் படியாமல் தூயவரோடு தோய்ந்து வருக. அவ் வரவே ஆருயிர்க்குப் பேரமிர்தமாய் யாண்டும் இன்பம் அருளி வரும்.

*சார்ந்துள்ள சார்புகளின் படியேதான்*
*உயிர்வாழ்வு தரணி எங்கும்*
*நேர்ந்துள்ள நிலைமைகளை, நீர்மைகளின்*
*சீர்மைகளை, நினைந்து நீதி*
*தேர்ந்துள்ள நல்லினத்தைச் சேர்ந்துய்க!*
*தீயஇனம் தீய நோயா*
*ஓர்ந்ததனை அணுகாமல் விலகினே*
*உயிர்வாழ்வு உயர்வாம் அன்றே.*

**தீயஇனம் தீயவிடம்; செவ்விய நல்லினம்**
**தூய அமிர்தம் தொடர்.**

*தீயினத்தைச் சேராதே; நல்லினம் சேர்ந்து வாழ்.*

---

### இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

1 சிறியார் இனத்தைச் சேர லாகாது.
2 சேர்ந்த இனத்தின்படியே மாந்தர் நேர்வர்.
3 மருவிய இனமே மனிதனைக் காட்டும்.
4 இனத்தின் வழியே அறிவு வெளியாம்.
5 இனம் தூய்மையானல் யாவும் தூய்மையாம்.
6 தூயவர் உறவு சுகமெல்லாம் அருளும்.
7 இனநலம் எல்லாப் புகழும் தரும்.
8 நல்லஇனம் யாண்டும் நன்மையாம்.
9 இருமையும் அதனுல் இன்பம் உண்டாம்.
10 நல்லவரை நயந்துகொள்; தீயவரை இகழ்ந்துவிடு.

சுசுா-வது சிற்றினம் சேராமை முற்றிற்று.

# நாற்பத்தேழாவது அதிகாரம்

## தெரிந்து செயல் வகை.

அஃதாவது செய்ய வுரிய காரியங்களை அரசன் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து செய்யும் திறம். சிற்றினம் சேராமல் பேரினத்தைச் சேர்ந்து சீரும் சிறப்பும் செறிந்துள்ள வேந்தன் கருமங்களைக் கருதிப் புரியும் மருமங்களை அரச தருமங்களா இதில் உணர்த்துகின்றார். அதிகார முறைமையும் உரிமையாய் மருவி நின்றது.

461. உற்ற வரவுடனே ஊதியமும் சூழ்ந்துபிட்டங்
கொற்றனேன் செய்தான் குமரேசா—முற்று
அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல். (க)

இ-ள்.

குமரேசா! செலவு வரவுகளின் நிலைமைகளை ஆய்ந்து பிட்டங்கொற்றன் ஏன் வினைகளைச் செய்தான்? எனின், அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும் ஊதியமும் சூழ்ந்து செயல் என்க.

கருமம் புரியும் தருமம் காண வந்தது.

செல்லும் செலவையும் சேரும் நிலையையும் சேர்ந்து பின் வருகிற வரவையும் கூர்ந்து ஆராய்ந்து தேர்ந்து வினை செய்க.

அழிவது என்றது செலவாகும் பொருளின் அளவினை.

ஆவது என்றது அதனால் ஆகி வருகிற விளைவினை.

அளபெடைகள் இனிய ஓசைகளை இசைத்து நின்றன.

எண் உம்மைகள் மூன்றும் தனித்தனியே ஒவ்வொன்றையும் ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்ள வந்தன.

அழிவதைச் சீர்தூக்கி, ஆவதை நேர் நோக்கி, ஊதியத்தை யூகித்து ஓர்ந்து தேர்ந்துகொள்ள வேண்டும். இங்கே குறித்துள்ள குறிப்புகளால் பொருள் ஈட்டத்

னின் நிலைகள் சீராத் தெரிய வந்தன. இயற்றலும் ஈட்டலும் அரசுமுறைக்கு உரிய வரிசைகளாம்.

வழி பயக்கும் ஊதியம் = பின்பு உண்டாகும் இலாபம். வரவு பெருகி வர உரமா வினை புரிக.

ஆய்ந்து செயல் என்றது பலவகையிலும் ஆழ்ந்து ஆலோசித்துச் செய்ய வேண்டும் என்பதைத் தெளிவுறுத்தி நின்றது. செயல் என்னும் உடன்பாட்டு வியங்கோள் ஈண்டு விதி நிலையாய் விளங்கியது.

சீர்மையோடு செப்பமாய்ச் செய்துவரும் முயற்சிகளால் மாந்தர் யாண்டும் உயர்ச்சியடைந்து வருகின்றனர். இயல்பாகவே உயர்ச்சியுற்றுள்ள வேந்தர் வினையாண்மையால் மேலும் பெருமை மேன்மைகளை அடைந்துகொள்ளுகின்றனர். பொருள் வளம் ஆட்சிக்கு மிக்க மாட்சி தரும் ஆதலால் அதனைத் தக்கபடி நன்கு ஈட்டிக் கொள்ளும் வழிவகைகள் இங்கே தெளிவுற வந்தன.

செல்வம் பெருகி வருதற்கு உரிய ஒரு பெரிய தொழிலைச் செய்ய நேர்ந்தபொழுது முதலில் அதற்கு ஏற்படும் செலவையும், அது நிலைத்துநின்று நிலையாகப் பலன்களை விளைத்துவரும் வரவுகளையும், முன்னதாகக் கருதியுணர்ந்து உறுதியோடு ஓர்ந்து வினைசெய்பவரே கரும வீரராய்ப் பெருமை யடைந்து வருகின்றார்.

அழிவதை முதலில் 'குறித்தது ஏன்? எனின், ஆக்கத்துக்கு நெடிதாய் அது வழிகோலி வருதல் கருதி. ஒருபடி விதையை நிலத்தில் முதலில் விதைத்தால் பல கல விளைவுகளை அது விளைத்தருளுகிறது. இட்ட வித்து விளைவாய் விளைந்து வருதல்போல் கொட்டிய செலவு வரவாய் வளர்ந்து வரும்படி கருமம் புரிதல் நன்று.

அரசன் தெரிந்து செய்ய வுரிய செயல் வகைகள் பல வுள; அவற்றுள் பொருள் செயல் வகையைத் தலைமையாக இங்கே குறித்திருக்கிறார். ஆட்சிமுறை யாண்டும் மாட்சியாய் நீண்டு நடந்து வருதற்குப் பொருள் உறுதியாய் ஊக்கி வரும் ஆகையால் அந்த ஆக்கத்தை உரிமையுடன் நோக்கி வந்தது.

தற்காலச் செலவு பிற்காலச் செறிவு எக்காலமும் தொடர்ந்து விளைந்து வரும் வரவு முதலியவைகளைத் தெளிவாய்த் தெரிந்து வினை செய்வதே சிறந்த சீர்மையாம். தொழிலறிவு எவர்க்கும் எழில் புரிகிறது.

செய்யும் பொழுதே அழிபொருளிற் சிறப்பது
 ஒப்பது இரண்டினுள் ஒன்று
உய்ய வுதவி வழிபயக்கும் ஒண்மை
 வினையைத் தேர்ந்துளத்தின்
ஐயம் அகன்ற இனத்தோடும் ஆய்ந்து
 தனித்தும் புரிந்திடுக!
வெய்ய ஆக்கம் கருதிமுதல் விளிக்கும்
 வினையைப் புரியற்க. (விநாயக புராணம்)

முன்னதாகச் செலவு செய்யும் பொருளினும் பின்னர் அதிக ஊதியம் பெருகிவரும்படி கருதிச் சூழ்ந்து கருமம் புரிக என்று தன் மகனுக்கு ஒரு மன்னன் இன்னவாறு புத்தி போதித்திருக்கிருன். தேவர் வாய்மொழியைத் தழுவி இது வந்துள்ளது. **அழிபொருள், வழிபயக்கும் ஊதியம்** என்பன ஈண்டு ஊன்றி அறிய வுரியன.

வழிமுறையே வரவு பெருகிவரக் கருமம் புரிபவர் விழுமிய வினையாளராய்ச் சிறந்து எவ்வழியும் பெருவளம் உடையராய் விளங்கி வருகின்றூர்.

இது பிட்டங்கொற்றன் பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் ஒரு குறுநில மன்னன். அறிவு நூல்களையும் கருவி நூல்களையும் நெறிமுறையே கற்றவன். அரிய மதியூகி. பெரிய போர்வீரன். பெருங் கொடையாளி. கருமச் சூழ்ச்சிகளில் கைதேர்ந்தவன். சேரமன்னனும் இவனை அரிய உரிமைத் துணையாகத் தழுவிக் கொண்டு உவகை மீதூர்ந்து வந்தான். மலைநாட்டுத் தலைவனை இவன் தனது நாட்டைப் பலவகையிலும் வளம்படுத்தி வந்தான். அணைகள் கட்டியும் ஏரிகள் வெட்டியும் காடுகள் களைந்தும் எவ்வழியும் விளைவுகள் விரிந்துவரச் செவ்வையுறச் செய்துவந்தமையால் இவனுடைய நாடு

பீடும் பெருமையும் பெற்று வந்தன. இவனது ஆட்சியி லிருந்த மக்கள் யாவரும் செல்வ வளங்களில் சிறந்து யாண்டும் மகிழ்ச்சி மீதூர்ந்து வாழ்ந்து வந்தனர். **மன்னன் தொட்டால் மண்ணும் பொன்னும்** என வெளி நாட்டவரும் இவனை வியந்து புகழ்ந்தனர். எவர் வந்து எதைக் கேட்டாலும் இல்லை என்னுமல் உள்ளம் உவந்து வழங்கி வந்தமையால் பெரிய கொடை வள்ளல் என்று உலகம் எங்கும் இவன் புகழ் பரவிநின்றது. காவிரிப்பூம் பட்டினத்துக் **காரிக் கண்ணனுர்** என்னும் சங்கப்புலவர் இவனது ஈகையை வியந்து ஓகை மீதூர்ந்து பாடியுள் ளார். அயலே வருவதை ஆய்ந்து காணுக.

இன்று செலினும் தருமே; சிறுவரை
நின்று செலினும் தருமே; பின்னும்
முன்னே தந்தனென் என்னுது, துன்னி
வைகலும் செலினும் பொய்யல னுகி
யாம்வேண்டி யாங்குஎம் வறுங்கலம் நிறைப்போன்;
தான்வேண்டி யாங்குத் தன்இறை உவப்ப
அருந்தொழில் முடியரோ திருந்துவேல் கொற்றன்;
இனமலி கதச்சேக் களனொடு வேண்டினும்,
களமலி நெல்லின் குப்பை வேண்டினும்,
அருங்கலம் களிற்ருெடு வேண்டினும், பெருந்தகை
பிறர்க்கும் அன்ன அறத்தகை யன்னே;
அன்னன் ஆகலின், எந்தை உள்ளடி
முள்ளும் நோவ உருற்க; தில்ல
ஈவோர் அரிய இவ் வுலகத்து
வாழ்வோர் வாழ்வுஅவன் தாள்வாழியவே. (புறம் 171)

இந்தப் பாடலில் பொதிந்துள்ள பொருள் நயங்களை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். **திருந்துவேல் கொற்றன், பெருந்தகை** எனக் குறித்து இவனுடைய அருந்தொழிலாண்மைகளையும், அரிய கொடை வண்மை களையும், பெரிய குண நீர்மைகளையும் கவிஞர் வியந்து புகழ்ந்துள்ளார். ஆவதை ஆய்ந்து நோக்கி யாண்டும் ஊதியம் ஓங்கி வர ஓர்ந்து புரிந்து செல்வங்களையீட்டிப் பல்லோர்க்கும் ஈந்து நல்லோர் எல்லாரும் போற்றிவர

இவன் வாழ்ந்து வந்துள்ளான். வழிபயக்கும் ஊதியம் சூழ்ந்து தொழில் செய்யும் வழியை இவன் எழிலோடு இனிது காட்டியுள்ளமையால் **தெரிந்து செயல்வகைக்கு** சிறந்த உயர் சான்ருய் இவன் விளங்கி நின்ருன்.

**வரவு பெருகி வரும்வழியை நாடிக்**
**கருமம் புரிக கவிந்து.**

*விளைவுன்னி விளைசெய்.*

---

462. சார்ந்தெண்ணிச் செய்த தசரதனும் ஆசுவனும்
கூர்ந்தார்சீர் என்னே குமரேசா—ஓர்ந்து
தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்றும் இல். (உ)

இ-ள்

குமரேசா! அறிஞரோடு ஆய்ந்து செய்த தசரதனும் குவலயாசுவனும் காரிய சித்தியால் ஏன் புகழ் பெற்ருர்? எனின், தெரிந்த இனத்தொடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு அரும் பொருள் யாதொன்றும் இல் என்க.

உரியவருடன் ஓர்ந்து விளைசெய் என்கிறது.

கருமங்களை நன்கு தெளிந்தவர்களோடு கலந்து ஆய்ந்து செய்யும் அறிஞர்க்கு அரிய பொருள் யாதும் இல்லை. எல்லாம் எளிதே முடியும் என்பதாம்.

தெரிந்த இனம் என்றது கருமத்துறைகளையும் தரும நெறிகளையும் நன்கு தெளிந்து தேர்ந்துள்ள அறிஞர்களை. தனக்கு உறுதித் துணையாக அரசன் தெரிந்து செறிந்து கொண்ட மந்திரிகளும் புலவர்களும் இந்த இனத்தைச் சேர்ந்தவர்களே.

ஒருவன் எவ்வளவு சிறந்த அறிவுடையனுயினும் கருமங்களின் மருமங்களான எல்லா வகைகளையும் அவன் தெளிவாய்த் தெரிந்திருக்க முடியாது.

எல்லாம் அறிந்தவரும் ஏதும் அறியாதவரும்
இல்லைஎனும் இவ்வுலகம். (தாயுமானவர்)

அறிவின் அதிசய நிலையை இதனால் அறிந்துகொள்கின்றோம். பழகிய அளவே அது தெளிவுறுகின்றது.

அறிவு பலவகை நிலைகளில் பரந்து விரிந்துள்ளது. கல்வி யறிவு, கணக்கறிவு, சிற்ப அறிவு, சிலையறிவு, இசையறிவு, ஏரறிவு, தொழிலறிவு, வணிக அறிவு, தாவரவறிவு, நிலவறிவு, நீரறிவு, பாரறிவு, போரறிவு, தத்துவ அறிவு என இன்னவாறு அறிவுலகம் உன்னி உணருமாறுஎவ்வழியும்பெருகிநன்னயமாமன்னியுளது.

அந்த அந்தத்துறையில் பழகிப் பயின்று தெளிந்தவர்களிடமே அந்த அந்தக் கருமங்களை அறிந்துகொள்ள வேண்டும். கருமங்களின் மருமங்கள் அவரவரது கருத்து அளவே விருத்தியாய்த் தெரிய வருகின்றன.

தெரிந்த இனம் என்று இங்கே பன்மையில் குறித்தது, ஒருவருக்குத் தெரிந்தது மற்றவருக்கு வேறு வகையில் தெரியலாம் ஆதலால் பலரையும் ஒருங்கு சேர்த்து மருங்குவைத்து மன்னன் ஆராய்ந்துகொள்ள வேண்டும்.

ஒன்றுநன் றெனவுணர்வு ஒருவன் கொள்ளுமேல்,
அன்றதென்று ஒருவனுக்கு அறிவு தோன்றுமால்;
நின்றதொன் றுண்டுகேள் நீதி நூலினோடு
ஒன்றிநின் றவரொடும் உணர்க ஒட்டியே. (சூளாமணி)

நீதி நெறியோடு கருமங்களை ஆய்ந்துள்ள பலரையும் ஒட்டி நின்று உறுதி நலன்களை ஓர்ந்து கொள்க என வேந்துமுறையை இது விளக்கி யுளது. தெரிந்த இனத்தோடு சேர்ந்து எண்ணித் தேர்ந்து செய்ய வேண்டும் என்பதை இதில் தெரிந்து கொள்ளுகிறோம்.

நாட்டு மக்களுக்கு நலம்புரிந்து வருகிற அரசாட்சி முறைகள் வினைமாட்சிகளால் விளங்கி வருகின்றன. தெளிவான வினையாளர்களை உரிமையோடு தழுவிவரும் அளவு அந்த அரசு எந்த வகையிலும் பெருமையாய் ஒளிபெற்று மிளிர்கிறது.

ஐயமே திரிவே என்னும் அவையற அறநூல் நீதி
வையமால் யானைபாய்மா வன்படைத் தொழில்நூலாதி

பையவே கற்றுக் கற்ற பண்பின ரோடு நாளும்
உய்யவே அளவளாவி உரைத்தவா நிற்றல் வேண்டும்.
[விநாயக புராணம்]

ஐயம் திரிபு அற யாவும் கற்று நல்ல பண்பாளர்களோடு நாளும் அளவளாவி நலம் பல புரிந்து நெறியே ஒழுகி வரவேண்டும் என அரச தருமத்தை இது வரிசையுடன் அறிவுறுத்தி யுள்ளது.

தெரிந்த அறிஞர்களோடு உசாவி அறிந்துகொண்டதைத் தானும் தனியே இருந்து சிந்தித்துத் தெளிந்து கொள்ள வேண்டும் என்பார் **எண்ணி** என்றார்.

இவ்வாறு கருமச் சூழ்ச்சிகளைத் தெளிவாகக் கருதிக் கொள்பவர்களுக்குக் கருதியன யாவும் எளிதே கை கூடும் ஆதலால் **அரும் பொருள் யாது ஒன்றும் இல்** என்றார். ஆய்ந்து வினைசெயின் பலன் பாய்ந்து வரும்.

உரிய பெரியவர்களோடு ஓர்ந்து வினை செய்பவர் அரிய பொருள்களையும் எளிதே பெறுவர். இது தசரதனிடமும், குவலயாசுவன் பாலும் அறிய வந்தது.

சரிதம்.

அரச திருவுடன் பெரிய செல்வங்கள் யாவும் பெற்றிருந்தும் பிள்ளைப்பேறு இன்றித் தசரதன் பெரிதும் மறுகி நின்றான். தனது உள்ளக் குறையை வசிட்ட முனிவரிடம் உரைத்து உசாவினன். மன்னனுடைய மறுக்கத்தை அந்த மாதவர் கருதி ஓர்ந்தார்; உண்மையை உணர்ந்தார். உறுதி கூறினர்: கலைக்கோட்டு முனிவரை அழைத்து வந்து புத்திரகாமேட்டி யாகம் செய்தால் தெய்வீகமான புத்திரர்களைப் பெறலாம் என்றார். அவ்வாறே முயன்று அம்முனிவரைக் கொண்டு வந்து அவ் வேள்வியை இவன் செய்துமுடித்தான். முதல்வன் ஆன திருமாலே இம் மன்னனுக்குப் புதல்வராய்த் தோன்றினர். அந்த அரிய பேற்றைக் கண்டு இவன் பெரிய மகிழ்ச்சி அடைந்தான். இவன் பெற்றுள்ள மகப்பேற்றின் மகிமைகளை மாதவர்களும் வியந்து புகழ்ந்துள்ளனர். அயலே வருவன ஈண்டு அறிய வுரியன.

அயனபுதல்வன் தயரதனை அறியாதார் இல்லை; அவன்
பயந்தகுலக் குமரரிவர் தமையுள்ள பரிசெல்லாம்
நயந்துரைத்துக் கரையேற நான்முகற்கும் அரிதாம்;பல்
இயந்துவைத்த கடைத்தலையா யான்றிந்த படிகேளாய்!

துனியின்றி உயிர்செல்லச் சுடராழிப் படைவெய்யோன்,
பனிவென்ற படியென்னப் பகைவென்று படிகாப்போன்;
தனுவன்றித் துணையில்லான்; தருமத்தின் கவசத்தான்;
மனுவென்ற நீதியான்; மகவின்றி வருந்துவான்: (2)

சிலைக்கோட்டு நுதற்குதலைச் செங்கனிவாய்க் கருநெடுங் [கண்
விலைக்கோட்டும் பேரல்குல் மின்னுடங்கும் இடையாரை
முலைக்கோட்டு விலங்கென்றங் குடனணுகி முன்னின்ற
கலைக்கோட்டுப் பெயர்முனியால் துயர்நீங்கக் கருதினன்.

தார்காத்த நறுங்குஞ்சித் தனயர்கள்என் தவமின்மை
வார்காத்த வனமுலையார் மணிவயிறு வாய்த்திலரால்;
நீர்காத்த கடல்காத்த நிலம்காத்தேன் என்னிற்பின்
பார்காத்தற் குரியாரைப் பணிநீ என் றடிபணிந்தான். (4)

அவ்வுரைகேட் டம்முனியும் அருள்சுரந்த வுவகையனாய்
இவ்வுலகம் அன்றியே எவ்வுலகும் இனிதளிக்கும்
செவ்வியிளஞ் சிறுவர்களைத் தருகின்றேன்; இனித்தேவர்
வவ்விநுகர் பெருவேள்விக்கு உரியவெலாம் வருகென்றான்.
(இராமாயணம் 1-11)

தசரதனுடைய அருமை பெருமைகளையும் புத்திரப் பேறுகளையும் குறித்து சனக மன்னனுடைய இராச சபையில் விசுவாமித்திர முனிவர் இவ்வாறு கூறியிருக்கிறார். தெரிந்த இனத்தோடு தேர்ந்து எண்ணி வினை செய்பவர் அரிய பொருள்களை அடைந்து கொள்ளுவர் என்பதை இவனிடம் அறிந்து மகிழ்ந்து கொள்கிறோம்.

### குவலயாசுவன்.

இவன் சூரிய குலத்து அரசன். சத்துருசித்து என்னும் மன்னன் மகன். சிறந்த அறிவும் மிகுந்த துணிவும் உடையவன். குதிரை ஏற்றத்தில் எவரும் தனக்கு நிகரில்லாதவன். அதிசய வீரன் என்று துதிகொண்டிருந்த இவன் மதிநலம் வாய்ந்த மந்திரிகளை மதித்துப்

பேணி வந்தான. இவனது ஆட்சிக் காலத்தில் மக்கள் யாவரும் மிக்க மகிழ்ச்சியுடன் யாண்டும் வாழ்ந்து வந்த னர். இவனுடைய குணநலன்களை அறிந்து மகிழ்ந்து காவலர் என்னும் யோக சித்தர் இவனுக்கு அரிய மந்தி ரம் ஒன்றை உபதேசித்தார். பாதாளகேது என்னும் அரக்கன் ஒருவன் அக்காலத்தில் எல்லாருக்கும் அல்லல் விளைத்து வந்தான். யாராலும் வெல்லமுடியாது என்று வீறுகொண்டு நின்ற அவனை இவ் வீரன் வென்று தொலைத்தான். இவனுடைய மதிநலத்தையும் உருவ அழகையும் வெற்றித் திறத்தையும் கண்டு வியந்து மகிழ்ந்த மதாலசை என்னும் கந்தருவ மங்கை இவனை விழைந்து வந்து மணந்து கொண்டாள். நிறைந்த செல் வங்களும் சிறந்த கீர்த்தியும் இவனது வினையாண்மை களால் விளைந்து வந்தன. அறிவு நலம் மிகுந்த பெரி யோர்களைத் துணைக்கொண்டால் எல்லாப் பேறுகளை யும் எளிதே பெறலாம் என்பதை இவன் வாழ்க்கை வையம் அறிய விளக்கி நின்றது.

**நல்லா ருடன் ஆய்ந்து நாடி வினைசெய்யின்**
**எல்லாம் முடியும் இனிது.**

கற்றவரோடு கருதி வினை செய்.

---

463. அன்றுதமன் ஊக்கா தடங்கிநின்ருன் ஏனூக்கிக்
குன்றினன் மந்தன் குமரேசா—ஒன்றிவரும்
ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார். (௩)

இ-ள்

குமரேசா! வரவை விரும்பிப் பொருளை இழக்காமல் தமன் ஏன் அடங்கி நின்ருன்? எனின், ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினை அறிவுடையார் ஊக்கார் என்க.

செய்யும் வினையைத் தேர்ந்து செய் என்கிறது.

பின்பு வருகிற ஊதியத்தை எதிர்நோக்கி முன்பு

பொருளை இழக்க வுரிய காரியத்தை அறிவுடையவர் செய்யார். அறிவின் பயன் அறிய வந்தது.

ஆக்கம்=இலாபம்; ஊதியம். மேல் வரவாய் ஆகி வருவது **ஆக்கம்** என வந்தது.

கருதி=ஆவலோடு அவாவி.

முதல்=மூலதனம். தன்னையுடையவனை முதன்மையாகச் செய்வது ஆதலால் பொருள் முதல் என நேர்ந்தது. விளைவுக்கு உரிய மூல வித்து முதல்.

முதலை வைத்துத்தான் ஊதியம் சம்பாதிக்க வேண்டும். முதல் இல்லையானல் ஊதியம் உறுவது இல்லை.

முதல்இலார்க்கு ஊதியம் இல்லை. (குறள் 449)

முதலுக்கும் ஊதியத்துக்கும் உள்ள உறவுரிமைகளை இதனல் உணர்ந்து கொள்கிறேம். இது நெறியான முயற்சிக்கு உரிய சரியான குறியாம்.

இவ்வாறு முறையான துறையில் புகாமல் பிழையான வழியில் பேராசை மண்டிப் பேரூதியம் பெறக் கருதும் பேதைகளைக் கருதி ஆதரவோடு இது நீதி நெறியைப் போதித் துள்ளது.

பொருளாசை மனிதரிடம் மருளாய் மருவியுளது. ஒன்று கொடுத்தால் பத்து வரும் என்றல் அதில் எத்தகையோரும் பித்தராய்ப் பேயராய்ப் பறந்துழலுவர்.

சூதாட்டம் குதிரைப் பந்தயம் முதலிய புலை நிலைகளில் மனிதர் வெறியராய் மறுகி அலைவது பரிதாபமாய்ப் பெருகி யுளது. கொடிய நசை நெடிய வசையாய் நீசமான நாசமாய் நிலவிவருகிறது. உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய பொருளை உரிய முயற்சியுடன் ஈட்டிக்கொள்வதே நல்லது. பொல்லாத புலைவழியில் புகுவது என்றும் அல்லலே யாம். முதலோடு ஊதியமும் சேர்ந்துவர ஓர்ந்து வினை புரிவதே தேர்ந்த வணிக முறையாம்.

வாணிகம் ஒன்றும் தேற்றய்!
முதலொடுங் கேடு வந்தால்

ஊணிகந்து ஈட்டப் பட்ட
ஊதிய ஒழுக்கி னெஞ்சத்து
ஏணிகந்து இலேசு நோக்கி
யிருமுதல் கெடாமை கொள்வார்;
சேணிகந்து உய்யப் போநின்
செறிதொடி ஒழிய என்றார். (சீவகசிந்தாமணி 770)

முதல் கெடாமல் பேணிக் கொள்வது வணிகர் இயல்பு; அந்த முறையை உணர்ந்து நீ உய்ந்து போ; ஒரு பெண்ணைப் பெறக்கருதி உன் உயிரை இழக்காதே என்று ஒரு வணிக வீரனை நோக்கி மன்னர் இன்னவாறு பேசியிருக்கின்றனர். இலேசு = ஊதியம். **ஆக்கம் கருதி முதலை இழக்கலாகாது** என்னும் இந்தக் குறளைக் கருத்தில் கொண்டு **திருத்தக்கதேவர்** இவ்வாறு பாடியிருக்கிறார். பாட்டின் பொருள்களை ஊன்றியுணர்ந்து உண்மையை ஓர்ந்து கொள்ள வேண்டும்.

உள்ளத் தெளிவை அருளி உறுதிநலனை அறிவு உதவி வரும் ஆதலால் அறிவுடையார் இழவாகும் காரியத்தைச் செய்யார் என்றார். ஆக்கம் கருதி முதலை இழப்பது அறிவிலிகளின் வெறியான செயலேயாம்.

பேராசைப்பட்டு அறிஞர் பிழைகள் புரியார்.

இது தமன்பால் அறிய வந்தது.

சரிதம்.

இவன் சூரியகுலத்து வேந்தனாகிய நரசியந்தனுடைய அருமைத் திருமகன். தாய் பெயர் இந்திரசேனை. இவன் தெளிந்த மதியூகி. சிறந்த குணநலன்கள் நிறைந்தவன். இவனுடைய மனைவி பெயர் சுமுனை. அந்த அழகியோடு அமர்ந்து இனிய போகங்களை நுகர்ந்து நெறிமுறையே இவன் அரசுபுரிந்து வந்தான். எதையும் தெளிவாய் அறிந்து யாண்டும் வினைசெய்து வந்தமையால் இவன் ஆட்சி எவ்வழியும் மாட்சி மிகுந்து வந்தது. **வபுமந்தன்** என்னும் மறுபுல மன்னன் இவன் மேல் பொறாமை கொண்டு இடையூறுகள் பல இழைத்து வந்தான். அவன் மிக்க வஞ்சச் சூழ்ச்சிகளுடையவன். மாய

மந்திரங்களில் வல்லவனை ஒரு இரசவாதியை இவனி டம் கரவாக அனுப்பினன். வந்த அவன் சாதுரிய சாகசங்களோடு மாதுரியமாய்ப் பேசினன்: "அரசே! உமது குணநலன்களைக் கேள்வியுற்று இங்கு மன மகிழ்ந்து வந்தேன். எனது சித்தியின் பலனை உத்தம ரான உமக்கு அருளும்படி ஆண்டவன் அருள் தூண்டி யருளியது. செம்பு இரும்பு முதலிய எந்த உலோகங் களையும் மாற்றுயர்ந்த தங்கம் ஆக்குவேன். ஓராயிரம் பொருள் தரின் அதை நூறுயிரங்கோடி பொன்னுக ஆக்கி யருளுவேன்" என்று இவ்வாறு நசை பெருகி வர ஊக்கி மொழிந்து உள்ளம் குளிர மேலும் உரைத்தான்.

இரும்புசெம்பு முதலான யாவையுமே
செம்பொன்னு இயற்ற வல்லேன்;
பெரும்புவியாள் அரசருமே பெறலரிய
மணியணிகள் பெருகி நும்பால்
வரும்படிநேர் செய்குவேன்; வானவரும்
உம்முடைய வாழ்வை நோக்கி
விரும்பிவந்து புகழுவார்; விண்ணவர்வேந்
தென்னநீர் விளங்க லாமே.

இன்னவாறு அவன் பன்னி மொழிந்ததைக் கேட்டு இம் மன்னவன் முதலில் திகைத்தான். பின்பு தன்னுள் ளேயே நகைத்துக் கொண்டு நயமாகப் பதில் உரைத் தான். "மண் மலைகளையும் பொன்மலைகளா ஆக்க வல்ல நீர் என் மனையில் வந்து இவ்வாறு இழிந்து இரந்துபேச வேண்டியதில்லை; சங்கநிதி பதுமநிதி முதலிய நிதிகளை யெல்லாம் உளவாக்கி நீரே நிதிபதியாயும் விண்ணவர் களின் அதிபதியாயும் வாழும்" என வாழ்த்தி விடுத் தான். அவன் நாணி மீண்டான். அவனை நயவஞ்சகமாக அனுப்பி வைத்த அந்த மாற்றரசனும் இவனை வேறு வழியில் வெல்ல வேண்டும் என்று முயன்று அல்லல் பல அடைந்து மாண்டான். மாயவாதி வந்து தக்கபடி பேசி மிக்க பேராசையை மூட்டியும் ஊதியத்தை விழைந்து ஊனம் புரியாமல் ஞான தீரமாயிருந்த இவ னது மதிநலத்தை வியந்து பலரும் புகழ்ந்தார். ஆக்கம்

கருதி முதல் இழக்கும் காரியத்தை அறிவுடையார் புரியார் என்பதை உலகம் தெரிய இவன் உணர்த்தி நின்முன். விரிவை மார்க்கண்டேயத்தில் காண்க.

**பொருள்வரவை எண்ணிப் புலேவினையைச் செய்யார்**
**தெருளறி வாளர் திரிந்து.**

நசையால் வசை யுருதே.

---

464. பண்டு தெளியாமல் பாண்டியனேன் வேடனிடம்
கொண்டிலனோர் தண்டம் குமரேசா—கண்டு
தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர். (சு)

இ-ள்.

குமரேசா! தெளிவில்லாத வினையைப் பாண்டிய மன்னன் ஏன் தொடங்காமல் நின்முன்? எனின், இளிவு என்னும் ஏதப்பாடு அஞ்சுபவர் தெளிவு இலதனைத் தொடங்கார் என்க.

இழிவாகிய பழி விளைவுகளை அஞ்சுகின்ற மேலோர் தெளிவில்லாத காரியத்தை யாதும் செய்யத் துணியார்.

நன்முக ஆராய்ந்து தெளிந்து உறுதியாய்த் தேர்ந்து கொண்டது **தெளிவு** என வந்தது.

தன் நிலை, தான் செய்ய நேர்ந்த தொழில் நிலை. அதனை இனிது முடிக்கும் வழி வகை முதலிய நிலைமை களையெல்லாம் தலைமையாக ஆராய்ந்து ஓர்ந்து தேர்ந்து கொள்வதே சிறந்த வினையாண்மையாம். இத்தகைய தேர்ச்சி யுடையவர் தாழ்ச்சி யுறும்படி எதையும் எவ் வகையிலும் யாண்டும் செய்யார்.

ஊறுசேர் வினையைப் புரிதரார்; ஊழால்
ஊறுவந்து அடுப்பினும் கலங்கார்;
தேறுகா ரியத்தை முடிப்புழி யன்றிச்
செயல்மொழி யாதியால் இடையே
வேறுபோமாறு விளக்குமுர்; துணிந்த
வினைதுளங் காதுவல் விரைவார்;

வீறுசேர் இவரை உருவுகண் டெள்ளா
வேந்தனே வேந்தனும் மைந்தா!
(விநாயக புராணம்)

கரும வீரருடைய வினைமாட்சிகளை இது காட்டியுள்ளது. குறித்திருக்கும் காட்சிகளைக் கூர்ந்து கண்டு பொருள் நிலைகளை ஓர்ந்து கொள்ளுக.

செயல் வகைகளின் திறமைகளே மனிதனுடைய உயர் தகைமைகளை வெளியே தெளிவாக விளக்கி வியனு உணர்த்தி வருகின்றன.

தெளிவு இல்லாத வினையைத் தொடங்கார் என்றதனுல் தெளிவுடையதையே தொடங்குவர்; ஒளி புரிவதையே உவந்து செய்வர் என்பது தெரிய வந்தது.

**தெரிந்து செய்** என்ற அதிகாரக் குறிப்பில் எதைத் தெரிவது? எப்படி அறிவது? யாரோடு கூடி ஆராய்வது? எவ்வகையில் செய்வது? என்னும் யூக விவேகங்களெல்லாம் மேவியுள்ளன. குற்றம் குறைகள் நேராமல் முற்றவும் ஆய்ந்து தெளிந்து முறையோடு வினைசெய்பவரே துறைதோறும் நிறை பெருந்திருவராய் நிலவி வருகிருர். தொழில் வழியில் பழிபுகாமல் பண்போடு பாதுகாத்துக் கொள்வது சிறந்த எழிலுடைமையாம்.

ஏதம் = குற்றம்; பழி. பாடு என்பது படுதல் என்னும் வினையடியாகப் பிறந்து வந்துளது. ஏதத்தை அஞ்சுபவர் என்ருலும் வெண்பா பண்பா யமைந்திருக்கும்: அவ்வாறு கூருமல் **ஏதப்பாடு** என்று ஏன் குறித்தார்? எனின், உலகம் பழித்து வரும் பாடு தெரிய.

பழிக்கு அஞ்சுவது விழுமியோர் இயல்பு. அந்த அச்சமே புகழையும் பொருளையும் வளர்த்து அவரை உச்ச நிலையில் உயர்த்தி வருகிறது.

கருமச் சூழ்ச்சிகளில் தேர்ந்த அறிஞர்களோடு சேர்ந்து ஆராய்ந்து, தானும் ஓர்ந்து தெளிந்து அதன் பின்பே வேந்தன் வினைசெய்யத் தொடங்க வேண்டும்; அவ்வாறு தொடங்கவில்லையானுல் வினை இனிது முடி

யாது; அது முடியாமல் போகவே படியார் பழிக்க நேர்வர்; பொருள் அழிவோடு பழியும் அவமானமும் படியும் ஆதலால் தெளியாத காரியம் பழியாம் என விழிதெரிய விளக்கினர்.

ஆஅம் எனக்கெளிது என்றுலகம் ஆண்டவன்
மேஎந் துணையறியான் மிக்குநீர் பெய்திழந்தான்;
தோஒம் உடைய தொடங்குவார்க் கில்லையே
தாஅம் தரவாரா நோய். (பழமொழி 7)

நிலைமையை உணராமல் **மாவலி** மன்னன் வினை செய்து விளிவடைந்ததை இது விளக்கியுள்ளது. தோம் உடைய தொடங்குவார் துயரம்அடைவார் என்று குறித்திருக்கிறது. தோம்=குற்றம். **ஏதப்பாடு அஞ்சு பவர் தெளிவி லதனைத் தொடங்கார்** என்னும் இதனை எதிர் நோக்கி வந்துள்ளது. உண்மையை ஓர்ந்து கொள்ள வேண்டும். ஆய்ந்து வினை செய்வதே அறிவாம்.

தேர்ந்து தெளியாததை மேலோர் செய்யார். இது குலோத்துங்க பாண்டியன் பால் தெரிய வந்தது.

சரிதம்.

மதுரையம்பதியிலிருந்து அரசு புரிந்து வந்த இந்த மன்னன் அதிசய மதிமான். கலைகள் பல பயின்று தெளிந்தவன். சிறந்த நீதிமான்; நெறிநியமங்களுடையவன். அழகினுல் மதனை வென்ற ஆடவர் திலகன் என்று உலகம் புகழ்ந்துவர உருவ எழிலிலும் அறிவுநிலையிலும் இவன் ஒளி மிகுந்து நின்றான். எவ்வழியும் மாட்சியுடன் இவன் ஆட்சி புரிந்து வருங்கால் மறையவன் ஒருவன் தனது மனைவியுடன் மதுரையை நோக்கிவந்தான். இடைவழியில் ஓர் ஆலமர நிழலில் தங்கினன். தாகத்துக்குத் தண்ணீர் கொண்டுவர அயலே போனன். அதுபொழுது காற்று அடித்தது; மேலே தொங்கியிருந்த அம்பு ஒன்று கீழே படுத்திருந்த பார்ப்பனி வயிற்றில் பாய்ந்தது. அவள் மாய்ந்தாள். பார்ப்பான் வந்தான்; மனைவி மாண்டதைக் கண்டு மறுகி அழுதான். இயல்பாய் அங்கே வில்லும் கையுமாய் நின்ற ஒரு வேடனைக் கண்டான்.

கொன்றவன் அவனே என்று விபரீதமாய்க் கருதி அவனைப் பிடித்து இழுத்து வந்து இந்த வேந்தன் எதிரே நிறுத்தி, கொலை புரிந்தான் என்று கூவி முறையிட்டான். "ஆண்டவா! நான் யாதொரு தீதும் செய்யவில்லை" என்று வேடன் விளம்பினன். நேர்ந்துள்ள உண்மையைச் சரியாகத் தெரியமுடியாமையால் மன்னன் மறுகினன். வேடனை அன்று சிறையில் இருத்திவிட்டு இரவில் ஆலயம் புகுந்தான். இறைவன் சந்நிதியில் நின்று உண்மை தெரிய வேண்டும் என்று உருகி வேண்டினன்.

மன்றுடும் மணியே! இம் மறவன்தான் பார்ப்பனியைக்
கொன்றனே? பிறர்பிறிதால் கொன்றதோ? இதுஅறநூல்
ஒன்றுலும் அளப்பரிதாக் கிடந்ததால்; உன்னருளால்
என்தாழ்வு கெடத்தேற்றுய்! என்றிரந்தான் அவ்வேலை. (1)

திருநகரின் புறம்பொருசார் குலவணிகத் தெருவின்கண்
ஒருமனையில் மணமுளதங்கு அந்தணனேடு ஒருங்குநீ
வருதியுனது உளந்தேரு மாற்றமெலாம் தேற்றுதும்என்று
இருவிசும்பின் அகடுகிழித்து எழுந்ததால் ஒரு வாக்கு. (2)
(திருவிளையாடல், 25)

இந்தப் பாண்டியன் ஆண்டவனிடம்போய் வேண்டியதும் அந்த இறைவன் அருள் புரிந்துள்ளதும் இதில் அறிய வந்துள்ளன. திருவருளால் எழுந்துள்ள ஆகாச வாணியால் நடந்துள்ள நிலைமைகளை அறிந்து தெளிந்தான். வேதியனுக்குப் பொருள் கொடுத்து "வேறு ஒரு மணம் முடித்துக்கொள்க" என்று அனுப்பினன். வேடனைச் சிறையிலிருந்து விடுவித்துத் தான் தெளியாமல் செய்த பிழையைப் பொறுத்தருளுக என்று உரைத்து வேண்டி அரிய பொருள்களை வழங்கி யருளினன்.

தெளியாதே யாம்இழைத்த தீத்தண்டம் பொறுத்தின
விளியாஇன் னருள்சுரந்து வேண்டுவன நனிநல்கி
அளியானு மனத்தரசன் அவனையவ னிடைச்செலுத்திக்
களியானை விழவெய்த கௌரியனைப் போய்ப்பணிவான்.

இவனுடைய நேர்மை நீர்மைகளையும் பழிக்கு அஞ்சும் பண்பாடுகளையும் இதனல் அறிந்து கொள்கிறேம்.

ஏதப்பாடு அஞ்சுபவர் தெளிவிலதனைத் தொடங்கார் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

**தெளியாத காரியத்தைச் செய்யற்க; செய்யின்**
**இளிவே அதனால் எழும்.**

எதையும் தெளிந்து தொடங்கு.

---

465. வாலிதிறம் எண்ணுமல் வந்தேனே துந்துபிதன்
கோலம் இழந்தான் குமரேசா—சால
வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு. (ரு)

இ-ள்

குமரேசா! வாலியின் வலி நிலையை உணராமல் வந்து மூண்டு பொருது ஏன் துந்துபி நொந்து மாண்டான்? எனின், வகை அறச் சூழாது எழுதல் பகைவரைப் பாத்திப் படுப்பது ஓர் ஆறு என்க.

இது, தேராமல் செய்வது தீது என்கின்றது.

செய்யும் திறங்களை முழுவதும் ஆராய்ந்து தெளியாமல் அரசன் போருக்கு எழுவது எதிரிகளை வலி பெறப் புரியும் ஒரு வழியாம்.

வகை = தரம்; திறம்; இனம்; உபாயம்.

ஒரு காரியத்தைச் செய்யநேர்ந்தபொழுது அதற்கு உரிய துறைகளையும் முறைகளையும் உபாயங்களையும் குறைவற நன்கு தேர்ந்து தெளிந்துகொள்ள வேண்டும்; அவ்வாறு தெளிந்து சென்றால் கருதிய கருமம் இனிது நிறைவேறிப் பெருமையும் இன்பமும் பெருகி வரும்; தெளியாது போனல் காரியம் கெடுவதோடு இழிவும் நேரும். பிழை நேராமல் பேணி ஒழுகுக.

மேல், தெளிவில்லாத வினையைத் தொடங்காதே என்றார்; தொடங்கினல் அரசுக்கு நேரே அழிதுயர்கள் விளையும் என இதில் அறிவுறுத்தி யுள்ளார்.

பகைவரைத் தொகையா வெல்ல வேண்டியவன் முன்னதாக அதற்கு வேண்டிய வகைகளை முழுவதும் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து தெளிந்து கொள்ள வேண்டும் என்றதனால் தெரிந்து செயல் வகையில் வேந்து வினை சிறப்பாகத் தெரிய வந்தது.

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு. (குறள், 878)

தன்னை வெல்ல வேண்டும்என்று தன்மேல் மூண்டு வருகிற பகைவரை வேந்தன் வென்று தொலைக்கும் வகையை இது நன்கு விளக்கி யுளது.

**வகைஅறச் சூழ்ந்து எழுக** என்பது இங்கே தெரிய வந்தது; **வகை அறிந்து தற்காக்க** என்பது அங்கே அறிய நின்றது. இந்த இரண்டுக்கும் உள்ள இனத்தையும் வினைத்திறன்களையும் நுனித்து உணர்ந்து கொள்க.

பாத்தி = சிறு விளை நிலப்பகுதி. பயிர்கள் செழித்து வளர்தற்கு இதமாக நிலத்தில் சிறு சிறு பகுதியாப் பகுத்து வகுத்து அணை கோலி நீர் நிலைத்து வரப் பதமா வைத்திருப்பது **பாத்தி** என வந்தது.

பாத்தியுள் நீர் சொரிந்தற்று. (குறள், 718)
கரும்பு நடு பாத்தி. (ஐங்குறுநூறு, 65)
கரும்பின் பாத்தி. (புறம், 386)

இவற்றுள் பாத்தியின் வளமையை அறிகிறோம்.

வகுத்தது வகை; பகுத்தது பாத்தி. இந்த இரு வகை நிலைகளும் தொகையாய்த் தெரிய வந்தன. வகை தெரியாமல் பகையை வெல்ல எழுவது மாறுபாடான மிகையாம். ஆறு = வழி; நெறி.

**எழுதல் ஆறு** என்றது. அந்த எழுச்சி பகைவர்க்கு வளர்ச்சியாய் வருதல் தெரிய வந்தது. யாதும் எண்ணமல் சும்மா அயர்ந்திருந்த ஒன்னார் வகையற்ற இந்த வீண் கிளர்ச்சியால் விழிப்படைந்து படைத்துணைகளைப் பெருக்கி வலியடைந்து நன்கு உயர்ந்து கொள்ளுவர்.

வகையோடு சூழ்ந்து எழுந்தவர் பகைவரை வென்று பயன்மிகப் பெறுவர்; அவ்வாறு எழாதவர் தெவ்வரை வளர்த்துவிட்டுச் சிறுமையாய்த் தேம்பி நிற்பர். நிலைமை தெரிந்து தலைமையாய் வாழுக.

உணர்ச்சியின்றி உள்ளக் கிளர்ச்சியால் போருக்கு மூண்டு எழுந்தவன் விரைந்து பொன்றி விழுவான்.

இது துந்துபி பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் மயன் என்னும் அசுர வேந்தனுடைய மகன். அதிசய ஆற்றல்களுடையவன். அச்சம் என்பதை யாதும் அறியாதவன். உடல் வலிமையிலும் அடலாண்மைகளிலும் யாரும் நிகரில்லாதவன் என்று பேரும் சீரும் பெற்றுப் பெருகியிருந்த இவன் திருமால் முதலாகத் தேவர் யாவரோடும் போராடி வெல்லலாம் என்று உள்ளம் செருக்கி ஊக்கி எழுந்து நேரே போய் நேர்ந்து அறை கூவினன். மாயவன் விநயமாய் இவனை வானவர் பால் ஏவினன். புத்தேளுலகம் புகுந்து எத்தேவரோடும் இவன் போருக்கு மூண்டு நேரே செருக்கி நின்றான். இந்திரன் தந்திரமாய் இவனை வாலி மேல் ஏவினன்.

துந்துபிப் பெயருடைச் சுடுசினத் தவுணன்மீது
இந்துவைத் தொடர்நிமிர்ந் தெழுமருப் பிணையினன்
மந்தரக் கிரியெனப் பெரியவன் மகரநீர்
சிந்திடக் கருநிறத் தரியிணைத் தேடுவான். (1)

மூலமே வீரமே மூடினை யோடுபோர்
ஏலுமே தேவர்பால் ஏகென ஏவினன்
சாலநாள் போர்செய்வா யாதியேல் சாருபோர்
வாலிபால் ஏகென வானுளோர் வானுளான். (2)

[இராமாயணம்]

மடமைச் செருக்குமண்டி வீரக் களிப்போடு இவன் போருக்குப் போயலைந்திருத்தலை இவற்றால் அறிந்து கொள்கிறோம். "உன்னுடைய வன்மை மிகவும் புன்மை என்று இகழ்ந்து வாலி உன்னைக் கேலி பண்ணுகிறான்; அவனை விரைந்து போராடி வெல்லுக" என்று வானவர்

கோன் வஞ்சமாய்க் கூறிவிடவே இவன் சீறி எழுந்து நேரே கிட்கிந்தைக்கு வந்தான். வானர வேந்தனை வலிந்து போருக்கு அழைத்தான். மதிகேடனாய் வந்து வாதாடுகின்ற இவனைக் கண்டதும் அந்த அதிசய வீரன் ஆர்த்தெழுந்தான். அடலமர் மூண்டது. உக்கிர வீர பராக்கிரமங்களோடு இருவரும் ஒருவரை ஒருவர் வெல்ல வேண்டும்என்று ஊக்கிப் போராடினர். முடிவில் இவனை அவன் கொன்று தொலைத்து வென்றி வீரோடு விளங்கி நின்றான். வீணே மூண்டு வந்த இவன் மாண்டு மடிந்தான். பலசாலிகளான அசுரர்கள் மீண்டு திரண்டு வரினும் வருவர் என்று எதிர்நோக்கி வாலி தனது வலிமைகளை வளப்படுத்திக் கிளர்ச்சியோடு வளர்ச்சியுற்றிருந்தான். வகையறச் சூழாது போருக்கு எழுவது பகைவரை நேரே பலப்படுத்துகின்ற ஒரு வழியாம் என்பதைத் தெளிவாக இவன் உணர்த்தி நின்றான்.

**வழிவகை தேரான் வலிந்துபோர் நேரின்**
**அழிவே அடைவன் அவன்.**

*ஆய்ந்து தெளியான் மாய்ந்து விழுவான்.*

---

466. நின்றுசெய்து கெட்டான் நிருகன் சமதங்கி
குன்றினர்செய் யாதேன் குமரேசா—துன்றியே
செய்தக்க வல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும். (சா)

இ-ள்.

குமரேசா! நிருகன் செய்து கெட்டான்; சமதக்கினி ஏன் செய்யாமல் கெட்டார்? எனின், செய்தக்க அல்ல செயக் கெடும்; செய்தக்க செய்யாமை யானும் கெடும் என்க.

தமது நிலைமைக்குத் தகாத செயல்களைச் செய்தாலும், தக்க வினைகளைச் செய்யாது விட்டாலும் அவர் கெடுவர்.

செயல் வகைகள் இவ்வாறு தெரிய வந்துள்ளன.

தெரிந்து செய்வது, தெரியாமல் செய்வது, தேருமல் செய்வது, மாறுபாடாய்ச் செய்வது, வேறுபடச் செய்வது, மயலாய்ச் செய்வது, மருண்டு செய்வது என இன்னவாறு கருமங்கள் மருமங்களாய் மருவியிருக்கின்றன.

செய்தக்க=செய்தற்குத் தகுதியான காரியங்களை.

செய்தக்க அல்ல=செய்யத்தக்கன அல்லாதவற்றை.

தன் தகுதிக்குத் தகாத செயல்களை ஒருவன் செய்ய நேர்ந்தால் அதனுல் அல்லலும் பழியும் நேரும்; அவ்வாறு அழிவும் இழிவும் தருகிற கருமங்களைச் செய்யலாகாது என்பதைக் குறிப்பாக இது தெளிவுறுத்தியுள்ளது. தெளிவின்றி எதையும் செய்யலாகாது.

**கெடும் கெடும்** என இரண்டிடங்களிலும் வந்துள்ள பயனிலைகளுக்கு உரிய எழுவாய்களை வருவித்துப் பூர்த்தி செய்து கொள்ளுக. இந்தச் செயல் வகைகள் எல்லாருக்கும் பொதுவாயினும் புவி ஆளும் வேந்தர்க்குச் சிறப்புரிமைகளாய் நின்றன. கேடு நேராமல் சீருடன் நாடி வினைசெய்பவனே நல்ல அரசன் ஆகிருன்.

தகாததைச் செய்தவனும் கெடுவான்; தக்கதைச் செய்யாதவனும் கெடுவான் எனத் தனித்தனியே அறிய வந்தனர்.

கெடும் என்பது செய்யும் என்னும் வினைமுற்று ஆதலால் படர்க்கை ஆண்பாலில் படிந்து நின்றது அஃறிணை வாய்பாடு அவச்செயல்களின் அவலம் தெரிய வந்தது. தெளிவான செயலே ஒளி புரிகின்றது.

கேடு அடைய யாரும் விரும்பார்; தமக்கு அது வந்துவிடலாகாது என்றே யாண்டும் அஞ்சுவர்; அந்த வேண்டாத கேடு வினைகளின் வழியே மூண்டு வருவதை ஈண்டு விழி தெரிய விளக்கி யருளினர்.

நல்ல கருமங்களைக் கருத்தோடு ஊன்றி யுணர்ந்து எவ்வழியும் திருத்தமாகச் செய்து வருபவன் ஆக்கமும் புகழும் அடைந்து கொள்ளுகிருன். தகுதியில்லாத

பொல்லாத வினைகளைச் செய்ய நேர்ந்தவுன் கேடும் பழியும் படிந்து யாண்டும் அல்லலுழந்து தாழ்கின்றான்.

தக்கவர்களைப் பக்கம் வைத்துக் கொண்டு என்றும் தகுதியான நெறிமுறைகளையே செய்யவுரிய வேந்தன் தகாதன செய்யநேரின் அது வெய்ய துயரமாய் மூண்டு அவனை நைய வருத்தும். தக்க அல்லன செய்பவரையும் தகுதியானவற்றைச் செய்யாதவரையும் தக்கபடி நாடித் தண்டிக்கவுரியவன் அரசன். அத்தகைய தலைமையுடைய அவன் தகவின்றித் தவறு செய்யின் மிக்க தெய்வ தண்டனையை அவனுக்கு அது விளைத்து விடுகின்றது.

தண்டிக்கப் படுவோர் தம்மைத்
    தண்டியாது ஒழித்து விட்டுத்
தண்டிக்கப் படாதோர் தம்மைத்
    தண்டிக்கும் தரணி மன்னன்,
எண்டிக்கும் பரந்து மூடும்
    இரும்பழி எய்தித் தீயோர்த்
தண்டிக்கும் தரும னாலே
    தண்டிக்கப் படும்பின் என்றான்.
(உத்தரகாண்டம் 13-3)

செய்யவுரியதைச் செய்யாதுவிட்டுச் செய்யத்தகாததைச் செய்யும் அரசன் இருமையும் கெட்டு எமவேதனைகளை அடைவான் என இது குறித்துள்ளது.

பகைய லாதவ ரைப்பகை யாக்கலும்,
நகையில் தீமனத் தாரை நண் பென்னலும்,
முகையின் வேய்ந்தமென் மொய்ம்மலர்க் கண்ணியாய்!
மிகையின் மற்றவை பின்னை வெதுப்புமே. (சூளாமணி)

பெரிய முயற்சி, வினைபயனைப்
    பேணு வினையே, பயன்சிறிதாம்
அரிய வினையே, பின்துயரம்
    ஆக்கும் வினையே, புரிந்தாலும்:
பெரிய முயற்சி முதலாகப்
    பேசும் வினைக்கு மறுதலையாம்
உரிய வினையை விடுத்தாலும்
    உலவாப் பெருமை ஒழியுமே. [விநாயக புராணம்]

தகாதவற்றைச் செய்தாலும் தக்கதைச் செய்யாது விட்டாலும் அரசன் கெட்டான் என்னும் இவை ஈண்டு உய்த்து உணர வுரியன.

> நெடிது பற்பகல் செல்லினும் நிரப்புவது ஒன்றை
> இடைவிடாமலே முயன்று பெற்றிடுகின்றது இயற்கை;
> உடல்வருந்தியும் தங்களால் முடிவுறுது ஒன்றை
> முடியும் ஈதெனக் கொள்வது கயவர்தம் முறையே.
>
> (கந்த புராணம்)

முடிவதை முயன்று செய்! முடியாததை மூடமாய் மூண்டு செய்யாதே என இது குறித்துள்ளது.

செய்யும் செயல்கள் வழுவின் வெய்ய துயர்களும் வீண் பழிகளும் விளைந்து நாளும் வருத்தும்.

இவ்வுண்மைகள் நிருகனிடமும், சமதக்கினி பாலும் முறையே தெரிய வந்தன.

சரிதம்.

நிருகன் என்பவன் மராட தேசத்து வேந்தன். அதிசயமான செல்வ வளங்களுடையவன். யானை குதிரை முதலிய நால்வகைச் சேனைகளும் இவனிடம் நன்கு அமைந்திருந்தன. தான் பிறந்தநாளைச் சிறந்த தெய்வத் திருநாளாக ஆண்டுதோறும் இவன் கொண்டாடி வந்தான். அந்த நாளில் பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு உண்டிகளும் உடைகளும் வழங்கி ஆயிரக் கணக்கான பசுக்களை வேதியர்களுக்குத் தானம் கொடுப்பது வழக்கமாயிருந்தது. ஒரு மறையவன் வாங்கிப் போன பசு ஒன்று மீண்டு வந்து இவனுடைய பசுநிரையில் புகுந்து கொண்டது. அதனை மறுபடியும் ஒரு வேதியனுக்கு இவன் கொடுத்து விட்டான். முன்னம் கொண்டவன் அந்த ஆவைக் கண்டு தன்னுடையது என்று வாதாடினன். இருவரும் இம் மன்னனிடம் வந்துமுறையிட்டனர். இவன் யாதும் கவனியாமல் அவரை அவமதித்திருந்தான். அவர் உள்ளம் வெறுத்துச் சபித்துப் போனர். அதனல் இவன் அல்லல்அடைந்து என்றும் வருந்தினன்.

கொற்றவன் நிருகன் கோடிகோடியாய்க் கொடுக்குங்காலை
நற்றவ மறையோனுக்கு நல்லதோர் பசுவை நல்க
மற்றது தப்பி மன்னன் மாநிரை வந்து கூட
உற்றதைஅறியான் மற்ருேர் உயர்மறையோனுக்கு ஈந்தான்.

முன்பது தானம் பெற்ற முப்புரி நூலன் கேட்டுத்
தன்பசுத் தன்னைக் காணுன் தரணியில் எங்கும் தேடிப்
பின்பது தானம் பெற்ற பெருந்தவன் மனையில் கண்டு ஈது
என்பசு என்னலோடும் இருவரும் விவாதம் பண்ணி. (2)

மன்னவன் கோயில் தன்னில் மறையவர் விரைந்து வந்து
பன்னெடுங்காலம் நின்று முறையிட்டுப் பார்த்து வேந்தன்
என்னகாரணம்நீர் வந்து முறையிட்டது? என்னக் கேளா
அன்னவன் தன்னைக் கோம்பி யாகெனச் சபித்தா ரன்றே.
(உத்தரகாண்டம்)

நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இதில் அறிந்து கொள்கிருேம், பெரிய அரசனு யிருந்தும் உரியதை ஓர்ந்து உணராமல் தகவு அல்லாததைச் சிறிது செய்தமையால் மிகவும் கேடு அடைய நேர்ந்தான்.

சமதக்கினி.

இவர் சிறந்த தவஒழுக்கங்கள் நிறைந்தவர். ஆருயிர்கள்பால் பேரருளுடையவர். பெற்ருேர்களுக்குச் சிரத்தையுடன் செய்யவுரிய சிரார்த்ததினம் வந்தது; அதற்கு உரிய உபகரணங்களுடன் பசுவின் பாலையும் ஒரு பாத்திரத்தில் வார்த்து அயலே வைத்திருந்தார். ஒரு காக்கை வந்து அந்தப் பாலைக் குடிக்க நேர்ந்தது. அதுவும் ஒரு சீவன்தானே பருகிப் போகட்டும் என்று யாதும் செய்யாமல் இவர் அமைதியாயிருந்தார். பிதிர்த்தேவதைகள் கொதித்தெழுந்தார்: ''புனிதமாய் எங்களுக்குச் செய்யவுரிய பூசையைச் சரியாகச் செய்யாமல் பிழை புரிந்து விட்டாய்; ஆதலால் நீ கீரியா யிழிந்து அலைந்து தேறி வருக'' என்று சபித்துப் போனர். அந்தச் சாபத்தின் படியே இவர் ஆபத்தை யடைந்தார். செய்யத் தகாத செயலைச் செய்தாலும் கேடு; செய்யத்தக்கதைச் செய்யாது விட்டாலும் கேடு என்பதை அந்த மன்னனும் இந்த முனிவரும் முறையே நன்கு விளக்கி நின்ருர்.

பறவைபுகுந் துண்ணுவதைப் பார்த்திருந்தும்
விலக்காமல் பரம ஞான
நிறைவுடைய முனிவருமே நிலைகுலைந்து
நேர்கெட்டார்; நெறியே நோக்கி
அறமுறையின் நிலைதெரிதல், அருள்புரிதல்,
ஆவனமுன் ஆய்ந்து செய்தல்,
திறமுடைய இவற்றிடையே சிறிதுவழு
வுறவரினும் தீங்கே யம்மா!

இதனை ஈங்கு ஊன்றி யுணர்ந்து உரிய உண்மைகளை நுண்மையாய் ஓர்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும்.

**தக்கதையே செய்க; தகாததைச் செய்யற்க;**
**ஒக்க இவற்றை யுணர்.**

உரியதை உவந்து செய்.

---

467. நின்றான் சிரகாரி நேர்ந்துதுந்து மாதெண்ணார்
குன்றினார் என்னே குமரேசா—என்றுமே
எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்ப திழுக்கு. (எ)

இ-ள்

குமரேசா! சிரகாரி எண்ணி நின்றான்; துந்தும் மாதினியும் ஏன் எண்ணாமல் இழிந்தார்? எனின், கருமம் எண்ணித் துணிக; துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு என்க.

இது, கருதி முயலுக என்கின்றது.

செய்ய வுரிய கருமத்தை முன்னதாக நன்கு ஆய்ந்து இறங்குக; மூண்டு இறங்கியபின் எண்ணுவோம் என்பது இழுக்கான குற்றமாம்.

இழுக்கு=பிழை. இழிவு தருவது இழுக்கு என வந்தது. தப்பு நேராமல் செப்பமாச் செய்க.

மனிதனுடைய வாழ்வுக்கு உறுதியாய் உதவிபுரிந்து வருவது கருமம்; அதைச் செவ்வையாகச் செய்துவரின் பொருளும் புகழும் இன்பமும் உளவாம்; செயலில்

பழுதுபடின் இழிவாம். செயல் நயமாய் உயர்ந்து திகழ்வது சிந்தனையின் தெளிவின் லேயாம்.

கருதிய காரியத்தைக் கருத்தோடு திருத்தமாய்த் தேர்ந்து தெளிந்துகொள்ள வேண்டும் என்பது எண்ணி என்றதனல் தெரிய வந்தது. எண்ணிச் செய்வது பொன்னும்; எண்ணுமல் செய்வது மண்ணும்.

நுண்ணிய கருமமும் எண்ணித் துணி. (1)

தூக்கி வினை செய். (2)

செய்வன திருந்தச் செய். (3)

சிறிய காரியம் ஆனுலும் அதனை முன்னதாகவே நன்கு ஆலோசனை செய்து தெளிந்து கொள்; முடிக்கத் தக்க உபாயங்களைத் தூக்கி நோக்கி நன்ருக ஆராய்ந்து செய்; செய்யும் கருமங்களை எவ்வழியும் திருத்தமாகச் செய் என ஔவையார் இவ்வாறு வினையாண்மைகளை விளக்கி விவேகத்தைத் துலக்கி யிருக்கிருர்.

யாதொரு கருமம் ஏனும்
எண்ணியே துணிக! என்றும்,
காதலில் துணிந்து செய்தால்
எண்ணுதல் கடன் அன்று;என்றும்,
ஓதுநூல் புலவர் சொன்ஞர்;
உமக்குள உணர்வற் றன்றே
பேதுற வடர்த்தும் பின்னை
யுருகிநீர் பிழைசெய் தீரே.
(பாரதம், சூதுபோர் 266)

இந்தக் குறளைத் தழுவி இந்தப் பாடல் வந்துளது. முன் எண்ணித் துணிக; பின் எண்ணுதல் இழுக்கு என்பது அரசகாரியம் புரிவார்க்கு மிகவும் உரிமையான போதனை ஆதலால் இதனை இவ்வாறு அவர் போற்றி யிருக்கின்றனர். ஓது நூல் புலவர் சொன்ஞர் என்று திருவள்ளுப் பெருமானை அந்தக் கவி இங்ஙனம் உரிமையோடு மதித்துத் துதித்திருக்கின்ருர்.

உரிதினின் ஒருவன் செய்த ஊழ்வினை உதயம் செய்து
விரிதலின் அதனது உண்மை விளங்கிறைற் போல வேந்தர்

கருதிய கருமச் சூழ்ச்சிப் பயத்தினுல் கருதும் வண்ணம்
எரிதிகழ்ந் திலங்கு வேலோய் எண்ணுவது எண்ணம்
[என்ருன்.
(சூளாமணி)

கருமம் பயனுறும் வண்ணம் எண்ணுவதே எண்ணம் என இது குறித்துளது. மனிதனுடைய எண்ணத்துக்கு மாட்சிமையாவது, கருமக் காட்சியைக் கருதி நோக்கித் தனக்கு இனிமையாகச் செய்து கொள்வதே யாம்.

ஆராயாமல் செய்த கருமம் தீராத துயரமாம்.

அரசனார் குமரன்கேட்க அவன்ஒரு கருமம் ஏனும்
திரமொடு விசாரி யாமல் செய்யவொண்ணுது; செய்தால்
வரமிகு கீரிதன்னை வளர்த்ததைக் கொன்று பின்னர்த்
தரணியில் மறையோன் விழ்ந்து தவித்தது போலாம்
[என்ருன்.
(பஞ்ச தந்திரம்)

எந்தக் காரியத்தையும் சிந்தித்து விசாரியாமல் செய்யலாகாது; செய்தால் மதிகேடனாய் ஒரு கீரியைக் கொன்றுவிட்டுத் துயரமடைந்த ஒரு வேதியன்போல் வேதனையடைய நேரும் என இது போதனை செய்துள்ளது. யூகமாய் வினை புரிவதே இனிய யோகமாம்.

முதலில் எண்ணி யுணர்; பின்பு வினை செய்.

கருமத்தைக் கருதிச் செய்பவர் பெருமை யுறுவர்; கருதாமல் துணிந்து புரிபவர் சிறுமை யடைவர்.

இது சிரகாரி, துந்து, மாதினிபால் அறிய நின்றது.

சரிதம்.

சிரகாரி என்பவர் தெளிந்த அறிவும் சிறந்த குண நலன்களும் நிறைந்தவர். கௌதமருடைய புதல்வர். அந்த மாதவர் சொன்ன பணியை உடனே செய்து முடிக்கும் இயல்பினர். ஒருநாள் மனைவி மீது அம் முனிவர் முனிவு கொண்டார். இவரை அழைத்தார். "அகலிகை இங்கிருந்து அகலவேண்டும்; இவளைக் கொண்டுபோய்க் கங்கா நதியில் தள்ளி விட்டு வா" என்று கட்டளையிட்டார் அதன்பின் தனியே மோனநிலை

யில் அவர் அமர்ந்திருந்தார். ஏவிய எதையும் தடை யின்றிச் செய்து வந்த இவர் இந்தப் பணியில் சிந்தை யுளைந்தார்; திகைத்து நொந்தார். நேர்ந்த கருமத்தை யாதும் செய்யாமல் எண்ணி எண்ணி இரங்கி நின்றார். அந்த நிலையில் ஐந்து தினங்கள் கழிந்தன. தந்தை விழித்தார்; கோபம் தணிந்தார். மனைவியை நினைந்தார்; அவளது பேரழகையும் பெருந்தகைமையையும் பேதைமை இயல்பையும் நினைந்து இரங்கினார். தான் சினந்து கூறியபடியே தனயன் செய்திருப்பானோ? என்று தவித்து வந்தார். வினையின் விளைவை ஆராய்ந்து கொண்டு நின்ற மைந்தனைக் கண்டார். மகிழ்ச்சிமீக் கொண்டார். "உன் பேருக்கு உரிய பொருளை யாருக்கும் தெரிய நீ விளக்கி யருளினாய்!" என்று வியந்து புகழ்ந் தார். சிரகாரி என்பதற்குக் காரியங்களை நன்கு கருதிச் செய்பவன் என்பது பொருள். தெரிந்து செய்யும் செயல் வகையில் இவர் சிறந்து விளங்குவதை அறிந்து யாவ ரும் இவரைப் புகழ்ந்து வந்தார். தந்தையும் தாயும் தானும் சுகமாய் வாழ இவரது காரிய சிந்தனை கனிந்து அருளியது. எந்தக் கருமத்தையும் அறிவுடையார் எண் ணித் துணிவர் என்பதை இவர் இழைத்துக் காட்டினார். விரிவைச் சாந்தி பருவத்தில் காண்க.

## துந்து.

இவன் அசுரர் குலத்தலைவன். அதிசயமான பேராற் றல்கள் உடையவன். எவரையும் வென்று இறுமாந்து வந்தான். தனது வலிமை தலைமைகளை நினைந்து நினைந்து நெடுஞ் செருக்கு மண்டிநின்ற இவன் முடிவில் முடிவுற மூண்டான். தத்துவதுவசன் என்னும் சூரிய குலத்து வேந்தனை வென்று கொண்டால் இந்தப் பூவுல கம் முழுவதையும் தனியே பேரரசாய் நின்று ஆளலாம் என்னும் பேராசை இவனைப் பிடர்பிடித்துத் தள்ளியது. தள்ளவே உள்ளந் துணிந்து அவன் மேல் போருக்கு இவன் ஊக்கி வந்தான். அம் மன்னன் சிறந்த வரபலன் களையுடையவன். வில்லாடலில் மிகவும் வல்லவன். அவ

னுடைய அருந்திறலாண்மைகளை யாதும் எண்ணுமல் எளிதே பொருது வெல்லலாம் என்று வீணே செருக்கி மூண்ட இவன் பின்பு பின்வாங்க முடியாமல் பேதுற்று நொந்தான். அவனுடைய வில்லாடல்களின் எதிரே இவன் எல்லா வலிமைகளையும் இழந்தான். எண்ணுதன எண்ணி இழிந்து மாண்டான். இவனை வென்று கொண்டமையால் **துந்துமாரன்** என்னும் ஒரு வெற்றிப் பேரையும் அக் கொற்றவன் நேரே பெற்று நின்ருன்.

> துந்துளனும் தானவனைச் சுடுசரத்தால் துணித்தானும்
> வந்தகுலத் திடைவந்த ரகு. (இராமாயணம்)

இவன் மூண்டு வந்து மாண்டுபட்டதை இதனுலும் அறிந்து கொள்கிருேம். எண்ணித் துணியாமையால் இவன் மண்ணுய் மடிந்து மாண்டு ஒழிந்தான்.

**மாதினி.**

இவள் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த தருமசருமன் என்னும் ஒரு வேதியன் மனைவி. அம்மறையவன் வெள்ளைக் கீரிப்பிள்ளை ஒன்றை உள்ளம் உவந்து வளர்த்து வந்தான். இவளும் பிள்ளைப்பேறு அடைந்தாள். உற்ற பிள்ளையையும், பெற்ற பிள்ளையையும் இருவரும் உரிமையுடன் பேணி வந்தனர். ஒருநாள் தன் பிள்ளையைத் தனியே படுக்கையில் கிடத்திவிட்டு தண்ணீர் கொண்டுவர இவள் அயலே போனுள். அப்பொழுது ஒரு நாகப் பாம்பு அந்தப் படுக்கையை நோக்கி வேகமாய் வந்தது. கீரி கண்டது. விரைந்து பாய்ந்து அதைக் கடித்துத் துணித்தது. அது இறந்துபட்டது. உதிரம் தோய்ந்த வாயோடு வாயிலருகே வந்து தாயை எதிர்நோக்கி அந்த வீரக் கீரி வீறுேடு நின்றது. பார்ப்பனி வந்தாள். பார்த்துப் பதறினுள்; தன் பிள்ளையையே அது கடித்துக் கொன்றிருப்பதாக மாறுபட எண்ணித் தடியால் அதனை இவள் ஓங்கி அடித்தாள். பாவம்! அது துடித்துச் செத்தது; உள்ளே புகுந்து பார்த்தாள்; பிள்ளை சுகமாயிருப்பதையும் பாம்பு துணிபட்டுக் கிடப்பதையும் கண்டு உண்மையை உணர்ந்து உள்ளம்

கலங்கி யழுதாள். பார்ப்பானும் வந்தான்; நேர்ந்துள்ள பழி பாவங்களை நினைந்து நினைந்து நெஞ்சம் பதைத்து மனைவியை வெறுத்துவிட்டுத் துறவியாய்க் காசியை நோக்கிக் கங்கையாடப் போனான். இவளும் துயர்மிக வுழந்தாள். எதையும் எண்ணிச் செய்ய வேண்டும்; எண்ணுமல் துணிந்து செய்தால் அது இருமையும் துன்பமாம் என்பதை இவள் செயலால் யாவரும் தெரிது கொண்டனர்.

பிள்ளை நகுலம் பெரும்பிறிது ஆக
எள்ளிய மனையோள் இனைந்துபின் செல்ல
வடதிசைப் பெயரும் மாமறை யாளன்
கடவ தன்றுநின் கைத்தூண் வாழ்க்கை.
(சிலப்பதிகாரம் 15)

மடமையால் கீரிப்பிள்ளையைக் கொன்ற தனது மனைவியை இகழ்ந்துவிட்டு அந்த மறையவன் வடதிசையை நோக்கிப் போயிருப்பதை இதனுல் அறிந்துகொள்கிறோம். நகுலம் = கீரி. இனைந்து = வருந்தி.

**சிந்தனை செய்து செயலில் இறங்காயேல்**
**நிந்தனை யாகும் நினை.**

கருதி வினைசெய்.

---

468. பண்டு பலர் நின்று பார்த்தும் மதன்முயன்று
கொண்டான் அழிவேன் குமரேசா—கண்டுநேர்
ஆற்றின் வருந்தா வருத்தம் பலர் நின்று
போற்றினும் பொத்துப் படும். (அ)

இ-ள்.

குமரேசா! பலர் பரிந்து பாதுகாத்து நின்றும் மன் மதன் ஏன் மயல்புரிந்து மாய்ந்தான்? எனின், ஆற்றின் வருந்தா வருத்தம் பலர் நின்று போற்றினும் பொத்துப் படும் என்க.

அயல் வழியில் முயலாதே என்கிறது.

நெறிமுறையே முயலாத முயற்சி பலபேர் ஆத

ரவாய அமைந்து நின்று நிலையாக நேரே பாதுகாப்பினும் பழுதாய் இழிவுறும்.

முன், எண்ணித் துணியாத கருமம் இழுக்குறும் என்ருர்; இதில், வழிமுறையே செய்யாதது பழுதாம் என்கிருர். நெறி தவறின் நெடிய துயரமாம்.

ஆற்றின் = நேரான வழியில். ஆறு = நெறி; ஒழுங்கு.

உரிய சாதனங்களோடு ஒரு கருமத்தைச் சரியாகச் செய்தால் அது இனிது நிறைவேறும். அவ்வாறு செய்பவரே தெரிந்து செயல் வகையில் சிறந்தவராய் உயர்ந்து திகழுவர். அங்ஙனம் செய்யாதவர் பொருளும் உழைப்பும் காலமும் வறிதே யிழந்து வெறியரா யிழிவுறுவர். தன் வழியை ஒருவன் தவறிவிடின் அவன் கருதிய ஊருக்கு நேரே போகமுடியாது; அதுபோல் வழிமுறைகளை வழுவினவன் கருமம் பழுதாய் அலமாலுறுவன்.

வருந்தா வருத்தம் என்றது முறையோடு நன்கு முயலாத முயற்சியை. உடல் வருந்தி உள்ளம் உளைந்து வருந்திச் செய்வது ஆதலால் முயற்சி வருத்தம் என வந்தது. உழைப்பு, பாடு என்பனவும் ஈண்டு இனமாய் எண்ணி உணர வுரியன.

ஒரு தொழில் எழிலோடு முடிய வேண்டுமானல் அதனை வழிவகையோடு கவனமாய்ச் செய்யவேண்டும்; அவ்வகையில் செய்யாதது எவ்வகையிலும் அவலமாம்.

வருத்தம் பொத்துப்படும்

என்றது கருமக் கேட்டைக் கருதியுணர. காரியக் கேடும் கருத்தாவின் கேடும் இதில் அறிய வந்தன. வழி முறை தெரியாமல் செய்பவன் தொழிலையும் கெடுத்துத் தானும் அழிகேடனாய் இழிந்து துயருறுவான் என்பது இங்கே வெளியாகி நின்றது.

பொய்படும் ஒன்ரே புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேல் கொளின். (குறள், 836)

செய்யும் முறைமையைச் சரியாகத் தெரியாத பேதை வினைசெய்ய நேர்ந்தால் கருமத்தையும் கெடுத்து

தானும் இழிந்து படுவான் என இது வரைந்து காட்டியுளது. கருதிச் செய்யாத காரியம் கடையாகின்றது.

பொத்துப் படும் என்று இங்கே உரைத்துள்ளார். பொய்படும் என்று அங்கே குறித்துள்ளார். வினைசெயல் வகையை நன்கு தெரிந்து முடிப்பவன் மேதை; அங்ஙனம் தெரியாமல் கெடுப்பவன் பேதை என்பது தெரிய வந்தது. புத்தி அற்றவன் பொத்தன் ஆகிறான்.

பொத்து=பழுது; பிழை; புரை; குற்றம்.

பொத்து இல் நண்பு. (புறம் 212)

பொத்த வரை. (புறம் 240)

பொத்து இன்று. (பெருங்கதை 1-34)

இவற்றுள் பொத்து உணர்த்தி நிற்றல் அறிக. பொந்து என மெல்லினம் மேவியும், பொத்தல் என அல் விகுதி பெற்றும் இதன் இனமாய் வருவன ஈங்கு எண்ணி உணர வுரியன.

உன் கருமம் ஓட்டையாய் ஒழியாமல் உய்த்துணர்ந்து செய்க. செய்யுந் துறையில் முறை தவறினால் வெய்ய துயரமாய் எவ்வழியும் வேதனைகளை விளைத்து விடும்.

சிறையில் கரும்பினைக் காத்தோம்பல் இன்னா;
உறைசேர் பழங்கூரை சேர்ந்தொழுகல் இன்னா;
முறையின்றி ஆளும் அரசின்னா; இன்னா
மறையின்றிச் செய்யும் வினை. (இன்னா நாற்பது, 6)

வேலியிழந்த பயிர், கூரை சிதைந்த மனை, நீதியில்லாத அரசு, முறையோடு சூழ்ந்து செய்யாத கருமம் பெரிய துன்பமாம் எனக் கபிலர் இவ்வாறு கூறியுள்ளார்.

மனிதனுடைய உயர்ச்சிகளுக்கெல்லாம் மூலகாரணமாயிருப்பது முயற்சியே. அத்தகைய வினையை ஆற்றின் ஆய்ந்து ஆற்றுவதே ஆன்ற அறிவுடைமையாம். கரும வீரம் என்னும் அரிய மேன்மை அதனை ஆற்றும் மருமங்களில் உரிமையாய் மருவி யுளது.

முறைதவறி முயன்றவன் இறுதி யுறுவான்.

இது மன்மதன்பால் நேரே தெரிய வந்தது.

சரிதம்.

இவன் தெய்வ மரபினன். பேரழகுடையவன். உயிரினங்களுக்குக் காம இச்சைகளை விளைவித்து நேம நியமங்களைக் கெடுத்து எவ்வழியும் வைய மையல்களை வளர்த்து வருபவன். ஐம்புலன்களை அடக்கி யாரேனும் தனியே அருந்தவம் செய்ய அமர்ந்தால் அங்கே புகுந்து இவன் குறும்புகள் செய்வான். தேவர் முதல் யாவரும் தனது ஏவல் வழியே ஒழுகி வருபவர் என இவன் இறுமாந்து நின்றான். அந்த உள்ளச் செருக்குகள் மோகன் எதிரே இவன் ஓதிய உரைகளால் உலகறிய வந்தன.

தாதவிழ்பூங் குழற்கனிவாய்த் தத்தைமொழி
முத்துநகைத் தையலார்மேல்
காதலுறப் புரிசெயலே என்வடிவாய்
அவரவர்தம் கருத்துள் தோன்றி
ஏதம்விளை விக்கும்என்றால் இரதியால்
எனதுசின்னத் தியல்பால் என்றும்
ஆதரவுற் றின்பமென்னும் அவ்வலையில்
எவ்வுலகோர் அகப்ப டாரே? (1)

ஒத்தேறும் உருவமில்லாப் பிரமம்ஒன்று
மேஒழிய, உருவம் உள்ளார்
எத்தேவ ராயினும்ஓர் பூங்கணையால்
தம்போதம் எல்லாம் நீங்கி
மத்தேறி உடைதயிர்போல் மனம்சுழன்று
செயல்மறந்து மடவார் ஆசைப்
பித்தேறி இதமுரைத்தப் பேதையர்க்கும்
பேதையராய்ப் பின்செல் வாரால். (2)

அலையேறும் வாரிசூழ் அம்புவியில்
என்னைவெல்வார் ஆரே? செந்தீ
யுலையேறு மெழுகெனமுத் தேவரும்பூங்
கணைக்காற்று துருகி வெள்ளி
மலையேறி னான்ஒருவன்; கடலேறி
னான்ஒருவன்; மறைந்து விண்ணின்
தலையேறி னான்ஒருவன்; ஆயினும்போய்
இன்னம்அங்குந் தவிர்ந்தார் கொல்லோ? (3)

வேதாவும் முகம்வெளுத்து, விண்டுவும்மார்
பகம்சிவந்து, விடைவல் லோனும்
பாதாதி கேசாந்தம் பாதியுடல்
கறுத்து, வச்ர பாணி வேந்தும்
போதாமல் முகத்திருகண் புறத்தும்ஓ
ராயிரங்கண் புகுதப் பெற்றது
ஏதால்? என் கணைதுரக்கில் ஈடுபடார்
எவரெவரே யிலக்கா காரே? (4)

வேதமுத லாகியஎண் ணெண்கலையும்
வெண்கலைமான் வியந்து கேட்க
ஓதியுணர்ந்தும் பிறருக் குரைத்துமுயர்
பெரியோர்க்கும் உள விவேகம்
காதளவும் அடர்ந்துகுழை கடந்துகுமிழ்
மறிந்துபொருங் கயலைச் சீறும்
பேதையர்கட் கணைபாயும் அவ்வளவே
யல்லாது பின்னும் உண்டோ? (5)

செங்குமுத வாயதரச் சேயிழையார்
நேயம்எவர் திறம்ப லாவார்?
அங்கவர்தம் பார்வையினல் ஆர்க்குமனம்
கரைந்துருகாது? அதுவும் அன்றி
இங்கெனது பேர்ஞாலத் தெவ்வளவுண்
டவ்வளவும் எவரே மாயக்
கங்குல்விடிந் திருள்கழித்துக் கண்ணும்விழித்
துணர்விதென்று காண வல்லார்? (6)

(மெய்ஞ்ஞான விளக்கம், 26)

தன்னுடைய அதிசய ஆற்றல்களையும் வீரப்பிர தாபங்களையும் இன்னவாறு மன்மதன் நன்னயமாய் விளம்பியிருக்கிறான். இவ்வுரைகளில் மருவியுள்ள பொருள்களைக் கருதிக்கொள்ள வேண்டும். சனகாதி முனிவர்களுக்கு ஞான உபதேசம் செய்து விட்டுச் சிவ பெருமான் தனியே மோன நிலையில் அமர்ந்திருந்தார். அந்த யோகத்தைக் கலைத்துப் பரமனை விழித்தருளச் செய்யவேண்டும் என்று பிரமன் முதலாக அமரரெல்லா ரும் ஆவல் கூர்ந்து வந்தனர். அந்தக் காரியத்தைச் செய்து அருளும்படி இவனை ஏவினர். இவனும் இசைந்து சென்றான். “ஆண்டவா! எழுந்தருள வேண்டும்” என்று

அன்புடன் வேண்டாமல் வம்பாகத் தனது அம்பை ஏவி ஞன். கண்ணுதல் கடவுள் கருதி விழித்தார்; இவன் கரிந்து மாய்ந்தான். விண்ணவர் பக்கம் நின்று பரிந்து காத்தும் எண்ணிய கருமம் முடியாமல் இவன் எரிந்து மடிந்தான். ஆற்றின் வருந்தா வருத்தம் பலர் நின்று போற்றினும் பொத்துப்படும் என்பஃதை உலகம் இவன் பால் உய்த்து உணர்ந்து வியந்து நின்றது.

**செய்யும் முறைமாறிச் செய்யினே அவ்வினை**
**வெய்ய துயராய் விழும்.**

நெறியோடு நேர்ந்து வினைசெய்.

---

469. நன்றே தனதன் நயந்துசெய்தான் ஏனவையாய்க்
குன்றி யுளைந்தான் குமரேசா—என்றுமே
நன்ருற்ற லுள்ளும் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்ருக் கடை. (கூ)

இ-ள்

குமரேசா! குபேரன் நல்லதையே தசமுகன்பால் நன்கு புரிந்தான் பின்பு ஏன் நவையுற்று நொந்தான்? எனின், அவர் அவர் பண்பு அறிந்து ஆற்ருக்கடை நன்று ஆற்றல் உள்ளும் தவறு உண்டு என்க.

இது, நன்மையும் தன்மை நோக்கிச் செய்க என் கின்றது. இனம் தவறினல் இடர் மிகுந்து விடும்.

அவரவருடைய இயல்பான குணநிலையை உணர்ந்து செய்யாதபோது நல்லது செய்வதிலும் குற்றம் உண்டாம்.

தவறு நேராதவாறு தகுதி தெரிந்து செய்வதே தக்க வினையாண்மையாம். எவ்வழியும் எதையும் எச்ச ரிக்கையுடன் இடம் தெரிந்து எதிரறிந்து செய்ய வேண் டும் என்பதை இதனல் உணர்ந்து கொள்கின்ருேம்.

தொழில் வகைகளைச் செய்ய நேர்ந்தபோதுதான் வழிதுறையோடு முறையே ஆராய்ந்து செய்ய வேண் டும். நன்மையை எங்கும் எவர்க்கும் நன்கு செய்யலாம்;

இதற்கு இடமும் இனமும் தெரிய வேண்டிய தேவை யில்லை என்பாரை நோக்கி இது தேவையாய் வந்துளது.

பிறர்க்கு இதமாய் இன்பம் தருவதை நல்லது என்றும், இடராய்த் துன்பம் புரிவதைத் தீயது என்றும் எண்ணி வருகிறோம். எவர்க்கும் இனியது ஆயினும் இனம் தெரிந்து இயல்பு அறிந்து செய்யா வழி அது தவறாய் நேரும். இனிய பாயசமும் நல்ல ஆவின்பாலும் நறுநெய்யும் சிலர்க்குப்பிடியா. அவருடைய இயல்பினை அறியாமல் அவர்க்கு அவற்றை வலிந்து வார்த்தால் பண்பு அறிந்து செய்யாத புண்பாடாய் அது புரை படிந்து மிறை விளைந்து விடும்.

பலவகை நிலையினராய் மனிதர் பரந்து விரிந்துள்ளமையால் அவர் அவர் என்று பன்மையால் குறித்தார். புறத்தே உருவங்கள் வேறுபட்டிருத்தல்போல் அகத்தே உள்ளப் பண்புகளும் மாறுபட்டிருக்கின்றன. அந்த நீர்மை நிலைமைகளைக் கூர்மையாய் ஓர்ந்தே எதையும் சீர்மையோடு செய்ய வேண்டும். இனியன உதவல், இதமொழி பகர்தல், அறிவுநலம் அருளல், முதலிய பெரிய நன்மைகளையும் தரந்தெரிந்தே தகவோடு புரிய வேண்டும்; தெரியாது புரியின் பரிதாபமே யாம்.

இயற்கைகுணம் சோதித்து முன்னே பின்னே
யாவையுமாம் பிரமம்நீ என்னல் வேண்டும்;
வியப்புறஆ சையிலுழல்வார்க் கிவ்வாறு ஓதின்
மீளாத தீநரகில் வீழ்த்த தாகும்;
தியக்குறு போகத்தாசை தீர்ந்து புந்தி
தெளிந்தவுனைப் போல்வார்க்கே திகழத்தோன்றும்
மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா
வருந்தியுந்தன் பிறப்பறுக்கும் மகனும் ஆங்கே.
(ஞானவாசிட்டம்)

இந்தப் பாசுரம் இங்கே சிந்திக்க வுரியது. பரிபக்குவத்தையும் பண்பையும் முன்னதாக ஆராய்ந்து அறிந்த பின்பே பிரம உபதேசத்தை ஒருவனுக்குப் போதிக்க வேண்டும்; தெரியாமல் போதித்தால் அது பெரிய

துயரமாய் விபரீதமே விளையும் என இது குறித்துள்ளது. குறிப்பைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

ஒரு மரத்தில் தூக்கணங் குருவி கூடுகட்டிச் சுகமாய் வாழ்ந்து வந்தது. ஒருநாள் ஒரு குரங்கு வந்து அயலே கிளையில் தங்கியிருந்தது. விடாமல் மழை பெய்தது. அதனால் அது நனைந்து நடுங்கியது. அதனைக் கண்டு குருவி இரங்கியது. பரிவோடு அறிவு கூறியது: "வானர வீரரே! உமக்குக் கை கால்கள் நன்கு அமைந்திருக்கின்றன. ஒரு குடிசை கட்டி அதில் நனையாமல் வாழலாமே!" என்று நயந்து மொழிந்தது. குரங்கு சினந்து இகழ்ந்தது; "நீ ஒரு சிறு பறவை; அற்பமான பிராணி; எனக்குப் புத்தி கூறுவதா!" என்று சீறிப் பாய்ந்து அந்தக் கூட்டைப் பிய்த்து எறிந்தது.

வானரம் மழைதனில் நனையத் தூக்கணம்
தானொரு நெறிசொலத் தாண்டிப் பிய்த்ததே!
ஞானமும் கல்வியும் நவின்ற நூல்களும்
ஈனருக்கு உரைத்திடில் இடற தாகுமே. (சிந்தாமணி)

மேலே நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இது வரைந்து காட்டியுளது. உயர்ந்த ஞானநலமும் இழிந்த ஈனர்பால் ஓதினால் இடரும் என்பது இதில் தெரிய வந்தது.

நல்லது சொல்லினும் பொல்லார்பால் அல்லலாம்.

இவ்வுண்மையைக் குபேரன் நேரே அறிந்தான்.

சரிதம்.

இவன் இயக்கர்குல வேந்தன். வியக்கத்தக்க மேன்மைகளையுடையவன். சங்கநிதி பதுமநிதி முதலிய அதிசயமான செல்வங்களுக்கெல்லாம் தனி அதிபதியாய் இவன் துதிகொண்டிருந்தான். இவனுடைய மனைவி பெயர் **சித்திரரேகை**. பேரழகுடையவள். அந்தக் குலமகளோடு இனியபோகங்களை நுகர்ந்து **அளகாபுரி** என்னும் இராசதானியில் அமர்ந்து இவன் அரசு புரிந்து வந்தான். நிறையும் நீதியும் இறைவழுவாதவன். அதனால் இறைவனும் இவன்பால் உரிமை பூண்டருளினன்.

அளகையாளி, வடதிசைச் செல்வன், இருநிதிக்கிழவன், இயக்கர் வேந்தன், அரனுடைத் தோழன், கின்னரர் பிரான் என இன்னவாறு மன்னிய புகழுடன் இவன் மருவி யிருந்தான். இலங்கை வேந்தனை இராவணன் திக்கு விசயம் செய்து வருங்கால் இவனுடைய நகரை வந்து வளைந்து போருக்கு மூண்டான். தனக்கு ஒருவகை யில் தம்பி முறையினன் ஆதலால் அவனிடம் இவன் அன்புகூர்ந்து அறிவுரைகள் கூறி ஒரு தூதுவனை அனுப்பினன். தூதன் போய் அவனை நேரே கண்டான். இவன் போதித்துவிடுத்த போதனைகளை ஆதரவோடுகூறினன்.

**குபேரன் குறித்து விடுத்த நீதிகள்.**

மூத்து ளோர்கள்சொல் முன்பிணு பின்பினி தென்னும்
வார்த்தை யுண்டது மனத்தினிற் கொண்டுயான் உரைப்ப
வார்த்தை யாகுமீது என்றுகொண் டறம்வழு வாமல்
பார்த்துச் செய்வசெய்! பழிபடு காரியம் செய்யேல்! (1)

தேவர் அந்தணர் தங்களைச் சீறிடும் தீயோர்
யாவ ராயினும் இம்மையில் கெடுவர்; மேல் மறுமைப்
பாவ காரியர் புகுந்திடும் பழியொடு புகுவார்;
ஆவ செய்குவர் அவரொடும் பகைகொளார் அறவோர். (2)

உம்பர் வானவர் ஆதியர் உனக்கிடைந்து உலகில்
தம்பம் இன்றியே தளர்ந்திடும் தன்மையும் கேட்டேன்;
வம்பு சேர்பொழில் வந்ததும் மடித்ததும் கண்டேன்;
தம்பி ஆகில்இத் தன்மைசெய் யாதொழி தக்கோய்! (3)
(உத்தரகாண்டம்)

இவ்வாறு இதமான நல்ல நயமொழிகளைத் தூதன் கூறவே அவன் சீறிச் சினந்தான்: "போருக்கு மூண்டு வந்த என்னோடு பொருது தொலையாமல் அப் பித்தன் புத்தி போதிக்க நேர்ந்தான்; நீயும் புத்திகெட்டுப்போய் வந்து அதை இங்கே புகல நேர்ந்தாய்!" என்று வெகுண்டெழுந்து வாளால் அவனை வெட்டி வீழ்த்தினன். அந்தக் கொடிய கொலை எல்லாருக்கும் நெடிய திகிலை விளைத்தது. இவன் நல்லதையே சொல்லிவிடுத்தான்; அந்தப் பொல்லாதவன் புலையாய்க் கொலை புரிந்தான். எதிர்

யின் பண்பு அறிந்து ஆற்ருக்கடை நன்று ஆற்றலுள்ளும் தவறு உண்டு என்பதை உலகம் இவனிடம் நேரே கண்டது. இவனும் மறுகி வருந்தினன்.

**நல்லகுணம் இல்லார்பால் நல்லதே செய்யினும்**
**அல்லலே யாகும் அது.**

இதமும் இயல்பு அறிந்து செய்.

---

470. எள்ள லுருமல் இயற்றென்று சாத்தகியேன்
கொள்ள மொழிந்தான் குமரேசா-உள்ளவர்கள்
எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு. (ம)

இ-ள்.

குமரேசா! இகழ்ச்சி யுருமல் வினைசெய்ய வேண்டும் என்று சாத்தகி ஏன் முன் இசைத்து நின்ருன்? எனின், தம்மொடு கொள்ளாத உலகு கொள்ளாது எள்ளாத எண்ணிச் செயல் வேண்டும் என்க.

உலகம் உவந்து கொள்ள ஒழுகு என்கிறது.

தமது நிலைமைக்குத் தகாத செயலை உலகம் விரும்பாது ஆதலால் பிறர் இகழாதபடி கருமங்களைக் கருதிச் செய்க.

தன்னை அயலார் எள்ளி இகழின் எவனும் உள்ளம் வருந்துவான். அங்ஙனம் வருந்தாமல் திருந்தி வாழும் வழியை இது வரைந்து காட்டியுள்ளது. தனது நிலைமையை உணர்ந்து ஒருவன் செம்மையாய் வாழநேரின் எவ்வழியும் அவ்வாழ்வு சீர்மையாய்ச் சிறந்து வரும்.

எள்ளுதல்=இகழுதல். இகழ்ந்து பழியாத செயல்கள் **எள்ளாத** என வந்தன. எதிர்மறைவினையாலணையும் பெயரால் இங்ஙனம் குறித்தது விதிமுறைகளைக் கருதியுணர. பிறர் இகழ்ந்து தூற்றும்படி எதையும் செய்யாதே; புகழ்ந்து போற்றி வருமாறே யாவும் செய்க. நல்லதைநாடிச் செய்துவரின் நலம்பல கூடிவருகின்றன.

உலகு என்றது உலகில் வாழ்ந்து வருகிற மாந்தரை. பொதுமக்களைப் பொதுவாக இங்ஙனம் குறித்து நிற்பினும் சிறப்பாக உயர்ந்த மேலோரையே இது உரிமையோடு உணர்த்தி வருகிறது. உயர்வு தாழ்வுகளை ஊன்றி யுணர்ந்து முறையே புகழ்ந்து கொள்ளவும். இகழ்ந்து தள்ளவும் உரியவர்கள் பெரியோர்களே.

தம் என்றது இங்கே தலைமையான அரசர் நிலைமையை.

தமது தகுதிக்குப் பொருத்தமான காரியங்களை அவர் செய்துவரின் உயர்ந்தோர் அவரை உவந்துகொள்ளுவர்; அவ்வாறு செய்யாமல் பிழைபுரிய நேரின் பேணிக்கொள்ளார். மதிநலமுடைய முதியோர் மதித்து மகிழும்படி மன்னர் விதிமுறையே ஒழுகிவர வேண்டும் என்பது ஈண்டு உணர வந்தது.

உலகம் எள்ளாத வகையில் கருமங்களைக் கருதிச் செய்தல் எல்லாருக்கும் வேண்டுமாயினும் ஈண்டு அரசர்க்குச் சிறப்பாக வேண்டி நின்றது.

தம்முடைய இடம் பொருள் ஏவல் முதலியவற்றின் வன்மை மென்மைகளை ஓர்ந்துணர்ந்து அவற்றிற்குத் தக்கவாறு வேற்று வேந்தரோடும் மாற்றாரிடமும் ஏற்ற முற ஆற்றிவரின் அரசுக்கு மாட்சிமைகள் மருவி வரும்.

வலியா ரான காலத்து வழங்க
லாதி மூன்றினையும்
மெலியா ரிடத்துச் செய்திடலும்,
மெலியாரான காலத்து
வலியார் இடத்தின் ஒறுத்தலையும்,
வகுக்கின் வேந்தர்க்கு அவைமைந்தா!
நலிவாம்; அதனல் அவரவர்பால்
நடத்து முறைதேர்ந்து இயற்றிடுக.

(விநாயக புராணம்)

தனக்கு அமைந்துள்ள நிலைமைகளை உணர்ந்து அவற்றிற்குத் தக்கவாறு அயலாரிடம் அரசன் நடந்து கொள்ள வேண்டும் என்று இளவரசனை தன் மகனுக்கு ஒரு வேந்தன் இவ்வாறு உணர்த்தி யிருக்கிறான்.

தம் ஆற்றலைப் போற்றி ஒழுகுவதே அரசர்க்கு ஏற்றமாம். எதையும் எண்ணிச் செய்வதே நல்லது.

இவ்வுண்மையைச் சாத்தகி சாற்றி நின்றான்.

சரிதம்.

இவன் யதுகுல திலகனான சத்தியகனுடைய அருமைத் திருமகன். திண்மையும் தீரமும் உண்மையும் நேர்மையும் உடையவன். கண்ணனுக்கு நெருங்கிய உறவினன். அந் நம்பிக்கு இவன் தம்பி முறையினன் ஆதலால் அந்த அண்ணன்பால் பேரன்பு பூண்டு யாண்டும் பிரியாதிருந்தான். இராமனுக்கு இலக்குவன்போல் கண்ணனுக்குச் சாத்தகி என்று இவ்வண்ணம் யாரும் உவந்துபுகழ்ந்துவர இவன் அவனுடன் வாழ்ந்து வந்தான். விசயன்பால் வில்வித்தை பயின்று தெளிந்தவன் ஆதலால் பாண்டவர்மேல் நீண்ட பாசம் இவன் நெஞ்சில் நிலைத்திருந்தது. அவர் வனவாசம் செய்து மீண்டு வந்த பின்பு தமது அரசுரிமையைப் பெற விரைந்தார். துரியோதனன்பால் கண்ணனைத் தூது அனுப்பத் தருமன் விரும்பினான். கண்ணனும் இசைந்தான். இவன் தடுத்தான். "ஏதோ ஏழைகளைப்போல் எதிரியிடம் போய் இரந்து பெறுவது என்றும் இழிவு; மகாவீரரான விசயனும் வீமனும் வேறு பல தீரர்களும் இங்கு நிறைந்திருக்கின்றனர். பகைவரைப் பொருது தொலைத்து விருது வெற்றியுடன் அரசைப் பெறுவதே பெருமையாம். எள்ளலுறும் எதையும் கொள்ளலாகாது. அருந்திறலாண்மையே அரசர்க்குப் பெருந்திரு" என்று இவ்வாறு திருந்த உரைத்து மேலும் விறலோடு விளக்கினான்.

தண்டிருந்தது இவன் கரத்தில்;
தனுவிருந்தது அவன்கரத்தில்;
வண்டிருந்த பூங்குழல்மேல்
மாசிருந்த தென இருந்தாள்;
கண்டிருந்தீர்! எல்லீரும்!
கருதலர்பால் ஊர்வேண்டி
உண்டிருந்து வாழ்வதற்கே
உரைக்கின்றீர்? உரையீரே! (1)

சண்டமுகில் உருமனைய சராசந்தன் தனக்கஞ்சி
வண்டுவரை அரணாக வடமதுரை கைவிட்ட
திண்டிறல்மா தவன்மதியோ? திகழ்தருமன் தன்மதியோ?
பண்டுமவர் கருத்தறிந்து பார்போய்வேண்டுவ தென்றான்.
(பாரதம்)

சாத்தகி உரைத்துள்ள இந்த வார்த்தைகளால் இவனுடைய உள்ளத் திண்மையையும் உறுதி நிலையையும் உணர்ச்சித் திறங்களையும் ஓர்ந்து கொள்ளுகிறோம். வலியராயுள்ளவர் மெலியவர்போல் மேவலரிடம் மேவலாகாது என்று வலியுறுத்தியுள்ளான். பிறர் எள்ளாதவாறு எதையும் எண்ணிச் செய்ய வேண்டும் என்பதை இவன் இங்ஙனம் எடுத்துக் காட்டியிருக்கிறான்.

தன்னது நிலைமையைத் தனித்து நோக்கியும்
இன்னது செய்வதால் விளையும் ஈதென
நன்னய வுணர்வுடன் நயந்து தேர்ந்தும்பின்
மன்னவர் செயல்முறை மருவல் வேண்டுமால்.

**உலகம் இகழாமல் ஓர்ந்து வினைசெய்**
**நலமாம் அரசுக்கு நன்கு**

*சீருற வினையைத் தேர்ந்து புரிக.*

---

**இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.**

1 ஊதியம் பெருகிவர ஓர்ந்து வினைசெய்.
2 தெரிந்தவர்களோடு தேர்ந்து புரிக.
3 ஆக்கம் கருதி முதலை இழக்காதே.
4 தெளிவின்றி எதையும் தொடங்காதே.
5 வகை தெரியாமல் மூண்டால் மாண்டாய்.
6 தக்கதைச் செய்; தகாததை ஒழிக.
7 ஏற்ற கருமத்தை எண்ணித் துணிக.
8 முறையே செய்யாத கருமம் புரையாம்.
9 அவரவர் இயல்பறிந்து ஆவன ஆற்றுக.
10 யாரும் எள்ளாவகை ஆய்ந்து செய்க.

47-வது தெரிந்து செயல்வகை முற்றிற்று.

---

# நாற்பத்தெட்டாவது அதிகாரம்

## வலியறிதல்.

அஃதாவது தன்னுடைய பொருள் வலி துணை வலி முதலிய நிலைமைகளைச் சீர்தூக்கி அரசன் தொழில் புரிதல். நேர்ந்த வினைகளைத் தேர்ந்து தெளிந்து செய் என்று முன்பு கூறினர்; இதில் வாய்ந்துள்ள வலிமைகளை ஓர்ந்து உணர்ந்து செய்க என்று உணர்த்துகின்றார். அதிகாரமுறைமையும் உரிமையாய் மருவிநின்றது.

471. அன்றிலங்கைக் கோன்வலியை ஆய்ந்தனுமான் [இன்றுபோர்
குன்றுமென்றேன் நின்றான் குமரேசா—என்றும்
வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல். (க)

இ-ள்

குமரேசா! இராவணன் வலியையும் தன் வலியையும் சீர்தூக்கி யுணர்ந்து அனுமான் ஏன் அமைந்து நின்றான்? எனின், வினை வலியும் தன் வலியும் மாற்றான் வலியும் துணைவலியும் தூக்கிச் செயல் என்க.

வலி அறிந்து வினை செய் என்கிறது.

தான் செய்ய நேர்ந்த கருமத்தின் நிலை தனது வலி எதிரியின் வன்மை உற்ற துணைகளின் உறுதி முதலியவற்றைக் கருதி அரசன் வினை செய்க.

எல்லா வலிகளையும் தூக்கி ஆராய்ந்து நோக்கிச் செய்யவே யாவும் ஆக்கமா யமைந்து வருகின்றன.

நான்கு வலிமைகள் பாங்குடன் ஈங்கு அறிய வந்தன.

வினை = கருமம்; காரியம்; தொழில்.

தன் என்றது வினை புரிய நேர்ந்த வேந்தனை.

மாற்றான் = பகைவன். மாறுபட்டு நின்று ஊறு விளைப்பவன் மாற்றான் என வந்தான். காரணக் குறிப்பு கருதி யுணர வந்தது. மாற்றானுக்கு இடங்கொடாமல் வினைகளை விவேகமாய் ஆற்றி வருவதே பேராற்றலாம்.

துணை = உரிமையாளராய் உதவிபுரிய நேர்ந்துள்ளவர். எவ்வழியும் துணிந்து செவ்வையாய் உடனின்று உறுதியா இதம் புரிபவர் துணைவர் என வந்தனர்.

வினை வலியை முதலில் குறித்தது அதன் தலைமை கருதி, ஒரு காரியத்தைச் செய்ய நேர்ந்த வழியே அதற்கு உரிய வலி நிலைகள் எல்லாம் சேர்ந்து எண்ண வருகின்றன. செயலில் இறங்கியபொழுதுதான் மனிதனுடைய உயர்நிலைகள் அயலே தெரிய நேர்கின்றன.

கருமத்தை அடுத்து அதனைச் செய்கின்ற கருத்தாவை நிறுத்தினர்; அந்தச் செயல் இனிது முடியாதபடி அயலே மாருய் நின்று இடையூறு புரிகின்ற மாற்ருனை அதன்பின் வைத்தார்; இருதிறத்தாருக்கும் ஆதரவாயமர்ந்து உதவி புரிகிற துணைவரை இதமா அறிய இறுதியில் இருத்தினர்.

வைப்பு முறையால் கரும நிகழ்ச்சிகள் யாவும் ஒருங்கே நுட்பமாக் கருத வந்துள்ளன.

தூக்கி என்றது யாவும் நேரே நிறுத்து நோக்கிச் சரியாக ஆராய்ந்து கொள்ளுதலை. வினை முதலிய வலிகளைக் கூர்ந்து ஓர்ந்து ஆய்ந்து தேர்ந்து தெளிந்து செய்பவனே கரும வீரனைப் பெருமை மிகப் பெறுகிருன்.

எல்லா நிலைமைகளுக்கும் இந்த ஆலோசனை சாலவும் உறுதி பயந்து நிற்றலால் சேனைகளை நடத்தும் சேனுதிபதி போல் ஈற்றில் ஆற்றலோடு நின்றது.

காரியத்தைத் தூக்கி நோக்கி ஆக்கமுறச் செய்யாதவன் தூங்கி ஏங்கி வீழ்ந்து உழல்கின்ருன்.

> தற்றூக்கித் தன்துணையும் தூக்கிப் பயன்தூக்கி
> மற்றது கொள்க மதிவல்லார்—அற்றன்றி
> யாதானும் ஒன்றுகொண்டு யாதானும் செய்தக்கால்
> யாதானும் ஆகி விடும். (பழமொழி 321)

தன்னைத் தனது துணையைப் பயனைச் சீர்தூக்கி நோக்கியே அறிவுடையார் வினை செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யாவிடின் அது பழுதாய்விடும் என முன்றுறையரையர் இங்ஙனம் குறித்திருக்கிருர்.

யாவும் கூர்மையா யுணர்ந்து சீர்மையோடு வினை செய். அதுவே சிறந்த பலனை அருளி வரும்.

வலி நிலைகளை முதலில் கூர்ந்து தேர்ந்தே ஆர்ந்த அறிவாளிகள் தொழிலில் துணிந்து இறங்குவர்.

இவ்வுண்மை அனுமான்பால் அறிய வந்தது.

சரிதம்.

கருங்கடல் கடந்து அருந்திறலாண்மையுடன் இலங்கைபுகுந்த அனுமான் கருதிய கருமங்களை முடித்துக் கொண்டு முடிவில் இராவணனை நேரே கண்டான். நெடுஞ்சினங் கொண்டான். தனது ஆண்டவனுக்கு அல்லல் இழைத்த அவனை ஒல்லையில்வென்று தொலைத்தே மீண்டு போகவேண்டும் என்று மூண்டான். மூண்டவன் உடனே சிந்திக்க நேர்ந்தான்: "அரிய திறலுடைய இவனை எளிதில் வெல்லுதல் அரிது. பெருங்கடல்போல் பொரும் படைகள் உடையான்; போராட நேர்ந்தால் நாள்கள் பல கழியும்; பிராட்டியும் பெருந்துயருறுவள்; எனது பிராண நாயகன் திங்கள் ஒன்றுள் இங்கு வரவில்லையானல் எனது பிராணன் போய்விடும்; அதன் பின் ஆண்டவன் ஈண்டு வரவேண்டியதில்லை; ஆண்டே கங்கை யாற்றங்கரையில் எனக்கு இறுதிக் கடன்களைக் கழித்துவிடச் சொல்" என்று சொன்ன அந்த உரைகளையெல்லாம் முறையே கருதினன்; உள்ளம் அடங்கினன். உறுதி சூழ்ந்து நின்றான். அந்த நிலைமை தலைமைகள் உள்ளியுணர வுரியன. அயலே வருவன காணுக.

கொல்லலாம் வலத்தனும் அல்லன்; கொற்றமும்
வெல்லலாம் தரத்தனும் அல்லன்; மேலைநாள்
அல்லெலாம திரண்டன நிறத்தன் ஆற்றலை
வெல்லலாம் இராமனல்; பிறரும் வெல்வரோ? [1]

என்னையும் வெலற்கரிது இவனுக்கு; ஈண்டிவன்
தன்னையும் வெலற்கரிது எனக்கும்; தாக்கினல்
அன்னவே காலங்கள் கழியும்; ஆதலான்
துன்னருஞ் செருத்தொழில் தொடங்கல் தூயதோ? (2)

ஏழுயர் உலகங்கள் யாவும் இன்புறப்
பாழிவன் புயங்களோடு அரக்கன் பஃறலைப்
பூழியில் புரட்டல்என் பூணிப்பாம் என
ஊழியான் விளம்பிய உரையும் ஒன்றுண்டால். (3)

இங்கொரு திங்களே இருப்பல் யானென
அங்கணு யகன் தனது ஆணை கூறிய
மங்கையும் இன்னுயிர் துறத்தல் வாய்மையால்
பொங்குவெஞ் செருவிடைப் பொழுது போக்கினுல்: (4)

ஆதலால் அமர்த்தொழில் அழகிற்று அன்றருந்
தூதனும் தன்மையே தூய்தென்று உன்னினுன்;
வேதநா யகன்தனித் துணைவன் வென்றிசால்
ஏதில்வாள் அரக்கனது இருக்கை எய்தினுன். (5)

(இராமா, சுந்தரகாண்டம்)

அனுமான் எண்ணி நின்றுள்ள உண்மைகளை இவை உணர்த்தியுள்ளன. பொருள் நிலைகளைக் கருதி அந்த உள்ளத்தின் உறுதிகளை ஓர்ந்து கொள்ள வேண்டும். வினைவலியும் தன்வலியும் மாற்றுன் வலியும் துணை வலியும் தூக்கி நோக்கியே அறிவுடையார் தொழில் புரிவர் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றுன்.

**எல்லா வலியும் எதிர்நோக்கிச் செய்வதே**
**வல்லாண்மை யாகி வரும்.**

ஆற்றலை அறிந்து ஆற்றுக.

---

472. சென்றுன் இராமனுடன் சீரறிந்தான் பானுமகன்
குன்றுதேன் வென்றுன் குமரேசா—நன்றுக
ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில். (உ)

இ-ள்

குமரேசா! ஆவதை அறிந்து சுக்கிரீவன் இராமனுடன் சென்று ஏன் அரிய வெற்றியைப் பெற்றுன்? எனின், ஒல்வது அறிவது அறிந்து அதன் கண் தங்கிச் செல்வார்க்குச் செல்லாதது இல் என்க.

கருமம் புரிபவர் கருத வுரியன காண வந்தன.

செய்யத் தக்கதையும் அறிய வுரியதையும் கருதி யுணர்ந்து உறுதியுடன் வினையில் புகுவார்க்கு முடியாத கருமம் யாதும் இல்லை.

அறிவது என்றது வினைசெய்ய நேர்ந்தவர் ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டிய உறுதிநலன்களை.

வினைத்திறன்கள் எல்லாம் விவேக விநயங்களால் விளைந்து வருகின்றன. எந்த மனிதனிடம் இவை தெளிவாக அமைந்துள்ளனவோ அந்த மனிதன் ஒளிமிகுந்து உயர்ந்து வருகிறான்; சிறந்த செல்வங்களெல்லாம் அவனிடம் விரைந்து வந்தடைகின்றன; எதையும் அவன் எளிதே முடித்துக் கொள்ளுகிறான். அத்தகைய வித்தக வினையாளரை ஈண்டு உய்த்துணர நேர்ந்துள்ளோம்.

காரியங்கள் எல்லாம் சீரிய நிலையில் அமைந்துள்ள காரணங்களால் பூரணம் அடைந்து வருகின்றன.

முன்பு தன் வலி, பகை வலி, துணை வலிகளை எண்ணி வினைசெய் என்றார்; இதில் இயல்வதை ஓர்ந்து உணர்ந்து நயமாகச் செய் என்கின்றார்.

செயல் வகைகளைத் தெளிவுறுத்தி யருளினர்.

ஒல்வது=இயல்வது; பொருந்துவது; இசைவது.

இது ஒல் என்னும் வினையடியாய்ப் பிறந்த பெயர். ஒல்லுவது என உடன்பாட்டிலும் ஒல்லாது என எதிர் மறையிலும் விதிமுறையே வரும்.

ஒல்லும் வகையான் அறவினை. (குறள், 33)

ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே. (குறள், 673)

ஒல்லும் கருமம் உடற்றுபவர். (குறள், 818)

ஒல்லுவது ஒல்லும் என்றல்
ஒல்லாது இல்என மறுத்தல். (புறம் 196)

ஒல்லா மறவர். (பெருங்கதை 1, 56)

ஒல்வ கொடாஅது ஒழிந்த பகல். (நாலடி 169)

ஒல்வது அறியும் விருந்தினன். (திரிகடுகம் 26)

இவற்றுள் ஒல்வது உணர்த்தி நிற்பதை உணர்கின்றோம். இயல்வதை எண்ணி முயல்வதே உயர்வாம்.

ஒல்வதை அறிந்து, அறிவதை அறிந்து என்று தனித் தனி அறிக. தன் தகுதிக்கு ஏற்பத் தான் செய்யவுரிய காரியத்தை முதலில் ஒருவன் ஓர்ந்து உணர்ந்துகொள்ள வேண்டும்; அதன் பின்பு அதனைச் செய்து முடிக்கும் துறைகளையும் முறைகளையும் தேர்ந்து தெளிய வேண்டும்; இவ்வாறு ஓர்ந்து உணர்ந்து தேர்ந்து தெளிந்து கொண்ட பின் கருதிய கருமத்தில் உறுதி பூண்டு உள்ளம் துணிந்து ஊக்கிச் செல்ல வேண்டும்; இங்ஙனம் செல்பவன் காரியசித்திபெற்று வீரியமாய் விளங்கி நிற்பன். அந்த வெற்றி நிலையை உய்த்துணர இதில் உணர்த்தியுள்ளார்.

செல்லாதது இல் என்றது எல்லாம் அவனுக்கு இனமாக நேரே செல்லும் என்பது நன்கு தெரிய நின்றது.

தான் செய்ய மூண்ட கருமத்தைப் பலமுறையும் மருமமாகத் தேர்ந்து தெளிந்து கொள்பவன் சீரிய வினையாளனாய்ச் சிறந்த அறிவாளியாய் உயர்ந்து விளங்குகிறான். அவனுக்குக் காரியசித்தி யுண்டாகிறது.

இவ்வுண்மை சுக்கிரீவன் பால் தெரிய நின்றது.

சரிதம்.

வானர குலவீரனான இவன் வாலிக்குப் பயந்து நீண்ட காலமாக மறைந்து ஒதுங்கியிருந்தான். அவ்வாறு இருந்து வருங்கால் இடையே இராமனைக் கண்டான். நட்புக் கொண்டான். அந்தக் கோமகனுடைய அருந்திறலாண்மைகளையும் பெருந்தகைமைகளையும் இவன் நன்கு தெரிந்தான். தெரியவே அவ்வீரக் குரிசிலைக்கொண்டு தன் பகைவனை வென்று தொலைக்க விரும்பினான். மதிமானான அனுமானுடன் கலந்து ஆலோசித்து உற்ற துணைகளோடு நேரே பகைமேல் சென்றான். செல்லுங்கால் இராமனுடைய வீரத்திறல்களைத் தெளிவாகத் தெரிய அவாவினான். மாருதி மருமமாய்க் குறிப்

பித்தான். அதிசய நிலைகளால வழியிடையே நெடிது நீண்டு நின்ற மராமரங்களுள் ஒன்றை இராமன் எய்ய வேண்டும் என்று இவன் பைய வேண்டினன். இவனது குறிப்பை அறிந்து கோதண்ட வீரன் புன்னகை புரிந்தான். வானுற ஓங்கி வளர்ந்து தெய்வீகமாய்ச் செழித்துக் கிளைத்துத் தழைத்துத் தறுகண்மையோடு நிற்கின்ற அம் மரங்களை நெருங்கினன். வீரப் பகழியை வில்லில் பூட்டி அவ்வீர மூர்த்தி வீரகம்பீரமாய் நின்ற நிலையைக் கண்டு வானர வீரர்கள் யாவரும் அயலே வியந்து நின்றார். எய்த இராமபாணம் ஏழையும் ஊடுருவி ஓடியது.

எய்தல் காண்டும்கொல் இன்னம்என் றரிதின்வந் தெய்திப்
பொய்யில் மாருதி முதலினோர் புகழ்வுறும் பொழுதில்
மொய்கொள் வார்சிலை நாணினை முறையுற வாங்கி
வெய்ய வாளியை யாளுடை வில்லியும் விட்டான். (1)

ஏழு மாமரம் உருவிக்கீழ் உலகமென் றிசைக்கும்
ஏழும் ஊடுபுக் குருவிப்பின் உடனடுத் தியன்ற
ஏழி லாமையால் மீண்டதவ் விராகவன் பகழி
ஏழு கண்டபின் உருவுமால் ஒழிவதன் றின்னும். (2)

ஏழுவேலையும் உலகமே லுயர்ந்தன ஏழும்
ஏழு குன்றமும் இருடிகள் எழுவரும் புரவி
ஏழும் மங்கையர் எழுவரும் நடுங்கின என்ப
ஏழு பெற்றதோ இக்கணைக்கு இலக்கம் என்றெண்ணி. (3)

(இராமா, மராமரம்)

நேர்ந்துள்ள நிலைகளை ஓர்ந்து உணர்பவர் உள்ளம் வியந்து நிற்பர். இந்த அற்புத வீரத்திறலைக் கண்டதும் சுக்கிரீவன் அதிசய பரவசனாய் இராமனைத் துதிசெய்து தொழுதான். பின்பு வினைமேல் விரைந்து போனான். உரிய துணையால் அரிய பகையை வென்று பெரிய அரச திருவைப் பெற்றான். ஒல்வதை ஓர்ந்து அறிவதை ஆய்ந்து உறுதி ஊக்கங்கள் தோய்ந்து செறிவோடு செருமேல் சென்றால் காரியம் சித்தியாம்; வீரிய வெற்றியுடன் விளங்கி வியன் புகழ் பெற்று நிற்கலாம் என்பதை இவன் நன்கு விளக்கி நின்றான்.

**செய்ய வுரியதைச் சீர்தூக்கிச் செய்பவர்**
**எய்துவர் யாவும் எளிது.**

இயல்வதை எண்ணிச் செய்.

---

173. திண்டோட் சலந்தரனும் தென்னிலங்கை மன்னவனும்
கொண்டிடை யேன்நொந்தார் குமரேசா—கொண்ட
உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர். (ரு)

இ-ள்

குமரேசா! தன் வலியை உணராமல் சலந்தரனும் இராவணனும் ஊக்கி மூண்டு ஏன் ஊறுபட்டார்? எனின், உடைத்தம் வலி அறியார் ஊக்கத்தின் ஊக்கி இடைக்கண் முரிந்தார் பலர் என்க.

மடமையாய் மூண்டவர் மடிவர் என்கிறது.

தம்முடைய வலி நிலையை அறியாமல் உள்ளக் கிளர்ச்சியால் வினை செய்ய மூண்டு இடையே தளர்ந்து பலர் கெட்டுள்ளார்.

முரிந்தார் = நிலை குலைந்து கெட்டார்.

முரிதல் = ஒடிதல்; கெடுதல்; தோல்வியடைதல்.

அமைந்துள்ள நிலைமைகளை அறிவோடு ஆராய்ந்து எதையும் சீர்தூக்கி நோக்கிச் சீர்மையாய்த் தொழில் செய்ய நேர்ந்தவரே கருதிய கருமங்களை வழுவற முடித்து உறுதியுடன் பலன்களை யடைந்து ஒளிமிகுந்து வருகின்றார். அவ்வாறு செய்யாதவர் எவ்வழியும் இடறடைந்து இழிந்து படுகின்றார்.

உன் வலியை முன்னதாக அறி; ஒல்வதை ஓர்ந்து உணர்; உரிமையுடன் வினையை உறுதியாய்ச் செய்; அச் செயல் உனக்கு உயர்நலங்களை ஒருங்கே அருளும் என்று முன்னம் குறித்தார்; அன்னவாறு ஆற்றுவழி அவலக் கேடுகள் உளவாம் என இதில் உணர்த்தியுள்ளார். தகவாய் அறிந்து தக்கதையே ஆற்றுக.

எண்ணியன எண்ணியாங் கெய்தித் திண்ணிய ராய்ப் பயன் பெறுவார் சிலரே; அவ்வண்ணம் எய்தா மல் ஏமாந்து இழிந்து கெடுபவர் பலர் ஆதலால் பன் மைப் பாலால் உரைத்தார்.

வலியறிந்து வினை செய்க; அறியாமல் யாதும் செய்யாதே. செய்தால் சிதைவு நேரும்.

இடைக்கண் என்றது கேடு அடையும் இடந்தெரிய நின்றது. முதலில் தெளிவா யறியாதவர் முடிவை நேரே அறியாமல் இடையில் அழிகின்ருர்.

அறிய வுரியதை ஆய்ந்து பாராமல், ஆர்வத்தால் தொழில் புரிய மூண்டு, அதைச் சரியாக முடிக்க மாட் டாமல் சரிந்துநின்று கைப்பொருளையிழந்து கடன்பட்டு மனமுடைந்து இடையே மடிபவரது பரிதாப நிலையை இது பரிந்து குறித்துள்ளது.

கடமையை உணர்ந்து கருமம் புரியாதவர் மடமை யாளராகின்ருர். உற்றவலிகளை உய்த்துணர்ந்து உறுதி தெரிந்து திடமாய் வினைசெய்ய நேர்வது அரசர் கடமை யாம். பொருள் செய்யும் கருமத்துடன் போர் புரியும் கருமமும் அவர்க்கு உரிமையாய் நின்றது.

வெற்றி நேரே கிடைக்கும் என்று தெளிவாய்த் தெரிந்தாலொழிய அவர் போரில் இறங்கலாகாது. தம்மினும் மிக்க ஆற்றலுடையாரோடு மாறுபட்டுப் போராட நேர்ந்தால் அது பெரிய புலையாட்டமாய்த் தோல்வியும் துயரங்களுமே காட்டிவிடும்.

ஆமாலோ என்று பெரியாரை முன்னின்று
தாமாச் சிறியார் தறுகண்மை செய்தொழுகல்
போமாறு அறியா புலன்மயங்கி ஊர்புக்குச்
சாமாகண் காணுத வாறு. (பழமொழி 233)

பெரிய வலியுடையாரோடு சிறிய வலியினர் உள்ளச் செருக்கால் ஊக்கிச் செருச் செய்ய நேரின் ஊருக்குள் வந்து அகப்பட்ட சிறுத்தைப்புலிபோல் தியங்கி மயங்கி அவர் சாவர் என முன்றுறையரையர் இங்ஙனம் குறித் திருக்கிருர். வலிய புலியும் நிலைமாறினுல் நலிவாம்.

முரிந்தார் என்ற சொல் போரில் இரிந்தாரையே பெரும்பாலும் குறித்து வரும்; ஆகவே போர் வினையே ஈண்டு நேர்வினையாய்த் தெரிய நின்றது.

மன்முரி குவவுத் திண்டோள் வாசவன் பேரன் தன்னோடு
அன்முரி இரவி மைந்தன் அருஞ்சமர் விளைத்த காலைச்
சென்முரிந் தென்ன ஏறு தேர்முரிந்து எடுத்த வாகை
வின்முரிந்து உள்ளம் தானும் மிகமுரிந்து உடைந்து
[மீண்டான்.
(பாரதம், 13-ம் போர்)

அபிமன்னனோடு போராட மூண்ட கன்னன் மீண்டு உடைந்துபோன நிலையை இது உரைத்துளது. ஆறு முரிதல்கள் இதில் ஏறியிருக்கின்றன. பொருள் நிலைகளைக் கருதிக் கொள்க.

வினையின் வலியா திகள்நான்கும்
வேறு வேறு சீர்தூக்கி
நினது வலிமிக் குழிவினையை
நிகழ்த்து! நிகர்த்த காலத்துப்
புனையும் வென்றி யுருஇழுக்கும்
பொருந்தும்; அதனால் அவ்விடத்து
வினையும் தோல்வி யுறும்; குறைந்த
விடத்தும் வினையை எண்ணற்க.
(விநாயக புராணம்)

கருமம் கருத்தா முதலிய நிலைமைகளைத் தனித்தனி நுனித்து நோக்கி யாண்டும் காரியசித்தி யுண்டாகும் படி கருதி வினை செய்! செய்நிலை தெரியாமல் வீணே துணிந்து செய்யாதே; செய்தால் அல்லல்களே விளைந்து விடும் என இது விளக்கி யுள்ளது.

தம் ஆற்றலை அறிந்துகொள்ளாமல் அடங்கொண்டு வினைபுரிய மூண்டவர் இடர்மிக அடைந்து படர்மிக வுழந்து பரிதாபமாய் இழிந்து படுவர்.

இவ் வுண்மை சலந்தரன் பாலும், இலங்கை வேந்தனிடமும் தெளிவாய் நேரே தெரிய வந்தது.

சரிதம்.

இவன் ஒரு சிறந்த அசுர வேந்தன். அருந்திறலாண்மைகள் அமைந்தவன். பிருந்தை என்னும் பேரழகியை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து பெரிய புகழோடு இவன் உயர்ந்திருந்தான். சலந்தரபுரி என்னும் நகரில் அமர்ந்து எங்கும் ஆட்சி புரிந்து தேவர் யாவரையும் ஒருங்கே வென்று போராற்றலில் யாரும் தனக்கு நிகர் இல்லை என்று பேராற்றலோடு இவன் பெருஞ் செருக்கு மண்டி நின்றான். திருமால் அயன் முதலாக எவரும் தன்னோடு பொரவுரியர் அல்லர் என்று எள்ளி யிகழ்ந்து விட்டு முடிவில் வெள்ளியங்கிரி வாசனையே வெல்ல வேண்டும் என வீறுகொண்டு மூண்டு வந்தான். கண்ணுதல் பரமன் புன்னகை புரிந்து ஒரு முனிவன்போல் இவன் எதிரே தோன்றி நீ யார்? உனக்கு என்ன வேண்டும்? என்று நன்னயமாய் வினவினான். உள்ளம் துணிந்து வந்ததை யாதும் ஒளியாமல் இவன் ஓதி நின்றான். அந்த மூல முதல் தன் காலின் பெரு விரலால் தரையில் வட்டமாகக் கீறினார்; கீறவே சிறிய மண்தகடு மேலே எழுந்தது. மெல்லிய இந்த மண்வளையத்தை நீ தூக்கி எடுத்தால் பரமனையும் நீ வென்றபடியாம் என்றார். உடனே அதனை இவன் எளிதா எண்ணி எடுத்தான். அது சக்கராயுதமாய் இவனது உடலைப் பிளந்து தள்ளியது. இவன் மூண்டு வந்ததும் மாண்டு பட்டதும் அதிசயக் காட்சியாய்த் தெரிய நின்றன. அயலேவருவன காணுக.

எங்குளை? யாரை நீ? எவரை நாடியே
இங்குறு கின்றனை! இயம்பு வாயென
அங்கணன் மொழிதலும் அந்தண் வேதிய!
சங்கைய தில்லைகை சாற்றக் கேள்என்றான். [1]

நிலந்தனில் உற்றுளேன் நேமி காதலன்
சலந்தரன் என்பவன் தமியன் வானவர்
உலைந்திட நுதல்விழி ஒருவன் தன்னுடன்
மலைந்திட வந்தனன் வல்லை யீண்டென்றான். (2)

என்றிவை சலந்தரன் இசைப்ப யாமுமுன்
வன்றிறல் காணிய வந்தனம் எனுத்
தன்றிரு வடியினல் தரணி யின்மிசை
ஒன்ெருரு திகிரியை ஒல்லே கீறினன். (5)

புரத்தழல் கொளுவியோன் பொறித்த நேமியைக்
கரத்திடை எடுத்தனன் கனங்கொண் டெய்தலின்
உரத்திடைப் புயத்திடை உயிர்த்துத் தாங்கியே
சிரத்திடை வைத்தனன் தேவர் ஆர்க்கவே. (4)

செழுஞ்சுடர்ப் பரிதியைச் சென்னி கோடலால்
ஒழிந்திடு சலந்தரன் உச்சி யேமுதல்
கிழிந்தது முழுதுடல் கிளர்ந்து சோரிநீர்
இழிந்தது புவிதனில் இழுமென் ஓசையால். (5)
(கந்த புராணம், ததீசி:)

இவன் அழிந்துபட்டுள்ள நிலேகளே இவை வரைந்து காட்டியுள்ளன. உறுவலி தெரியாமல் உள்ளத்தின் ஊக்கி வினேமேல் முனேந்தவர் இடைமுரிந்து இழிந்து அழிவர் என்பதை இவன் தெளிவாய் விளக்கி நின்ருன்.

### இலங்கை வேந்தன்.

மூவுலகங்களுக்கும் தலேவனுய் யாண்டும் கலங்காது முடிமன்னனுய் விளங்கியிருந்த இவ்வீரன் திக்குவிசயம் செய்து தேவர் கந்தருவர் விஞ்சையர் அசுரர் முதலிய யாவரையும் வென்று அதிசய வெற்றி வீறுடன் வெறி யேறி நின்ருன். அந்த நிலேயில் அமைதியுருமல் ஈசன் வாசமாயுள்ள கைலாசகிரியையும் எடுக்க முயன்ருன். வெள்ளிமலேயை இவன் அள்ளி எடுக்கவே இறைவன் எள்ளி மிதித்து நுனி விரலால் அழுத்தினன். ஆலேயில் சிக்கிய கரும்புபோல் இவன் அலமந்து கதறினன்.

காயவரை யாலேமிசை ஆய்பவர்
அமுக்கிய கரும்ப தெனவே
சேயுயர் விசும்பும் நிலனும் திரைக
ளும் திசைக ளோடுதிர் தர
வாயொரு பதுங்குருதி பொங்கிட
வயங்கு வருடங்க ளவையோர்

ஆயிரம் விலங்கலுள் அடங்கினன்
முடங்கி யலம்வந்து அலறினன்.
(இராமா, வரை 72)

இராவணன் ஊக்கிவந்து வரையைத்தூக்கி இடைக் கண் முரிந்து இழிந்து கிடந்தலை இதில் அறிந்துகொள் கிறோம். உடைத்தம் வலியை அறியாமல் உள்ளம் செருக்கி முனைபவர் எள்ளலடைந்து இழிவர் என்பதை உலகம் இவரிடம் தெளிந்து நின்றது.

**வலிநிலையை ஓராமல் வன்செருக்கால் மூண்டார்**
**நலிவடைந்து வீழ்வர்கீழ் நைந்து.**

வன்மையை ஓர்ந்து தன்மையாய் வாழ்.

---

474. வென்றிவலன் தன்னை வியந்தெழுந்தான் ஏனுடனே
குன்றி யழிந்தான் குமரேசா—என்றும்
அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும். (ச)

இ-ள்

குமரேசா! தன்னை வியந்து தருக்கி எழுந்த வலன் ஏன் இன்னலடைந்து இழிந்து அழிந்தான்? எனின், அமைந்து ஆங்கு ஒழுகான் அளவு அறியான் தன்னை வியந்தான் விரைந்து கெடும் என்க.

கேட்டுக்கு உரிய குறிகளை இது காட்டியுளது.

தனக்கு அமைந்துள்ள நிலைக்குத் தக்கபடி நடவாத னும், வலி அளவை அறியாதவனும், தன்னைப் புகழ்ந்து தருக்குபவனும் விரைவில் அழிவான்.

மனிதன் அடைகிற நிலைகளுக்கெல்லாம் அவனு டைய செயல் இயல்களே மூலகாரணங்களாயுள்ளன. ஆக்கமுடைய நிலைகளை ஆக்கிக் கொள்பவன் பாக்கிய வானுகிறன்; கேடான வழிகளைக் கிளர்ந்து கொள்பவன் பீடை படிந்து இழிந்துபடுகிறன்.

ஒழுகாமை, அறியாமை, அடங்காமை என மூன்று மடமைகள் இங்கே தெரியவந்துள்ளன. இவை கேட்டின்

அடையாளங்கள் என்று காட்டியிருக்கிருர். அறிவுக் காட்சியில் நெறி நியமங்கள் மருமமாய் மருவியிருக் கின்றன. வாழ்வு இனிதாய் வர வழிதெரிய வந்துளது.

அமைந்து ஒழுகு; அளவை அறி; அடங்கி யிரு.

இந்த நன்மைகளைத் தழுவி நீ ஒழுகி வந்தால் எவ் வழியும் நல்லவனுய் உயர்ந்து செல்வம் கீர்த்தி முதலிய சீர்மைகளில் சிறந்து திகழ்வாய். இவற்றிற்கு மாறு பாடாய் வேறுபட நேரின் அழிதுயரங்கள் நேரும்.

ஒழுகல் காயத்தின் தொழில்; அறிதல் மனத்தின் செயல்; வியத்தல் வாக்கின் வினை. செயலும் சொல் லும் நினைப்பின் வழியே நிகழ்வன ஆதலால் மனத்தின் முன்னும் பின்னும் முறையே அவை மருவி நின்றன.

மனம் மொழி மெய்கள் நெறிமுறையே ஒழுகின் அந்த மனிதன் இனியவனுய் இன்பம்மிகப் பெறுகிருன். நெறி தவற நேரின் நெடிய கேடுகள் நீண்டு கொடிய துயரங்கள் மூண்டு தோன்றுகின்றன.

அகந்தையான செருக்கு அவலக்கேடுகளைப் பெருக்கி விடுகிறது. செல்வத்தில் சிறந்தவன், கல்வியில் உயர்ந் தவன், வலிமையில் மிகுந்தவன் என்று இன்னவாறு தன்னை மேலாக வியந்து தருக்கிப் புகழ்ந்து விரிந்து நிற்பவனை எவரும் கறுத்து வெறுத்து இகழ்வர்.

ஒருவனுடைய வியனை செருக்கு அயலே வெறுப் பை விளைத்து வருதலால் அவன் விரைந்து கெட நேர் கின்ருன். அகந்தை அழிவின் அறிகுறி.

பெரியார்முன் தன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழும்—தெரியாய்கொல்
பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து. (நன்னெறி 37)

வியந்து நின்றமையால் விந்தமலை இழிந்து தாழ்ந் தது; அதனை அறிந்தும் திருந்தாமல் தன்னை வியந்து தருக்கி மனிதன் கெடுவது மடமையாம் என இது குறித் துள்ளது. மலைபோல்பவரும் மமதையுறின் நிலைகுலைவர்.

நாம்பெரியர் என்னுமதை நாடா தடக்குமவர்
தாம்பெரியர் என்றுமறை சாற்றியிடும்—நாம்பெரியர்
என்பார் சிறியர்; இவரலா திவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல். (சிவபோகசாரம்)

தன்னைப் பெருமையா வியவாதவனே பெருமேன்மையை அடைகிறான்; வியந்து பேசுபவன் சிறுமையாய் இழிவுறுகிறான் என இது தெளிவுறுத்தியுள்ளது.

விலக்கிய ஓம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினையும் தீதே—புலப்பகையை
வென்றனம் நல்லொழுக்கில் நின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மிற் கொளின். (நீதிநெறி விளக்கம் 18)

தான் சிறந்த ஒழுக்கம் உடையவன்; உயர்ந்த நீதிமான் என்று தன்னை வியந்து தனக்குள்ளேயே ஒருவன் எண்ணினாலும் தீமையாம் என இது உணர்த்தியுளது.

செந்நெறி நோக்கி அமைந்தாங்
கொழுகான் அளவறி கில்லான்
தன்னை வியந்தான் விரைந்து
கெடுமெனல் சத்தியம் கண்டாம்
மன்னிய மேரு வரையோடு
இகலி வளர்ந்தெழு விந்தம்
முன்னுள தோற்றமும் வீறும்
முழுதும் இழந்தது மன்னோ. (காஞ்சிப்புராணம்)

இந்தக் குறளை முழுதும் தழுவி ஓர் உவமையை நேரே எடுத்துக் காட்டி இது நயமாய் விளக்கியுள்ளது.

வியவற்க எஞ்ஞான்றும் தன்னை. (குறள், 439)

உன்னை வியவாதே என்று இன்னவாறு முன்னமும் குறித்திருப்பது ஈண்டு உன்னி உணர வுரியது.

ஒழுகான் கெடும்; அறியான் கெடும்; வியந்தான் கெடும் எனத் தனித்தனி நோக்கினும் சாலும். இவற்றுள் ஒன்றே ஒருவனுடைய கேட்டுக்குப் போதுமானது. மூன்றும் சேர்ந்தால் நெடிய கேடுகள் கடிது விளையும்.

உன்னை நீ வியந்து துள்ளினால் உலகம் என்னி

இகழ்ந்து தள்ளும்; வியவாது விநயமுடன் ஒழுகின் யாவரும் வியந்து நயந்து புகழ்ந்து போற்றுவர்.

தன்னை உயர்வாக நினைந்து வியந்து தருக்கி விரிந்து நின்றவன் இன்னலுழந்து இழிந்து அழிவான்.

இவ்வுண்மை வலன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் தானவர் தலைவன். சிறந்த வரபலங்களை அடைந்தவன். நேரலர் யாரும் நேரில் வந்து போரில் வெல்ல முடியாது என்னும் புகழை இவன் பொருந்தியிருந்தான். செல்வம் அதிகாரம் ஆண்மை ஆற்றல் முதலிய நிலைகளில் தலைசிறந்திருந்தமையால் எவரையும் யாதும் மதியாமல் யாண்டும் பெருமிதமாய் இவன் பெருகி நின்றான். வானவர் பலரும் தனக்கு ஏவல்புரிய வலிந்து நலிந்துவந்த இவனை வானவர்கோன் பலமுறையும் வெல்ல முயன்றான்; முயன்றும் யாதும் பலியாமல் மறுகி நின்றான். எங்கும் தன்னையே வியந்து எவ்வழியும் தற்புகழ்ச்சியில் களித்துச் செழித்திருந்த இவனை அந்த வழியிலேயே வெல்ல வேண்டும் என்று இந்திரன் தந்திரமாய் வந்தான். சாதுரிய சாகசமாய்ப் பேசினான்: "உமது பேராற்றலையும் போராற்றலையும் வியந்தேன்; உயர்ந்த பரிசில் ஒன்றை உமக்குத் தர விழைந்து வந்தேன்" என்று அவன் விநயமாய் மொழிந்து நின்றான். வாசவன் உரைத்த அந்த வாசகங்களைக் கேட்டு இவன் நகைத்தான். இகழ்ச்சிக் குறிப்போடு சிரித்தவன் தன்னை வியனு விளக்கித் தனது மேன்மைகளை உரைத்தான்.

"ஈறிலான் அளித்த நல்ல
வரம் எனக்கு இருக்க நின்பால்
வேறுநான் பெறுவ துண்டோ?
வேண்டுவது உனக்கு யாது? என்பால்
கூறுநீ அதனை இன்னே
கொடுக்கலேன் ஆகில் நின்போல்
பாறுவீழ் களத்தில் தோற்ற
பழிப்புகழ் பெறுவன் என்றான்:"

மாதண்ட அவுணன் மாற்றம்
மகபதி கேட்டு உவந்து
கோதண்டம் மேருக் கோட்டிக்
கொடும்புரம் பொடித்தான் வெள்ளி
வேதண்டம் எய்தி ஆங்கோர்
வேள்வியான் புரிவ னுனைப்
போதண்டர்க்கு ஊட்ட ஆவாய்ப்
போதுவாய் வல்லை என்ருன். (2)
(திருவிளையாடல் 17)

நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இவற்ருல் அறிந்து கொள்கிருேம். தன்னை வியந்து மிகவும் பெருமிதமாகத் தானவர் கோன் கூறவே இவன் வாய்மொழிப்படியே வானவர் தலைவன் இவனை வசப்படுத்தி யாகப்பசுவா அழைத்துச் சென்ருன். அங்கே இவன் அழிந்துபட்டான். அமைந்து ஒழுகான்; அளவு அறியான்; தன்னை வியந் தான் விரைந்து கெடும் என்பதை விண்ணும் மண்ணும் அறிய இவன் நன்கு விளக்கி நின்ருன்.

**உரிய நிலையை உணர்ந்தடங்கி வாழ்வான்**
**பெரிய மகிமை பெறும்.**

அமைதியாய் அடங்கி ஒழுகுக.

---

475. பூசுரர்பெய் கைநீர்க்கும் போர்வலஞ்சேர் மந்தேகர்
கூசிநின்ருர் என்னே குமரேசா—தூசணைய
பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின். (ரு)

இ-ள்.

குமரேசா! போர்வலி மிகுந்த மந்தேகரும் நேரே பூசுரர்கள் பெய்த கைநீர் ஏற ஏன் அஞ்சி அழிந்தார்? எனின், பீலி பெய் சாகாடும் அப் பண்டம் சால மிகுத்துப் பெயின் அச்சு இறும் என்க.

வலியின் அளவை வகுத்துக் காட்டுகிறது.

மெல்லிய மயில் தோகைகளைப் பரப்பிய சகடமும் அச்சரக்கை மிகவும் அதிகமாக ஏற்றினால் அதன் அச்சு ஒடியும். இறும்=இற்று ஒழியும்.

அளவோடு யாதும் அமைந்துவர வேண்டும்; அளவு மீறினால் அங்கே பழுது நேரும் என்பதை இது தெளிவா விளக்கியுளது. எடுத்துக்காட்டாக நேர்ந்தது ஓர்ந்து உணர்ந்து தேர்ந்து தெளிந்து கொள்ள வந்தது.

பீலி=மயிலின் தோகை.

பறவைகளுள் மயிலுக்கு வால் வளமாய் வாய்ந்துள்ளது. அழகுடன் தொகுதியாய் அமைந்திருத்தலால் **தோகை** என நேர்ந்தது. தன் தோகையை விரித்து மயில் உவந்து ஆடுவதை எவரும் வியந்து காணுவர். அது முதிர்ந்தபோது தானகவே கீழே உதிர்ந்துவிடும். மலைச் சாரல்களிலும் காடுகளிலும் உதிர்ந்துகிடக்கிற தோகைகளை வேடர்கள் தொகுத்துச் சேர்த்து விலைப்படுத்துவர். அவற்றை வண்டிகளில் ஏற்றி அயலே கொண்டுபோகும் அளவு இந்நாடு பண்டு வளமாயிருந்தது. அவ்வுண்மையை இங்கே கண்டு கொள்கிறோம். ஆலவட்டம் விசிறி முதலியன பீலியால் செய்யப்படும்.

பீலி மஞ்ஞை. (சிலப்பதிகாரம் 2-53)

வரையிட்ட வயங்குத்தார்ப் பீலி. (கலி 140)

பழன மஞ்ஞை யுகுத்த பீலி. (புறம் 13)

மால்வரை ஆலும் பீலி மஞ்ஞை. (பெரும்பாண் 330)

பீலி நன்மா மயில். (சிந்தாமணி 236)

பீலி மாமயில் பேடை. (பெருங்கதை 1, 53)

பீலியும் கலாபமும் கூழையுமதற்கே. (பிங்கலந்தை)

பீலியே ஆலவட்டம் பெருவரை கலாபி தோகை. (நிகண்டு)

இவற்றால் பீலி நிலையை நாம் தெரிந்து கொள்கிறோம். மிக இலகுவான மெல்லிய நிலையது.

மயிலின் பின்புறத்தில் வாலாய் நீண்டுள்ளமையால்

பீலி என வந்தது. உற்ற பெயர்கள் எல்லாம் உரிய காரணங்களை உய்த்துணர மருமமாய் மருவியுள்ளன.

சாகாடு=சகடம்; பண்டி. வண்டி என இக்காலத்தில் இதனை நாம் வழங்கி வருகிறோம். சாமான்களைத் தாங்கிச் செல்வது **சாகாடு**; பண்டங்களைச் சுமந்து போவது **பண்டி**. சகடு நீண்டு சாகாடு ஆயது.

அச்சு=ஆதரவாயமைந்தது. வண்டியின் பாரத்தை நன்கு தாங்கிச் செல்வதற்கு உறுதியாக இரண்டு உருளைகளிடையே இணைத்துப் பிணைத்திருக்கின்ற இரும்புத் தண்டம். சகடம் இனிது இயங்கி வருதற்கு ஆதாரமாய் நிலைத்திருத்தலால் **அச்சு** என நின்றது.

காத்தற் கடவுளாகிய திருமாலுக்கு **அச்சுதன்** என்று பேர். நிலையான உறுதி நிலை தெரிய நேர்ந்தது.

**அச்சாணி அன்னார்.** (குறள், 667)

பின்னரும் இன்னவாறு அச்சின் அமைதியைக் குறித்துள்ளமை ஈண்டு உன்னியுணர வுரியது.

மெல்லிய பீலிகளையும் எல்லைமீறி ஏற்றினால் அந்த வண்டி அச்சு முரியும்; அதுபோல் பகைவர் மிகவும் மெலியராயினும் பலர் ஒருங்கு திரண்டு மூண்டால் வலிய பெரிய வீரனையும் வென்று தொலைப்பர் என்பது இங்கே தெரிய வந்தது. உவமானத்தைக் கொண்டு உவமேயத்தை யூகித்து உணர வைத்திருப்பதால் **ஒட்டணி** என்னும் ஓர் அலங்காரம் இதில் ஒட்டியுள்ளது.

கருதிய பொருள்தொகுத்து அதுபுலப் படுத்தற்கு
ஒத்ததொன் றுரைப்பின் அஃது ஒட்டெனமொழிப.
(தண்டியலங்காரம்)

இவ்வாறு அணி நிலையில் குறித்தது பொருள்களை நுணுகி யுணர்ந்து தெளிவுற. கூர்ந்து உணர உணர அறிவு கூர்மையாய்த் தேர்ந்து தெளிந்து வருகிறது.

அச்சு இறும் என்னும் சினை வினை அதன் முதலாகிய சகடத்தின் மேல் நின்றது. சாகாடும் என்றதில் உள்ள உம்மை அதன் இயல்பான வன்மையையும் அதன்மேல்

பெய்த பண்டத்தின் மென்மையையும் நுண்மையாக கருதி யுணர்ந்து உண்மை தெரிய வுற்றது.

ஒருவன் எவ்வளவு சிறந்த வலியுடையனுயினும் மெலியர் என்று எளிதாக எண்ணிப் பலரோடு பகை கொள்ளலாகாது. கொண்டால் அவன் அழிவடைவான் என்பதை இவ்வாறு இது தெளிவுறுத்தியுள்ளது.

தம் வலிமையை நினைந்து எவரையும் மதியாமல் வியந்து தருக்கி நின்றவர் விரைந்து அழிந்து ஒழிவர்

இது மந்தேகர்பால் அறிய வந்தது.

சரிதம்.

இவர் ஒருவகை அசுர கூட்டத்தவர். தென் கீழ்த் திசையிலுள்ள மந்தேகம் என்னும் நகரிலிருந்து வளமாய் வாழ்ந்து வந்தவர். மிகுந்த வரபலங்களையுடையவர். இவர்க்குத் தலைவனை அரசன் மைந்தேகன் என்னும் பேரினன். எல்லாவலிமைகளிலும் எவரும் தனக்கு நிகரில்லை என்னும் நிலைமையைத் தன் பேரால் விளக்கி யாண்டும் செருக்கி நீண்டு நின்ருன். இவனுடைய ஆதரவால் அந்த இனத்தவர் எங்கும் சென்று அடலாண்மை புரிந்து யாவர்க்கும் இடர்விளைத்து வந்தார். நிசிவேளைகளிலேயே அயலவருடைய பொருள்களைக் கவர்ந்து அவர் துயர் புரிந்து வந்தமையால் நிசிசரர் என நேர்ந்தார். தமக்குச் செல்காலம் ஆன இரவு நேரத்தை இரவி வந்து கெடுக்கின்ருனே என்று கடுத்துச் சூரியனையும் பகைத்து வீரியங்களை விளைத்தார். அவன் உதயமாகும் போது இவர் உருத்து தடுத்தார். இவரது தலைவனும் தலைமையாய் நின்று ஏவி வந்தான். உலக ஒளியை மறைக்க மூண்டு இவர் கலகம் செய்து வருவதைக் கண்டு மாதவரும் வேதியரும் ஒருங்கு திரண்டு காயத்திரி மந்திரத்தைச் செபித்துக் கைகளால் நீரை வாரி மேலே வீசினுர். அந்த நீர்த்துளிகள் போர்க்கருவிகளாய்ப் பாய்ந்தன. பாயவே அவர் யாவரும் மாய்ந்து ஒழிந்தனர். விரிவைப் பார்க்கவத்தில் பார்க்க.

மறையவர்பெய் கைநீரால் மந்தேகர் மாண்டொழிந்தார்;
முறையுடைய வானரங்கள் மூண்டுபெய்த மலைநிரையால்
நிறைகடலும் மேடாகி நின்றதால்; பலர்திரண்டால்
குறைவறுபோர் வலியினரும் குன்றுவர்தம் பெருவலியே.

பலர் திரண்டால் அவர் பெரு வலியராய் அரிய கருமங்களை முடிப்பர் என்பதை இதனால் அறிந்துகொள்கிறோம். பீலிபெய் சகடமும் அச்சுமுரிதல்போல் மெலியராயினும் பலர் மூண்டு புகுந்தால் வலியரும் மாண்டு ஒழிவர் என்பதை இவரது அழிவுதெளிவுறுத்திநின்றது.

**உரிய அளவு கடந்தால் மயிரும்**
**பெரிய சுமையாய் வரும்.**

*எல்லை மீறின் அல்லல் நேரும்.*

---

476. நன்றறிந்த சம்பாதி நக்கீரர் ஊக்கியன்று
குன்றினர் என்னே குமரேசா—சென்று
நுனிக்கொம்பர் ஏறினர் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். (சு)

இ-ள்

குமரேசா! சம்பாதியும் நக்கீரரும் எல்லைமீறி ஊக்கியதால் ஏன் அல்லல் அடைந்து வீழ்ந்தார்? எனின், நுனிக்கொம்பர் ஏறினர் அஃது இறந்து ஊக்கின் உயிர்க்கு இறுதி யாகி விடும் என்க.

ஒரு மரக்கிளையின் நுனியில் ஏறி நின்றவர் மேலும் துணிந்து செல்ல நேர்ந்தால் அவர் உயிர்க்கு அழிவு நேர்ந்துவிடும்.

முன், தான் வலியனாயினும் பலரையும் ஒருவன் பகைக்கலாகாது என்றார்; இதில், அவன் எல்லை கடந்து எதிலும் செல்லலாகாது என்கின்றார்.

உற்சாகமும் ஊக்கமும் ஆசையும் மனிதனை யாண்டும் மூண்டு செல்லும்படி தூண்டும். அவ்வாறு தூண்டினும் நீண்டு போகாமல் அறிவால் ஆய்ந்து நெறி கடவாமல் நீர்மையாய் அடங்கி நிற்க வேண்டும்.

தனது வலியையும் நிலையையும் ஓர்ந்து கொள்ளாமல் செருக்கி வினைமேல் செல்ல நேர்ந்தால் அது அல்லலான அவகேடாய் அழிவையே தரும்.

தன் உயிர்க்கு இனியவாழ்வை நாடுவது மனிதனது இயல்பு. அந்த இயற்கையோடு வந்துள்ளவன் யாதும் சிந்தியாமல் கொடிய சாவைத் தேடிக்கொள்வது நெடிய மடமையாம். அகந்தையால் அறிவு மறைகிறது; அது மறைந்து போகவே அழிவு விரைந்து விளைகிறது.

இறுதி = முடிவு; சாவு. இறுதல் என்னும் வினையடியாய் இது வந்துள்ளது. உடம்பைவிட்டு முடிவாய் உயிர் நீங்கிப் போவதை இறுதி என்றார்.

நுனிக்கொம்பு என்றது முடிவான எல்லையை; அதற்கு மேலே சென்றால் அந்தக் கிளை ஒடிந்துபோம்; அல்லது அவன் இழிந்து கீழே வீழ்ந்து இறந்து போவன். மூடமாய் மூண்டு போதல் பீடையாய்ச் சாதலாம்.

வினை செய்ய மூண்டவன் தனது நிலைமைக்குத் தக்கபடி அளவோடு நிற்க வேண்டும்; அளவு கடந்து போக நேர்ந்தால் அவன் சாக நேர்ந்தான். இந்த உண்மையை நுண்மையா மறைத்து உரைத்திருத்தலால் இது **சுருக்கணி** என்னும் அலங்காரமாம்.

வீவில் கவிதான் கருது பொருளை வெளிப்படுத்தற்கு
ஓவிய மேசுருக் காம்மறை சொல்லின் உரைத்திடினே.
(வீரசோழியம்)

தொகையாய்ச் சுட்டிக் குறித்திருக்கும் இந்த அணியை இங்கே உணர்ந்து கொள்கிறோம். வலியறிந்து வாழும் வகையைப் பலவழிகளிலும் நலமாய் அறிவுறுத்தி வருகிறார். பலரைப் பகைக்காதே; எல்லைமீறிப் போகாதே. இந்தப் போதனைகளைச் சாதனை செய்துவர அனுபவக் காட்சிகள் இனமாய்க் காண வந்தன.

குறைந்த வலியர் ஆயிடினும்
கொற்ற மைந்தர் பலர்கூடின்
நிறைந்த வலியென்னும்? அதனால்
நேராது ஒழிக பலரொடு;உளத்து

உறைந்த ஊக்கம் தனைக்கொண் டே
யுற்ற நினது வலியளவின்
இறந்தும் வினைமேல் நடவற்க!
இறவா வென்றி வேண்டிடினே.

(விநாயகபுராணம்)

இந்தக் கவியின் பொருளை இங்கே சிந்தித்துக் கொள்ள வேண்டும். தேவர் வாக்கை நோக்கியே இது இவ்வாறு விரித்து விளக்கி வியனாய் மேவி வந்துள்ளது.

அஃது = அந்தக் கொம்பின் நுனி. மரத்தின் கிளை ஓரம் புகத் துணியாதே. இறந்து=வரம்பு கடந்து.

இறந்து ஊக்கினல் நீ இறந்து போவாய்; உன் உயிர்க்கு இறுதி நாடாதே; உறுதி தேடிக்கொள்.

தம் உள்ளத்தின் ஊக்கத்தால் மேலே எல்லை மீறிச் சென்றவர் ஒல்லையில் அல்லலுறுவர். இது சம்பாதி யிடமும், நக்கீரர் கண்ணும் நன்கு அறிய வந்தது.

சரிதம்.

சம்பாதி என்பவன் அருணன் புதல்வன். தாய் பெயர் சேதி. பறவையின் உருவமும் தெய்வீக அறிவும் சேரப் பெற்றவன். அதிசய வீரனை சடாயுவின் தமை யன். நெடுந்தூரத்திலுள்ளதையும் நேரே திட்பமாகக் காணும் நுட்ப நோக்கினன். எங்கும் விரைந்து பறந்து செல்லும் திறமுடையவன் ஆதலால் தேவர் உலகத் தைக் கண்டு வரவேண்டும் என்று தம்பியுடன் மூண்டு எழுந்தான். மேலே பறந்து மேக மண்டலத்தை யடைந் தான். அதற்கு மேலே செல்ல முடியாதபடி தேகம் வருந்தியும் ஊக்கம் மீக்கூர்ந்து உயர்ந்து போனன். சூரிய வெப்பத்தால் இறகுகள் கரிந்து போயின; தம்பியைப் பாதுகாத்து அயலே விடுத்துவிட்டு மகேந்திர மலையில் வந்து விழுந்தான். வகையறியாது வரம்பு கடந்து சென் றமையால் உயிர்க்கு இறுதி நேர்ந்ததே! என்று இவன் உள்ளம் நொந்தான். அந்த மலைச்சாரலில் தவம் புரிந் திருந்த லோகசாரங்கர் என்னும் முனிவர் இவனைக் கண்

டார். நிகழ்ந்ததை விசாரித்து அறிந்து நெஞ்சம் இரங்கினார். சிறகுகள் இழந்த துயரால் இறந்து போக மூண்ட இவனைத் தடுத்து நிறுத்தி அவர் உறுதி கூறித் தேற்றினார். அவருடைய உரைகள் உணர்வுநலன்களை அருளின.

### முனிவர் மொழிந்தது.

கற்றிலார் போல உள்ளக்
    களிப்பினால் அமரர் காப்பூடு
உற்றிடக் கருதி மீப்போய்
    ஆதபத்து உனது மேனி
முற்றழல் முருங்க மண்ணை
    முயங்கினை யினியென் சின்னாள்
மற்றுநின் உயிரை ஓம்பாது
    இகழ்வது மாலைத் தன்றால்: (1)

களித்தவர் கெடுதல் திண்ணம்;
    சனகியைக் கபடன் வௌவி
ஒளித்தவாய் துருவி யுற்ற
    வானரர் இராம நாமம்
விளித்திடச் சிறைவந் தோங்கும்;
    வெவ்வுயிர்த் தயரல்! என்றன்று
அளித்தனன்; அதனால் ஆவி
    ஆற்றினேன் ஆற்றல் மொய்ம்பீர்! (2)
(இராமா, கிட்கிந்தா, சம்பாதி)

மாதவர் மதிநலம் கூறித் தன்னை ஆதரித்தருளியுள்ளதை வானரர்களிடம் இவன் இவ்வாறு உரைத்திருக்கிறான். **களித்தவர் கெடுதல் திண்ணம்** என்று அவர் குறித்திருப்பது இவன் உள்ளத்தில் உறுத்தி நின்றது. எல்லை மீறி ஏறினால் உயிர்க்கு அல்லல் வரும் என்பதை உலகம் தெளிய இவன் உணர்த்தி நின்றான்.

### நக்கீரர்.

இவர் சங்கப் புலவருள் தலைவராயிருந்து வந்தார். வருங்கால் **வங்கிய சூடாமணி** என்னும் பாண்டிய மன்னன் தனது மனைவியுடன் குளிர் பூஞ்சோலையிடையே அமைந்த வசந்த மாளிகையில் தங்கியிருந்தான்.

தென்றல் வீசியது; அதுபொழுது அவளது கூந்தலி லிருந்து ஒரு நறுமணம் தோன்றியது; அந்தப் பரிமளம் அரசனைப் பரவசப்படுத்தியது; அது மலரின் செயற்கை யாலாயதா? இயற்கையா யமைந்ததா? என்று ஐயம் கொண்டான்; தனது சந்தேகம் தெளியுமாறு கவி சொல்ல வல்லவர்க்கு ஆயிரம் பொன் பரிசில் தருவதாக உறுதிசெய்து அந்தப் பொற்கிழியைச் சங்க மண்டபத் தில் தூக்குவித்தான். புலவர்கள் பலர் பாடி வந்தனர். யாதும் பொருந்தவில்லை. முடிவில் தருமி என்னும் ஆதி சைவன் ஒருவன் அதைப்பெற விழைந்தான். பரமன் அருள் புரிந்து ஒரு கவியை அவனுக்கு அருளினர்:

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!
காமம் செப்பாது கண்டது மொழிமோ!
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறிஎயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோ? நீ அறியும் பூவே! (இறையனர்)

ஒரு ஓலைச் சீட்டில் துள்ளி வந்து விழுந்த இந்தப் பாட்டை எடுத்துக் கொண்டு போய்ப் புலவர்களிடம் கொடுத்தான்; அவர் உவந்து கொள்ளவே பொன்பொதி யை எடுக்க விரைந்தான். கீரர் தடுத்தார். "பாட்டில் பிழையுளது; பரிசில்பெற இயலாது" என்று இவர் கூறவே அம்மறையவன் மீண்டுபோய் இறைவனிடம் முறையிட்டான். பரமன் ஒரு புலவராய் உருவம் தாங்கி நேரே சங்கத்திற்கு வந்தார்; "இப்பாட்டில் என்ன பிழை யுளது?" என்று கேட்டார். சொல்லில் குற்றம் இல்லை; பொருளில் குறை உள்ளது என்று கீரர் கிளர்ந்து கூறி னர். வாதம் வளர்ந்தது. கலையறிவால் இவர் களித்துப் பேசினர்; தலையறிவால் அவர் தெளித்து வந்தார்; யாதும் தெளியாமல் இவர் எல்லைமீறிப் பேசவே அந்த வல்லவர் மெல்லச் சினந்தார். இவர் இழிந்து விழுந்தார். பின்பு அருள் புரிந்து இவரது மருள் நீங்கத் தெருளறிவு தரும்படி அகத்திய முனிவரைப் பணித்தார். அந்த மாதவர்பால் ஓதி யுணர்ந்தபின் இவர் அதிசய மேதை யாய் விளங்கினர். சொக்கநாதப் புலவராய் எழுந்தருளி

வந்து தக்கபடி தனக்கு அறிவுநலம் அருளிய பரமனை இவர் பரிவு மீதூர்ந்து பணிந்து தொழுது துதித்துப் போற்றினர். துதி மொழிகள் மதி ஒளிகளாய் வந்தன.

அட்ட மூர்த்திதன் திருவடிக் கடியனேன் பிழைக்கப்
பட்ட தீங்கினுல் எனையவன் நுதல்விழிப் படுதீச்
சுட்ட தன்றிஎன் நெஞ்சமும் சுடுவதே என்றென்று
உட்ட தும்பிய விழுமநோய் உவரியுள் ஆழ்ந்தான். (1)

மகவை ஈன்றதாய் கைத்திடு மருந்துவாய் மடுத்துப்
பகைப டும்பிணி அகற்றிடும் பான்மைபோல் என்னை
இகலி மைத்தறி வுறுத்தி னைக்கு ஏழையேன் செய்யத்
தகுவ தியாது?என வரம்பிலா மகிழ்ச்சியுள் தாழ்ந்தான். (2)

மாத வன்தனக்கு ஆலவாய் மன்னவன் அருளால்
போத கஞ்செய்த நூலினைப் புலவர் ஏனோர்க்கும்
ஆத ரஞ்செயக் கொளுத்திவிட் டிருந்தனன் அமலன்
பாத பங்கயம் சூழ்கிய பத்திமைக் கீரன். (3)

(திருவிளையாடல் 54)

கல்விச் செருக்கால் முன்பு களித்து நின்ற இவர் பின்பு தெளிந்து தேறி உயர்ந்திருப்பதை இவற்ருல் உணர்ந்துகொள்கிறோம். தன் வலியை அறிந்து அடங்கி நில்லாமல் வரம்பு கடந்துசென்ருல் அழிதுயர் உண்டாம் என்பதை எவரும் விழிதெரிய இவர் விளக்கி நின்ருர்.

**எல்லைகடந் தேறின் எவரும் துயரமாய்**
**அல்ல லுறுவர் அவண்.**

*அளவு மீறிப் போகாதே.*

---

477. ஏனோ அளவறிந்தே ஈந்தான் இளஞ்சென்னி
கோனு யிருந்தும் குமரேசா—தானுக
ஆற்றின் அளவறிந் தீக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி. (எ)

இ-ள்

குமரேசா! அளவு அறிந்து ஈந்து இளஞ்சென்னி ஏன் வளம் புரந்து வந்தான்? எனின், ஆற்றின் அளவு

அறிந்து ஈக; அது பொருள் போற்றி வழங்கும் நெறி என்க.

நெறிமுறையே பொருளின் அளவை உணர்ந்து ஈதல் செய்; அச்செயல் பொருளை இனிது பேணி என்றும் நன்கு பாதுகாத்து அருளும் வழியாம்.

ஆள்வலி துணைவலி படைவலி பகைவலி வினைவலி கல்விவலி முதலிய நிலைமைகளையெல்லாம் நேரே சீர்தூக்கி அறிந்து தெளிந்து எவ்வழியும் மாண்புடன் மனிதன் வாழ்ந்து வர வேண்டும் என இதுவரை உணர்த்தி வந்தார்; இனிமேல் பொருளின் அளவை உணர்ந்துதெருளுடன் வாழவேண்டும் என்பதை வரன் முறையே தெளிவுற உணர்த்துகின்றார்.

வலி அறியும் வகைகள் பலதுறைகளிலும் பரவியுள்ளன. எவ்வழியும் செவ்வையாய் அறிந்து தெளிந்து கொள்வதே சிறந்த வாழ்வாம். உரிய நிலைமைகளை உணர்வது பெரிய தலைமைகளைப் புணர்வதாம்.

எதையும் கருதி யுணர்ந்து கட்டுப்பாட்டுடன் செட்டும் சீருமாய் வாழ்ந்து வருபவனே சிறந்த மேன்மையை அடைந்து எவ்வழியும் உயர்ந்து வருகிறான்.

அளவு அறிதலாவது, தனக்கு வாய்த்துள்ள செல்வங்களின் நிலைகளையும், வருவாய்க்கு உரிய வழிவகைகளையும் தெளிவாக உணர்ந்து கொள்ளுதல். அமைந்துள்ள பொருளின் அளவுக்குத் தக்கபடியே ஆய்ந்து தான தருமங்களைச் செய்து வருவதே தகவாம்.

உள்ள பொருளை நான்கு கூறாக்கி இரண்டு பாகங்களைத் தனது தற்கால வாழ்க்கைக்கும், ஒரு பாகத்தைப் பிற்கால ஆதரவுக்கும், மற்றொரு பாகத்தைப் பிறர்க்கு ஈதல் முதலிய அறநெறிகளிலும் ஆக்கி அமைத்துச் செலவு செய்ய வேண்டும் என்பது பொருள் நூல் விதியாம். விதிமுறையான வாழ்வே வியனாய் விளங்குகிறது.

வருவாயுள் கால்வழங்கி வாழ்தல்; செருவாய்ப்பச்
செய்தவை நாடாச் சிறப்புடைமை;—எய்தப்

பலநாடி நல்லவை கற்றல்;இம் மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள். (திரிகடுகம் 21)

மாட்சிமையான நல்ல வாழ்க்கை முறையை **நல்லா தனார்** இங்ஙனம் நன்கு வகுத்துக் காட்டி யிருக்கிறார்.

அறிவுடைய மனிதன் இருமையும் இன்பம் மருவி வர நெறியுடன் வாழுகின்றான். அந்த மேன்மையான வாழ்வின் பான்மை இங்கே கூர்மையாத் தெரிய வந்தது.

பொருளைப் போற்றிவாழ் என்று போதிக்க வந்த வர் **ஈக** என்று இடையே நயமாக் கொடையை இணைத் திருக்கிறார். **ஈதல் உயிர்க்கு ஊதியம்** ஆதலால் தன் பொருளால் சிறப்பாக ஒருவன் ஆக்கிக் கொள்ளவேண் டிய பாக்கியத்தை இங்ஙனம் அறிவுறுத்தி யருளினர்.

பிறர்க்கு ஈந்து வருவது புண்ணியம் ஆகின்றது. ஆகவே எல்லாச் செல்வங்களையும் இன்பங்களையும் ஒருங்கே அது தருகின்றது. தன் உயிர்க்கு நன்மையை நாடுபவன் பிறவுயிர்களுக்கு இதத்தைச் செய்கிறான். அந்த இதம் ஈதலில் மிகவும் நயமா இசைந்துள்ளது.

இரப்பவர்க்கு ஈயக் குறைபடுமென் றெண்ணிக்
கரப்பவர் கண்டறியார் கொல்லோ?—பரப்பின்
துறைத்தோணி நின்றுலாம் தூங்குநீர்ச் சேர்ப்ப!
இறைத்தோறும் ஊறும் கிணறு. (பழமொழி 344)

பிறர்க்குக் கொடுத்தால் பொருள் குறைந்துபோமே என்று மருள் மண்டியிருக்கும் உலோபிகளை நோக்கி **முன்றுறையரையர்** இங்ஙனம் எள்ளி யிகழ்ந்து நல்ல அறிவு நலனை உள்ளம் இரங்கி அருளி யிருக்கிறார்.

இறைக்க இறைக்கக் கிணற்றில் நீர் ஊறி வருதல் போல் கொடுக்கக் கொடுக்கச் செல்வம் பெருகி வருமே! இந்த இயற்கை நியதியை அறிந்து தெளிந்து ஈந்து உயர்க; அறியாமல் இழிந்து கழிந்து உலோபியாய் ஒழிந்து போகாதே என்று உறவா உணர்த்தியுள்ளார்.

இறப்பச் சிறிதென்ன தில்லென்ன தென்றும்
அறப்பயன் யார்மாட்டும் செய்க—முறைப்புதவின்

ஐயம் புகூஉம் தவசி கடிஞைபோல்
பைய நிறைத்து விடும். (நாலடி 99)

எந்த வகையிலும் ஈந்து வருவது நல்லது; அதனல் அறம் பெருகி வரும்;ஆருயிர்க்கு இன்பமாம்; அது புனித மான இனிய வாழ்வாம் என இது குறித்துள்ளது.

ஈவது யோகம் இயம நியமங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி
ஆவ தறிந்துஅன்பு தங்கா தவர்களுக்கு
ஈவ பெரும்பிழை என்று கொளீரே. (திருமந்திரம் 506)

நல்லவர்க்கு ஈக எனத் திருமூலர் இங்ஙனம் குறித் திருக்கிருர். உத்தம உதவி உய்த்து உணர வந்தது.

மறம்புகுத்தா வாற்ருல் பொருளீட்டி மற்றும்
இறந்து படாமைப் புரக்கவிவை செய்தும்
அறம்பொரு ளின்பப் பொருட்டளியான் ஆயின்
பிறந்தும் பயனெய்தாப் பேய். (இன்னிசை 138)

ஈட்டிய பொருளால் அறத்தை ஈட்டிக் கொள்பவன் தேவன்; அவ்வாறு செய்யாதவன்பேய் என இது குறித் துளது. பேயா யிழியாமல் பெரியனு யுயர்க.

ஈட்டிய வெல்லாம் இதன்பொருட் டென்பது
காட்டிய கைவண்மை காட்டினுர்—வேட்டொறும்
காமருதார்ச் சென்னி கடல்சூழ்புகார் வணிகர்
தாமரையும் சங்கும்போல் தந்து.
(பெரும்பொருள் விளக்கம்)

ஈட்டிய பொருளை வளவன் ஈந்துள்ளதை இது காட்டி யுளது. வளம் வளமாய் வருவது வழங்குவதாலே யாம்.

வந்தபொருளில் கால்கூறு வருமேல் இடர்நீக் குதற்கமைத்து
மைந்த இருகால் நினக்காக்கி மற்றைக் காலே வழங்கிடுக;
சிந்து நெறிகள் அகலாமல் சேரும் நெறிகள் சுருங்கிடினும்
நந்தல்இலதாம்;ஒப்பினுமாம் நாடின்அதிகச் செலவிழுக்காம்.
(விநாயக புராணம்)

அளவறிந்து ஈந்து பொருளைப் போற்றி வாழுமாறு ஒரு மன்னன் தன் மகனுக்கு இன்னவாறு கூறியிருக் கிருன். உரிய அளவை உணர்பவன் பெரியவனுகிருன்.

தானும் வளம் குன்ருமல் செழித்து வளர்ந்து தன்பால் வந்தவர்க்கும் இல்லை என்னுமல் ஒருவன் வழங்கி வரச்செய்து வருவது, உரிய பொருளின் அளவறிந்து உணர்வுறுதியுடன் வாழ்ந்து வரும் வாழ்வே யாம்.

பொருளைப் போற்றிப் புகழை ஆற்றி அருளுடன் வாழ்பவரே தெருளுடைய மேலோராய்த் திகழ்கின்ருர்.

இது, இளஞ்சென்னிபால் அறிய வந்தது.

சரிதம்.

இவன் சோழ மன்னர் மரபினன். உறையூரிலிருந்து அரசு புரிந்தவன். சிறந்த குணநலன்கள் நிறைந்தவன். அறிவிலும் திருவிலும் உருவிலும் நெறிமுறையிலும் தலைசிறந்திருந்த இவன் எத்துறையிலும் வித்தக விவேகியாய் விளங்கி நின்ருன். எதையும் முன்னதாக எண்ணி ஆராய்ந்து செய்யும் நுண்ணுணர்வு இவனிடம் கண்ணியமாய் நண்ணியிருந்தது. எவரையும் குறிப்பால் உணர்ந்து அவரது தகுதிக்குத்தக்கவாறு உதவிசெய்து வந்தான். வரிசையறிந்து புரியும் இவனது மதிநலத்தை வியந்து அறிஞர் பலரும் இவனைப் புகழ்ந்து வந்தனர். **ஊன்பொதி பசுங்குடையார்** என்னும் சங்கப்புலவர் இம் மன்னனுடைய விழுமிய பண்புகளையெல்லாம் அழகிய ஒரு கவியில் அமைத்து நேரே அரசவையில் பாடினர்.

வழிபடு வோரை வல்லறி தீயே;
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே;
நீமெய் கண்ட தீமை காணின்,
ஒப்ப நாடி அத்தக வொறுத்தி;
வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்,
தண்டமும் தணிதிநீ பண்டையிற் பெரிதே;
அமிழ்தட் டானுக் கமழ்குய் யடிசில்
வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை
மகளிர் மலைத்தல் அல்லது மள்ளர்
மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப!
செய்திரங் காவினைச் சேண்விளங் கும்புகழ்
நெய்தலங் கானல் நெடியோய்!
எய்தவந் தனம்யாம்; ஏத்துகம் பலவே. (புறம் 10)

இவனுடைய செயல் இயல்களையும் உயர்நலன்களையும் இதில் கூர்ந்து நோக்கி ஓர்ந்து உவந்து கொள்ளுகிறோம். கவியில் மருவியுள்ள பொருள் நயங்களைக் கருதியுணர்பவர், அரிய பல நீர்மைகளை அறிந்து மகிழ்வர். எதையேனும் எண்ணாமல் செய்துவிட்டுப் பின்புபச்சாத் தாபமாய் எண்ணியிரங்கிய நிலை இவனது வாழ்நாளில் நேர்ந்ததில்லை. **செய்து இரங்காவினைச் சேண் விளங்கும் புகழ்** என்றது இவனது வினைத்திறத்தையும், எதையும் அளந்து அறிந்து ஆராய்ந்து செய்யும் சீர்மையையும், திசைகள்தோறும் பரவியுள்ள கீர்த்தியையும் விளக்கியுள்ளது. பெருந்திருவுடையனா யிருந்தும் யாண்டும் அளவறிந்தே ஈந்து வந்தமையால் என்றும் வளனோடு நின்று எவர்க்கும் இனிது வழங்கி எவ்வழியும் இன்பமாய் இசையுடன் வாழ்ந்து வந்தான்.

வளவன் ஆயினும் அளவறிந்து அழித்து உண்.

ஒளவையார் இவ்வாறு பாடியிருக்கிறார்.

வளவன் = சோழன். எவ்வளவு வளமுடையனாயினும் அளவறிந்தே செலவு செய்ய வேண்டும் என்பதை இந்த வேந்தன் செயலே எங்கும் நன்கு விளக்கி நின்றது.

**உள்ள பொருளளவை ஓர்ந்தீகை செய்துவரின்**
**வள்ளன்மை வாழ்ந்து வரும்.**

பொருளைப் போற்றி வாழ்.

---

478. கொண்ட வருவாய் குறுகியும்பூங் குன்றனார்
கொண்டிருந்தார் இன்பேன் குமரேசா—மண்டிமேல்
ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை. (அ)

இ-ள்.

குமரேசா! வருவாய் குறுகியிருந்தும் பூங்குன்றனார் ஏன் சுகமாய் வாழ்ந்து வந்தார்? எனின், போகாறு அகலாக்கடை ஆகாறு அளவு இட்டிதாயினும் கேடு இல்லை என்க.

இது, வரவறிந்து செலவு செய் என்கிறது.

பொருள் செலவாகிற வழி அளவு விரியாதாயின் வரவு வருகிற நெறி அளவு சிறிதாயிருப்பினும் கெடுதல் இல்லை. ஆதலும் போதலும் நேரே அறிய வந்தன.

உலகில் மனிதனது உயிர் வாழ்க்கை பொருளால் இயங்கி வருகிறது. உண்ணல் உடுத்தல் இருத்தல் படித்தல் கொடுத்தல் முதலிய வழிகளில் அது செலவாகிறது. ஆகவே அந்தச் செலவை ஈடு கட்டுவதற்கு மேலும்மேலும் பொருள் வந்துகொண்டேயிருக்க வேண்டும். அவ்வாறுள்ள வரவு செலவுகளின் நிலைகளை அளந்து அறிந்து ஆவதை உணர்ந்து கொள்ள ஈண்டு உணர்த்துகின்றார். பொருள் வகை அறிவு உயர்வை அருளுகிறது.

ஆகு ஆறு = ஆகின்ற நெறி.

என்றது பொருள் வருகிற வழிகளை.

போகு ஆறு = போகின்ற நெறி.

என்றது செலவாய்க் கழிகிற வழிகளை.

வரவும் செலவும் பகலும் இரவும்போல் தொடர்ந்து நடந்து வருகின்றன. செலவு சுருங்கி வரவு பெருகிவரின் அந்த வாழ்வு வளமாய் வளர்ந்து வரும். இரண்டும் சமமானால் அவ்வாழ்வு நிதானமாய் நடந்துவரும். வரவுக்கு மிஞ்சிச் செலவானால் அது பழுதாய் இழிந்து படும்.

ஆக்கம் நோக்கி வாழ்வதே அறிவுடைமையாம்.

வரவு சுருங்கியிருந்தாலும் அதற்குத்தக்கபடி செலவைச் சுருக்கிக்கொண்டால் அந்த மனிதனுடைய வாழ்வு அமைதியாய் நடந்து வரும்; அந்தச் செட்டு நிலைமையும் சீர்மையும் நீர்மையும் இங்கே சிந்திக்க வந்தன.

இட்டிது = சிறிது.

சுருங்கிய அளவை இது சுட்டியுள்ளது.

இட்டிடைப் பின்னை கேள்வன். (திருச்சந்தம் 13)

இட்டிடை நுடங்க. (சிந்தாமணி 1107)

இட்டிடைப் பவளச் செவ்வாய. (சிந்தாமணி 1145)

இட்டிய குயின்ற. (ஐங்குறுநூறு 215)

சிறுமை, நுண்மை, சுருக்கம் என்னும் பொருளில் இஃது இவ்வாறு மருவி வந்துளது.

இடுகு, இடுக்கு, இட்டிது என்பன குறுமை சிறுமைகளைக் கூர்ந்து உணரக் குறித்துள்ளன.

இட்டாற்றுப் பட்டுஒன்று இரந்தவர்க் காற்றுது
முட்டாற்றுப் பட்டு முயன்றுள்ளூர் வாழ்தலின்
நெட்டாற்றுச் சென்று நிரைமணையில் கைநீட்டும்
கெட்டாற்று வாழ்க்கையே நன்று. (நாலடி 288)

சிறுமையாய் வறுமைப்பட்டு வாழ்வதினும் கண் காணுத இடத்துக்குப் போய்விடுவது நல்லது என இது குறித்துளது. மேன்மையாவாழ்வதே மேலானவாழ்வாம்.

பொருள் இல்லையானல் நல்ல அமைதியான வாழ்வு அங்கே இல்லை. வாழ்க்கைக்கு உயிராதாரமாயுள்ள பொருளை வீண் செலவு செய்யாமல் எவ்வழியிலும் விவேகமாய்ப் பேணி ஒழுகுவதே மேன்மையாம்.

செட்டும் சீரும் இருந்தால் சிறிய வருவாயிலும் சுகமாய் இனிது வாழலாம். அரிய புகழை அடையலாம்.

இவ்வுண்மை பூங்குன்றனுர் பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவர் பாண்டி நாட்டிலே பூங்குன்றம் என்னும் ஊரில் இருந்தவர். சிறந்த சீலமும் நிறைந்த நீர்மையும் தெளிந்த ஞானமும் உடையவர். சோதிடக் கலையில் மிகவும் வல்லவர் ஆதலால் **கணியன் பூங்குன்றனுர்** என யாவரும் இவரைப் பிரியமாயழைத்து வந்தனர். அடக்கமும் அமைதியும் உடையவர். தலைமையான புலமையாளராயிருந்தும் எந்த அரசரையும் பரிசில் கருதி இவர் பாடவில்லை. தமக்குச் சொந்தமாயிருந்த சிறிய நில வருவாயைக் கொண்டே இவர் சுகமாய் வாழ்ந்து வந்தார். இவரது மனைவி பெயர் சுமதி. இவரது குறிப்பு அறிந்து அக்குலமகள் நடந்துவந்தமையால் வாழ்வு தலை

மையாய் விளங்கி நின்றது. உலக மக்கள் உணர்ந்து உயர்வுற இவர் பாடல் ஒன்று பாடியருளினர். அறிவு நலம் சுரந்த அந்த அருமைப் பாசுரம் அயலே வருகிறது.

யாதும் ஊரே; யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன;
சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்
இன்னா தென்றலும் இலமே; மின்னொடு
வானம் தண்துளி தலைஇ யானாது
கல்பொருது இரங்கும் மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம்; ஆகலின், மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.

(புறம் 192)

இந்தக் கவியில் சுரந்துள்ள உணர்வு நலன்கள் நாளும் உணர்ந்து சிந்திக்க வுரியன. இவருடைய பரந்த நோக்கமும், பெருந்தகைமையும், தத்துவக் காட்சியும், ஆன்ம அனுபவங்களும், வாழ்க்கை நிலையும் இதில் விளங்கியுள்ளன. வரவறிந்து மன அமைதியுடன் அடங்கி இனிமையாய் வாழின் அவர் எவ்வழியும் சுகமடைந்து இருப்பர் என்பது இவரிடம் தெளிவாய்த் தெரியவந்தது.

**சேரும் வரவு தெரிந்து செலவுசெயின்**
**யாரும் வறுமை யுறார்.**

உற்ற வரவுள் உவந்து வாழுக.

---

479. குன்றாத் தனபாலன் கோவலன் வாழ்வும்பின்
குன்றிநின்ற தென்னே குமரேசா—நின்ற
அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். (கூ)

இ-ள்.

குமரேசா! தனபாலன் கோவலனுடைய செல்வ

வாழ்க்கைகள் பின்பு ஏன் சீரழிந்து போயின? என்ன, அளவு அறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல இல்லாகித் தோன்ருக் கெடும் என்க.

இது, அளவு அறிந்து வாழுக என்கிறது.

தன் பொருள் அளவின் நிலையறிந்து வாழாதவனது குடிவாழ்க்கை இருப்பது போலத் தோன்றிப் பின்பு யாதும் இல்லாமல் ஒழிந்து போம்.

கெடும் என்று அச்சுறுத்தியது, செட்டும் சீருமாய் வாழ்ந்துவர வேண்டும் என்பதை ஓர்ந்து உணர.

உயிர் உடலோடுகூடி உரியகாலம் வரையும் வாழ்ந்து வருவது வாழ்க்கை என வந்தது. இந்த வாழ்க்கை வளமாய்ச் சிறந்து செழித்துவருவது பொருளாலாம். குறைவதும் தேய்வதும் மறைவதும் பொருளின் இயல்பாம். ஒருநிலையிலின்றி மாறுபட்டுத் திரிந்துவருகிற பொருளை ஆனவரையும் சிதைந்துபடாமல் சீரோடு பேணிக் காப்பது பெரிய அறிவுடைமையாம்.

முன்னும் பின்னும் எண்ணி நோக்கி வரவு செலவுகளைச் சீர்தூக்கி அறிந்து செய்வன செய்து தவிர்வன தவிர்ந்து செம்மையாய் வாழ்ந்துவருபவரே அளவறிந்து வாழ்ந்தவராவார்; அவ்வாறின்றி எதையும் சரியாய்க் கவனியாமல் வீணை ஆடம்பரங்களை விழைந்து வீண் செலவுகளைச் செய்து வீண்பொழுது போக்கி வருபவர் அளவறிந்து வாழாதவராகின்ருர். ஆகவே வளம் இழந்து அவர் விரைந்து இழிந்து கெட நேர்கின்ருர்.

வரவுக்கு மிஞ்சிய செலவால் வாழ்வு தாழ்வுறும். அந்த மனிதனும் மதிப்பிழந்து இழிந்து படுவான்.

ஆன முதலில் அதிகம் செலவானுன்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனுய் ஏழ்பிறப்பும் தீயனுய்
நல்லார்க்கும் பொல்லனும் நாடு. (நல்வழி 25)

வரவுக்குத் தக்கபடி செலவு செய்; அதிகமாய்ச் செய்தால் உன் மானம் அழியும்; மதிப்புக் கெடும்;

எவரும் மதியார்; எங்கும் எள்ளப்படுவாய்; பொல்லாத வனாய்ப் புலையுற நேர்வாய்; இந்த நிலைமையை நினைந்து தெளிந்து பொருளைப் போற்றித் தெருளுடன் வாழ்க என்று ஔவையார் இவ்வாறு மனிதனுக்குப் புத்தி போதித்திருக்கிறார். பொருளாதாரத்தின் நுட்பங்களைத் திட்பமா யிதில் தெளிவுறுத்தி உணர்த்தியுள்ளார்.

மடைத்தலை ஏரி வருவாயின் மிக்க
கொடுத்தலைச் செய்யின் கொடாதுபின் வற்றும்;
அடுத்தள வாராய்ந்து அளித்துண்ண லன்றே
வடித்தநூல் தேர்ந்தார் வழக்கு. (இன்னிசை 139)

மூல முதலின் அளவறிந்து காலம் உணர்ந்து கருமம் புரிந்து வாழ்வதே சாலவும் நன்றாம் என வாழ்வின் தருமத்தை இது வரைந்து காட்டியுள்ளது. பயிர் வாழ்வுக்கு நீர்போல் உயிர் வாழ்வுக்குப் பொருள். அதனை அளவறிந்து பேணி உளம் உவந்து வாழுக.

சாரதி சரியாக ஓட்டவில்லையானால் வண்டி ஓடாது; சண்டியாயிழிந்து படும்; குடும்பத் தலைவன் கவனித்து நடத்தவில்லையானால் அந்த வாழ்க்கை நிலைகுலைந்து போம். வருவாயின் அளவு அறிவதிலேயே வாழ்க்கையின் வளங்கள் எல்லாம் மருமமாய் மருவி யுள்ளன.

வரவு நிலையைச் சீர் தூக்கி உறுதியாய் அறியாதார் வாழ்வு வறுமையாய்ச் சிறுமையுறும். இது தனபாலனிடமும், கோவலன் கண்ணும் காண வந்தது.

சரிதம்.

தனபாலன் என்பவன் இயக்கர் குலத்தவன். வியக்கத்தக்க செல்வமுடையவன். பதுமினி என்னும் மனைவியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இனிது வாழ்ந்து வந்தான். அரசியல்முறைகளை நன்கு தெரிந்தவனாதலால் குபேரன் இவனைத் தனக்கு அமைச்சனாக அமைத்துக்கொண்டான். பெருநிதியுடைய இவன் இருநிதிக்கிழவனைச் சேர்ந்ததும் பொருளை ஒரு பொருளாக மதியாமல் பலர்க்கும் வாரி வழங்கினான். ஒருநாள் கிருதாசி என்னும் தேவதாசியைக் கண்டான். பேரழகுடைய

அவள் பால் இவன் பெருமோகங்கொண்டான். அவளது மோகவலையில் சிக்கிப் போக வெள்ளத்தில் மூழ்கிக் களித்தான்; பொருள் முழுவதையும் மருளனாய் அள்ளிக் கொடுத்தான். இவனது நிலைமையை அறிந்ததும் அளகை மன்னன் பதவியைவிட்டு விலக்கினான். சிறந்த மந்திரி பதவியையும் நிறைந்த செல்வ வளங்களையும் ஒருங்கே யிழந்தான். மதிப்பும் மானமும்போய் மறுகி யலைந்தான். அளவறிந்து வாழாதான் வாழ்க்கை அடியோடு கெடும் என்பதை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான். இவனது நிலையை நினைந்து பலரும் இரங்கினர். விரிவை மறைசைமான் மியத்தில் காண்க.

கோவலன்.

இந்த வணிகர் குலமகனிடம் அரிய பல குணநலன்கள் அமைந்திருந்தன. உலகம் காக்கும் காவலரும் ஆவலுறும்படியான பெருந்திருவுடையவன். **கண்ணகி** என்னும் பெண்ணரசியை மணந்து கண்ணியமாய் வாழ்ந்து வந்தான். இந்த மணமக்களுடைய காட்சி அதிசய மாட்சியாய் மருவி யிருந்தமையால் உலக மக்கள் இவரை உவந்து வியந்து பலவாறு புகழ்ந்து வந்தனர்.

மண்தேய்த்த புகழினான்; மதிமுக மடவார்தம்
பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்
கண்டேத்தும் செவ்வேள்என்று இசைபோக்கிக் காதலால்
கொண்டேத்தும் கிழமையான்; கோவலன் என்பான்
[மன்னோ.

போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்,
தீதிலா வடமீனின் திறமிவள் திறம் என்றும்,
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள்; பெயர்மன்னும் கண்ணகிஎன் பாள்மன்னோ.

இன்னவாறு நன்னயமாய் வாழ்ந்து வந்தவன் அயல் மாதுமேல் மயல்மீக் கொண்டான். அதனால் செல்வம் எல்லாம் இழந்தான். அல்லலுழந்தான்; அயலிடம் போய்ப் பிழைக்கலாம் என்று மனைவியை அழைத்துக் கொண்டு வெளியேறி மதுரையை அடைந்தான். தனது

செல்வ வாழ்வை இழந்து சிறுமையடைந்துள்ளதை நினைந்து நினைந்து உள்ளம் நொந்து உளைந்தான்

வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு
குறுமொழிக் கோட்டி நெடுநகை புக்குப்
பொச்சாப் புண்டு பொருளுரை யாளர்
நச்சுக் கொன்றேற்கு நன்னெறி யுண்டோ?
இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்;
சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்;
வழுவெனும் பாரேன்; மாநகர் மருங்கீண்டு
எழுகென எழுந்தாய்! என்செய்தனை?

(சிலப்பதிகாரம் 16)

அரிய செல்வங்களை வறிதே இழந்து கோவலன் மறுகி நொந்துள்ளதை இதனால் அறிந்துகொள்ளுகிறோம். அளவறிந்து வாழாதவன் வாழ்க்கை முழுதும் விரைந்து கெடும்; அவனும் பரிந்து கவலுவான் என்பதை உலகம் இவன்பால் அறிந்து வருந்தி இரங்கி நின்றது.

**உள்ள பொருளளவை ஓர்ந்தமைந்து வாழாதான்**
**எள்ளல் அடைவன் இழிந்து**

பொருள்நிலை அறிந்து தெருளுடன் வாழுக.

———

480\. வென்றி விரோசனனும் மெய்மன்னும் ஒப்புரவால்
குன்றினர்வாழ் வென்னே குமரேசா—நின்று
**உளவரை தூக்காத ஒப்புர வாண்மை**
**வளவரை வல்லைக் கெடும்.** (ம)

இ-ள்

குமரேசா! உள்ளதை ஓராத ஒப்புரவால் விரோசனனும் அரிச்சந்திரனும் ஏன் வாழ்வை இழந்தார்? எனின், உளவரை தூக்காத ஒப்புரவாண்மை வளவரை வல்லைக் கெடும் என்க.

பொருளறிவும் ஒப்புரவும் ஒப்புற வந்தன.

உள்ள பொருளின் அளவை ஓர்ந்து உணர்ந்து செய்யாத உபகாரத் திறத்தால் செல்வநிலை விரைந்து சிதைந்து போம்.

வரை = அளவு; எல்லை. வரையறுத்துத் துணிந்தது.

வளவரை = செல்வ வளத்தின் எல்லை.

உளவரை என்றது உற்றுள்ள நிலைமைகளை.

தூக்காத = எண்ணி உணராத. தூக்கல் = கூர்ந்து நோக்கல். நேரே ஆராய்ந்து தேர்ந்து தெளிதல்.

எதையும் சீர்தூக்கி நோக்கிச் செய்வதே சிறந்த வினையாண்மையாம். பொருள்நிலை குடும்பநிலை வாழ்க்கைநிலை வரவுநிலை செலவுநிலை பிற்காலநிலை முதலியவற்றை நன்ருக எண்ணியே தானதருமங்களில் பொருளை அளவறிந்து ஆய்ந்து செலவிட வேண்டும்.

ஒப்புரவு ஆண்மை = உபகரிக்கும் திண்மை.

ஆல் உருபு இதில் மறைந்து நின்றது. ஒப்புரவாளன் எனவும் பாடம். பிறர்க்கு உபகாரம் செய்வது சிறந்த மனிதத்தன்மை யாம். ஒப்புரவு செய்வதால் பொருள் சிறிது குறைய நேரும்; நேரினும் புண்ணியம் பெருகி வருதலால் அது கண்ணியமாய்ச் செய்ய வுரியதாம். உடலுக்கு உறுதியாயுள்ள பொருளைச் சிறிதுகொடுத்து உயிர்க்கு உறுதியான புண்ணியத்தைக் கொள்வது பேருதியமே. தருமம் இருமையும் இன்பமாம்.

ஒப்புரவி னல்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. (குறள் 220)

ஒப்புரவு செய்வதால் பொருட் கேடு வருமாயினும் அது கேடு ஆகாது; ஆக்கமே யாம்; தன்னை விற்ருவது அதைச் செய்துகொள்ள வேண்டும் என்று முன்னம் இன்னவாறு குறித்த தேவர் இங்கே இப்படி உரைத்திருக்கிருர். அதற்கு இது நேரே மாறுபாடாய்த் தோன்றுகிறது. தோன்றினும் ஊன்றி நோக்கி உண்மையை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

அது, அறத்துப்பால். இது பொருட்பால்.

அது எல்லார்க்கும் பொது; இது அரசனுக்குச் சிறப்பு. ஆட்சி முறைக்கு வளமான மாட்சி.

அங்கே ஒப்புரவின் தலைமையை உரைத்தார்.

இங்கே பொருளின் நிலைமையை உணர்த்துகிறார்.

ஆதலால் அதனோடு இது மாறுபடாமை அறிக.

உளவரை தூக்கி ஒப்புரவு செய்; நல்லதேயாயினும் அளவு அறிந்தே செய்ய வேண்டும். அளவோடு அமைந்து வாழ்வதே வளமான அறிவாண்மை யாம்.

பொருளும் பொருளாளனும் வளமாயிருந்து வந்தால் தான் ஒப்புரவு, ஈகை, புகழ், புண்ணியங்களைச் செய்யலாம். பொருளை ஈவதில் மதியூகம் மருவியுளது.

தனது குடிவாழ்க்கை மிடிவாய்ப்பட்டுப் பழுதுபடாதபடி பொருளைக் கவனமாய்ப் போற்றிவர வேண்டும்.

**தனக்குப்போய்த் தானம்** என்பது முதுமொழியாய் வந்துளது. உரிய உணர்வு அரிய ஞானமாகிறது.

தன்னையும் தனது பொருளையும் நன்னயமாய்ப் பேணி வருபவனே மன்னவனாய் நின்று மன்னிய அறங்களைச் செய்து மாட்சி அடைந்து கொள்கின்றான்.

அளவறிந்து பேணுதவன் வளமழிந்து வருந்த நேர்கின்றான். பிழையான உதவி பேரவலம் ஆகிறது.

வண்டலங் கல்கொள் மார்பரிச் சந்திரன்
அண்டும் ஓர்முனிக் காத்தரும் வண்மையால்
பெண்டு பிள்ளை பெருந்திருப் போய்விடக்
கொண்ட துன்பம் குறிக்கவும் கூடுமோ? (குமணம்)

உளவரை தூக்கி ஓர்ந்து சிந்தியாமல் ஒப்புரவு செய்தமையால் **அரிச்சந்திரன்** அரிய பெரிய அரச திருவை யிழந்தான்; உரிய மனைவியையும் உயர் குல மகனையும் பிரிந்தான்; தானும் அடிமையாய்ப் புலையனுக்கு ஏவல் செய்தான்; இந்த நிலைமையை நினைந்து சிந்திக்க வேண்டும் என்று குமண மன்னனுக்கு அவன் தம்பி இன்னவாறு பொருளறிவைத் தெளிவுறுத்தியிருக்கிறான். பொருளைப் பேண நேர்ந்தவர் அதனைப் பலவகைகளிலும் தலைமையாக் காண நேர்கின்றார்.

தானம் அறியாமல் தானம் புரியினே
மானம் அழிந்து மதிப்பொழிந்து - மானவர்கள்
எள்ளி யிகழ இழிவர் இதனை நீ
உள்ளி யுணர்க வுடன்.

நிலை தெரியாமல் உபகரிப்பவன் நிலைமையை இது விளக்கியுளது. தானம் = இடம் பொருள்களின் நிலை.

முந்நூறு ஊர்களையுடைய குறுநில மன்னனான பாரி பொருளைப்பொருளாகப் போற்றாமல்எல்லார்க்கும் வாரி வழங்கினான்; பின்பு யாதும் இல்லாதவனாய் இளைந்து நின்றான். அல்லல்கள் பலவும் அடைந்தான்.

பாரி குமணன் பலர்க்கும் உதவியாய்
வாரி எதையும் வழங்கினார்—நேரும்
பொருள் நிலையைப் போற்றாமல் போனதால் மாறி
மருள் நிலையில் நின்றார் மருண்டு.

உளவரை தூக்காத ஒப்புரவாண்மையால் வளவரை யிறந்து இவர் வருந்தியுள்ளதை இதில் அறிந்து கொள்கிறோம். நிலைமை தெரிவது தலைமையான அறிவாம்.

அறமே ஆயினும் புகழே ஆயினும் தன்குடி நிலை குலையுமாறு பொருளைச் செலவிடலாகாது. எதையும் சமன்செய்து சீர் தூக்கி அமைதியாய் ஆய்ந்து நோக்கியே எவ்வழியும் சீர்மையுடன் ஒப்புரவு செய்ய வேண்டும்.

வாழ்வெல்லாம் பொருளால் வளர்ந்து வருதலால் அதனை யாண்டும் உரிமையோடு ஓர்ந்து போற்றி வருவது அறிவின் ஏற்றமாய்த் தெளிய வந்தது.

எல்லைமீறி ஈதல் புரிபவர் நல்ல செல்வங்களை இழந்து வறியராய் அல்லலுறுவர். இது விரோசனன் பாலும், அரிச்சந்திரனிடமும் அறிய வந்தது.

சரிதம்.

விரோசனன் என்பவன் அசுரகுல வேந்தன். அதிசய ஆற்றல்களும் அரிய பெரிய செல்வ வளங்களும் உடையவன். பலவகை நிலைகளிலும் இவன் தலைமை எய்தி யிருந்தான். சுதேவி என்னும் அழகிய மங்கையை

மணந்து இனிய போகங்களை நுகர்ந்து எவ்வழியும் இன்பச் சுவைகளில் திளைத்து வந்தான். அருந்தல் பொருந்தல்களை உயர்வாக் கொண்டு இந்த உலகத்தில் அனுபவித்து வருகிற போக சுகங்களை யன்றி வேறு முத்தியின்பம் உண்டு என்பது புத்தியின்மையாம் என்று எங்கும் இவன் புத்தி போதித்து வந்தான். **உலகாயதம்** என்னும் மதக்கொள்கைக்கு இவன் மூல முதல்வனாய் முன் நின்றான். இவனது அறிவுநிலை வறிதே உலக விசித்திரமாய் நிலவி எங்கும் பரவி வந்தது.

கண்களால் நேரே நாம் கண்டுகளித்
துவக்கின்ற காட்சி யின்பம்,
பெண்கள்பால் நுகர்கின்ற பேரின்பம்,
இவையன்றிப் பிறிது வேறே
எண்களால் உண்டென்று மருண்டெண்ணும்
மறுமைமுத்தி என்ப எல்லாம்
மண்கள்பால் அறியாத மானுடர்தம்
மருளான மடமை யாமே. (சார்வாகம்)

இவ்வாறு கருதிவந்த இவன் அறிவிலும் திருவிலும் ஆற்றலிலும் வேறு எவ்வகையிலும் தான் சிறந்தவன் என்று எண்ணி இறுமாந்திருந்தான். யாரேனும் தன்னை வியந்து புகழ்ந்து பேசினால் அவர்க்கு யாவும் வாரிக் கொடுப்பது இவனிடம் வழக்கமாய் வளர்ந்திருந்தது. தற்புகழ்ச்சியில் தன்னை மறந்திருந்தமையால் பலரும் வந்து பலவகையிலும் நயந்து மொழிந்து இவன் பொருளைக் கவர்ந்து போயினர். முடிவில் வறியனாயினன். அரசதிருவை இழந்து வறுமையடைந்த இவன் பின்பு மறுகி நொந்தான். அளவு அறியாமல் செலவு செய்ய நேர்ந்தவன் குடி விரைந்து கெடும்; மிடி படிந்து மடிந்து போம் என்பதை இவன் நெடிது விளக்கி நின்றான்.

**அரிச்சந்திரன்.**

சத்திய சீலனான இந்த உத்தமன் உயர்ந்த குண நலன்கள் நிறைந்தவன். எவ்வழியும் செவ்விய பெருந் தகையாளன். வசிட்ட முனிவரோடு வாதாடி வன்சினம்

கொண்ட விசுவாமித்திரர் இவனை வஞ்சிக்க மூண்டு நேரே வந்தார். தாம் செய்யப்போகிற அரிய வேள்விக் குப் பெரிய பொருள் தேவை; அவை யாவும் நீ தந்தருள வேண்டும் என்று அவர் தந்திரமாய் வேண்டினர். வேண்டவே இந்த ஆண்டகை வேண்டிய யாவும் தருகி றேன் என்று உறுதி கூறினன். கூறவே அவர் குறித்த பொருள் அளவைத் திருத்தமாகத் தெரிய உரைத்தார்.

மானவன் சொல மாமுனி நோக்கியே
யானை மேல்நின்று எறிந்த கவண்சிலை
போன தூரம் பொருள்குவிப் பாய்எனின்
மோன வேள்வி முடித்திட லாம்என்றார்.

முனிவர் மொழிந்துள்ள இந்தப் பொருளின் எல்லை யைக் கருதியுணர்பவர் எவரும் உள்ளம் மறுகி யிரங்கு வர். வேண்டியதைத் தருவதாக வாக்குத் தத்தம் செய்த படியால் இம்மன்னன் யாவும் அவருக்கு உரிமையாக் கொடுத்தான். "வாயினல் சொன்னல் போதாது; நீரை வார்த்துத் தானமாத் தத்தம் செய்து தருக" என்று அவர் கூறினர். அவ்வாறே இவன் தந்தருளினன்.

பாரை வார்த்தையி னல்தரற் பாலதோ?
தாரை வார்!எனக் கௌசிகன் சாற்றிட
நாரை வாய்கயல் பாயும் நறுந்தட
நீரை வார்த்தனன் நீபுவி ஆள்கென. (1)

வையம் நின்னது; மாநகர் நின்னது;
வெய்ய வாசியும் வேழமும் நின்ன;பொற்
செய்ய தேர்களும் செல்வமும் சேவிக்கும்
தைய லார்களும் தானையும் நின்னவே. (2)

(அரிச்சந்திரம்)

நேர்ந்துள்ள நிலைமை நீர்மைகளை இதில் ஓர்ந்து கொள்கிறோம். உபகாரமாய் யாவும் அவருக்குக் கொடுத் துவிட்டமையால் வறுமையாளனாய் மனைவி மக்களோடு வெளியேறி இவன் அயலே அல்லலுழந்து போனன். உளவரை தூக்காத ஒப்புரவாண்மையால் வளவரை வல்லைக் கெடும் என்பதை எல்லோரும் இவ்வேந்தன்பால் கண்டு உள்ளம் கலங்கி உரிமையுடன் இரங்கி நின்றார்.

வல்லார்க்கும் மாட்டார்க்கும் அறமேநன்று
என்றுரைப்பார்; மறம்நன்று ஆமோ?
அல்லார்க்கும் குழல்மடவீர்! அறமேநன்று
என்றுரைப்பார் அதுநன்று ஆகில்
நல்லார்க்கும் தீயார்க்கும் எல்லார்க்கும்
ஒருமையினுல் நடவா தென்னே?
எல்லார்க்கும் உளதாகில் எம்கோனுக்கு
இலையானது என்னே? என்பார். (1)

என்றலமந்து அனைவோரும் வயிறுஅலைத்து
விழுந்துஏங்கி இரங்கும் காலை
கன்றினெடும் பிடியினெடும் கிளையினெடும்
வனம்புகுதும் களிறே போல
இன்றளித்ததுஅருள் முனிவர்க்கு ஏற்றனவோ
ஏற்றிலவோ என்னு ஏங்கி
குன்றனைய மதில்கடந்தே தனிநடந்து
சரையுவினைக் குறுகினுனே. (2)

அரச திருவை இழந்து அரிச்சந்திரன் போயுள்ள அவல நிலையை அறிந்து உலகம் இவ்வாறு மறுகியுளது.

**நிலைமையை ஓராமல் நீண்டுதவ நேரின்**
**தலைமை யழிந்து படும்.**

ஒப்புரவையும் ஓர்ந்து செய்.

**இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.**

1 வலி நிலைகளை அறிந்து வினைகளைச் செய்க.
2 ஒல்வதை உணர்ந்து ஓர்ந்து துணிக.
3 வலியறியாமல் ஊக்கின் நலிவுற நேரும்.
4 அளவறிந்து அமைந்து ஒழுகு.
5 மெலியரெனினும் பலரைப் பகைக்காதே.
6 எல்லைமீறிச் செல்லின் அல்லலாம்.
7 வருவாயின் அளவை அறிந்து வழங்குக.
8 வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்யாதே.
9 அளவறியாத வாழ்வு அழிவுறும்.
10 உளவரை உணர்ந்தே ஒப்புரவும் செய்.

சு அ-வது வலியறிதல் முற்றிற்று.

# நாற்பத்தொன்பதாவது அதிகாரம்

## காலம் அறிதல்.

அ∴தாவது கருமங்களைச் செய்தற்கு உரிமையான கால நிலைகளைக் கருதியுணர்ந்து உறுதிசெய்து கொள்ளுதல். வாய்ந்துள்ள வலிமைகளை ஓர்ந்து தேர்ந்து வேந்தன் வினைசெய்ய வேண்டும் என்று முன்பு கூறினார்; இதில் உரிய பொழுதை நழுவ விடாமல் தொழில் புரிய வேண்டும் என்று உணர்த்துகின்றார். உற்ற வலியும் உரிய காலத்துடன் உறவாய்த் தோய்ந்து வரும் அளவே உரமாய் வெற்றி பெற்று விளங்கும் ஆதலால் அதன் பின் இனமாய் இ∴து இணைந்து நின்றது.

481. திண்டோட் செழியனுமேன் தேர்ந்து பொழுதறிந்து
கொண்டுசென்றான் போர்மேல் குமரேசா-கண்ட
பகல்வெல்லும் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. (க)

இ-ள்

குமரேசா! வலி மிகுந்த செழியனும் ஏன் பொழுது அறிந்து போர் மேல் சென்றான்? எனின், கூகையைக் காக்கை பகல் வெல்லும்; ஆகவே இகல் வெல்லும் வேந்தர்க்குப் பொழுது வேண்டும் என்க.

உம்மை அம் மன்னனது வலிமிகுதியை உணர்த்தி நின்றது. தோள் வலியும் ஆள் வலியும் உடைய அவன் நாள் வலியை நாடி நின்றே வினைமேல் சென்று வென்றுள்ளான். உரிய காலமே அரிய வெற்றி என்கிறது.

கூகையைக் காகம் பகலில் வென்றுவிடும்; ஆகையால் பகையை வெல்ல வல்ல அரசர்க்கு உரிய இனிய பொழுது உரிமையாக வேண்டும்.

பகல்=சூரிய ஒளி வெளிவீசி நிற்கும் காலம். ஒரு நாளின் பாதியாய்ப் பகுந்து வந்துள்ளமையால் **பகல்** என நேர்ந்தது. எல் அல் என இரு பொழுதுகளுள்ளன.

இகல்=பகை; போர். எதிரியாய் இகலி நின்று இடர் இழைப்பவர் பகைவர் என நேர்ந்தார். அவரை

வென்று அடக்குவது வேந்தருக்கு உரிமையான கடமை யாயது. வெல்லுதற்கு உரிய சமையம் பார்த்துச் செல்லுவது நல்லது. அந்த நன்மையைத் தழுவிச் சென்றால் வன்மையுடையாரையும் எளிதே வென்று கொள்ளலாம்.

கூகை=கோட்டான். ஆந்தை இனத்தைச் சேர்ந்தது.

கூகை குடிஞை குராஅல் கௌசிகம்
ஊமன் நிசாசரி உலூகம் கோட்டான். (பிங்கலந்தை)

கூகைக்கு இவ்வாறு ஏழு பெயர்கள் இசைந்துள்ளன. யாவும் காரணக் குறிகளுடையன. இரவில் மாத்திரம் சஞ்சரிப்பது ஆதலால் நிசாசரி என்று ஒரு பேர் இப் பறவைக்கு உரிமையாய் நேர்ந்தது. நிசி=இரவு.

கூ என்று கூவுவது கூகை. கா என்றது கத்துவது காக்கை. இயற்கையான ஒலிக் குறிப்பால் பெயர்கள் இங்ஙனம் வியப்பாய்ப் பிறந்திருக்கின்றன.

காக்கையினும் கூகை மிக்க வலியுடையது. ஆனால் அதற்குப் பகலில் கண் தெரியாது; இரவில்தான் தெரியும்; பகல் எல்லாம் மறைந்து ஒடுங்கியிருக்கும்; பகலில் காக்கைக்குக் கண்கள் நன்கு தெரியும் ஆதலால் அப்பொழுது துணிந்து சென்று கூகையைக் கொத்தித் துன்புறுத்தி வெல்லும்; கூடுமானால் கொல்லும்.

மெலியவராயினும் காலம் வாய்த்தால் வலியவரையும் வென்று மீளுவர் என்பது இதனால் விளங்கிநின்றது. இதனை ஈண்டு எடுத்துக் காட்டிக் காலத்தின் சிறப்பைத் தெளிவாக விளக்கியருளினர். காகத்தை நோக்கியாவது பொழுதைப் போற்றி வினைகளை ஆற்றி விவேகமாய் வேந்தர் ஒழுகவேண்டும் என்பது தெளிய வந்தது.

இடத்தொடு பொழுதும் நாடி
எவ்வினைக் கண்ணும் அஞ்சார்
மடப்பட லின்றிச் சூழ
மதிவல்லார்க்கு அரியது உண்டோ?
தடத்திடைக் காக்கை ஒன்றே
ஆயிரம் கோடி கூகை

இடத்திடை யழுங்கச் சென்றுங்கு
இன்னுயிர் செகுத்த தன்றே.
(சீவகசிந்தாமணி 1927)

பொழுது அறிந்து சென்றதால் ஒரு காக்கை பல கூகைகளை வென்றது; ஆதலால் அரசர் காலம் தெரிந்து வினைசெய்ய வேண்டும்என்று சீவகமன்னனுக்கு அவன் தாய் இவ்வாறு அறிவு கூறியிருக்கிறாள்.

காலம் அறிந்து கருமம் செய்கின்ற காகம் கூகைகளைக் கண்டாவது மனிதர் யூக விவேகங்கள் தோய்ந்து உரியபொழுது ஓர்ந்து அரிய காரியங்களைச் செய்து கொள்ள வேண்டும். பறவைகளிடமும் மனிதனுக்குப் பருவம் தெரிகின்ற படிப்பறிவுகள் படிந்துள்ளன.

பாரதப் போர் முடிந்த பதினெட்டாம் நாள் இரவில் அசுவத்தாமன் கிருதவன்மன் முதலிய வீரர்கள் ஓரிடத்தில் கூடியிருந்தனர்; தமக்கு நேர்ந்த தோல்விகளை நினைந்து நினைந்து இனைந்து வருந்தினர். இனி என்ன செய்வது? என்று அவர் ஏங்கியிருக்குபோது அயலே நின்ற ஆலமரத்தில் அடைந்திருந்த காகங்கள் பரிதாபமாய்க் கத்திக் கதறிப் பதறிச் சிதறின. கீழே தங்கியிருந்த அவர் மேலே கூர்ந்து பார்த்தனர். பகலில் காக்கைகளால் துன்பமடைந்த கோட்டான் ஒன்று நள்ளிரவில் அங்கே புகுந்து அவற்றை நாசப்படுத்தியது. இந்தப் பறவைப் போரை நேரே கண்ட பாரத வீரர்கள் தீரமாய்த் தெளிந்தனர். காலம் அறிந்து சென்றால் எவரையும் வென்று விடலாம் என்று கருதித் துணிந்தனர்; உறுதி பூண்டு எதிரிகளின் பாசறையை நோக்கி ஊக்கிப் போனார். அன்று அவர் புதிய உணர்வுடன் ஊக்கிச் சென்றநிலை அதிசயக் காட்சியாய் நின்றது.

வேலமர் தடக்கை வீரரிப் பாடி
வீடுசென் றணைதலும் புறத்தோர்
ஆலமர் சினையில் பல்பெருங் காகம்
அரும்பகல் அழிந்த கூகையினால்
சாலவும் இடருற் றலமரக் கண்டு
தம்மிலே முகமுகம் நோக்கிக்

காலமும் இடனும் அறிந்தமர் செகுத்தல்
கடன்எனக் கருதினர் அன்றே. (பாரதம்: 18)

மேலே நிகழ்ந்துள்ள கூகையின் வெற்றி நிகழ்ச்சிகளை இது நேரே நன்கு விளக்கியுள்ளது.

முன்பு காகம் வென்றதைக் கண்டோம்; இங்கே கூகை வென்றுள்ளதைக் காண்கின்றோம். காக்கைகளுக்குப் பகலில்தான் கண் தெரியும்; இரவில் தெரியாது; கூகைக்கு இரவில் நன்றாகக் கண் தெரியும் ஆதலால் அந்தக் காலம் அதற்கு வெற்றியைத் தந்தது. இந்த விசித்திர நிலைகள் காலத்தின் வலிமைகளைச் சாலவும் தெளிவுறுத்தியுள்ளது. காகம் கூகைகளிடமிருந்து காலநலனை யுணர்ந்து வேந்தரும் விவேகம் அடைந்துள்ளனர்.

உருவக் கோயிலுள் இரவுக் குறிவயின்
வெருவக் குழறிய விழிகட் கூகைக்
கடுங்குரல் அறியாள் கதுமென நடுங்கினள்
ஓடுங்கீ ரோதி. (பெருங்கதை 3 - 22)

கூகை இரவில் கூவுவது; கடுங்குரலுடையது; விழி கண் உடையது; இருளில் பொருளறியும் வலியினது என்பதை இதனால் ஈண்டு அறிந்து கொள்கிறோம்.

உரிய பொழுதில் இகல் வெல்லும் இயல்பினையுடையது ஆதலால் இது இங்கே தகவாய் அறிய வந்தது.

வரியு டற்பொறி மாசுண வாய்ப்படு மதம்பாய்
கரியை மீட்டவன் கைப்படை தொலைந்த காலத்து
நரியின் வாய்த்தசை மீட்கவும் வலியின்றி நலிவான்
பரிய கூகையை வெல்லுமே காகமும் பகலில்.
(திருக்குற்றாலப் புராணம், 17)

பெரிய கரியை வெல்ல வல்லவன் கால வேற்றுமையால் சிறிய நரியையும் வெல்ல முடியாமல் நின்றான். அந்நிலைக்குப் பகலில் வலியும் இரவில் மெலிவுமுடைய காகத்தை உவமையாக இது காட்டியுளது. பகல் வெல்லும் கூகையைக் காக்கை என்னும் தேவர் வாக்கைப் பலரும் உரிமையோடு உறவாய்ப் போற்றியுள்ளனர்.

பருவ காலமே சருவ வலிமைகளும தருகிறது.

கூதிர் வேனில் என்றிரு பாசறை. (தொல்காப்பியம்)

குளிர் காலத்திலும் வசந்த காலத்திலும் இகல் வெல்லக் கருதி வேந்தர் போர் மேல் செல்வர் என்பதை இதனால் ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம்.

காலம் கருதிக் கருமம் செய்யும் தகைமை உழவர் வணிகர் முதலிய எவ்வகையினர்க்கும் வேண்டுமாயினும் யாவர்க்கும் ஆதரவாய் நிற்கும் வேந்தர்க்கு யாண்டும் உறுதியுடன் வேண்டும் என்பதை ஈண்டு வியனுக விளக்கினர். எவ்வளவு வலியுடைய ராயினும் உரிய பொழுதுடன் மருவியே தொழில்புரிய வேண்டும்.

இழிவான பறவைகளும் பகை வெல்லும் வகையை அறிந்துள்ளன. காலம் துணையாக வேலை செய்கின்றன. ஆகவே ஞாலம் ஆளும் வேந்தர்க்கும் காலத்தின் மாட்சியைக் காட்சியாக் காட்ட அவை சாட்சியாய் நேர்ந்தன.

ஆகவம் உற்ற மருவார் உடலை அருந்துவித்துக்
காக இனத்தை வளர்த்தாரென் றெண்ணிக் கருங்கமுகில்
மாக முகில்படர் ஆரூர்த் தியாகர் வரையணங்கே
கூகை குழறிப் பகைதீர்த்த வாநம் கொழுநரையே.
(திருவாரூர்க்கோவை)

இரவில் தன்னை நாடிவந்த காதலன் கூகைக் குரலைக் கேட்டு அஞ்சி நீங்கினன். மறுநாள் அதனை அறிந்த காதலி இவ்வாறு அதை இகழ்ந்திருக்கிருள். போரில் பகைவரை வென்று ஊன்களையூட்டிக் காகக் கூட்டத்தை அவர் வளர்த்துள்ளார் என்று கருதி இந்தக் கோட்டான் இப்படிக் கோட்டமாய்க் கேட்டை விளைத்திருக்கிறதே! என வெறுத்துள்ளாள். காக்கைக்கும் கூகைக்கும் பகையுண்மையை இது இவ்வாறு நயமாக் காட்டியுளது.

முரண்தரு வேலார்க் கியல்கவ்
வரியில் மொழியவரும்
இரண்டுடன் முன்னதற் கஞ்சாரே
டொன்பதிரைதல் வெண்ணெய்!

திரண்டுறு வேலையில் தாழிச்
சிதைவொக்கும் செய்நகையால்
அரண்டுக ளாக்கிறை கோடீச்சுரம்
அன்ன ஆயிழையே! [கோடீச்சுரக்கோவை)

காக்கைக்கு அஞ்சுகின்ற கூகை என்று இது இப்படிக் கூறியுளது. வேலை=சமையம்.

ககர வருக்கத்தில் முதல் இரண்டு எழுத்துக்கள் பின்னும் முன்னுமாக அமையின் காகம்; ஆருவது ஒன்பதாவது எழுத்துக் கூடின் கூகை. காக்கை கூகைகள் இகலுடையன என்பதை இவ்வண்ணம் பலவகைளிலும் கால வகை தெரிய நலமாக் குறித்திருக்கின்றனர்.

மற்காக்கும் மணிப்புயத்து மன்னன் இவன் மழவிடையோன்
விற்காக்கும் வாள் அமருள் மெலிகின்ருன் என இரங்கி
எற்காக்கும் முடிவின்னேர் படையீந்தார் என வேந்தர்
அற்காக்கை கூகையைக்கண்டு அஞ்சினவாம் என அகன்ருர்
(இராமா: பால; கார்முக: 23)

சனக மன்னன் சிவபெருமானது வில்லைப் பாது காத்து வந்தான். அம் மன்னனேடு மாறுபட்டு அரசர் பலர் நீண்ட காலம் போராட நேர்ந்தனர்; அமரர் அவ னுக்குப் படை உதவி புரிந்தனர்; புரியவே இரவிலே கூகையைக் கண்ட காக்கைபோல் அவர் அஞ்சி அகன்ற னர் எனச் சதானந்தர் இவ்வாறு கூறியுள்ளார்.

உரிய காலத்தை ஓர்ந்து தேர்ந்தே வேந்தர் வினை புரிவர். அதனுல் அவர் வெற்றி பெற்று விளங்குவர்.

இது செழியன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவ்வேந்தன் பாண்டியர்குலத் தோன்றல். மதுரை நகரிலிருந்து மாட்சிமையாய் ஆட்சி புரிந்தவன். பல கலைகளையும் பயின்று தெளிந்தவன். தமிழ் மொழியில் விழுமிய புலமையுடையவன். அரிய பல குணநலன்கள் அமைந்தவன். பெரிய போர் வீரன். பெருங் கொடை யாளன். சீரிய நீர்மைகள் நிறைந்திருந்தமையால் இவ

னது இசை திசைகள்தோறும் பரவி வந்தது. வயதில் இளையவனாயிருந்தும் முதிய புகழோடு இவன் ஒளி மிகுந்து வருவதை யறிந்து சேரனும் சோழனும் பொறாமை கொண்டு நின்றனர். **திதியன், எழினி** முதலிய ஐந்து குறுநில மன்னரையும் துணைசேர்த்துப் பெரும் படைகளோடு அந்தப் பேரரசர் இவனோடு போராட மூண்டனர். உரிய காலத்தை யறிந்து இவனும் போர் மேல் எழுந்தான். எதிரிகளின் நிலைமைகளை எள்ளி யிகழ்ந்து அதுபொழுது இவன் கூறிய தீர வுரைகள் வீர ஒளிகளை வீசி நின்றன. அயலே வருவன காணுக.

நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்;
இளையன் இவனென உளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாமென்று
உறுதுப் பஞ்சா துடல்சினம் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்ககப் படேஎன் ஆயின், பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியன்எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக;
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை;
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே. (புறம் 72)

"பெரிய சேனைத் திரள்களையுடையேம் என்று உள்ளம் செருக்கிச் சிறுமொழி கூறிச் செருச் செய்ய வந்த வேந்தர்களை இன்று அடியோடு வென்று தொலைத்து வெற்றிவிருது பெற்றுவருவேன்; அவ்வாறு வெல்லேன் ஆயின், நான் செங்கோலை யிழந்த கொடுங்கோலனாய், இரப்போர்க்கு இரங்கி ஈயாத வன்கண்ணனாய், குடிகள்

பழிதூற்றும் கொடியவனுய் முடிவேனுக; எனது நாடும் மாங்குடிமருதனுர் முதலிய மாண்புடைய புலவர்களால் பாடாது ஒழிக'' என்று இந்த வீரக்குரிசில் இவ்வாறு வீர சபதம் கூறி வீருேடு சென்று எதிரிகள் யாவரையும் ஒருங்கே வென்று வெற்றித்திறலோடு மீண்டு வந்தான். அன்றுமுதல் **தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்** என்று பெரிய வெற்றிப் பேரைப் பெற்று விளங்கினுன். உற்றுள்ள நிகழ்ச்சிகளால் இக்கொற்றவனுடைய உயர் பெருந்தகைமைகளை உய்த்து உணர்ந்து கொள்கிருேம். உரிய காலத்தை ஓர்ந்து சென்றதால் அரிய பகைவர்களை அடங்க வென்ருன். இகல் வெல்லும் வேந்தர்க்கு இயைந்த பொழுது உறுதியாய் வேண்டும் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்ருன்.

**உற்ற பொழுதை உணர்ந்து வினைபுரியின்**
**வெற்றி விளையும் விரைந்து.**

*பொழுதைப் போற்றி வாழ்.*

---

482. பண்டு பருவத்தைப் பார்த்துக் களப்பலிமுன்
கொண்டானேன் கண்ணன் குமரேசா-கொண்ட
பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு. (உ)

இ-ள்.

குமரேசா! பருவம் பார்த்துக் களப்பலியை ஏன் கண்ணன் முன்னதாகவே செய்துகொண்டான்? எனின், பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத் தீராமை ஆர்க்கும் கயிறு என்க.

பருவம் படிந்துவரின் பாக்கியம் சுரந்து வெற்றியும் மேன்மையும் விரைந்து வரும் என்கின்றது.

உரிய காலத்தை ஓர்ந்து அதனேடு பொருந்தி நடத்தல் செல்வத்தை நீங்காமல் நிலைத்திருக்கும்படி கட்டிவைக்கும் கயிரும். கால பாசம் காண வந்தது.

**ஒழுகல் கயிறு** என்றது அந்த ஒழுக்கத்தின் நிலைமை தலைமை வலிமைகளைத் தெளிவுறுத்தி நின்றது.

காலம் என்பது எல்லை யாதும் இல்லாதது. நிமிடம் நாழிகை நாள் வாரம் பக்கம் திங்கள் என இன்னவாறு பல கூறுபாடாய் வாழ்க்கையில் அது தோய்ந்து வருகிறது. அதன் வரவை உறவாக்கிக் கொண்டவன் அரிய செல்வங்களை அடைந்து பெரியவனாய் உயர்ந்து வருகிறான். பொழுது பொன் எனப் போற்றவுரியது.

உரிய பருவத்தில் உரிய காரியத்தை உரிமையுடன் செய்வது பெருமையாம். தக்க சமயத்தில் செய்வது மிக்க பலனை விளைத்து மேன்மையை அருளுகிறது.

பருவத்தே பயிர் செய்! (ஆத்திசூடி 22)

ஔவையார் இவ்வாறு அறிவுரை கூறியிருக்கிறார்.

பருவம் தவறினால் பலன் பழுதுபடும்; காரியம் கெடும் ஆதலால் கருமம் புரிபவர் காலத்தைக் கண்ணும் கருத்துமாய் எண்ணி முயல்கின்றார்.

அன்பின் நெகிழ வழிபட்டுக் கொள்ளாது
நின்ற பொழுதின் முடிவித்துக் கொள்வது
கன்றுவிட்டு ஆக்கறக்கும் போழ்தில் கறவானாய்
அம்புவிட்டு ஆக்கறக்கு மாறு. (பழமொழி 77)

கன்று குடிக்கும்பொழுது பசுவிலிருந்து பாலைக் கறந்து கொள்ளுதல்போல் உரிய சமையத்தில் காரியம் செய்பவன் சீரிய பலனை அடைகிறான் என்று முன்றுறையரையர் இங்ஙனம் கூறியிருக்கிறார். பருவத்தோடு ஒட்டி ஒழுக வேண்டும் என்பதை இந்த உவமை நன்கு தெளிவுறுத்தி இங்கு நயமா விளக்கியுள்ளது.

நாள்கூட்டம் மூர்த்தம் இவற்றொடு நன்றாய
கோள்கூட்டம் யோகம் குணனுணர்ந்து—தோள்கூட்டல்
உற்றானும் அல்லானும் ஐந்தும் உணர்வானல்
பெற்றானட் கொள்க பெரிது. (சிறுபஞ்சமூலம் 43)

நல்ல நேரத்தை நாடியறிந்தே மேலோர் வினைசெய்து மேன்மையுற்றுள்ளனர் என்று **காரியாசான்** இவ்வாறு குறித்துள்ளார். உரிய பருவம் பெரிய திரு.

காலம் கழிவது மனிதனுடைய வாழ்நாள் கழிவதாம்; ஆகவே இந்தஅரியபொழுதை வீணேபழுதுபடுத்தாமல் உரிய பருவத்தே செல்வம் புகழ் புண்ணியங்களைச் செய்துகொள்ள வேண்டும். அவ்வாறு செய்துகொள்பவரே அறிவு நலம் உடையராய் உய்தி பெறுகின்றார்.

காலமான கழிவதன் முன்னமே
ஏலு மாறு வணங்கிநின்று ஏத்துமின்!
மாலும் மாமல ராளெடு மாமறை
நாலும் வல்லவர் கோனிடம் நல்லமே. (தேவாரம்)

காலம் கழியுமுன்னரே பரமனை எண்ணிப் பரகதி பெறுங்கள்; அதுவே பிறவியின் பெரிய பயன் என்று அப்பர் இப்படி ஆர்வத்தோடு அருளியுள்ளார்.

காலமும் நாள்கழி யும்நனி பள்ளி மனத்தின் உள்கிக்
கோலம தாய வனைக்குளிர் நாவல ஊரன் சொன்ன
மாலை மதித்துரைப் பார்மண் மறந்துவா னேருலகில்
சாலநல் இன்பம்எய்தித் தவலோகத் திருப்பவரே.
(தேவாரம்)

காலம் வீணே கழியாதபடி நனிபள்ளி என்னும் பதியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைச் சிந்தியுங்கள். பிறவித் துயரங்கள் நீங்கிப் பேரின்பம் பெறுவீர்! இதனை மறந்து விடாமல் விரைந்து புரியுங்கள் என்று சுந்தரமூர்த்தி நாயனார் இங்ஙனம் போதித்திருக்கிறார்.

பருவத்தில் வந்து பயனுற்ற பண்பன்
அயனைப் படைத்த பரமன். (தேவாரம்)

இறைவனை இவ்வாறு திருஞானசம்பந்தர் குறித்துக் காட்டிப் பருவம் தவறாமல் உய்ய உரைத்திருக்கிறார்.

உற்ற சமையத்தில் வந்து அன்பர்க்கு உதவும் நம்பன்; அவனை நம்பி நலம் பெறுங்கள் என்று அருளியுள்ளார். பருவத்தோடு ஒட்ட ஒழுகலைக் கடவுளும்கூடக் கடைப்பிடித்திருக்கிறார். இதனை உணர்ந்தாவது காலம் அறிந்து ஒழுகிக் கருமம் புரிந்து மனிதர் கதிபெற வேண்டும் என்னும் மதிநலம் இதில் மருவியுள்ளது.

செல்வம் எவரிடமும் நிலைத்து நில்லாமல் நீங்கும் இயல்பினது. அதனை நிலையாக நிறுத்தி வைப்பது பருவகாலத்தில் செய்யும் கருமமே. தப்பி ஓடும் ஒருவனைத் தப்பாமல் பிணிப்பதற்கு உரிய கருவி கயிறே; அதுபோல் நீங்கி அலையும் திருவை நீங்காமல் செய்தருளுவது பருவ வினையே. செல்வம் அதனால் தொடர்ந்து வரும் ஆதலால் இங்ஙனம் சொல்லி யருளினர்.

உரிய பருவத்தில் உறுதியுடன் கருதி வினை செய்பவர் அரிய பெரிய திருவை அடைந்து கொள்ளுவர்.

இவ்வுண்மையைக் கண்ணன் காட்டி யருளினன்.

சரிதம்.

கண்ணனுக்குக் கருமவீரன் என்று பெயர். சிறந்த இராச தந்திரி. சாதுரிய சாகசமாய் எதையும் முடிக்க வல்லவன். பாரதப் போர் மூண்டபொழுது அதற்கு உரிய முறைப்படி களப்பலியூட்ட அரவானைத் துரியோதனன் முடிவு செய்திருந்தான். அமாவாசையன்று நடு நிசியில் காளிதேவி முன்பு அது செய்ய வுரியது. அவ்வாறு செய்தவன் வெற்றி பெற்று விளங்குவன். எதிரி இவ்வாறு தீர்மானித்து இருப்பதைக் கண்ணன் அறிந்தான்; கருதி யுணர்ந்தான். முன்னதாகவே அதனைச் செய்ய விரைந்தான். அமாவாசைக்கு முதல் நாளான சதுர்த்தசியில் வேத மந்திரங்களை ஓதிப் பிதிர்த் தேவதைகளுக்கு நீர்க்கடன் ஆற்றும்படி வேதியர்களை விரைவோடு தூண்டினன். யாவரும் அவ்வாறே செய்தனர். அதைக் கண்டு சூரியனும் சந்திரனும் திகைத்தனர். நாளை அல்லவா அமாவாசை; இன்று மறையோர் இவ்வாறு செய்வது முறையோ? என்று இருவரும் நேரே ஒருவரோடு ஒருவர் உசாவி நின்றனர். **அமாவாசை** என்பது கதிரும் மதியும் ஒன்று கூடும் தினமே ஆதலால் அவரது கூட்டுறவால் அது அன்று நன்கு அமைந்திருந்தது. அந்தப் பருவத்தில் கருதியபடி கண்ணன் களப்பலி யூட்டினன். காலத்தோடு ஒட்டி இந்தக் காரியத்தை வெற்றியாக முடித்தமையால் போரிலும் வெற்றித்

திருவைப் பெற்று மகிழ்ந்தான். பருவத்தோடு ஒட்ட ஒழுகுபவர் திருவினைத் தீராமல் சீரோடு ஆக்கிக் கொள்வர் என்பதை உலகம் இவன்பால் நோக்கி வியந்தது.

நீதியா நின்ற பதினைலாம் நாள்தன்னை
ஆதி அமாவாசை ஆக்கலாம்—சோதிமதி
ஆதித்த னோடே அமர்ந்திருக்கும் வேதியரால்
சாதித்துக் கொள்வதுகாண் சார்வு. (பாரத வெண்பா)

களப்பலி நாக கன்னிகை புதல்வன்
கருதலான் தனக்குநேர்ந் திடவும்
கிளப்பருந் திதியை மயக்கிவான் மதியம்
கிளரொளி அருக்கனைக் கேட்ப
வளப்படுந் திதியில் முந்துற எமக்கே
வழங்கிடும் படிமதி கொளுத்தி
உளப்பொலி வுடனே விசயனுக் கருளால்
உருளுடைக் கொடிகொள்தேர் ஊர்ந்தாய்!
[பாரதம் 17-ம் போர்)

காலம் கருதிக் கண்ணன் செய்து முடித்துள்ள கரும வீரத்தைத் தருமன் இவ்வாறு வியந்து புகழ்ந்து மகிழ்ந்து துதித்துள்ளான். பருவம் தவறாமல் வினை செய்தமையால் அரச திரு தலைமையான உரிமையுடன் நிலையாக நேர்ந்து நீங்காமல் நன்கு நிலவி நின்றது.

**உரிய பருவத்தை ஓர்ந்து வினைசெய்**
**அரிய திருவாம் அது.**

தக்க பருவத்தைத் தவற விடாதே.

---

483. சென்றரிய தெவ்வெயிலைச் செம்பியன் வென்றுமுன்
குன்றுதேன் நின்றான் குமரேசா—என்றும்
அருவினை என்ப வுளவோ கருவியான்
காலம் அறிந்து செயின். (௩)

இ-ள்.

**குமரேசா!** செயற்கு அரிய வினையைப் பருவம் அறிந்து செம்பியன் ஏன் செய்து முடித்தான்? எனின்,

கருவியால் காலம் அறிந்து செயின், அருவினை என்ப உளவோ? என்க.

காலம் எதையும் முடித்து அருளும் என்கிறது.

உரிய கருவிகளுடன் உற்ற காலத்தை உணர்ந்து செய்தால் அரிய வினைகள் என்பன யாதும் இல்லை.

கருமங்கள் பலவகை நிலைகளில் பரவி யுள்ளன. அவரவர் நிலைகளுக்குத் தக்கபடி இயன்ற காரியங்களை யாவரும் செய்து வருகின்றனர். உழைப்புகளால் பிழைப்புகள் நடந்து வருதலால் கருமம் புரிவது மனிதரது கடமையாயது. இருவினை வயத்தராய் வந்துள்ள மக்கள் எவ்வழியும் தக்க வினைகளைச் செய்தே தம் வாழ்க்கைகளைத் தகுதியா நடத்தி வருகின்றனர்.

மாந்தர் வினைகளைவிட வேந்தர் வினைகள் வேறுபாடுகள் உடையன. வியனான நிலைகளில் விரிந்துள்ளன. நாட்டின் வளங்களுக்கு வேண்டிய காரியங்களை நாடிச் செய்தலும், கள்வர் கொடியர் முதலானவர்களைக் கடிந்து நீக்கலும், வழிவகைகளை அறிந்து பகைவரை வென்று அடக்குதலும் முதலிய வினைகளைக் காலம் அறிந்து கருத்துடன் செய்துமுடிக்க வேண்டும்.

செருவின் ஒட்டலரை வென்று
  திறைகொண்டு நாடு காத்துப்
பொருளினை ஈட்டிக் கள்வர்
  புல்லலர் சுற்ற மாதி
பருகுதல் இலாமைக் காத்துப்
  பயிலறம் ஆதி மூன்றின்
மருவுற விடுத்துச் செங்கோல்
  வளர்ப்பது மாட்சி யாமே. [விநாயக புராணம்]

அரசர் புரியவுரிய அரிய வினைகளை இதில் அறிந்து கொள்கிறோம். இத்தகைய பெரிய காரியங்களைச் செய்ய நேர்ந்துள்ள வேந்தர் அதற்கு உரிய காலத்தையும் உற்ற துணைகளையும் தக்க சாதனங்களையும் ஓர்ந்து

கொண்டு தேர்ந்து செய்தால் எத்தகைய கருமங்களும் எளிதே முடியும். வெற்றி வீறுடன் அவர் விளங்கிநிற்பர்.

அருவினை என்றது பிறர் செய்தற்கு அரியது என அதன் அருமையும் பெருமையும் தெரிய நின்றது. உளவோ? என்ற வினா செய்ய முடியாத காரியம் யாதும் இல்லை என்பதைக் குறிப்பால் உணர்த்தியது.

கருவி என்றது வினையை நன்கு செய்து முடித்தற்கு உரிய உபகரணங்களை. உழுதற்கு ஏர், அரிதற்கு அரிவாள், எழுதுதற்குக் கோல், நடத்தற்குக் கால் போல் வினைக்கு வேண்டிய கருவிகளை நயமாக நாடிக்கொண்ட போதுதான் அது எளிதாய் இனிது முடிந்து வரும்.

உற்ற கருவிகள் உறுதியாய் அமைந்தாலும் உரிய காலத்தை ஓர்ந்தே வினைசெய்ய வேண்டும். பருவம் தோய்ந்து வினை செய்த போதுதான் கருதிய கருமம் எவ்வழியும் இனிமையாய்ப் பயன் தோய்ந்து வரும்.

காலம் அறிந்தாங் கிடம்அறிந்து செய்வினையின்
மூலம் அறிந்து விளைவறிந்து—மேலுந்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்து
ஆள்வினை ஆளப் படும். (நீதிநெறி 52)

வினை செய்ய வேண்டிய வித்தக நிலைகளை இதில் உய்த்துணர்ந்து கொள்ளுகிறோம். கருவி இடம் துணை முதலிய எவற்றினும் காலத்தை அறிந்து கொள்ளுவது தலைமை ஆதலால் **காலம் அறிந்து** என்று இதனை முதலில் குறித்தார். உரிய காலம் அறியவே அரிய வினைகளை அது யாண்டும் எளிதே முடித்தருளுகிறது.

ஏற்ற காலத்தை அறிந்து செய்பவர் எந்தக் காரியத்தையும் எங்கும் நன்கு முடித்துக் கொள்ளுவர்.

இவ்வுண்மை செம்பியன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் சோழ மன்னன். காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அரசு புரிந்தவன். சிபி மரபில் பிறந்தவன் ஆதலால் அந்த நம்பியின் பெயரியல் மருவி இவன் செம்பி

யன் என நின்றான். இவன் சிறந்த மதிமான். வீரம் கொடை நியாயம் முதலிய அரச நீர்மைகள் எல்லாம் இவனிடம் சீர்மையா யமைந்திருந்தன. இவனுடைய ஆட்சி யாண்டும் மாட்சியாய் நடந்துவந்தது. வருங்கால் சுராரி என்னும் அசுரர் தலைவன் அரிய வரபலங்களோடு பெரிய அரண் அமைந்த பெருநகரில் பெருமிதநிலையில் வாழ்ந்து வந்தான். திரிபுரங்களைப் போல அந்த மதிலரணும் அதிசய வலியுடையது; வான வீதியில் உலாவ வல்லது. அதிலிருந்து கொண்டு அமரரை அடங்க வென்று எவரையும் அடக்கித் தமருடன் அவன் தருக்கி நின்றான். அவனை வெல்ல முடியாமல் அல்லலுழந்து வந்த இந்திரன் முடிவில் இவனிடம் வந்து உரிமையுடன் வேண்டினான். இவ்வீரன் வென்று தருவதாக உறுதிகூறி விண்ணவர் வேந்தனை அனுப்பிவிட்டு எதிரியின் நிலைமைகளையெல்லாம் பலவகையிலும் உசாவி யறிந்தான். பின்பு அகத்தியமுனிவரைத் தொழுது வணங்கி யாவும் தெளிவாக வுணர்ந்தான். அரிய அந்த அரணின் மருமங்களையெல்லாம் நன்கு தெரிந்து கொண்ட இவன் உரிய கருவிகளோடு உற்ற காலத்தில் ஊக்கி எழுந்தான். வானவரும் அஞ்ச வலிமை கொண்டிருந்த அந்தத் தானவர்புரத்தைத் தகர்த்தெறிந்து அசுரர் திரளையும் அடங்க வென்று மடங்கலேறுபோல் இம் மன்னவன் வெற்றி வீறுடன் மீண்டு வந்தான். வானவர் கோனுடன் வானவர் யாவரும் இம் மானவீரனை வாழ்த்தி மகிழ்ந்தனர். உற்ற கருவிகளை ஆய்ந்து அமைத்துக் கொண்டு உரிய காலத்தில் ஊக்கிச் செய்தால் அரிய வினையையும் எளிதே முடித்து அவன் வெற்றி வீரனாய் விளங்குவான் என்பதை இக் கொற்றவன் நன்கு விளக்கி நின்றான்.

வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணம் காத்த உரவோன்யார்? அம்மானை!
ஓங்கரணம் காத்த உரவோன் உயர்விசும்பில்
தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண் அம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோர் அம்மானை.

[சிலப்பதிகாரம் 29]

ஓங்குயர் மலயத்து அருந்தவன் உரைப்பத்
தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன்.
(மணிமேகலை 1)

ஓங்கெயில் கதவம் உருமுச்சுவல் சொறியும்
தூங்கெயில் எறிந்த தொடிவிளங்கு தடக்கை
நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன். [சிறுபாண் 80]

ஒன்னார் உட்கும் துன்னரும் கடுந்திறல்
தூங்கெயில் எறிந்தநின் னூங்கணோர் (புறம் 39)

திறல்விளங் கவுணர் தூங்கெயில் எறிந்த
விறல்மிகு முரசின் வெல்போர்ச் சோழன்.
(தொல்காப்பியம், களவு 11)

தேங்கு தூங்கெயில் எறிந்த அவனும்.
(கலிங்கத்துப்பரணி, இராச 17)

வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பில்
தூங்கும் எயிலும் தொலைத்தலால்—ஆங்கு
முடியும் திறத்தால் முயலவாம் கூரம்பு
அடியிழுப்பின் இல்லை அரண். (பழமொழி 49)

இந்த வீரன் செய்து முடித்துள்ள வினைத்திறத்தை இளங்கோவடிகள் முதல் பல நூலாசிரியரும் பெரிதும் வியந்து இவ்வாறு புகழ்ந்து கூறியுள்ளனர்.

**முடியா வினைஒன்றும் இல்லை முடியும்**
**படியறிந்து செய்யப் படின்.**

மருமம் அறிந்து கருமம் புரி.

---

484. **மான மிகுசாலி வாகனனேன் காலமெண்ணிக்**
**கோனவனாய் நின்றான் குமரேசா—தானமுயர்**
**ஞாலம் கருதினும் கைகூடும் காலம்**
**கருதி யிடத்தான் செயின்.** (௪)

**இ-ள்.**

**குமரேசா! காலம் கருதியிருந்த சாலிவாகனன் பின்பு ஏன் உலக வேந்தனாய் ஒளிமிகுந்து நின்றான்? எனின், காலம் கருதி இடத்தால் செயின் ஞாலம் கருதினும் கைகூடும் என்க.**

காலமும் ஞாலமும் கருத வந்தன.

உரிய காலத்தை ஓர்ந்து உற்றஇடத்தைச் சார்ந்து வினை செய்யின் உலக முழுவதும் ஆள விரும்பினும் அவனுக்கு அது உரிமையாய் அமையும்.

ஞாலம் = உலகம். விரிந்து பரந்துள்ளது என்னும் ஏதுவால் நில வுலகத்துக்கு இப் பேர் நேர்ந்துள்ளது.

கருதினும் என்பதிலுள்ள உம்மை அங்ஙனம் கருதுவார் அரியர் என்பது தெரிய நின்றது. தமது நிலைமைக்குத் தக்கபடியே எவரும் எண்ண நேர்கின்றனர். உயர்ந்த சிந்தனை தோயநேர்ந்தால் அவர் உயர்ந்த மேலோராய் ஒளிமிகுந்து வெளியே தெரிய வருகின்றார்.

மாந்தரினும் மேலான வேந்தரையே இங்கே தேர்ந்து வருதலால் ஞாலமும் கருத்தும் இனமாய்ச் சார்ந்து வந்தன. உலகம் அடையக் கருதுவார் தலைமையாளரே.

கைகூடும் = கைவசமாம். முழுதும் உரிமையாய் எளிதே வந்து எல்லா அரச செல்வங்களும் சேரும் என்பதை இங்ஙனம் தெளிய விளக்கினார்.

செயின் கூடும் என்றது அவ்வாறு செய்யாவழி யாதும் கைகூடாது என்பதைக் காட்டிநின்றது. குறித்தபடி பலன்கிடைக்கவில்லையானல் கூறியபடி வினையைச் சரியாகச் செய்யவில்லை என்று தெரிந்து தன் காரியக் கேட்டை மனிதன் சிந்திக்க வேண்டும்.

ஏற்ற காலத்தைக் கருதிக்கொண்டாலும் இனமான இடத்தை எண்ணித் தெளியவில்லையாயின் எடுத்த கருமம் சிதையும் ஆதலால் இடத்தால் என அதனையும் இணைத்து உணர்த்தினார். அடுத்து வருகிற இடன் அறிதல் என்னும் அதிகாரத்திற்கும் ஈண்டு இடம் கொடுத்தபடியாம். காரிய சாதனைகளும் சீரிய விளைவுகளும் தேர்ந்து சேர்ந்தவர் திறங்களும் கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வந்துள்ளன.

காலம் அறிந்து செய்யின் அரிய வினை யாதும் இல்லை; எதையும் முடிக்கலாம் என்று முன்னம் குறித்

தார்; அதனுல் உலகம் முழுவதும் உரிமையா ஒருவன் எளிதே அடையலாம் என இதில் உரைத்துள்ளார்.

ஒரு காணி நிலமும் கிடையாமல் மறுகி வாடுகிற மனிதனுக்கு நிலவுலகம் எல்லாம் உரிமையாய்க் கிடைக்கும் என்று தேவர் ஈண்டு உறுதி கூறியிருப்பது உவப்பையும் வியப்பையும் வியனு விளைத்து நிற்கிறது.

மனிதன் எதையும் அடையலாம்; அதிசய ஆற்றல்கள் அவனிடம் அடங்கியுள்ளன; அவனுடைய எண்ணம் உயர வேண்டும்; அது நலமாய் உயருமாளுல் அவனது முயற்சியில் அரிய பெரிய செல்வங்கள் எல்லாம் உரிமையுடன் ஒருங்கே வந்து குவிகின்றன.

எல்லா உலகங்களும் எல்லாச் செல்வங்களும் எல்லா அறிவுகளும் எல்லா ஆற்றல்களும் தனக்கு இயலுரிமையாகவுள்ள ஈசனுடைய பிள்ளேயே மனிதன் என ஈண்டு வந்துள்ளான்; உள்ளம் மாசுபடியாதிருந்தால் இவன் அவன்போல் தேசுமிகுந்து திவ்விய மேன்மைகளே அடைகின்ருன். மனம் மாசுபடியின் மனிதன் நீசனுயிழிகின்ருன். இந்த மானச தத்துவமும், மனிதனுடைய அரிய மாட்சிமைகளும் இங்கே காட்சிக்கு வந்துள்ளன.

காலம் அறிந்து வினே செய்தால் ஞாலம் முழுதும் கிடைக்கும் என்று பலனே வியனு விதந்து காட்டி நயமாய்த் தூண்டியிருக்கிருர். மனிதன் சோம்பேறியாயிழிந்து போகாமல் உறுதியாய்த் துணிந்து முயன்று உயர்ந்து கொள்ளவேண்டும் என உரிமையோடு ஊக்கியுள்ளதை ஈண்டு ஊன்றி உணர்ந்து கொள்கின்ருேம்.

காலமும் இடமும் கண்ணும் கையும்போல் வினேயாளனுக்கு இனமாய் உதவி புரிகின்றன. இவை நலமாய் வாய்த்த அளவு வினே வியனு முடிந்து பயன் உயர்வாய் விரிந்து சுரந்து விரைந்து வருகிறது.

சீலம் அல்லன நீக்கிச்செம் பொற்றுலேத்
தாலம் அன்ன தனிநிலே தாங்கிய

ஞால மன்னற்கு நல்லவர் நோக்கிய
காலம் அல்லது கண்ணும் உண்டாகுமோ?
(இராமா; 2 : 2 : 19)

ஞாலத்தை ஆளுகின்ற அரசன் காலத்தைக் கண்ணுகக் கருதி ஒழுக வேண்டும் என்று வசிட்டமுனிவர் இராமபிரானுக்கு இவ்வாறு இனிது போதித்திருக்கிருர்.

அரசன் எவ்வளவு ஆற்றல்களை யுடையனுயினும் வினை செய்தற்கு உரிய காலம் இடம் கருவி முதலியவைகளைத் துருவித் துணைக்கொள்ள வேண்டும்; அவ்வாறு கொண்டால் வினை இனிது முடியும்; வியனுன பயனும் நயனுய் விளைந்து வரும்; கொள்ளா தொழியின் கருமம் சிதைந்து போம்; கவலை அடைய நேரும்.

பண்டு முளைப்பது அரிசியே ஆனாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல். (மூதுரை 11)

எடுத்துக்கொண்ட காரியம் இனிது முடிய வேண்டுமானால் அதற்கு உரிய துணைவலி வேண்டும்; பருவ காலமும் மருவி வர வேண்டும்; இல்லையானால் அல்லலாம் என ஒளவையார் இவ்வாறு அருளி யிருக்கிருர். குறித்துள்ள உவமை நுனித்து நோக்க வுரியது.

அரிசிதான் வித்தாயிருந்து விளைவுகளை உளவாக்குகிறது. ஆயினும் உமி இல்லையாயின் அது முளையாது. அரிசிபோன்ற சாரமான ஆற்றலையுடையராயினும் உமி அனைய சிறிய துணைவலி இலதேல் அவர் வினைசெய்ய இயலாது; அவருடைய வன்மை பயனற்றதாம். பார்வைக்குப் பகட்டாய் உண்டுகளித்திருக்கலாமே அன்றி ஊக்கி ஒன்றும் ஆற்ற முடியாது என அவரது அவல நிலைமையை இதில் உய்த்து உணர்ந்து கொள்கிறோம்.

உரிய கருவிகளே வினைகளை இனிது முடிக்கின்றன; அவற்றைத் தழுவிக் கொண்டவர் காரிய சித்தியுடன் சீரிய பலனை அடைகின்றனர். கருமங்கள் முடிந்துவரும் மருமங்களைக் கருதி யுணர்வது உறுதி புரிவதாம்.

உறுதியும் ஊக்கமும் கரும சாதனங்களும் கால நிலைகளும் சரியாக அமையின் அரிய பெரிய காரியங்களும் இனிது முடிகின்றன. பலன்களும் வருகின்றன.

ஆர்கலி ஞாலத்து அறம்காவ லால்சிறந்த
பேரருளி னூற்குப் பெறலருமை யாதரோ?
வார்திரைய மாமகர வெள்ளத்து நாப்பண்ணும்
போர்மலைந்து வெல்லும் புகழ். (இரும்பல்காஞ்சி)

உறுதியாய் ஊக்கி முயலும் தரும நீர்மையாளர்க்குக் கருதிய கருமங்கள் எவ்வழியும் செவ்வையாக் கைகூடி வரும் என இது குறித்துள்ளது.

காலம் அறிந்து வினைசெய்பவன் ஞால முழுதும் கைக்கொள்வன். இதுசாலிவாகனன்பால்தெரியவந்தது.

சரிதம்.

இவன் தெய்வத் திருவருள் பெற்றவன். இவனுடைய பிறப்பும் இருப்பும் வளர்ப்பும் வாழ்வும் அதிசயமான விசித்திரங்களுடையன. கனகன் எனும் நாகவேந்தனுக்குச் சுமித்திரை என்னும் பார்ப்பனி வயிற்றில் இவன் பிறந்தான். உரிய கணவனைக் கலவாமல் அயலானைக் கலந்து கருவுற்றாள் என்று கறுத்து இனத்தவர் அவளை அயலே ஒதுக்கிவிட்டனர். அவளும் ஒதுங்கி மகப்பேறு அடைந்தாள், நருமதை நதியின் தென்பால் நாகமதி என்னும் ஊரில் ஒரு குயவன் வீட்டில் அவள் அடைக்கலம் புகுந்தாள். அக்குலாலன் பேர் இராமவேளான்; அவன் மனைவி அன்னபூரணி. அந்த இருவரும் இந்த மைந்தனைச் சிந்தை உவந்து வளர்த்து வந்தனர். இவன் பருவம் அடைந்தான். அழகு அறிவு ஆற்றல்கள் எல்லாம் இவனிடம் ஏற்றமாயிசைந்திருந்தன. குயக்குடியில் வாழ்ந்து வந்தாலும் ஒரு கோமகனுடைய இயல்புகளே இவன்பால் இயல்பாய்க் குடிகொண்டு வந்தன. ஒத்த இளைஞர்களோடு விளையாடும்பொழுது ஒருநாள் அவர்கள் எல்லாரையும் குடிசனங்களாக அமைத்து வைத்துத் தான் ஒரு அரசன்போல் உல்லாசமாய் இவன் நடித்து வந்தான். அப்போது அவ்வீதி

வழியே சோதிடத்தில் வல்ல ஒரு வேதியர் வந்தார். அவரை நோக்கி "ஐயரே! நம்முடைய அரசாட்சி எப்படியிருக்கிறது?" என்று கேட்டான். ஆட்சி மாட்சியாகவே உள்ளது என்று அவர் உவந்து சொன்னார். அதைக் கேட்டு உள்ளம் மகிழ்ந்து அவர்க்கு உதவி புரிந்தான். மட்கலங்களை வனைவதிலும் இவன் வல்லவனாயிருந்தான். மண்ணால் குதிரைகளை உருவாக்கி அவற்றில் உல்லாசமாய் ஏறி உற்சாகமாய் வீற்றிருந்து வந்தமையால் இவன் **சாலிவாகனன்** என நேர்ந்தான். இவனுடைய செயல் இயல்களைக் கேள்வியுற்று விக்கிரமார்க்க மன்னன் இவனை நேரே அழைத்துவரும்படி இரண்டு படைத்தலைவரை அனுப்பினான். இவன் மறுத்துவிடுத்தான். அதுமுதல் உலகை ஆளும் அரச பதவியை எப்படியும் தான் அடைய வேண்டும் என்று இவன் அவாவி முயன்றான். அதற்கு உரிய மந்திர முறைகளைப் பயின்றான். காலம் கருதி இடம் நோக்கிச் சாலவும் சாதுரியமாய்ப் படையெடுத்துச் சென்று உச்சைனி அரசைக் கவர்ந்து கொண்டான். கொற்றவனாய்க் கோ முடிசூடி ஆண்டான். இவன் ஆட்சி தொடங்கிய காலத்திலிருந்து **சாலிவாகன சகாப்தம்** என்று இவன் பேரால் காலம் கணிக்கப்பட்டு வருகிறது. கி. பி. வருடத்துக்கு எழுபத்தெட்டு ஆண்டுகள் இது பிந்தியதாம். ஆகவே இவன் இருந்த காலத்தை நாம் அறிந்து கொள்கிறோம். காலம் கருதி இடத்தால் வினை செய்யின் ஞாலம் கருதினும் கைகூடும் என்பதை இவன் கண்கூடாக் காட்டி நின்றான். இவனுடைய மதி நலனும் மன உறுதியும் வினையாண்மையும் வீரத் திறலும் அதிசய நிலையின என்று மேலோர் யாவரும் வியந்து துதி செய்துள்ளனர். விரிவை அக்கினி புராணத்தில் காண்க.

**காலம் கருதி முயல்பவனைக் காதலித்து**
**ஞாலம் நயந்து வரும்.**

உரிய காலத்தை ஓர்ந்து முயல்.

———

485. காலம் கருதியேன் காத்திருந்தான் சீவகன்தன்
கோலம் கரந்து குமரேசா—ஏலுகின்ற
காலம் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர். (ரு)

இ-ள்

குமரேசா! தனது ஞாலத்தை ஆளக்கருதிய சீவகன் ஏன் காலத்தைக் கருதி உறுதி சூழ்ந்து பொறுதியாய் அமர்ந்திருந்தான்? எனின், கலங்காது ஞாலம் கருது பவர் காலம் கருதி இருப்பர் என்க.

உறுதியாக உலகத்தை ஆள விரும்புபவர் அதற்கு உரிய பருவ காலத்தை எதிர்நோக்கி மதி நலத்துடன் அமைதியாய் அடங்கி யிருப்பர்.

கலங்காது என்றது, ஐயமும் அச்சமுமின்றித் தெளிவாய்த் துணிந்திருத்தலை. இருத்தலையும் கருதுதலையும் விசேடித்து விருத்தி நிலையை இது விளக்கி நின்றது.

ஞாலம் கருதுபவர் என்றதனால் அரசர் என்பது தெரிய நின்றது. அவரவர் தகுதிக்குத் தக்கவாறே யாண்டும் உரிமையோடு கருதுகின்றனர். கருத்து நிறைவேறுவது காலத்தைப் பொறுத்திருக்கிறது.

காலமே வெற்றிநல்கும் கருமத்தின் மருமம் எல்லாம்
சாலவே காலத்துள்ளே தழைத்துள சார்ந்து கொள்க.

இதனை இங்கே கூர்ந்து ஓர்ந்துகொள்ள வேண்டும்.

முயற்சிகள் எவ்வளவு செவ்வையாகச் செய்தாலும் உரிய நேரம் வந்தபோதுதான் கருமம் பலனைத் தரும். ஆகவே அதுவரையும் பொறுமையாய் எதிர்பார்த்து மருமமாய் அடங்கி யிருக்க வேண்டும்.

அடுத்து முயன்றாலும் ஆகும்நாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா. (மூதுரை, 5)

பருவ காலம் வந்தபோதுதான் பழங்கள் பழுக்கும்; அதுபோல் உரிய காலம் உற்றபொழுதுதான் கருமம்

கனிந்து பலனைக் கொடுக்கும் என ஒளவையார் இவ் வாறு ஓர் உவமை காட்டி உரைத்திருக்கிறார்.

அரிய பலனை அடைய வேண்டியவர் உரிய காலம் கருதிக் காத்திருக்க வேண்டும் என்பதை இந்த உவமை யால் ஓர்ந்து உள்ளம் தெளிந்து கொள்ளுகிறோம்.

காலம் பிழைத்தக்கால் பாலும்நோய் காட்டிவிடும்;
நூலார் உணர்ந்தீயின் நஞ்சமும் நோய்வீட்டும்;
சீலரால் துன்பமும் தீயரான் இன்பமுமாம்;
காலம் கருதல் கடன். [இன்னிசை]

கால வேற்றுமைகளால் விளையும் விளைவுகளை விளக் கிக் காட்டி **காலம் கருதல்** கருமவீரரது கடமையாம் என இது வலியுறுத்தி யுள்ளது. உரிய துணைகளும் பருவ **காலமும்** மருவி வரும் அளவேதான் கருதிய பொருள் களை ஒருவன் இனிது பெற நேர்கின்றான்.

ஆகுநர் யாரையும் துணைவர் ஆக்கிப்பின்
ஏகுறு நாளிடை எய்தி, எண்ணுவ
சேகறப் பன்முறை தெருட்டிச் செய்தபின்
வாகையென்று ஒருபொருள் வழுவற் பாலதோ.?
(இராமாயணம்)

காலம் கருவி துணைகளைத் தெளிவாக ஆராய்ந்து கொண்டு வினைமேல் செல்பவனுக்கு வெற்றி நிச்சயம் உண்டாகும் என்று இது நன்கு உணர்த்தியுள்ளது.

புரையக் கலந்தவர் கண்ணும் கருமம்
உரையின் வழுவா துவப்பவே கொள்க;
வரையக நாட! விரையிற் கருமம்
சிதையும் இடராய் விடும். (பழமொழி 227)

காலம் கருதிக் கருமம்செய்ய வேண்டும்; உரியபலனை ஓர்ந்து பொறுத்திருக்க வேண்டும்; விரைந்து செய்ய நேரின் அது சிதைந்து கெடும் என இது குறித்துள்ளது.

தாம் கருதிய பொருளைப் பெறுதற்கு உரிமையான காலத்தை அறிஞர் ஓர்ந்து தேர்ந்து நேர்ந்திருப்பர்.

இது சீவகன் பால் தெரிய வந்தது.

சரிதம்.

ஏமாங்கத நாட்டு மன்னன் ஆகிய இவனிடம் மதி நலமும் மனவுறுதியும் அதிசய ஆற்றல்களும் அமைந் திருந்தன. தன் தந்தையைச் சதி செய்து கொன்று அரசை அமைச்சன் கவர்ந்து கொண்டமையால் இவன் பரிதாப நிலையில் பிறந்து ஒரு வணிகன் வீட்டில் வளர்ந்து வந்தான். கலைகள் பலவும் பயின்று தெளிந் தான்; பருவம் அடைந்தான். அச்சணந்தி முனிவர் என் னும் ஒரு மாதவரை அணுகி ஞானசீலங்களை உணர்ந்து வந்தான். இவனுடைய குணநலன்களைக் கண்டு மகிழ்ந்த அப் பெரியவர் இவனுக்கு உண்மை நிலையை உணர்த்த வேண்டும் என்று விரும்பினர்; ஒருநாள் நேரே நயமாய் உரைத்தார்: "சீவகா! உனக்கு நான் ஒரு கதை சொல்லுகிறேன்; கேள்! செல்வ வளங்கள் யாவும் நிறைந்த ஒரு தேசம்; அந்த நாட்டை நல்ல ஒரு அரசன் ஆண்டு வந்தான்; அந்த மன்னனை மந்திரி சதி செய்து கொன்று அரசைக் கவர்ந்து கொண்டான். அரசன் இறக்கும்பொழுது அரசி பூரண கருப்பிணியா யிருந்தாள்; சுடுகாட்டில் குழந்தையைப் பெற்றாள்; பரிந்து நோக்கி வருந்தி அம்மகவைத் தனியே விட்டு அவள் துறந்து போனாள்; ஒரு வணிகன் அப்பிள்ளை யைக் கண்டான்; உள்ளம் உவந்து எடுத்து வந்து வளர்த்தான். அந்த மகன் வளர்ந்து அறிவு நலன்கள் சுரந்து காளைப்பருவத்தனாய்க் கட்டழகுடன் விளங்கி யுள்ளான்; ஆண்மை வீரங்கள் மேன்மையாய் அமைந் திருந்தும் தன்னை ஒரு மன்னன் என்று அறியாமல் வணிகன் மகனாகவே அவன் எண்ணியிருக்கிறான்" என்று இன்னவாறு அவர் கூறி நிறுத்தினர். நிறுத்தவே "அந்தக் கோமகன் எங்கே இருக்கிறான்? அவனை நேரே நான் காண விரும்புகிறேன்" என்று வேணவாவுடன் விளம்பினன். அவர் யாதும் கூறாமல் தமது வலது கை விரலை நீட்டி நீதான் அவன் என்று சுட்டிக் காட்டினர். காட்டவே," என் தந்தையைக் கொன்ற அந்தக் கொடிய

பகைவனை இன்றே வென்று அரசைப் பெறுவேன்'' என்று சிங்க ஏறுபோல் இவன் சீறி எழுந்தான். அவர் தடுத்து நிறுத்தி ''இன்னும் ஓர் ஆண்டு வரையும் பொறுத்திரு; உரிய காலம் வரும் வரையும் வெளியே தெரியலாகாது'' என்று அவர் தெளிவு கூறினர். காலம் கருதி இவன் அடங்கி யிருந்தான். பருவம் வரவே உரிய துணைகளோடு சென்று பகைவனை அடியோடு வென்று அரசை யடைந்து உலகத்தை நலமாய் ஆண்டு வந்தான். **காலம் கருதி யிருப்பர் கலங்காது** ஞாலம் கருதுபவர் என்பதை ஞாலம் தெரிய இவன் நேரே உணர்த்தி நின்றான்.

**சீவகன் சீறி எழுந்தது.**

மலைபக இடிக்கும் சிங்க மடங்கலின் முழங்கி மாநீர்
அலைகடற் றிரையிற் சீறி அவனுயிர் பருக லுற்றுச்
சிலையொடு பகழி ஏந்திக் கூற்றெனச் சிவந்து தோன்றும்
இலையுடைக் கண்ணி யானை இன்னணம் விலக்கி னானே.

**மாதவர் தடுத்தது.**

வேண்டுவல் நம்பி யானோர் விழுப்பொருள் என்று சொல்ல
ஆண்டகைக் குரவிர் கொண்மின் யாதுநீர் கருதிற் றென்ன
யாண்டுநேர் எல்லை யாக அவன்திறத்து அழற்சி யின்மை
வேண்டுவல் என்று சொன்னான் வில்வலான் அதனை நேர்ந் [தான்.
(சீவகசிந்தாமணி)

சீவகன் முனைந்து மூண்டு எழுந்ததும், ஆண்டு ஒன்று பொறுத்திருஎன்று முனிவர் அறிவுகூறி அடக்கி யுள்ளதும் இவற்றால் அறிந்து கொள்கின்றோம்.

கருதிய காரியத்தை முடித்தற்கு உரிய நேரம் வரும் அளவும் **காலம் கருதி** இருக்க வேண்டும்; அந்த இருப்பு எண்ணிய பலன்களை எண்ணிய படியே சிறப்பாக அடைந்து கொள்ளும் என்பதை இவன் காட்டி யிருக்கின்றான். அக்காட்சியை இங்கே கண்டு கொள்கின்றோம்.

**உரியநற் காலம் உறுமளவும் நிற்பர்**
**அரியவினை யாளர் அமர்ந்து.**

ஆன சமையம் ஆய்ந்துகொள்.

486 திண்டோள் நெடுமான் திறன்மிகுந்தும் ஏனெடுக்கம்
கொண்டிருந்தான் முன்னுள் குமரேசா—மண்டிநின்ற
**ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்**
**தாக்கற்குப் பேரும் தகைத்து.** (சு)

இ–ள்

குமரேசா! திறல் மிகுந்திருந்தும் நெடுமான் ஏன் காலம் நோக்கிக் கருத்துடன் ஒடுங்கி யிருந்தான்? எனின், ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர் தாக்கற்குப் பேரும் தகைத்து என்க.

வீரன் ஒடுக்கம் வெற்றியின் குறி என்கிறது.

ஆற்றல் உடையவன் அடங்கி யிருக்கின்ற இருப்பு பொருகின்ற ஆட்டுக்கடா எதிரியை வேகமாய்ப் பாய்ந்து தொலைக்க ஆய்ந்து விலகும் தன்மையது.

ஒடுக்கம்=வினைமேல் வெளிப்பட்டுச் செல்லாமல் அடங்கி ஒடுங்கி அமர்ந்திருக்கும் நிலை.

ஊக்கம் இல்லாதவன் ஒடுங்கியிருப்பது இயல்பு. ஊக்கம் உடையவன் ஒடுங்கி நிற்பின் அந்த நிலையில் அரிய பல மருமங்கள் மருவியுள்ளன.

கருதிய கருமங்களை உறுதியாய்ச் செய்து முடித்தற்கு அறிவும் ஆற்றலும் தேவை. காரிய நீர்மைகளைக் கருதி நோக்கவும், உரிய கருவிகளை ஆராய்ந்துகொள்ளவும், ஏற்ற காலத்தை எண்ணித் தெளியவும் அறிவு வல்லது. அவ்வாறு தேர்ந்து தெளிந்து கொண்ட வினையைத் திறமாகச் செய்து முடிப்பது ஆற்றலாம்.

இத்தகைய ஆற்றல் அமைந்த அரசன் விரைந்து சென்று பகைவனை வென்று தொலைக்காமல் அமைதியாய் அடங்கியிருக்க நேரின் அதில் ஒரு பேராற்றல் பெருகி விளைகிறது என்பதை இங்கே அறிய நேர்ந்துள்ளோம். உறுதி ஊக்கங்கள் பொறுதியோடு பொருந்தி வரின் அரிய ஆக்கங்கள் அங்கே அமைந்து வருகின்றன.

ஞாலம் கருதுபவர் காலம் கருதி இருப்பர் என்றார்

முன்பு; இதில் அந்த இருப்பு எந்த வகையிலும் அதிசய வெற்றி யுடையது என்கின்றார்.

அவ்வுண்மையைத் தெளிவாக விளக்குதற்கு ஓர் உவமையை இதில் நயமா நன்கு இணைத்துள்ளார்.

தகர் = செம்மறி ஆட்டுக் கடா. எதிரியைத் தகர்ப்பது தகர் என வந்தது. பொராத தகர்களும் பல உள ஆதலால் பொருதகர் என்று இதனை விளக்கியருளினர்.

தாக்கற்குப் பேரும் தகர்போல் மதிலகத்து
ஊக்கம் உடையார் ஒதுங்கியும்—கார்க்கீண்டு
இடிபுறப் பட்டாங்கு எதிரேற்றார் மாற்றார்
அடிபுறத் தீடும் அரிது. (பெரும்பொருள்)

எயில் காக்கும் வீரர் ஒடுங்கியிருந்து காலம் வாய்த்த போது எதிரிகள் நிலைகுலைந்து ஒழியும்படி விரைந்து பாய்ந்து வென்று தொலைப்பர் என்று குறித்திருக்கும் இதன் குறிப்பைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுக. **ஊக்கம் உடையார், தாக்கற்குப் பேரும் தகர்** என நாயனார் வாய் மொழியை இது நயமாய்த் தழுவி வந்துளது. உண்மையை ஓர்ந்து காலக் குறிப்பைக் கருதிக் கொள்ளுக.

இது மிக்க வீரம் உடையது; போராடுவதில் வல்லது. எதிரியோடு முட்டிப் பொருங்கால் சிறிது பின்வாங்கி முன்னேறி வேகமாய்ப் பாயும். அந்த அடிபேர்தல் பகை முடிவாய்ப் பேர்ந்து போகத் தாக்குதற்கு ஊக்கமாய் உறுதி புரிந்துள்ளது. இந்தத் தகரை ஒன்றோடு ஒன்று முட்டவிட்டுப் போர் மூட்டி வீர வெறியராய் வேடிக்கை பார்ப்பது இந் நாட்டில் இன்றும் வழக்கமா யுள்ளது.

கோட்டிளந் தகர்களும் கொய்ம்மலர தோன்றிபோல்
சூட்டுடைய சேவலும் தோணிக் கோழி யாதியா
வேட்டவற்றின் ஊறுளார் வெருளிமாந்தர் போர்க்கொளீஇக்
காட்டியார்க்கும் கௌவையும் கடியும்கௌவை கௌவையே
(சீவகசிந்தாமணி 73)

ஆட்டுக் கடா சேவல்களின் போர்களைப் பண்டை மக்கள் கண்டு களித்துள்ளதை இது காட்டியுளது.

கொம்புகள் ஒடிந்தாலும் உதிரம் வடிந்தாலும் ஊக்கிப் பொருவது ஆதலால் **கோட்டு இளம் தகர்** என இதன் ஆற்றலை இங்கே ஏற்றமா எடுத்துக் காட்டினர்.

வினையாண்மைகளையும் வீரத்திறல்களையும் விளக்கி வருகிருர் ஆதலால் அதற்கு ஏற்ப வீரப் போர் இனம் உவமானமாய் வந்தது.

தகர் பேருவது எதிரியைத் தகர்த்து ஒழிக்க.

வீரன் ஒடுக்கம் பகைவரைக் கடுத்து முடிக்க.

ஆற்றல் மூன்றும் உபாயங்கள் நான்கும்
இடத்தோடு அமைந்திடினும்
போற்றி நினக்கு வென்றியுறும் பொழுது
தேர்ந்தே வினைபுரிக
ஏற்ற காலம் வருமளவும் எண்ணி
யிருக்க; அதுமைந்தா!
வீற்றுச் சமர்க்குப் பின்வாங்கும் வெற்றித்
தகரே யாகுமால். (விநாயக புராணம்)

இங்கே இது நன்கு சிந்திக்கவுரியது. குறித்துள்ள பொருள்களைக் கூர்ந்து ஓர்ந்துகொள்ள வேண்டும்.

அரிய வலிகள் அமைந்திருந்தாலும் உரிய காலம் வரும் வரையும் வினைமேல் செல்லாமல் அறிவுடையார் அடங்கியிருப்பர். அந்த இருப்பு காரிய சித்தியாம்.

இது நெடுமான்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் அறிவும் ஆற்றலும் நெறியும் நீதியும் உடையவன். தகடூர் என்னும் நகரிலிருந்து சதுருடன் அரசு புரிந்து வந்தான். அருந்திறலாண்மையோடு பெருந்தகைமையும் நிறைந்திருந்த இவன் பெருங் கொடை வள்ளலாய் விளங்கியிருந்தான். எவர்வரினும் இல்லை என்னுமல் ஈந்து வந்தமையால் இவன் புகழ் எங்கும் ஓங்கி வந்தது. இவனுடைய இசை திசைகள்தோறும் பரவி வருவதைக் கண்டு மறுபுல மன்னர் சிலர் மனம் புழுங்கி நின்ருர். பொருமை மண்டி வந்தமையால் முடிவில்

பகைமை நீண்டு போருக்கு மூண்டார். அவருடைய நிலைமைகளை அறிந்தும் நேரம் கருதி இவன் அடங்கியிருந்தான். இவனுடைய படைவீரர்கள் போர்ப்பயிற்சிகளில் தேர்ச்சி மிகப் பெற்றவர். பல இடங்களில் பரவியிருந்த அவரை ஒருங்கு திரட்டி உரிய காலம் வரவும் இவன் போருக்கு ஊக்கி எழுந்தான். அப்பொழுது இவன் மனைவி பூரண கருப்பிணியாயிருந்தாள். பேறு கால நேரம் என்று தெரிந்திருந்தும் தனக்கு ஏறுகாலம் எனக் கருதி போர்மேல் போனான். பகைவரை விரைந்து பொருது வென்றான்; வெற்றித் திருவுடன் மீண்டு வந்தான். ஆண் குழந்தை பிறந்திருந்தது. அந்தப் போர்க்கோலத்தோடே நேரே வந்து ஆர்வத்துடன் தன் பிள்ளையைக் கண்டான்; உள்ளம் உவந்து நின்றான். அந்தக் காட்சியை அயலே காண வருகின்றோம்.

கையது வேலே, காலன புனைகழல்,
மெய்யது வியரே, மிடற்றது பசும்புண்,
வட்கர் போகிய வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட ஊசிவெண் தோட்டு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும் மாறாது சினனே; அன்னோ!
உய்ந்தனர் அல்லர் இவன் உடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பா னாவே. (புறம், 100)

இந்தக் கவியில் மருவியுள்ள பொருள் நிலைகளைக் கருதிக் காண்பவர் இவனுடைய உள்ளப் பண்பையும் பிள்ளைப் பாசத்தையும் உக்கிர வீரத்திறல்களையும் ஓர்ந்து உணர்ந்து உவந்துகொள்வர். போராற்றலுடையனாயிருந்தும் பகைவர் செய்த மிகைகளைப் பொறுத்துக் காலம் கருதி ஒடுங்கியிருந்தான். பின்பு விரைந்து சென்று ஒருங்கே வென்றான். பொருதகர் தாக்கற்குப் பேரும் தகைமைபோல் ஊக்கம் உடையவன் ஒடுக்கம் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

**வீரன் அடங்கி யிருப்பிளே வெற்றிக்கே**
**கூரம் பதுவே குறி.**

*அறிவன் அடக்கம் அதிசய ஆற்றல்.*

---

487. பண்டு மனைவிதுயர் பார்த்திருந்தும் பாண்டவரேன்
கொண்டிலர் கோபம் குமரேசா—கண்டவுடன்
பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்பர் ஒள்ளி யவர். (எ)

இ-ள்

குமரேசா! தன் மனைவியைப் பகைவர் படர்செய் வதைப் பார்த்தும் தருமர் ஏன் சீறுமல் அடங்கி இருந் தார்? எனின், ஒள்ளியவர் பொள் என ஆங்கே புறம் வேரார்; காலம் பார்த்து உள்வேர்ப்பர் என்க.

ஒள்ளிய உணர்வினர் ஒடுக்கம் உணர்த்துகிறது.

தெளிந்த அறிவுடையவர் விரைந்து வெளியே வெகுளார்; உரிய காலம் ஓர்ந்து உள்ளே கனன்று நிற்பர்.

ஒள்ளியவர் என்றது தெள்ளிய அறிவுடையவரை.

ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல். (குறள், 714)

பின்னரும் இன்னவாறு இதனைக் குறித்துள்ளார்.

ஒளி குறைந்த அறிவுகளும் உளவாதலால் ஒளி நிறைந்த அறிவாளரை ஒள்ளியவர் என்று ஈண்டு உணர்த்தி யருளினர்.

ஒண்மையும் திண்மையும் உண்மையும் மாந்தரை மாண்புடையராக்கி வருகின்றன. ஆன்ற அறிவுடைய வர் யாண்டும் அடக்கமும் அமைதியும் பூண்டு காலம் கருதிக் கரும வீரமாய் நிற்கின்றனர்.

வேரார் = வெகுளார். வேர்ப்பர் = வெகுள்வர்.

உள்ளத்தே வெகுளி தோன்றினல் உடம்பில் வேர் வை தோன்றும். கோபத்தின் குறியான அது இங்கே கோபம் என்று சிறப்பாக் குறிக்க வந்தது.

நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோர். (நாலடி 64)

வெகுளியின் நிலைமையையும் வெகுளாதார் தலைமையையும் இது விளக்கியுளது. **வேரம்** என்று வெகுளிக்கு ஒரு பெயர் விளைந்துள்ளது. மரத்துக்கு மூலவேர்போல் சினத்துக்கு வேரம் தீரமாயுளது.

புறம் **வெகுளார்;** உள் **வெகுள்வர்** என்று கூறியிருக்கலாம்: பாவின் தளையும் பிழையாகாது; பொருளும் தெளிவாயிருக்கும்: இருந்தும் அவ்வாறு கூறவில்லை. ஏன்? நீண்ட காலமாய் மூண்டு நின்று நேரம் நோக்கிச் சலஞ்சாதிக்கும் கோபத்தையே ஈண்டு இனமா உணர்ந்து கொள்கிறோம். வேரம்=வைரமான சினம். பொள்ளென என்றது விரைவுக் குறிப்பு.

போர்த்ததன் அகலம் எல்லாம்
பொள்ளென வியர்த்துப் பொங்கி.
(சீவகசிந்தாமணி 256)

பொள்ளெனச் சென்னி பூமி தோய. (பெருங்கதை 3 : 24)

இவை இங்கே எண்ண வுரியன. பொள் என= விரைவாக. கரும வீரம் காலம் கருதியுளது.

பகைவர் அல்லல் புரிந்து எள்ளல் இழிவுகளைச் செய்தாலும் ஒள்ளியவர் பொள்ளென வெகுளார்; உள்ளம் பொறுத்துக் காலத்தை எதிர்நோக்கி அடங்கியிருப்பர்.

இலங்கை புகுந்து சீதையைத் தேடிய அனுமான் இராவணன் மாளிகையை அடைந்தான். நடுநிசி. அமளியில் அவன் உறங்கிக் கிடந்தான். அவனைக் கண்டதும் மாருதிக்குக் கோபம் மூண்டது. இராமநாதனுக்குத் தீமை செய்த தீயவன் என்று உள்ளம் கொதித்தான்; உருத்துத் துணிந்தான்; துணிந்தவன் இது சமையம் அன்று என்று பொறுத்துச் சினம் தணிந்தான்.

ஆலம்பார்த் துண்டவன்போல் ஆற்றல்அமைந்துளர் [எனினும்
சீலம்பார்க் குரியோர்கள் எண்ணுது செய்பவோ?

மூலம்பார்க் குறின்உலகை முற்றுவிக்கும் முறைதெரினும்
காலம்பார்த் திறைவேலை கடவாத கடல் ஒத்தான்.
(இராமா, 5 : 2)

ஆலம் உண்ட நீலகண்டன் போல் அதிசய ஆற்றல்கள் அமைந்திருந்தாலும் மதிநலம் உடையவர் எண்ணுமல் வெகுண்டு துணியார்; **காலம் பார்த்தே** காரியம் கருதி அடங்கி நிற்பர்என்பதை இதில் அறிந்து கொள்கிறோம். **ஒள்ளியவர் காலம் பார்த்து உள்வேர்ப்பர்** என்னும் தேவர் வாய்மொழி இதில் மேவி வந்துள்ளது.

தமக்கு மிக்க வலி அமைந்திருந்தாலும் தக்க சமையம் வரும் வரையும் சினத்தை அடக்கி அறிஞர் அமைதியாயிருப்பர். அதனுல் அவர் வெற்றி மிகப் பெறுவர்.

இது தருமர் பால் அறிய வந்தது.

சரிதம்.

துரியோதனன் வஞ்சித்து அழைத்துப் பஞ்சவரின் செல்வங்களை யெல்லாம் சூதாடிப் பறித்துக் கொண்டான். பின்பு பாஞ்சாலியையும் பற்றி இழுத்து வந்து அரசவையில் நிறுத்தி அவமானம் செய்வித்தான். சபையிலிருந்த யாவரும் பரிந்து வருந்தினர். அப்பொழுது வீமனும் விசயனும் வெகுண்டு மூண்டார். அந்த வீரத் தம்பியரைத் தடுத்து அடக்கிப் பொறுமையாயிருக்கும் படி தருமர் பணித்தார். கொடிய அநீதியைச் செய்யலாகாது எனத் தம்பி **விகருணன்** அறிவுரை கூறியும் அத்தீயவன் தூயவள் துகிலை உரியும்படி துச்சாதனனை ஏவினுன். பாவி என அவனை யாவரும் இகழ்ந்தனர்.

என்னவெகுண் டிடுகின்ற எல்லைதனில்
எழுவுறழ்தோள் இராச ராசன்
தன்னனைய கொடுங்கோபத் தம்பியையின்
றும்பிதனைத் தக்கோன் என்ற
மன்னவையின் எதிரேயிம் மானமிலா
ஐவரையும் வழக்கு வார்த்தை
சொன்னகிளி மொழியினையும் துகிலுரிதி
எனவுருமிற் சொன்னுன் மன்னே. (1)

இத்தகவில் மொழிசெவியின் எரிவாளி
எனமூழ்க இருந்த வேந்தர்
தத்தமன மடிந்துருகத் தருமன்மதி
முகம்நோக்கித் தம்பி னோக்கி
வித்தகவெங் கதைநோக்க விறல்வீமன்
விசயனும்தன் வில்லை நோக்க
ஒத்தமன னுடையிளையோர் உருப்பமடக்
கினன் உண்மைக் குறுதி போல்வான். (2)
(பாரதம்)

பகைவன் படுகேடு செய்தபோதும் வெகுளாதிருக்குமாறு தம்பிமாரைத் தருமர் அடக்கியிருப்பதை இதில் அறிந்துகொள்கிறோம். பின்பு வனவாசம் புரிந்து விராட நகரத்தில் தங்கியிருக்கும்போது கீசகன் துரோபதையை விழைந்தான்; விழையவே வீமன் வெகுண்டு மூண்டான். அக் கொடியவனைக் கடுத்து ஒழிக்க விரைந்தான். அப்பொழுதும் தருமர் குறிப்போடுதடுத்துநிறுத்தினர்.

அடுதொழில் பலாயனன் அழுத மின்னையும்
கடுமையிற் பின்தொடர் காளை தன்னையும்
படருறக் கண்டுதன் பாங்கர் நின்றதோர்
விடவியைப் பிடுங்குவான் வெகுண்டு நோக்கினன். (1)

கனிட்டனது எண்ணம்அக் கங்கன் ஆகிய
முனித்தகை புணர்ந்தவன் முகத்தை நோக்கியித்
தனிப்பெரு மராமரம் தழல்கொ ளுந்திடா
துனக்கடும் இந்தனம் அன்றென் றேதினன். (2)

கண்ணெருப் பெழவிரு கைந்நெருப்பெழ
உண்ணெருப் பெழத்தன துடனெருப்பெழ
மண்ணெருப் பெழவரு மடையில் எய்தினன்
திண்ணெருப் பினுமிகு சினங்கொள் வீமனே.
(விராடபருவம்)

வீமன் சினம் வெளிப்படாவாறு தமையன் இவ்வாறு அடக்கியிருக்கிறான். எதிரிகள் கோபத்தை மூட்டினலும் மதிநலமுடையவர் விரைந்து வெகுளார்; காலம் பார்த்தே வெகுள்வர்; கருதியதை முடித்துக் கொள்வர் என்பதை ஞாலம் இவர் பால் நன்கு தெளிந்துநின்றது.

**தேர்ந்த அறிஞர் சினமுறார்; செல்காலம்**
**ஓர்ந்து கனல்வர் உருத்து.**

காலம் நோக்கிக் கருத்துடன் நில்.

---

488. வென்றியுயர் இந்திரனும் வெய்ய கவசரைமுன்
குன்றிநின்றேன் வென்றான் குமரேசா—கன்றும்
செறுநரைக் காணின் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காம் தலை. (அ)

இ-ள்.

குமரேசா! பகைவலி கண்டு அடங்கியிருந்த இந்திரன் பின்பு சமையம் வர ஏன் அவரை வென்று தொலைத்தான்? எனின், செறுநரைக் காணின் சுமக்க; இறுவரை காணின் கிழக்காம் தலை என்க.

பகை களையும் வகையை இது நயமாக் காட்டியுளது.

வெல்லும் காலம் வரும்வரை பகைவரைக் காணின் பணிந்து கொள்; முடிவு காலம் காணின் அடியோடு அழித்து ஒழி. இறுவரை = அழியும் எல்லை.

முன், காலம் பார்த்து வெகுள்வது ஒள்ளியவர் இயல்பு என்றார்; இதில் அந்த வெகுளியின் வினையை பயனை நயமாக் குறித்திருக்கிறார்.

சீற்றம் செறுநரை அழிக்கும் ஏற்றமாயிருக்க வேண்டும் என்பதை ஈண்டு ஊன்றி உணர்ந்து கொள்ளுகின்றோம். பகையை அழிக்கும் வழி தெளிய வந்தது.

செறுநர் = பகைவர். சீறித் துயர் செய்பவர் **செறுநர்** என நேர்ந்தார். இவரை ஒழிப்பவர் ஒளியுடன் உயர்வர்.

செற்றமுடைய இவரைச் செயிர்த்து அழித்து ஒழிப்பது கொற்றவர்க்கு உரிய குலதருமமாம்.

உரிமையோடு ஒட்டாமல் மாறுபட்டு நிற்பவர் **பகைவர்**. சினமும் செருக்கும் மண்டி எவ்வழியும் இடர் செய்து வருபவர் **செறுநர்**. சாதாரணமான பகைவரினும் இவர் மிகவும் கொடியவர் ஆதலால் அடியோடு

இவரை அழித்து ஒழிக்க வேண்டும் என்பதை ஈண்டுத் தெளித்து உணர்த்தி யுள்ளார். அல்லல்களை நீக்கி நல்ல சுகமாய் வாழ்வதே மனித வாழ்வின் எல்லையாயுளது.

செறுநரைக் காண நேர்தல் அரிது ஆதலால் காணின் என்றார். கண்டால் ஆற்ற வுரியதைக் காட்டியருளினர்.

சுமக்க என்றது மிகவும் பணிவாய் நடந்துகொள் என்றவாறு. பகை நகையுற நயந்து நில் என்பதாம்.

ஒரு சுமையைச் சுமக்க நேர்ந்தவன் அதனை எப்பொழுது கீழே தள்ளுவது என்றே தவித்து நிற்பன்; அந்த நிலைமை இங்கே நுண்மையாய்த் தெரிய வந்தது.

உரிய காலம் அமையும்வரை பொறுமையாய்ப் பணிந்திரு; காலம் நேர்ந்தால் பகைவர் நிலைகுலைந்து அழிந்து ஒழிந்து போம்படி விரைந்து செய்.

தலை கிழக்காம் என்றது, தலைகீழாய்ப் புரண்டு குப்புற வீழ்ந்து அவர் அழிந்துபடுவதை. கிழக்கு இங்கே திசையைக் குறிக்கவில்லை; கீழிடத்தைக் குறித்தது. மீண்டு தலையெடுக்காதபடி பள்ளத்தில் வீழ்ந்து பாதாளத்தில் ஆழ்ந்து அவர் தாழ்ந்துபோவதை ஈண்டு ஓர்ந்து கொள்கிறோம். பகைவரை முற்ற ஒழிப்பதே வெற்றி.

கவிழ்க்க தலை என்று சொல்லியிருக்கலாம். கவிழ்த்தல்=தலை கீழாகத் தள்ளுதல். இவ்வாறு கூறியிருந்தால் சுமக்க நேர்ந்தவனே கவிழ்க்க நேர்கின்றான். கிழக்காம் என்றது தாமாகவே அவர் தலைகீழாய் உருண்டு விழுந்து ஒழிந்து போவர் என்பது தெளிந்து கொள்ள வந்தது. பகைவனைத் தலைமேல் வைத்துச் சுமப்பதுபோல் தாழ்ந்து நடந்து வந்தால் அவன் எச்சரிக்கை யாதுமின்றி ஏமாந்து இழிந்து அழிந்துபோவான்.

மிகைமிக் கியற்றித் திரிந்திடினும்
வெல்லும் காலம் வருமளவும்
பகைமை புறத்தில் தோற்றமல்
பகைவர் தம்மைப் பண்போடு

நகைசெய தமர்போல் சுமந்திடுக;
நாடுங் காலம் வந்துவிடின்
தகைசெய் வினையை அவ்வளவில்
தப்பா வண்ணம் முடித்திடுக. (விநாயக புராணம்)

பகைவரை அழித்து ஒழி என இது குறித்துளது.

தனக்கு இடராய் மூண்ட செறுநரைச் சிதைத்து ஒழிக்காமல் செழிப்போடு வளரவிட்டிருந்தால் அந்த அரசனுடைய வாழ்வு பரிதாபமாயிழிந்துபடும்; அவனும் ஆண்மையற்றவனாய்க் கீழ்மை யடைய நேர்வன்.

திருந்தலர் புகழொடும் செல்வம் துய்த்திட
வருந்தியும் கருணையோடு அடிசில் வாய்மடுத்து
அருந்தியும் துயின்றும் நல்லின்பம் மாந்தியும்
இருந்துயிர் சுமப்பதின் இறத்தல் நன்றரோ.
[காசி கண்டம்]

பகைவரைக் கடிந்து ஒழிக்காமல் ஒருவன் உண்டு களித்திருப்பதைவிட இறந்துபோவது நல்லதென்று இதுவரைந்து காட்டியுளது. மாறுபட்ட செறுநரை நீறுபடச் செய்வதே அரசனுக்கு ஆண்மையான மேன்மையாம். கலகத் தலைவர்களைக் களைந்து ஒழித்தவன் உலகத் தலைவனாய் உயர்ந்து ஒளி மிகுந்து விளங்குகிறான்.

ஏற்ற காலம் வாய்த்தபொழுது பகைவரை மாய்த்து முடித்தவன் மதிப்பும் மாண்பும் மிகப் பெறுவன்.

இது இந்திரன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

நிவாத கவசர் என்பவர் அசுரர் மரபினர்; அடலாண்மைகள் உடையவர். அரிய பல வரபலங்களைப் பெற்றவர். போர்த் திறங்களில் வல்லவர். எப்பொழுதும் நீங்காமல் மார்பில் கவசங்களை அணிந்திருந்தமையால் **நிவாத கவசர்** என நிலவி நின்றனர். கடல்கள் புடை சூழ்ந்து அரணாக அமைந்திருந்த தோயமாபுரம் என்னும் தலைமையான நகரில் அவர் நிலையாக வாழ்ந்து வந்தனர்.

தேவர் யாவரையும் அடக்கித் திக்கு விசயங்கள் புரிந்து மிக்க வீரச்செருக்குடன் விளங்கி நின்றனர். தேவராசனை இந்திரனும் யாதும் செய்ய முடியாமல் அடங்கி ஒடுங்கியிருந்தான். அவரைக் காண நேர்ந்தபோதெல்லாம் மிகவும் பணிவுடையனாய் நயமொழிபகர்ந்து விநயமாய் இவன் ஒழுகி வந்தான் காலத்தை எதிர்நோக்கிப் பொறுமையாயிருந்து வந்த இவன் விசயனை விழைந்து கண்டான். அவன் அருந்தவம் செய்து சிவபெருமானிடம் சிறந்த படைக்கலன்களைப் பெற்று வந்துள்ளமையால் அவனிடம் தனது அவல நிலையை விளக்கிப் பகைவரைத் தொலைத்து ஒழிக்கும்படி வேண்டினான்.

ஆழிநீர் அழுவத் தென்றும் உறைபவர் ஆழி யானும்
ஊழியின் நாதன்தானும் உருப்பினும் உலப்பி லாதோர்
ஏழிரு புவனத் துள்ளோர் யாரையும் முதுகு காண்போர்
கோழியான் தனக்கும்தோலா அவுணர்முக் கோடியுண்டால்.

தவாதபோர் வலியின் மிக்க தவத்தினர் சாபம் வல்லோர்
சுவாதமே வீசி எல்லா வுலகையும் துளக்கு கிற்போர்
விவாதமே விளைக்கும்சொல்லர் வெகுளியே விளையும்நெஞ்சர்
நிவாதக வசத்தர் என்னும் பெயருடைக் கொடிய நீசர்.

மற்றவர் எனக்கு நாளும் வழிப்பகை யாகி நிற்போர்
கற்றவர் வணக்கி னுற்கும் கடக்கரும் வலியின் மிக்கோர்
செற்றிட நின்னை யன்றிச் செகத்தினில் சிலர்வே றுண்டோ
வெற்றிவெஞ் சிலைகொள் வீர! இவ்வரம் வேண்டிற்றென்றான்.
(பாரதம், நிவாதகவசர்)

நேர்ந்துள்ள பகைவர்களின் நிலைமைகளை விளக்கிக் காட்டி இந்திரன் அருச்சுனனிடம் இவ்வாறு வேண்டியிருக்கிறான். இந்த வேண்டுகோளுக்கு அந்த வீரன் விரைந்து இசைந்தான். உரிய சேனைகளோடு அரிய தேர் மேல் ஏறி அவன் போர் மேல் போனான். தமக்கு யாரும் எதிரிகள் இல்லைஎன்று இறுமாந்து களித்திருந்த அந்த அசுரர்கள் யாவரும் அதிசயித்து ஆரவாரமாய்த் திரண்டெழுந்து போருக்கு மூண்டனர். ஆண்டவன்

அருளை நேரே பெற்றுவந்துள்ள அவ்வீரன் எதிரே அனை வரும் ஒருங்கே மாண்டு மடிந்தனர். தானவர்களை வென்று மீண்டு வந்த அந்த ஆண்டகையை வானவர் கோன் வாழ்த்தி உபசரித்து மகிழ்ந்திருந்தான். சமை யம் அமையும் வரையும் பகைவரைப் பணிந்து வா. காலம் வாய்த்தால் உடனே அவரை அழித்து ஒழித்து விடு என்பதை எவரும் எண்ணி யுணர விண்ணவர் கோன் நன்கு விளக்கி நின்றான்.

**நேரலரை வென்றுகொள்ளும் நேரமுறின் அப்பொழுதே வேரற வெல்க விரைந்து.**

செறுநரை ஒழித்துச் சீருடன் வாழ்க.

---

489. குன்றினன் சேடனெனக் கூர்ந்தறிந்த வாயுவன்றேன் குன்றுமல் வென்றான் குமரேசா—என்றுமே
எய்தற் கரிய தியைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல். (கூ)

இ-ள்.

குமரேசா! ஆதிசேடனோடு வாதாடிய வாயு சமையம் வாய்த்தபொழுது விரைந்து மூண்டு ஏன் வெற்றி பெற் றான்? எனின், எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந் நிலையே செய்தற்கு அரிய செயல் என்க.

அரிய பொழுதின் உரிய பயன் அறிய வந்தது.

பெறுதற்கு அரிய சமையம் பெறப்பெற்றால் அப் பொழுதே செய்ய அரிய வினைகளைச் செய்து முடித்துக் கொள்க. செயல்=செய்க. வியங்கோள் விதி.

காலம் மருவிய கருமம் சாலவும் பெருமையாய் வரும். அவ்வரவினை இதில் உரிமையாய் உணர்ந்து வினை செயல் நிலைகளைத் தெளிந்து கொள்கிறோம்.

எய்தற்கு அரியது என்றது இங்கே காலத்தை. **காலம்** அறிதல் என்னும் அதிகாரம் ஆதலால் இங்ஙனம் இது காண வந்தது. தானே வந்து இயைந்தால் அன்றி வேறு எவரும் அதனை இசைக்க முடியாது. அவ்வாறு

அரிதாக வந்து வாய்த்த நேரம் நிலைத்து நில்லாது ஆதலால் அது உள்ளபொழுதே உரிய வினையை விரைந்து செய்து அரிய பயனை அடைந்து கொள்ள வேண்டும்.

எய்தல்=முயன்று பெறுதல்.

இயைதல்=தாகை வந்து அமைதல்.

கடலில் அலைபோல் உலக வாழ்க்கையில் காலம் ஓடிக்கொண்டேயிருக்கிறது. அதனை யாரும் நிறுத்தி வைக்க முடியாது. அது நடந்து கொண்டிருக்கும்போதே தொடர்ந்து தன் காரியத்தை முடித்துக் கொள்பவன் கரும வீரனாய்ப் பெருமை மிகப் பெறுகின்றான்.

தன் உடல் வலி படை வலி பொருள் வலி முதலியவற்றால் செய்ய முடியாத காரியத்தைக் காலத்தின் உதவியால் மனிதன் செய்து கொள்கிறான். அவரவருடைய நிலைமைகளுக்குத் தக்கபடி கருமங்கள் வேறுபடுகின்றன. பகைவரை வென்று தகைமையுடன் வாழ்வது அரசரது கடமையாயுளது. தாம் வெல்ல முடியாமல் வீறுகொண்டிருந்த செறுநரை நல்லகாலம் வந்து வாய்த்தால் ஒல்லையில் அவரை வென்று தொலைத்து வேந்தர் விவேகமாய் உயர்ந்து கொள்ளுகின்றனர்.

எய்தல் அரிய இறைவனை எய்தியதால்
செய்தல் அரிய செயலான—வெய்யகொடும்
தானவரை வென்று தனியரசாய் மேலோங்கி
வானவர்கோன் வாழ்ந்தான் வளர்ந்து.

பெறுதற்கு அரிய முருகப் பெருமானைத் துணையாகப் பெற்ற பொழுது வெல்லுதற்கு அரிய சூரன் முதலிய அசுரர்களை விண்ணுலக மெல்லாம் வியந்து புகழ்ந்து வர வென்று இந்திரன் இசை பெற்றிருக்கின்றான்.

பெறலரும் பேறெனப் பெற்ற இராமனால்
விறலுயர் வாலியை விரைந்து வென்றுமுன்
திறலுறு கதிரவன் சேய் விளங்கினான் ;
உறலுறு பொழுதுறும் உரிய யாவுமே.

அரிய சக்கரவர்த்தித் திருமகன் எளிதே வந்து வாய்த்த பொழுது பெரிய பகையை வென்று சுக்கிரீவன் உயர்ந்து வாழ்ந்தான். தக்க சமையத்தில் தம் கருமங்களைக் கருதிச் செய்பவர் மிக்க செல்வமும் புகழும் பெற்று மேன்மையுடன் வாழுகின்றனர்.

காற்றுள்ள பொழுதே தூற்றிக்கொள்
காலம் உள்ளபொழுதே ஆற்றிக்கொள்.

என்பது பழமொழியாய் வந்துள்ளது. உரிய காலத்தில் செய்கின்ற காரியங்கள் இனிதே முடிந்து இன்பங்கள் தருகின்றன. அவ்வாறு செய்யாதனவறிதே இழிந்துபடுகின்றன. படவே பலன்களையிழந்து மனிதர் படரடைகின்றனர். காலம் தெய்வக் கொடையாய்த் தேர்ந்து வருகிறது; அது எய்தியபோது செய்யவுரியன செய்துவரின் செய்யவள் அருள் சீருடன் சேர வரும்.

எய்தற்கு அரிய யாக்கைதனக்கு
எய்திற் றென்றால் அதுகொண்டு
செய்தற் கரிய அறங்கள்பல
செய்து துயர்கூர் பிறவியினின்று
உய்தற் கொருமை பெறவொண்ணா
துழல்வோன் உடம்பு பொற்கலத்தில்
பெய்தற் குரிய பால்கமரில்
பெய்தது ஒக்கும் என்பரால். (பிரபுலிங்கலீலை 11)

இந்தக் குறளைக் கருத்தில் வைத்துக்கொண்டு சிவப்பிரகாசர் இப்படித் தத்துவ நோக்கோடு பாடியிருக்கிறார். மனிதப் பிறவி பெறுதற்கு அரியது; அதைப் பெற்றிருந்தும் அதனால் பெறவுரிய புண்ணியத்தைச் செய்து பிறவித் துயர்கள் நீங்கிப் பேரின்ப நிலையை அடையவில்லையானால் அந்த மனிதனது பிறப்பு வீணானது என்று இங்கே அறிந்துகொள்கிறோம். எய்தற்கு அரியது எது? செய்தற்கு அரியது எது? என்பதை இதில் வேறு ஒரு வகையில் உணர்ந்து உண்மையைத் தெளிந்து உறுதி நலன்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம்.

கிடைத்தற்கு அரிய சமையம் கிடைத்தால் முடித்தற்கு அரியதை அரசர் விரைந்து முடித்துக் கொள்வர்.

இந்த முடிவு வாயு பகவான்பால் தெரிய வந்தது.

சரிதம்.

ஆதிசேடனும் வாயு பகவானும் அடலாண்மை குறித்து ஒருமுறை வாதாட நேர்ந்தனர். வேகத்தில் காற்றும், விவேகத்தில் சேடனும் சிறந்தவர் என்று பேர் பெற்றிருந்தவர் தேக பலத்திலும் யார் உயர்ந்தவர்? என்பதை அன்று சோதிக்க மூண்டனர். இவருடைய வலிமை நிலைமைகளை அறிந்து தெளியவிழைந்து தேவர்கள் திரண்டனர். யாவரும் மேருவை அடைந்தனர். மேரு மலையின் சிகரங்களை ஆதிசேடன் ஆயிரம் தலைகளாலும் வலிமையாய் அழுத்திக்கொள்ள வேண்டும், அந்தப் பிடியிலிருந்துநீக்கி ஒரு சிகரத்தையேனும் வாயு பெயர்த்து எறிய வேண்டும் என முடிவு செய்து இருவரும் மூண்டனர். முனைந்து முயன்றனர். இரண்டு பேரும் மானவீரத்தோடு ஆனவரையும் அடலாண்மை புரிந்தனர். வாயுவால் யாதும் அசைக்க முடியவில்லை. நாக வேந்தனை வேக வேந்தன் வெல்ல முடியவில்லையே! என்று விண்ணோர் சிலர் வியந்து பேசினர். அந்தவுரைகள் சேடனுக்குப் பெருமகிழ்ச்சிகளை அளித்தன; பெருஞ் செருக்கும் நீண்டது. தன்னைப் புகழ்ந்து கூறுவோர் யார்? என்று காண விழைந்து அயலே ஒரு தலையைச் சிறிது தூக்கி அவன் மேலே நோக்கினன். அந்தச் சமையத்தில் விரைந்து முனைந்து மூன்று கொடுமுடிகளைப் பேர்த்து வானவீதியில் வாயு வேகமாய் வீசினன். வீசவே வெற்றி! வெற்றி! என்று காற்றின் வேந்தனை யாவரும் போற்றிப் புகழ்ந்தனர். செய்ய முடியாது என்று சிந்தை தளர்ந்து தோல்வியை நினைந்து துளங்கியிருந்த இவன் ஏற்ற நேரம் வாய்த்தவுடனே ஆற்றலோடு மூண்டு வினையை விரைந்து செய்து முடித்தான். **எய்தற்கு அரியது இயைந்தால் செய்தற்கு அரியதை அந்நிலையே செய்க** என்பதை அன்று இவன் செய்து காட்டினன். இவனது கருமக் காட்சி அரிய மாட்சியா நின்றது.

காலம் இயைந்தபோது விரைந்துசெய்து காற்றின் வேந்தன் ஆற்றியுள்ள அதிசய ஆற்றலை விண்ணோரும் மண்ணோரும் வியந்து போற்றிப் புகழ்ந்து நின்றனர்.

முன்னாள் காற்றும் வாசுகியும்
தந்தம் வலியின் நிலைமொழிந்து
பொன்னார் வரையை வாசுகிதன்
பணைத்தால் பொத்திப் புறம்காப்பத்
தன்னார் விசையின் பெருங்காற்றுத்
தாக்கச் சற்றும் சலியாது
விண்ணோர் முனிவர் வேண்டியிட
வீரன் சற்றே முடிசாய்த்தான். (1)

வாயுவு இயக்கம் இல்லாமல்
வானோர்உலகும் மண்ணுலகும்
காயும் கனலில் இட்டதுபோல்
கலங்கிப் புழுங்கிக் கசிந்துற்று
வேயின் பணத்தா யிர அரவை
விண்ணோர் முனிவர் வேண்டியுமே
சாயும் படிசற் றறியாதான்
சற்றே தன்தோள் முடிசாய்த்தான். (2)

குலையா நிலத்தின் வடமேருக்
குலையமோதி அதன் திகழ்மூத்
தலையார் சிகரம் தனைமுறித்துத்
தடங்கால் அதனைக் கொண்டுபோய்
அலையார் கடலில் முன்பிட்ட
அந்த இடம்இம் மூவருக்கும்
நிலையாம் பதியாம் எனத்தச்சன்
நினைந்து அங்கதனை நிகழ்த்துவான். (3)

(இராமா: உத்தரகாண்டம்: 3-35)

வாசுகியோடு வாதாடி நின்ற வாயு சமையம் அமைந்தபோது மேருகிரியின் சிகரங்கள் மூன்றைப் பறித்து எறிந்த திறத்தை இவை விளக்கியுள்ளன. இலிங்கபுராணம் முதலிய நூல்களும் இவ்வீரத்திறலைக் குறித்து வியந்து மதித்துத் துதித்திருக்கின்றன.

எய்தற்கு அரிய சமையம் இயைந்தபோது செய்தற்கு அரிய செயலைச் செய்து முடித்தமையால் காலம் அறிந்து புரிந்த கருமவீரன் என்று ஞாலம் அறியத் தன் வேக விவேகங்களை இவன் விளக்கி நின்ருன்.

உரவி ஞல்வட மேருவைக் கொடுமுடி ஒடித்து
விரவி என்பெருந் தாதைநின் தாதையை வென்ருன்;
பரிவில் நின்னையான் வெல்வன் என்று அவனிபன் பதாகை
அரவை மற்றிவன் பதாகையில் அனுமன்வந் தடுத்தான்.
(பாரதம், நிரை 66)

விசயனேடு துரியோதனன் போராட நேர்ந்தான். அவன் தேரில் இருப்பது அரவக் கொடி; இவன் தேரில் உள்ளது அனுமக் கொடி. இரண்டு தேர்களும் நேர் எதிர்ந்தன; எதிரவே அனுமான் அரவத்தை நோக்கி வீரவாதம் கூறினன்: "ஏ பாம்பே! உன் தாதை ஆகிய ஆதிசேடனை என் தந்தை மேருகிரியில் அன்று வென்று தொலைத்து வெற்றி மிகப்பெற்ருன்; இன்று நான் உன்னை இங்கே வென்று ஒழித்து வெற்றி பெறுவேன்" என்று உரைப்பதுபோல் கொடியாடையில் உலாவி விளங்கினன் என இது விளக்கியுளது உரைக் குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

**அரிய சமையம் அமையின் அதுவே**
**பெரிய திருவாம் பெறல்.**

உரியபொழுதை உரிமையுடன் போற்று.

---

490. **கீசகன் கிட்டியதும் கெட்டியாய் வீமனுடன்**
**கூசாதேன் கொன்ருன் குமரேசா—பேசாமல்**
**கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்**
**குத்தொக்க சீர்த்த விடத்து.** (ம)

**இ-ள்.**

குமரேசா! மோனமாய் அடங்கியிருந்த வீமன் ஏன் கீசகன் கிட்டியவுடன் விரைந்து கொன்ருன்? எனின், கூம்பும் பருவத்து கொக்கு ஒக்க; சீர்த்த இடத்து மற்று அதன் குத்து ஒக்க என்க.

காலம் கழிய விடாதே என்கிறது.

கருமம் கருதி அடங்கியிருக்கும்பொழுது கொக்கைப் போல் குறிப்புடன் கூர்ந்து நிற்க; சமையம் வாய்த்த பொழுது அதன் குத்தைப்போல் கொத்திக் கொள்க.

வேந்தர் வினை ஆற்றும் திறத்துள் விவேக வேகங்கள் வித்தக விநோதங்களாய் விளங்கியுள்ளன.

கூம்பல்=குவிதல்; ஒடுங்குதல்; அடங்குதல்.

தொழில் செய்யாமல் ஒடுங்கி யிருக்கும்பொழுது சோம்பலும் மடமையும் தோயாமல் காரியமே கருதிக் கருமமே கண்ணுய்க் கூரியநோக்குடன் மனிதன் இருக்க வேண்டும்; அந்த இருப்புக்குக் கொக்கு ஈண்டு உவமையாய் வந்தது. ஒக்க என்றது அதனை ஒத்து நிற்கும் கூர்மையான நீர்மையை.

பறவை இனங்களில் கொக்கு ஒருவகையான அறிவுடையது. மீன்களை இரையாக உண்பது. ஏரி முதலிய நீர் நிலைகளில் மீனைப் பிடிப்பதற்காக யாதும் அசையாமல் அமைதியாய் நிற்கும். மீனைக் காண நேர்ந்தால் தப்பாமல் விரைந்து கொத்திக் கொள்ளும்.

அடக்கமாயிருந்து காரியத்தைச் சாதித்துக் கொள்வது கரும வீரத்தின் மருமமாம். நீண்ட நேரமானாலும் நிலை திரியாமல் சலியாமல் நிலைத்து நின்று இரையைக் கவர்ந்து கொள்ளும் கொக்கைப் போலக் காரிய வீரரும் கருதிய பலனை உறுதியாய்க் கைக்கொள்ளுகின்றனர்.

அடக்கம் உடையார் அறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு. (மூதுரை 16)

உரிய மீனை எதிர்நோக்கிக் கொக்கு இருப்பதுபோல் பெரிய பலனை நேர் நோக்கி அறிவுடையார் அடங்கி யிருப்பர் என ஔவையார் இவ்வாறு கூறியுள்ளார்.

**கொக்கு ஒக்க** என்ற குறிப்பு மொழிக்கு ஒரு விருத்தியுரைபோல் இது விரிந்து வந்துள்ளது. அரிய

காரியங்களை மருமமாய் மருவியிருந்து சாதிக்கும் ஆற்றலுடையார்க்கு, கொக்கு இப்படி ஒப்பனையாய் வாய்ந்துளது. பகை வெல்லும் பாங்கு இங்கு அறிய வுரியது.

ஒடுங்கி யிருந்தே உன்னியது முடிக்கும்
கொடுங்கால் கொக்கின் கோளின மாகிச்
சாய்ப்பிட மாகப் போர்ப்படை பரப்பி
வலிகெழு வேந்தனை வணக்குதும். (பெருங்கதை 3:17)

கொக்கைப்போல் கூம்பியிருந்து ஏம்பலான இடத்தே வலிய பகை வேந்தனை வெல்ல வேண்டும் என்று ஒரு கருமவீரன் கருதி யுறுதி செய்து தேர்ந்துள்ள தீரத்தை இதில் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம்.

அரைசே பொன்னம் பலத்தாடும்
அமுதே என்றுன் அருள்நோக்கி
இரைதேர் கொக்குஒத்து இரவுபகல்
ஏசற் றிருந்தே வேசற்றேன்;
கரைசேர் அடியார் களிசிறப்பக்
காட்சி கொடுத்துன் அடியேன்பால்
பிரைசேர் பாலில் நெய்போலப்
பேசா திருந்தால் ஏசாரோ? (திருவாசகம்)

சிவபெருமானது திருவருளை அடைய மாணிக்க வாசகர் கருதியிருந்த நிலையை இவ்வாறு உவமையோடு கூறியிருக்கிறார். இரைதேர் கொக்கு ஒத்து இரவு பகல் உன் அருள் நோக்கி ஏசற்றிருந்தேன் என்று குறித்திருத்தலால் குறிக்கோளோடு இவர் இருந்துள்ள சிவயோக நிலைமையைக் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம்.

மீன் உண் கொக்கு. (புறம் 277)
பைங்கால் கொக்கின்பகுவாய். (புறம் 342)
கொக்குவாய் அன்ன. (பெருங்கதை 1 : 42)
மீன் உண் குருகு. (ஐங்குறுநூறு 184)

கொக்கின் வாய், கால், இரை, நிலை முதலியவைகளை இவை இவ்வாறு விரித்துக் குறித்துள்ளன.

பக்கம் நோக்காமல் பதையாமல் நின்று உற்ற இரையைப்பற்றிக் கொண்டு வாழும் பறவையான கொக்கைப் பார்த்தாவது பாராளும் மன்னர் காரிய சித்திபெற்று வீரிய வெற்றியுடன் யாண்டும் மேன்மையாய் விளங்க வேண்டும் என விளக்கியிருக்கிறார்.

> மிக்கோர் நடுவர்எனின் வெல்லற்கு உபாயமுன்மூன்று;
> எத்திறத்தும் தண்டம் இகக்கபகை கீழாயின்
> கொக்குஒக்க கூம்பும் பருவத்து மற்றதன்
> குத்தொக்க சீர்த்த இடத்து. (இன்னிசை 163)

இந்தக் குறளை எடுத்துக் காட்டி இந்நூலாசிரியர் இவ்வாறு காலம் அறிந்து செவ்வையாய் வினைசெய்யும் காட்சியைத் தெளிவாத் துலக்கியுள்ளார்.

காகம் கூகைகளை முதலில் இருத்தித். தகரை இடையே வைத்து, கொக்கை இறுதியில் நிறுத்தி அவற்றின் நிலைமை வலிமை நீர்மை சீர்மைகளைக் கூர்மையாக் குறித்துக் காட்டி அவற்றைப்போல் காலம் அறிந்து பருவம் பார்த்து மருமமாயிருந்து கருமங்களை மாந்தர் முடித்துக் கொள்ள வேண்டும் எனத் தேவர் இதில் உணர்த்தியிருப்பதை ஓர்ந்து உணர்ந்து உவந்துகொள்கிறோம். பறவை விலங்குகளிடம் இயல்பாக அமைந்துள்ள பான்மைகள் மக்களுக்கு மேன்மையான விவேகங்களை விளக்கியுள்ளன.

சமையம் அமையும் வரையும் அறிவோடு அடங்கியிருந்து அது அமைந்தவுடனே விரைந்து வினையை முடித்துக் கொள்வது வேந்தர் கடமையாம்.

இது வீமன் பால் விளங்கி நின்றது.

சரிதம்.

விராட நகரத்தில் வீமன் மறைந்து உறைந்து வருங்கால் கீசகன் இவனுக்கு இடர்கள் பலசெய்தான். அங்கு அரசனுக்கு இவன் சமையல் வேலை செய்து வந்தமையால் இவனை மடையன் என்றே அவமதித்து அவன் இகழ்ந்து வந்தான். சொல்லாலும் செயலாலும் அப்

பொல்லாதவன் புரிந்து வருகிற அல்லல்களையெல்லாம் காலம் கருதி இவன் பொறுத்து வந்தான். பின்பு துரோபதையைக் காதலித்து அவன் தீது செய்ய நேர்ந்தான். அத்தீயவனை அழித்து ஒழிக்க வேண்டும் என்று இவன் துணிந்தான். பாஞ்சாலிபோல் கோலம் கொண்டான்; ஒரு தனியிடத்தில் அமர்ந்து கொண்டு நடுநிசியில் அவனை அங்கே வரும்படி ஒருத்தியிடம் நயமாய் உரைத்து விடுத்தான். அந்த உரையைக் கேட்டதும் உள்ளம் களித்துக் காமவெறியனுய் இரவில் கடுகி வந்தான். பருவ மங்கைபோல் படுத்திருந்த உருவை அடுத்து வந்து ஆசை வார்த்தைகள் பல பேசி அருகே நெருங்கினுன். நெருங்கவே அவனை விரைந்து பற்றி எற்றி வதைத்து இவன் வெற்றி பெற்று வந்தான். **கூம்பும் பருவத்துக் கொக்கு ஒக்க; சீர்த்த இடத்து அதன் குத்து ஒக்க** என்பதை இவன் அன்று குத்தி விளக்கினுன். மருளனுய் வந்து அவன் மாய்ந்து மடிந்தநிலையை அயலே வகையாய் ஆய்ந்து காண வருகிருேம்.

பைங்குலைக் குரும்பையைப் பழித்த கொங்கையாய்!
மங்குலைப் புழுகளை வைத்த கூந்தலாய்!
கங்குலிற் கால்வழி காட்ட வந்ததின்று
இங்குலப் புறும்எனது ஆவி யியவோ? (1)

கிஞ்சுக மலர்ந்துநின் கிள்ளை வாய்மையால்
அஞ்சலென் ருேருரை அளித்தல் காண்கிலேன்
நஞ்சன விழிக்கடை நயந்த பார்வைகொண்டு
எஞ்சுமென் உயிரினை எடுப்ப தென்றுநீ? (2)

கீசகன் இம்முறை கிளந்த பற்பல
வாசகம் கேட்டலும் மலங்கொள் நெஞ்சுடைப்
பூசகர் பூசைகொள் ளாத புன்பவ
நாசகக் கடவுள்போல் நகைத்து நோக்கியே. (3)

பெண்ணுடை உருக்கொளும் பெற்ற மாமகன்
கண்ணுடைப் பொறியெழும் கனலின் வந்திட
மண்ணுடைக் காவலன் மைத்துனன்றனை
எண்ணுடைக் கைகளால் இருகை பற்றினுன். (4)

பற்றினன் பற்றிய பாணி யாலெழச்
சுற்றினன் கறங்கெனத் தூணம் ஒன்றினேடு
எற்றினன் சென்னியை எடுத்த தன்வினை
முற்றினன் நெடும்பெரு மூச்ச ளுகியே. (5)
(பாரதம், கீசகன்வதை)

நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளை இதில் ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம். கொக்க ஒக்க அடங்கி யிருந்தவன் தக்க நேரம் வந்ததும் மடங்கலேறுபோல் கொதித்து விரைந்து கருதிய வினையை உறுதியாய் முடித்திருக்கின்றான்.

கொக்கும் இரைதே ருதலின்அருட்
குருவின் அருளில்யான் நோக்கத்
திக்குலோகம் என்றது எல்லாம்
தெரிய வேண்டியுரைத் ததுவாய்த்
திக்கு லோகமும் இறந்து
தேரும் யானும் இறந்ததுவாய்
ஒக்கும் உவமை யில்லாத
ஒளியாய் எங்கும் நிறைந்ததுவே.
(அத்துவித வுண்மை, 95)

கொக்கு இரையை நாடியிருப்பது போல் நான் என்னை நோக்கியிருந்தேன்; மாய மயக்கங்கள் ஒழிந்தன; தூய மெய் ஒளி துலங்கி நின்றது என ஒரு ஞானியின் ஆன்ம அனுபவத்தை இங்ஙனம் அருளியுள்ளார்.

**ஆகும் அளவும் அடங்கியமர்; ஆனவுடன்
வேகமாய்ச் செய்க வினை.**

**இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.**

1. காலம் அறிந்து வேந்தர் வினைசெய்ய வேண்டும்.
2. பருவம் படிந்து செய்வினை திருவை அருளும்.
3. அரிய வினையும் எளிதே முடியும்.
4. ஞாலம் கருதினும் நன்கு கைகூடும்.
5. காலம் கருதுபவர் ஞாலம் பெறுவர்.
6. ஊக்கம் உடையான் ஒடுக்கம் ஆக்கமாகும்.
7. அடக்கம் அறிவின் அடையாளம்.
8. பருவம் நோக்கிப் பகைவரை ஒழி.
9. உரிய காலம்வரின் அரியதைச் செய்துகொள்.
10. விரகுடன் அடங்கி விரைந்து வினைசெய்.

சுகூ-வது காலம் அறிதல் முற்றிற்று.

# ஐம்பதாவது அதிகாரம்

## இடன் அறிதல்.

அஃதாவது ஏற்ற இடத்தை அறிந்து ஆற்றலுற ஆற்றுதல். காலம் அறிந்து வினைசெய்ய வேண்டும் என்பதை முன்பு தெரிந்தோம்; இடம் அறிந்து தொழில் செய்ய வேண்டும் என்பதை ஈண்டு உணர்ந்து கொள்கிறோம். வலியும் காலமும் நன்கு பயனுறுதல் இடத்தினாலேயாம்; ஆகவே இதன் வன்மையும் தன்மையும் நன்மையும் தெரிய அவற்றின் பின் இது வைக்கப்பட்டது. வைப்புமுறையில் மருவியுள்ள திட்பங்களை நுட்பமாய் ஓர்ந்து உய்த்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

491. அன்று தொடங்கா தடங்கிநின்றான் காரிபின்பு
குன்றுதேன் வென்றான் குமரேசா—என்றும்
தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது. (க)

இ-ள்.

குமரேசா! முன்பு தொடங்காமல் நின்ற காரி உரிய இடங்கண்டபின் ஏன் ஊக்கி எழுந்தான்? எனின், முற்றும் இடம் கண்டபின் அல்லது எவ்வினையும் தொடங்கற்க; எள்ளற்க என்க.

வினை புரியும் விவேகத்தை இது விளக்கியுளது.

காரிய சித்திக்கு உரிய இடத்தை முழுவதும் நன்கு தெரிந்துகொள்ளும் வரை எந்த வினையையும் தொடங்காதே; எவரையும் யாதும் இகழாதே.

மாட்சியான இடத்தின் ஆட்சியைக் காட்சியாக் கண்ட பின்பே கருதிய வினையைப் புரிய வேண்டும்.

உடல்வலி படைவலி துணைவலி முதலியன உயர் நிலைகளில் அமைந்திருந்தாலும் இடவலி திடமாய் எய்தும் அளவும் அடங்கியிருக்க வேண்டும்; அடங்கியிராமல் தொடங்கினால் யாவும் அவமாய் அவலமுற நேரும்.

காணுதற்குக் கண்; செய்தற்குக் கை; நடத்தற்குக் கால்; நடித்தற்கு மேடை நலமா யிருத்தல் போல் கருமம் புரிதற்கு இடம் பலமா யுள்ளது.

தானம் பெற்றான், வானம் பெற்றான்.

என்னும் முதுமொழி மதிநலமுடையது; மாண் பொருள்கள் பல மருவியது. இடத்தின் மகிமையை இனிது துலக்கி வலிமை நிலையை இது விளக்கி யுளது

வான்சேரின் புள்அஞ்சா; வெல்லரில் சுற்றிய
கான்சேரின் மானின் கணம்அஞ்சா—வான்சேர்
சிகர வரைசேரின் தேன்அஞ்சா; அஞ்சா
மிகுநீர்க் கயம்சேரின் மீன். (பாரதம்)

வான் சேர்ந்த பறவை, கான் சேர்ந்த மான், மலை சேர்ந்த தேனீ, நீர் சேர்ந்த மீன் யாருக்கும் அஞ்சாமல் யாண்டும் உச்சமாய் வாழும். அதுபோல் உரிய இடத்தை அடைந்தவர் பெரிய வலியுடையராய் என்றும் பெருமையுடன் நிற்பர் என இஃது உணர்த்தி யுளது. புள் முதலிய நான்கு இனங்களும் இடத்தால் வன்மை பெற்றுள்ளதை ஓர்ந்து உணர்ந்து மனிதன் அரணைத் தேர்ந்து தெளிந்து உயர்ந்து கொள்ள வேண்டும்.

ஒருவன் பெற்றுள்ள வலி முதலியவைகளுக்கெல்லாம் உற்ற துணையாய் உறுதி பயந்து நிற்பது இடமே என்பது தெரிய இறுதியில் நின்றது. வலி காலங்களுக்கு ஈற்றில் நின்ற இது எல்லா ஆற்றல்களுக்கும் ஏற்றம் பயந்து வருதலால் ஆற்றல் மிகுந்த அரசரும் இடத்தை உரிமையோடு போற்றிக் கொள்ளுகின்றனர்.

வலியே காலம் இடம்இவற்றால்
மாற்றான் தனக்கும் உனக்கும்உள
பலவாம் நிலையும், வினைதொடங்கும்
பண்பும், அதற்காம் இடையூறும்,
விலகா ததனை விலக்குவதும்,
வெல்லு மாறும், வென்றதனால்
உலவாப் பயனும் முதலனைத்தும்
ஓர்ந்து தெளிந்தே வினைசெய்க.
(விநாயக புராணம்)

வினை செய்யும் வகைகளை விளக்கித் தன் மகனுக்கு ஓர் அரசன் இவ்வாறு அறிவு கூறியிருக்கிருன். வினை தொடங்கும் பண்புகள் இங்கே நன்கு அறிய வந்தன.

செயலாலும் சொல்லாலும் எதிரிகளுக்கு விழிப் பூட்டி இடர்களை விளைத்து விடாதே என்பார் தொடங் கற்க; எள்ளற்க என்றார்; எதிர்மறைவியங்கோள்கள் விதிமுறைகளாய் நிலைமைகளை வலியுறுத்தி நின்றன.

உரிய இடவலியை அறிந்தே உரவோர் வினை புரிய நேர்வர். அதனால் அரிய பலன்களை அவர் அடைவர்.

இந்த வினைத்திறமும், மனத் திடமும், மதியூகமும் காரியிடம் சீருடன் தெரிய வந்தன.

சரிதம்.

இவன் ஒரு குறுநில மன்னன். திருக்கோவலூரி லிருந்து அரசு புரிந்தவன். பெண்ணையாற்றை அடுத் துப் பரந்து விரிந்திருந்த நிலப்பகுதி இவனுக்கு உரிமை யாயிருந்தது. மலைநாடுகளுக்குத் தலைவன் ஆதலால் **மலையமான் திருமுடிக்காரி** என்று இவன் தலைமையாய் விளங்கி நின்றான். சிறந்த மதிமான். அருந்திறலாண் மையும், பெருந்தகைமையும், பெருங் கொடைமையும், இவனிடம் ஒருங்கே நிறைந்திருந்தன. எவர் வந்து எதைக் கேட்டாலும் உவந்து ஈயும் இயல்பினனாதலால் இவனது புகழ் எங்கும் ஓங்கி நின்றது. வறியவர் வந்து இவனை ஒருமுறை கண்டால் பின்பு அவர் வறுமையைக் காணார் என்னும் பெருமையை இவன் உரிமையோடு பெற்றிருந்தான். புலவர் திலகரான கபிலர் இவனு டைய ஈகை இரக்கங்களைக் குறித்து வியந்து புகழ்ந்து பாடியுள்ளார். அப்பாட்டு அயலே வருகின்றது.

நாளன்று போகிப், புள்ளிடை தட்பப்,
பதனன்று புக்குத், திறனன்று மொழியினும்,
வறிது பெயர்குவர் அல்லர்; நெறிகொளப்
பாடான் றிரங்கும் அருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே. (புறம், 124)

இராகுகாலத்தில் சகுனத்தடை நேர்ந்து பொழுதல்லாத பொழுதில் புகுந்து பேசத் தெரியாமல் பிதற்றினலும் இவனிடம் வந்தவர் எவரும் பெரும் பொருள்களைப் பெற்றே போயுள்ளனர். அவ்வுண்மையை இதில் உணர்ந்து கொள்கிறோம். வண்மையில் இவ்வாறு உயர்ந்திருந்த இவன் திண்மையிலும் சிறந்திருந்தான். மாறுபட்டு மூண்ட பகைவரை மாண்டுபடத் தாக்கி யாண்டும் நீண்ட வெற்றிகளைப் பெற்று வந்தான்.

அரவெறி யுருமின் முரசெழுந் தியம்ப
அண்ணல் யானையொடு வேந்துகளத்து ஒழிய
அருஞ்சமம் ததையத் தாக்கி நன்று
நண்ணுத் தெவ்வர்த் தாங்கும்
பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே! (புறம், 126)

பொருது வென்று வந்துள்ள இவனது போர் வீரத்தை **நப்பசலையார்** என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியிருக்கிறார். எதையும் சீர் தூக்கி நோக்கித் தெவ்வர் நிலையை எவ்வழியும் செவ்வையாய் ஆராய்ந்து காலம் தெரிந்து இடம் அறிந்து வினைதொடங்கி வந்தமையே இவனுடைய வெற்றிகளுக்குக் காரணமாய் நின்றது. முற்றும் இடம் கண்டபின் அல்லது எவ்வினையும் தொடங்கார்; யாரையும் எள்ளார் என்பதை இவ்வீரன் செயல் இயல்கள் யாண்டும் நன்கு விளக்கி நின்றன.

**ஏற்ற இடத்தை எதிரறிந்து பின்வினையை**
**ஆற்றுக ஆற்றல் அது.**

உரிய இடம் பெரிய திடம்.

---

492. திண்டோள் வலிமிகுந்தும் செய்ய அரண் சேர்ந்துயர்வு
கொண்டான் மதுவேன் குமரேசா—கொண்ட
முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவும் தரும். (உ)

இ-ள்

**குமரேசா!** மிகுந்த வன்மை அமைந்திருந்தும் மது ஏன் சிறந்த அரணை அடைந்திருந்தான்? எனின், முரண்

சேர்ந்த மொய்ம்பினவர்க்கும் அரண் சேர்ந்தாம் ஆக்கம் பலவும் தரும் என்க.

மிகுந்த திண்மை தோய்ந்த வன்மையாளர்க்கும் தகுந்த அரணைச் சார்ந்து நிற்கும் ஆக்கம் அரிய பல நன்மைகளை நேரே சீரோடு அருளும்.

ஏற்ற இடம் காணும் வரை எவ்வினையும் தொடங்காதே என்று முன்பு கூறினர். திடமான அந்த அரண் வலியைத் தெளிவாக இதில் அறிவுறுத்துகின்றார்.

முரண் = வன்மை; மாறுபாடு.
மொய்ம்பு = தோள்; வலிமை.

பகையும் வலியும் முரண் எனப் பகர்வர்;
வலியும் தோளும் மொய்ம்பென லாகும். (பிங்கலந்தை)

முரண் மொய்ம்புகளை இவை முறையே குறித்துள்ளன. அரிய திடமும் உரிய இடத்தால் உயரும்.

முரண் சேர்ந்த மொய்ம்பினவர் என்றது திண்மை செறிந்த தோள் வன்மையுடைய தீரரை. அவரது இயற்கையான வலிமை தலைமை முதலிய நிலைமைகளை உம்மை உயர்வாக உணர்த்தி நின்றது.

அடலாண்மையும் உடல் வலிமையும் உடைய வீரர்க்கும் இடவலி தேவையா? எனின், அவர்க்கும் அஃது அவசியம் தேவையாம்.

தோள்வலி ஆள்வலி வாள்வலி வேல்வலி வில்வலி துணைவலி மனவலி மதிவலி முதலிய எல்லா வலிகளுக்கும் இடவலி உறுதி நிலையமாய் அதிசய ஆற்றல்களை அருளி வரும். அவ் வரவு உறவாய் உணர வந்தது.

அரண் என்றது தன்னைச் சார்ந்தவருக்கு எதிரிகளால் இடர்கள் உருமல் இனிது பாதுகாத்து உறுதி பயந்து நிற்கும் இடம். தஞ்சம் என்று அடைந்தவரை அஞ்சேல் என்று ஆதரித்தருளுவது இறைவனது இயல்பு. அரனது அந்த அதிசய நீர்மை அரணிடம் அமைந்து யாவர்க்கும் இதமாய் ஆதரவு புரிந்துள்ளது.

முரண்புகு தீவினை முடித்த முன்னவன்
கரண்புகு சூழலே சூழக் காண்பதோர்
அரண்பிறி தில்லென அருளின் வேலையைச்
சரண்புகுந் தனன்என முன்னம் சாற்றினான்.

[இராமா, விபீடண, 54]

இராமனே அரண் என வந்து விபீடணன் சரண் புகுந்துள்ளதை இதில் அறிந்துகொள்கிறோம். தன்னைச் சரணமடைந்தவர்களை இனிது காத்தருளுவது இராமனது தனி நீர்மை ஆதலால் **அரணியன்** என்று ஒரு பெயர் அவனுக்கு நயமாயமைந்தது. சரணாகதரட்சகன் என அப்பெருமான் பேர் பெற்றிருப்பதும் இங்கே சிந்திக்கவுரியது. சிறந்த போர் வீரரை **மொய்ம்பினவர்** என்று தோள்மேல் வைத்துக் குறித்திருக்கிறார். எல்லா ஆற்றல்களுக்கும் மனிதன் தனி நிலையமாய் நிற்கிறான்; அந்த ஆள் ஆற்றல் தோள் ஆற்றலால் துலங்கி வருகிறது. ஆகவே தோள்வலி கூறுவது வீர மரபாயது.

சீதையை விடுவது உண்டோ?
இருபது திண்டோள் உண்டாய்.

**முரண் சேர்ந்த மொய்ம்பினனான** இராவணன் தனது தோள் வலியை இவ்வாறு வியந்து கூறியிருக்கிறான். அந்தத் தோள்களைத் துணித்து வீழ்த்தியே தனது அருமைத் தேவியை மீட்டி வந்துள்ளமையால் இராமபிரானது தோள் வலிமையை வியந்து புகழ்ந்து உலகம் உவந்து துதித்துப் போற்றி வருகிறது.

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழும் உண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையிராமன் தோள்வலி கூறு வோர்க்கே.

இராமனுடைய தோள் வலிகளைக் கூறுவோர்க்கு உளவாம் பேறுகளை இது சீராக வரைந்து காட்டியுளது. வீரமூர்த்தியின் விழுமிய நிலை வியனா அறிய வந்தது.

அறிவாலும் அறத்தாலும் தவத்தாலும் முயற்சியாலும் ஆக்கங்கள் வரும்; ஆகவே அவற்றினும் வேறுபாடு

தெரிய **அரண் சேர்ந்து ஆம் ஆக்கம்** என்று இதனை ஈண்டு விதந்து விளக்கிக் குறித்தார்.

உறுதியாக உற்ற அரண், வெற்றி பொருள் புகழ் முதலிய பலவகை நலங்களையும் அரசர்க்கு நன்கு பயந்தருளும் ஆதலால் **பலவும் தரும்** என்றார்.

ஆக்கம் உற வேண்டின் அரணை ஆக்கிக் கொள்க.

தக்க வலியுடையார்க்கும் இடவலி மிக்க மேன்மையாய் வெற்றித் திருவை விளைத்து அருளும்.

இது மதுவின் பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் அசுரர்குலத் தலைவன். அதிசயமான ஆற்றலோடு மதிநலமும் வாய்ந்தவன். அரிய விரதங்களை நோற்றுப் பெரிய வர பலங்களைப் பெற்றவன். இயல்பாகவே நல்ல குணங்கள் பல இவனிடம் உயர்வாய் நன்கு அமைந்து இருந்தன.

மன்னவர் மன்ன! முன்னாள் மதுவெனும் தானவேந்தன்
தன்னெதிர் இலாத வீரன் தருமமும் தயாவும் மிக்கோன்
பின்னுகன் அருளால் பெற்ற பெருவலித் திரிசூலத்தன்
அன்னது கையதாக விளிவிலா ஆயுப் பெற்றான்.

இன்னவாறு இவனுடைய நிலைமைகளை இராமபிரானிடம் முனிவர்கள் கூறியுள்ளனர். ஆகவே இவனது விவேகத்தையும் வினையாண்மைகளையும் தெரிந்து கொள்கிறோம். தனது பேரால் **மதுபுரம்** என்று ஒரு பெரிய நகரத்தை யுண்டாக்கி அரிய அரண்களை அமைத்து ஆட்சிபுரிந்து வந்தான். வருங்கால் இராவணனுடைய சிறிய தாயாகிய **கும்பிநசி** என்பவள் இவன் மேல் காதல் கொண்டாள். கரவாய் வந்து தன்னைக் கவர்ந்துபோம்படி முடங்கல் ஒன்று அனுப்பினாள். அடங்காத போர்வீரன் என இலங்கை வேந்தனை இவன் அறிந்திருந்தும் யாதும் கலங்காமல்போய் அவளைக் கவர்ந்து கொண்டு வந்து கந்தருவ மணம்புரிந்து இன்ப போகங்களை நுகர்ந்து மகிழ்ந்திருந்தான். இதனைத்

தசமுகன் அறிந்தான். வசைமிக வந்ததே என்று வருந்தினன். வீர சபதம் கூறிச் சேனைகளோடு இவன் மேல் அவன் மான வீறுடன் போருக்கு எழுந்தான்.

பூனைச்செவியை எலிமோந்து புலியைப்
புல்வாய் தொடர்ந்ததெனத்
தானைக் கடலைக் கலக்கினன்றன் தாயர்க்கு
இளையாள் தனைக்கொண்டென்
மானக் குலத்தை வரம்பழித்தான் மதுவே
கேட்டும் வாழ்ந்தோம்நம்
சேனைக் கடலை மதுபுரத்தில் செல்க
என்றான் சினமிக்கான்.

இவ்வாறு வெகுண்டு வந்தவன் இவனது அரண் வலியைக் கண்டதும் அயர்ந்து நின்றான். சேனைத்திரள்களோடு அவன் மூண்டு வந்திருப்பதை அறிந்தும் யாதும்அஞ்சாமல் இவன் அமர்புரிய மூண்டான். மனைவி மதிநலமுடையவளாதலால் இவனைத் தடுத்து நிறுத்தினள். நேரே இராவணன் எதிரே வந்து இதமுடன் வணங்கினள்;அவன் உள்ளம் இரங்கி உவகையுறும்படி தக்க விநயத்தோடு சாதுரிய சாகசமாய்ப் பேசினள்:

மக்கள் இழந்த இடும்பையினும்
மனையாள் இழந்த இடும்பையினும்
மிக்க இடும்பை ஒவ்வாத
விதவை இடும்பை எனவிளம்பத்
தக்க ததனல் என்கழுத்தில்
தாலி நீதந் தருள்என்று
தொக்க மணிப்பூண் மார்பானைத்
தொழுது பின்னும் இவைசொல்லும்: (1)

விட்டு விளங்கு மணிமுடியாய்!
வேதம் சொன்ன பிரமாதி
எட்டு மணத்தில் ஒருமணமாம்
அரக்கர் குலத்தின் இயல்பறிதி;
கட்டும் அரிய காவலையும்
கலக்கிப் புக்குக் கன்னியரை

முட்டி யிவரைக் கொடுபோந்து
வேட்கை முறையே எனமொழிந்தாள். (2)
[உத்தரகாண்டம்]

சுட்டிமொழிந்த இந்த உரைகளைக்கேட்டதும் அவன் சினந்தணிந்தான். சிந்தை உவந்தான். உறவுரிமையுடன் அரண்மனையுள் புகுந்தான். மதுவும் மகிழ்ந்து தழுவி உபசரித்தான்: இருவரும் நண்பராயினர். பின்பு அன்பரா யின்புற்றிருந்தார். முரண் சேர்ந்த மொய்ம் புடைய இவன் அரண் சேர்ந்து ஆக்கம் மிகப் பெற்றான்.

**திடமிகுந்த தீரனும் தோர்ந்த திறல்சேர்**
**இடமுறின் ஏற்ற முறும்.**

தக்க அரண் சார்ந்து நில்.

---

493. ஆற்றாச் சிகண்டியுமுன் ஆற்றிவென்றான் வீடுமனேர்
கூற்றென நின் றென்னே குமரேசா—ஊற்றமுடன்
ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின். (௩)

இ-ள்

குமரேசா! ஆற்றமாட்டாத சிகண்டியும் ஆற்றலுடைய வீடுமனை ஏன் முன் ஆற்றி வென்றான்? எனின். இடன் அறிந்து போற்றார்கண் போற்றிச் செயின் ஆற்றாரும் ஆற்றி அடுப என்க

இடவலி தெரிந்து பகைவர்பால் வகையாய் நின்று போர்செய்யின் வலியில்லாதாரும் வலியராய் உயர்ந்து எவரையும் வென்று விளங்குவர்.

ஆற்றார் = வலியர் அல்லார். ஆற்றல் என்பது ஆண்மைத் திறம் ஆதலால் அஃது இல்லார் ஆற்றார் என நேர்ந்தார். உம்மை அவரது இழிவை உணர்த்தி நின்றது. ஆற்றலுற்ற அளவு மனிதன் ஏற்றமுடையனாய் உயர்ந்து திகழ்கிறான்; அதனை இழந்தவழி இழிந்து கழிகிறான். வலியில்லாரும் இடத்தால் வலி யுறுவர்.

அடுதல்=கொல்லுதல்; வெல்லுதல். போரில் மூண்டபோது பகைவரைக் கொன்று வெல்லுவதும், கொல்லாமல் வெல்லுவதும் உண்டு. முன்னது கொற்றம்; பின்னது வெற்றி. போராற்றல் வழியே போராற்றல்கள் வெளியாய் அரசரை வியனு விளக்குகின்றன.

போற்ருர் = பகைவர். போற்றுபவர் = நண்பர். போற்ருமல் தூற்றி இகழ்ந்து துயர் செய்பவர் பகைவர் ஆதலால் அவர் இவ்வாறு பேர் பெற்று நின்றனர்.

போற்ருர். (புறம், 2)

போற்ருர். (பரிபாடல் 4)

போற்ரு மாக்கள்
தூற்றும் பழிமொழி. (பெருங்கதை, 1)

இவற்றுள் போற்ருர் குறித்து நிற்றல் அறிக.

எள்ளி இகழ்ந்து இடர்செய்ய நேர்ந்தவரை வேந்தர் அழித்து ஒழிப்பர்; அந்த அழிவுநிலை அடுப என்றதனுல் அறிய வந்தது. அடவுரிய வன்மை இடம் அருளுகிறது.

முன்பு ஆற்றலுடையார்க்கும் அரண் வேண்டும் என்ருர்; இதில் ஆற்ருதவர்க்கும் இடவலி திடமாய் ஏற்றம் தரும் என்கின்ருர்.

மெலியவரையும் வலியவராக்கி உற்ற இடவலி வெற்றியும் ஆக்கமும் விளைத்துவரும் ஆதலால் அதனை உறுதித் துணையாகக் கருதிப் போற்றிக் கொள்ள வேண்டும். சாதனங்கள் சரியாக அமைந்தால் காரியங்களை எங்கும் நன்கு சாதித்துக் கொள்ளலாம்.

சாதனம் பக்கம் தாபரம் வாய்புலம்
மருங்கு பாங்கு நத்தம் வைப்பு
தலைஇடம் அருகு தானம் கண் இடை
நிலைபதி உறையுள் நிசாதனம் முன்னர். (பிங்கலம்)

என இன்னவாறு பல பெயர்கள் இடத்துக்கு எய்தியுள்ளமையால் இதன் நிலைமை தலைமைகளை உன்னி உணர்ந்து கொள்கிருேம். உரிய தானமே எவர்க்கும்

அரிய வலி. பெரிய திருவாய் மகிமை தருகிறது. அது தவற நேர்ந்தால் எவனும் தளர நேர்கிறான்.

தானத்தின் பலமே யன்றித் தனக்கொரு வலியில் என்று
வானத்தின் வேந்தன் முன்னாள் மாதவன் எதிரே நின்றான்;
ஈனத்தை விழைந்து வந்தான் இழிபழி எய்தி நொந்தான்;
மானத்தை யிழந்து சென்றான் வையகம் வைய அந்தோ!

தனக்கு உரிய அரிய தானத்தை இழந்து வந்தமை யால் வானவர்கோனும் ஒரு பூனையாயிழிந்து ஈனமாய்ப் போனான் என இடவலியின் மேலான பெருமையை இங்ஙனம் இது நன்கு தெளிவுறுத்தி யுள்ளது.

ஆற்றாதவரும் இடம் வாய்த்தால் ஆற்றலுடைய வராய் ஏற்றம் மிகப் பெற்று எவரையும் வெல்வர்.

இது, சிகண்டிபால் தெளிவாய்த் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் பாஞ்சால தேசத்து வேந்தனிடம் தோன்றினான். அலி வடிவினன். தனது அலிவடிவத்தைத் தூல கர்ணன் என்னும் கந்தருவனால் மாற்றி ஆண்வடிவு கொண்டான். முன்பிறப்பில் காசிராசன் மகளாயிருந்த அம்பை என்பவளே பின்பிறப்பில் சிகண்டியாய் வந்துள்ளமையால் பழம் பகைமை கொண்டு வீடுமனை வென்று தொலைக்க விரகு சூழ்ந்து நின்றான். அந்த வீரனோடு போராடவுரிய தீரமும் திண்மையும் இலனாயினும் காலம் கருதி இடம் அறிந்து காவாய் வந்தான். பாரதப் போரின் பத்தாவது நாளில் அந்த வித்தகன் எதிரே மூண்டான். அதிசய வீரனான அவனுடைய பாணப்பிரயோகங்களைக் கண்டு அஞ்சி மீண்டு அயலே இவன் ஒதுங்கிப் போனான். பயந்துபோன இவனை விசயன் நயந்துகொண்டு வந்து தனது அயலே நிறுத்தி யாதும் அஞ்சாதே என்று தேற்றி அவ்வில் வீரனை வீடுமனோடு நேரே போராடினான். விசயனுடைய வீரப் பகழிகள் பாயவே சேனைத் தலைவனாய் நின்று செருச் செய்து வந்த மகாவீரன் தேரில் அயர்ந்து சாய்ந்தான்.

போனதின் சிகண்டிதனை மீளவும் கொணர்ந்துபல
பூசலுங் கடந்திரதமேல்
நீநில்அஞ்சல் நின்கணையும் ஏவுகென்று வெஞ்சமரில்
நேர்நடந்து சென்றுவிசயன்
கூனலங்கி தந்தசிலை கோலிஅம்பொடம்புபல
கூடநெஞ் சழன்றுதையினுன்
வேனிலம்பு முன்புதுதை யாதிலங்கும் அம்பொன்வரை
மேனிஎங்க ணும்புதையவே. (1)

தோளுநெஞ் சமும்சிரமும் மார்பமும் தொடங்கிநிலை
தோறும்வந்து வந்துருவவே
சாளரங்கொ ளங்கவழி யோடுகின்ற விந்துமுக
சாயகங்கை கொண்டு பிடியா
நாளறிந் ததிர்ந்துபொரு வோனுமைந் தனன்றுமுதல்
நாமமும் சிகண்டி யிவன்எய்
வாளியொன்றும் இங்கெமையுரு தனஞ்சயன்பெரு
வாழ்விதென் றறிந்து மகிழா. (2)

நாமவெங் கொடுங்கணையின் நாமும்நொந் தனம்சமர
நாளுமின்று முந்தவினிநீர்
போமடங் கனுந்தமையன் நீள்பதம் பொருந்தியுறு
போரறிந்து கொண்டு பொருவீர்
ஆமதன்றி என்செயினும் ஆவதொன்றும் இன்றுதனி
யாண்மை பொன்றல் என்றருகுசேர்
கோமடங்கல் தம்பியர்கள் ஆகிநின்ற மைந்தரொடு
கூறினன் பனங்கொடியனே. (3) (பாரதம்)

போரில் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இவை வரைந்து காட்டியுள்ளன. காட்சிகளைக் கண்ணூன்றி நோக்கி நேர்ந்துள்ள நிலைகளை ஓர்ந்து கொள்ள வேண்டும். ஆற்றல் இல்லாத சிகண்டியும் இடம் சார்ந்து நின்று வினை செய்தமையால் பேராற்றலுடைய வீர வேந்தனை யும் தீரமாய் வெல்ல நேர்ந்தான். இடன் அறிந்து போற்றிச் செய்யின் ஆற்ருரும் ஆற்றி அடுவர் என் பதை அன்று இவன் நன்கு அறிவித்து நின்ருன்.

**வலியில் மெலியனும் வாய்ப்பாம் இடத்தில்
வலியனுய் வெல்வன் வளைந்து.**

இடம் இயையின் இகல் அகலும்.

494 சென்றுநின்று சத்துருக்கன் செய்தான் இலவணனேன்
குன்றி யழிந்தான் குமரேசா—ஒன்றியே
எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். (சு)

இ-ள்.

குமரேசா! இடம் அறிந்து சத்துருக்கன் போர் செய்தான்; இலவணன் ஏன் இழிந்து அழிந்தான்? எனின், இடன் அறிந்து துன்னியார் துன்னிச் செயின் எண்ணியார் எண்ணம் இழப்பர் என்க.

இடம் தெளியின் இடர் ஒழியும் என்கிறது.

ஏற்ற இடத்தை அறிந்து செறிந்துநின்று துணிந்து வினைசெய்தால் நெடிது நினைந்து நின்றவர் நினைவிழந்து இழிவர்.

எண்ணியார் என்றது எதிரிகளை. தம்முடைய பொருள் வலி முதலிய நிலைமைகளைத் தலைமையாக நினைந்து நினைந்து நெடுஞ் செருக்கேறிவரும் பகைவரை எண்ணியார் என்று இதமாக் குறித்தருளினர்.

எண்ணுவார் என்னுமல் இறந்தகால வினையாலணையும் பெயரால் இவ்வண்ணம் குறித்தது, ஏன்? எனின், திண்ணியர் என்று தம்மை முன்னதாகவே பல பல அவர் எண்ணி இறுமாந்துள்ளமை தெரிய என்க.

சிறந்த வன்மைகளும் நிறைந்த திண்மைகளும் எவ் வழியும் தம்பால் அமைந்துள்ளனவாக உள்ளங்களித் திருப்பவரை ஈண்டு உணர்ந்து கொள்கிறோம். இயல்பாகவே செல்வச் செருக்குகள் உடையவர் ஆதலால் தம் நிலைமைகளை உயர்வாக எண்ணுவதே அரசர்க்கு மரபாக வந்தது. வேந்தர் என்று இங்கே வெளிப்படையாக உரைக்கவில்லை ஆயினும் இறைமாட்சி முதல் அரசருடைய செயல் இயல்களையே முறையாக உணர்த்தி வருகிறார் ஆதலால் இடங்கள்தோறும் அவரே உரிமையாய் நிற்கின்றார். வேந்தர் மேல் வைத்துக் கூறினும் மாந்தர் யாவரும் கருதிச்செய்ய வுரியனவேயாம். அரிய

வினையாண்மைகள் எவர்க்கும் எவ்வழியும் பெரிய மேன்மைகளை அருளி வருகின்றன.

துன்னியார் என்றது வினைசெய்யத் துணிந்து மூண்டு நிற்கின்ற மன்னரை. துன்னுதல்=நெருங்குதல்; சேர்தல். கருமம் புரிய உரிமையாய் மருவி நிற்பவர் அதற்கு உரிய மருமங்களையெல்லாம் நன்கு தெரிந்து திண்மையாய்ச் செறிந்து நிற்க வேண்டும் என்பது **துன்னி** என்பதால் ஈண்டு உன்னி உணர வந்தது.

| | |
|---|---|
| துன்னியார். | (குறள், 188) |
| துன்னுத் துறந்தார். | (குறள், 1250) |
| துன்னினர். | (நீலகேசி 347) |
| துன்னி யிருவர். | (பழமொழி 347) |

இவை இங்கே எண்ணி அறிய வுரியன.

செயல்களை மயலறத் தேர்ந்து இடம்தெரிந்து யாவும் **துன்னிச்செயின் துன்னியார்க்கு** வெற்றியாம். துன்னுது செய்யின் எண்ணியார்க்கு ஏற்றமாம். தெவ்வர் செருக்கு அழிந்து ஒழியச் செருச் செய்பவனே எவ்வழியும் மேன்மையாய் இசை பெற்று உயர்ந்து வருகிறான்.

காரிய வெற்றிக்கு உரிய சீரிய சாதனங்களை ஆதரவோடு கருதிக் கொண்டு காலம் ஓர்ந்து இடம் தேர்ந்து உறுதி தோய்ந்து ஊக்கி வினைசெய்ய வேண்டும். அந்த வினையாண்மையே வேந்தர்க்குப் பேராண்மையாய்ப் பெரிய ஆக்கங்களை உரிமையோடு அருளி வரும்.

நஞ்சுறை படைகள் கற்று நவையுறுது ஒன்ன லாரை
வஞ்சினத் தெறியும் வீரர் வளநக ரதனை மாற்றோர்
இஞ்சியைச் சூழ்ந்து போருக்கு எய்தினும் எண்ணியன்றி
வெஞ்சினத் தினைமேற் கொண்டு விரைந்தமர் இயற்றச்
[செல்லார். (கந்தபுராணம்)

அமர் செய்ய நேர்ந்த அரசரது அமைதியை இது குறித்துளது. எதையும் எண்ணி ஆராய்ந்து இடம் கண்டு துன்னிச் செய்வதே மதிமாண்புடைய மன்னர் இயல்பாம் என்பதை இதில் அறிந்து கொள்கின்றோம்.

மறைகெழு நூலும் தேசும்
மாசிலாத் தவமும் ஞான
முறைவரும் உணர்வும் அல்லால்
முனிவரர்க்கு உறுதி உண்டோ?
துறைகெழு கலைகள் வல்லாய்!
துன்னலர்ச் செருக்கும் போரும்
நிறைதரு வலியும் வாழ்வும்
நிருபர்தம் இயற்கை யன்றோ? (பாரதம்)

அரசர்க்கு உரிய இயல்புகளை இது அறிவித்துள்ளது. மாதவர்க்கு ஞான யோகம் மகிமையாம்; மன்னவர்க்கு மான வீரம் பெருமையாம் என்பது தெரிய வந்தது.

இன்னவாறான நிலைமை நீர்மைகளில் தலைமை வாய்ந்துள்ள வேந்தர்கள் நல்லவர்களை நாடிக் காத்துப் பொல்லாதவர்களைப் பொருது போக்கி நாட்டுக்கு நலம் பல புரிந்து யாண்டும் பலம் பொருந்தி வருகின்றனர்.

இடர்களை நண்ணி எண்ணிச் செருக்கியுள்ள ஒன்னலரை மன்னர் யாவும் உன்னி யுணர்ந்து உரிய இடம் புகுந்து உறுதியா ஊக்கி நின்று பொருது ஒழிக்கின்றார்.

இது இலவணன் பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் அசுர வேந்தனாகிய மதுவின் புதல்வன். மாய விஞ்சைகள் பல பயின்றவன். அதிசய ஆற்றல்கள் நிறைந்தவன். அரசர் பலரை அடங்க வென்று யாரும் தனக்கு நிகரில்லை என்று வெற்றி வீறோடு இறுமாந்து வந்தான். பின்பு யாதும் அன்பின்றி அருந்தவர்களுக்கு இடர்கள் புரிந்தான்; யாண்டும் அல்லல்கள் நீண்டன. மாதவர்கள் மறுகி வந்து இராமனிடம் இவனுடைய கொடுமைகளைப் பரிதாபமா யுரைத்தனர். அவ்வீர வள்ளல் இவனை அடக்கி வரும்படி தம்பி சத்துருக்கனை ஏவினான். உரிய படைகளோடு அவன் ஊக்கி எழுந்தான். இவனுடைய தன்மை வன்மைகளை எல்லாம் நன்கு உசாவி யறிந்து சமையம் நோக்கி இடந்தெரிந்து வந்து விரைந்து நகரை வளைந்து கொண்டான்: "இனிமேல்

யாருக்கும் துயர் செய்யவில்லை என்று உறுதிமொழி கூறி உடன்பாடு பெற்றால் நீ உயிரோடு சுகமாய் வாழலாம்; இல்லையேல் போராட நேரே வந்து துயரோடு சாகலாம்'' என்று இவ்வாறு வீரசபதம் கூறி ஒரு தூதுவனை அனுப்பினான். இவன் உருத்து வெளியே வந்து அவனைச் செயிர்த்து நோக்கி "நீ யார்? உன் பேர் என்ன?'' என்று கேட்டான். உற்றதையெல்லாம் அவ் வெற்றி வீரன் விளங்க உரைத்தான். இவன் சிரித்து இகழ்ந்தான். அம் மன்னன் துன்னி நின்றதும், இவன் துடுக்காய் எண்ணி மொழிந்ததும் மிடுக்கான போர் வீரக் காட்சிகளாய்ப் பொலிந்து விளங்கின.

### இலவணன் வினவியது.

தன்னுடைய நகர்வாயில் தனுதரனாய்ப்
　　போர்செய்யச் சமைந்து நிற்கும்
மன்னுடைய மகன்நின்ற வலிகண்டு
　　வாய்மடுத்து வஞ்சன் கூறும்:
என்னுடைய காவலறிந் தஞ்சாதே
　　என்னகரில் வந்தாய் யாரை?
உன்னுடைய பேர்ஏது? நீவந்த
　　காரணம்எற்கு உரைத்தி! என்றான். (1)

### சத்துருக்கன் சாற்றியது.

தயரதன்றன் தனயன்யான் சத்துருக்கன்
　　எனும்பெயராம் இராமன் தம்பி
புயலனைய கருமனத்தோய்! போர்வேண்டி
　　வந்தனன்யான் போர் தராது
பெயர்வரிதிங் குனக்கென்னப் பெருகியவெங்
　　கோபத்தால் பெயரா தோங்க
மயல்புரியு மனத்தவுணன் மற்றவனைக்
　　குறித்தினைய மாற்றம் சொன்னான்: (2)

### இலவணன் எண்ணி இகழ்ந்தது.

என்னுடைய தமையனும் இராவணனை
　　இருங்கிளையோடு ஏன்று கொன்ற
உன்னுடைய தமையனும் இராகவன்என்
　　றிருந்தவனை உணர்ந்தி லாதேன்

என்னுடைய பழம்பகைவன் தம்பிநீ
என்னிடைவந்து அகப்பட் டாயின்று
உன்னுடைய உயிர்கொள்வன் எனவுரைத்துப்
பின்னும்ஈது உரைக்க லுற்ருன். (3)

தெவ்வழிக்கும் சிலேதரித்த திறலுடைய
மாந்தாதா சேனே யோடென்
கைவழிவந்து அகப்பட்டுக் கனலாகி
ஒழிந்தமைநீ கழறக் கேட்டும்
உய்வழியொன் றிலேயின்றுன் உயர்சேனே
யதனெடுமென் உழைவந் துற்ருய்
அவ்வழியில் பிறந்தோருக்கு அறியாமல்
வரவந்த அழகே தென்ருன். (4)

(உத்தரகாண்டம் 13)

எண்ணிச் செருக்கி இவன் இறுமாந்து இகழ்ந்து பேசியிருக்கும் உரைகளே இங்கே அறிந்துகொள்கிருேம். பின்பு போர் மூண்டது; இருவரும் நீண்டநேரம் மூண்டு போராடினர். முடிவில் அவ்வீரன் வில்லாண்மையால் இவன் மாண்டு மடிந்தான். துன்னியார் இடன்அறிந்து துன்னிச்செயின் எண்ணியார் எண்ணம் இழப்பர் என் பதை இவன் அன்று இழந்து அழிந்து காட்டினன்.

**துன்ஞர் நிலேதெரிந்து துன்ன' விணைபுரியின்**
**அன்ஞரை வெல்லல் எளிது.**

ஒன்ஞரை ஓர்ந்து ஒழி.

---

495. கண்ட முதலே கசேந்திரனே நீள்புனலுட்
கொண்டுவென்ற தென்னே குமரேசா—மண்டு
நெடும்புனலுள் வெல்லும் முதலே யடும்புனலின்
நீங்கின் அதனேப் பிற. (ரு)

இ-ள்.

குமரேசா! வலிமிகுந்த கசேந்திரனேயும் நெடிய நீர் நிலேயில் ஒரு முதலே ஏன் அன்று வென்றது? எனின், நெடும் புனலுள் முதலே வெல்லும்; புனலின் நீங்கின் அதனேப் பிற அடும் என்க.

உரிய வலி நிலைகள் உணர வந்தன.

நெடிய நீரில் எவற்றையும் முதலை வெல்லும்; அந்த நீர் நிலையை விட்டு வெளியே வரின் யாவும் அதனை எளிதே கொல்லும்.

இடம் அறிந்து வினை செய்; அது அதிசய வலியுடையது; அரிய உறுதி அருளுவது; ஆற்றல் இல்லாதவரும் அதனால் ஆற்றல் உடையராய் ஏற்றம் அடைவர் என்று இன்னவாறு இடத்தின் மாட்சியை முன்னம் கூறி வந்தார். இடம் வெறும் சடம்; அதற்கு இவ்வளவு பெருமையா? இத்துணை ஆற்றல் அதற்கு உண்டா? என்று ஐயுறுவார்க்கு முதலையை ஈண்டு எடுத்துக் காட்டி இடத்தின் மதலையை நன்கு துலக்கி யுள்ளார்.

நிலத்தின் வலிமையைத் தெளிவாக விளக்குதற்கு நீரின் நிலைமை விழி தெரிய வந்தது. கண்கூடான அனுபவக் காட்சி மனிதனை இனிது தெளிவிக்கின்றது. தமக்கு உரிமையான இடமே எவர்க்கும் எவைக்கும் வலிமையான உறுதி மிகுந்த தலமாம்.

நெடும் புனல் என்றது அதன் ஆழம் நீளம் தெரிய.

ஏரி வாவி தடாகம் நதி முதலிய பெரிய நீர் நிலைகளிலேயே முதலை வாழும். நீர்வாழ் உயிர்களுள் இது மிகவும் கொடியது. இடங்கர், வன்மீன், கரா என வேறு பேர்களும் பெற்றுள்ளது. நெடிய நீரில் வாழுகிற இது கொடிய மாறுபாடு உடையது ஆதலால் கடுமையான இதற்கு யாவரும் அஞ்சுவர்.

முதலைக்கு இல்லை நீத்தும் நிலையும். (நறுந்தொகை)

நெடும் புனலுள் வாழுகின்ற இதன் நிலைமையை இது துலக்கியுளது. அச்சமும் நாணமுமின்றி மூர்க்கர் யாண்டும் மூண்டு திரிவதுபோல முதலையும் முரணுய்த் திரியும் என்பதை இதனால் அறிந்து கொள்கின்றோம்.

மூர்க்கனும் முதலையும் கொண்டதை விடா.

என்பது முதுமொழியாய் நீண்டு வந்துள்ளது.

தன்பார்ப்புத் தின்னும் அன்பில் முதலை;
பிள்ளை தின்னும் முதலை. (ஐங்குறுநூறு)

தான் பெற்ற பிள்ளையைத் தின்னும் கொடுமையுடை யது என முதலையை இங்ஙனம் ஓரம் போகியார் உரைத் திருக்கிருர். இதன் தீய புலை நிலை தெரிய வந்தது.

வன்மீன், கராம் என இந்த இனத்தில் பல பிரிவுகள் உள்ளன. அவற்றுள் எல்லாம் தலைமையாய் முதன்மை அடைந்து வந்துள்ளது முதலை என நேர்ந்தது.

ஒடுங்கிருங் குட்டத்து அருஞ்சுழி வழங்கும்
கொடுந்தாள் முதலையும் இடங்கரும் கராமும்.
(குறிஞ்சி 256)

முதலையின் இனங்களை இதில் அறிந்துகொள்கிறோம்.

கோள்வன் முதலைய குண்டுகண் அகழி.
(பதிற்றுப்பத்து 53)

கெண்டை யஞ்சினை மேய்ந்து கிளர்ந்துபோய்
முண்ட கத்துறை சேர்ந்த முதலைமா.
(சூளாமணி, நாடு 22)

சூழ்ந்த நாஞ்சில் சூழ்ந்த வாரை சுற்றுமுற்று பாரெலாம்
போழ்ந்தமா கிடங்கிடைக் கிடந்துபொங் கிடங்கர்மா
தாழ்ந்த வங்க வாரியில் தடுட்பொரு மதத்தினல்
ஆழ்ந்த யானை மீதெழுந்து அழுந்துகின்ற போலுமே.
(இராமா, நகரம் 17)

ஆழ்ந்த அகழிநீரில் முதலைகள் எழுதல் கடலில் யானை கள் எழுந்து அழுந்துதல் போல் இருந்தன என இது குறித்துளது. வன்மை முதலியன தெரிய வந்தன.

வலிய பெரிய மதயானையும் முதலை வாயில் சிக்கின் மீள முடியாது; உள்ளே அது வலித்து இழுத்துக் கொண்டு வதைத்து விடும்.

தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅ. (புறம் 104)

நீரில் நேரின் ஆற்றல் மிகவுடைய யானையையும் முதலை கொல்ல வல்லது என இது குறித்துள்ளது.

மோட்டும் முதுநீர் முதலைக்கு வலியது உண்டேல்
காட்டுள் நமக்கு வலியாரையும் காண்டும் நாமென்று
ஏட்டைப் பசியின் இரைகவ்விய நாக மேபோல்
வேட்டந் நிரையை விடலின்றி விரைந்த தன்றே.
(சீவக சிந்தாமணி 446)

நெடும்புனலுள் முதலை எதையும் வெல்ல வல்ல வலியுடையது; கடுங்காட்டுள் வேடர் எவரையும் வெல்ல வல்லவர் என அவர் வீறுகொண்டு இங்ஙனம் கூறியுள்ளனர். இடமே அரிய பெரிய திடம் என்பதாம்.

கொடுங்கால் முதலைக் கோள்வல் ஏற்றை.
(குறுந்தொகை 324)

முதலையின் கால்கள் வளைந்திருக்கும் என்பதை இதனால் அறிந்து கொள்கிறோம். வாய் அகன்று பற்கள் வக்கிரமாய் வாய்ந்திருத்தலால் இதன்வாயில் சிக்கியது பேய்வாய்ப் பட்டதுபோல் நோயாய் மாய நேருகிறது.

பிற அதனை அடும் என்றது நீரைவிட்டு அயலே வரின் சிறிய பிராணிகளும் முதலையைக் கொன்று தொலைத்து விடும் என்பது ஈங்கு நன்கு தெரிய வந்தது.

முன்பு வலியனைய் அல்லல் செய்தவன் பின்பு எளியனாய் இழிந்து அழிவான் என்னும் கரும விளைவும் தரும நீதியும் மருமமாய் இதில் மருவியுள்ளன.

இடத்தின் வலிமையை மாந்தருக்குத் தெளிவா விளக்குதற்கு முதலை ஈண்டு முதன்மை எய்தி நின்றுள்ளது, நிலை பிரிய நேர்ந்தால் தலை பிரிய நேரும்.

**வெல்லும்** என்னும் வினைக்கு உரிய செயப்படு பொருள் இதில் வெளிப்படையாயில்லை ஆயினும் தலைமையான நிலைமையால் யானை தகவாய் வந்தது.

யானையைச் சலந்தனில் இழுத்த அக்கரா
பூனையைக் கரைதனில் பிடிக்கப் போகுமோ?
தானையும் தலைவரும் தலம்விட் டேகினல்
சேனையும் செல்வமும் சிதைந்து தேய்வரே.
(விவேக சிந்தாமணி)

நீரில் இருக்கும்பொழுது யானையை இழுக்கவல்ல முதலை நிலத்தில்வரின் பூனையையும் பிடிக்கமுடியாது; நிலை பிரிந்தால் எவரும் இழிவுற நேர்வர் என இது குறித்துள்ளது. அரசர்க்கு உரிய உறுதி அறிய நின்றது.

இந்த உவமையைத் தெலுங்குக் கவிஞராகிய வேமநரும் விளம்பியிருக்கிறார். அயலே வருவது காணுக.

நீள்ள லோந முசலி நிதடி ஏநுக தீசு
பைட்ட குக்க சேத பங்க படுநு;
ஸ்தாந பலமு காநி தநபலமு காதய்யா
விஸ்வ தாபி ராம விநுர வேமா. (வேமநபத்தியம்)

நீருள் முதலை யானையைப் பிடித்துவெல்லும்; வெளியே வரின் நாயும் அதனைக் கடித்துக் கொல்லும்; ஆகையால் யாருக்கும் தானத்தின் பலமேயன்றித் தன்பலம் இல்லை என்பதை மனிதன் அறிந்துகொள்ள வேண்டும் என இவ்வாறு அவர் அறிவித்துள்ளார்.

நிலத்தில் வலியுடையது யானை; நீரில் வலியது முதலை. நிலைமாறவே புலையுற நேர்ந்தன. தமக்கு உரிமையான தானமே எவர்க்கும் பெருமையான மேன்மையாய் யாண்டும் வெற்றியை அருளும்.

தனக்கு உரிய வலிய இடத்தை ஒருவன் நீங்கிப் போனல் அவனுக்குப் பெரிய இடர் ஓங்கி வரும்.

இது கசேந்திரன்பால் தெரிய வந்தது.

### சரிதம்

இது அதிசயமான ஒரு மதயானை. முன்பு இந்திரத்துய்மன் என்னும் மன்னனயிருந்தவன் பின்பு அகத்திய முனிவர் சாபத்தால் யானையாயினன். சொல்லாடல் ஒன்று தவிர மற்ற எல்லா மனித வுணர்ச்சிகளும் இதனிடம் இனிதமைந்திருந்தன. வானவர்களுக்கு இந்திரன் போல் யானை இனங்களுக்கெல்லாம தலைமையான வேந்தனய் விளங்கியிருந்தமையால் **கசேந்திரன்** எனப் பேர்பெற்று விளங்கி நின்றது. கசம்=யானை. ஒருநாள் நெடிய மடுவில் இறங்கி இது நீர் பருகியது. அங்கே

சாபத்தால் வந்து கிடந்த பெரிய முதலை இதன் காலைப் பற்றிக்கொண்டது. வெருண்டு விரைந்து இது வெளியேற முயன்றது. அது இறுகக் கௌவிக்கொண்டு உள்ளே ஈர்த்தது. அந்த முதலை வலிந்து இழுக்கவே இந்த மதயானை மெலிந்து தளர்ந்து உயிருக்கு மன்றாடி முடிவில் முடிவில்லாத பரமனை நினைந்து ஓலமிட்டது. ஆதிமூலமே என்று ஓலமிடவே திருமால் அதி வேகமாய் வந்து ஆழியால் அதனை வீட்டி இதனை மீட்டியருளினர். மீட்சி அதிசயக் காட்சியாய் நின்றது.

கூப்பிடு குரல்கேட்டு ஓடிக் கொழுமணிச் சுடிகை நெற்றிப்
பாப்பணை அகற்றி வெய்ய படர்சிறைக் கலுழன் ஊர்ந்து
தீப்பொழிந்திலங்கு கூர்வாய்த் திகிரிகைத் தாங்கி யாவும்
காப்பவன் பிறைவெண் கோட்டுக்களிற்றுமுன் எய்துற்ருனல்

எறிசுடர் விரிக்கும் நேமி எறிந்தனன் எறித லோடும்
பிறைபுரை எயிற்றுப் பேழ்வாய் பிளந்துவெவ்விடங்கர் துஞ்சி
அறைதரு சாபம் தன்னுல் அடைந்தவவ் வுருவு நீத்து
விறலுடை யூகூ என்னும் விஞ்சையன் ஆயிற் றன்றே. (2

விழுமிய இசைநூல் தேர்ந்த விஞ்சையன் ஆய அன்னேன்
பழமறை முதலி பாதம் பழிச்சினன் பதியிற் போயான்
அழிவறு தவத்தின் மிக்க அகத்தியன் சாபம் தீர்ந்து
மழைமதக் களிறு மாயன் வரம்பில்வீ டுற்ற தம்மா! (3)
(பாகவதம் 8, 2)

நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளை இவற்ருல் ஓர்ந்து உணர்ந்து கொள்கிருேம். **நெடும் புனலுள் முதலை வெல்லும்** என்பதை உலகம் காணக் கசேந்திரன் காட்டிச் சென்ருன்.

இந்தச் சரித்திரத்தைப் பலநூல்களும் பாராட்டியுள்ளன. அயலே வருவன ஈண்டு அறிய வுரியன.

கரா மலை யத்தளர் கைக்கரி எய்த்தே
அராவணை யில்துயில் வோய்!என அந்நாள்
விராவி யளித்தருள் மெய்ப்பொரு ளுக்கே
இராமன் எனப்பெயர் ஈந்தனன் அன்றே.

(இராமா, திருஅவ 120)

மாடு பற்றி இடங்கர் வலித்திடக்
கோடு பற்றிய கொற்றவற் கூயதோர்
பாடு பெற்ற உணர்வின் பயத்தினல்
வீடு பெற்ற விலங்கும் விலங்கரோ? (இராமா, வாலி 109)

காரணம் கேட்டி யாயின் கடையிலா மறையின்கண்ணும்
ஆரணம் காட்ட மாட்டா அறிவினுக் கறிவும் அன்னேன்
போரணங்கு இடங்கர் கௌவப் பொதுநின்று முதலே என்ற
வாரணம் காக்க வந்தான் அமரரைக் காக்க வந்தான்.
(இராமா, சுந்தர, பிணி 79)

போதகம் ஒன்று கன்றி இடங்கர்மாப் பொருத போரில்
ஆதியம் பரமே! யானுன் அபயம்என் றழைத்த அந்நாள்
வேதமும் முடிவும் காணு மெய்ப்பொருள் வெளிவந்தெய்தி
மாதுயர் துடைத்த வார்த்தை மறப்பரோ மறப்பி லாதார்.
(இராமா, விபீட 113)

கள்ளமா யுலகங் கொள்ளும் கருணையாய் மறையிற் கூறும்
எள்ளலா காத மூலத்து யாதுக்கும் முதலா யுள்ள
வள்ளலே! காத்தி என்ற மாகரி வருத்தம் தீரப்
புள்ளின்மேல் வந்து தோன்றும் புராதன! போற்றி போற்றி.
(இராமா, வருண 71)

முதலை வாயிலிருந்து கசேந்திரனை மீட்டி முதல்வன் காத்துள்ள கருணைக் காட்சியை இவை காட்டியுள்ளன.

**நீர்க்குள்மீன் பாயும்; நிலத்திலுறின் மாயுமே**
**யார்க்கும் இடமே திடம்.**

தானம் தழுவி நில்.

---

496 வானுலகைவென்றுவந்தும் மண்ணுலகில்கட்டுண்டான்
கோனிலங்கை வேந்தேன் குமரேசா—ஆன
கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து. (சா)

இ-ள்.

குமரேசா !விண்ணுலகை எல்லாம் எளிதே வென்று வந்த இலங்கைவேந்தன் மண்ணுலகில் ஏன் கட்டுண்டான்? எனின், கால்வல் நெடுந்தேர் கடல் ஓடா; கடல் ஓடும் நாவாயும் நிலத்து ஓடா என்க.

நிலத்தில் ஓடும் கால்வலிய நெடிய தேர்கள் கடலில் ஓடமாட்டா; கடலில் ஓடும் மரக்கலங்கள் நிலத்தில் ஓடா: பீடு அழிந்து அவை பிழையாய் நிற்கும் என்பதாம்.

தேரும் நிலமும் நீரும் நாவாயும் இங்கே ஆராய வந்துள்ளன. அவரவர்க்கு உரிமையான இடமே பெருமையான வலிமையை அவர்க்கு உறுதியாய்த் தரும் என்னும் உண்மையைத் தெளிவா விளக்குதற்குப் பலவகையான உவமைகளை எடுத்துக்காட்டி வருகிருர்.

நிலத்தில் வலிய யானை நீரில் புகின் அதனை அங்கே வலிய முதலை கொல்லும் என்று முன்னம் குறித்துக் காட்டினர். உயிருள்ள பிராணிகளுக்கே அன்றி இந்த வன்மை உயிரில்லாத சடங்களுக்கும் இயற்கையாய் அமைந்துள்ளமையை இதில் உணர்த்துகின்றூர்.

நாவாயும், தேரும் மரக்கட்டைகளால் செய்யப் பட்டிருப்பினும் முன்னது நீரில் வலியுற்றது; பின்னது நிலத்தில் வலிபெற்றது. ஒரு தாய் வயிற்றில் பிறந்தாலும் இட வலிமையால் அவர் அடல் வேறு படுவர் என்பதை இதனல் அறிந்து கொள்கிறோம்.

ஓடா என்னும் பன்மை வினைக்கு ஏற்பஎழுவாய்கள் தழுவி நின்றன. ஓடாது என்று ஒருமையில் குறிக்க வில்லை. எந்த வகையான அதிசய வலிமைகளும் அரிய வேலைப்பாடுகளும் உடையனவாயினும் இந்த வகையில் அவை செல்லா என்பது சிந்தை தெளிய வந்தது. இடன் அறிந்து வினைசெய்யவுரிய அரசரும் பலர் ஆதலால் அவர் நிலைக்கு இசைய இவை பலவாய் அமைந்தன.

உவமானத்தால் உபமேய நிலையை உணர்ந்து கொள்ளும்படி வந்துள்ளமையால் **பிறிது மொழிதல்** என்னும் அலங்காரம் இதில் துலங்கி நின்றது, **நெடும் புனல்** என முன்னர் வந்துள்ளதும் இந்த அணியே படிந்துள்ளது. குறிப்புகள் கூர்ந்து உணர வந்தன.

கால் என்றது தேரின் உருளைகளை.

மனிதர்க்குக் கால்கள் அமைந்திருத்தல் போல் அவை தேர்க்கு அமைந்துள்ளன. விரைந்து உருண்டு செல்லவுரிய கருவியும் வலிமையும் தெரியக் கால்வல் என்றார். சக்கரம் என்னுது கால் என்றது செயல்தெரிய.

செல்வர் சகடக்கால் போல வரும். (நாலடி 2)

கால் இதில் வந்துள்ளமை காண்க. வண்டி உழவர்க்கு உரியது; தேர் அரசர்க்கு உரியது; அந்த வரிசை தெரிய அது இங்கே மருவி நின்றது. வேந்தர் ஓர்ந்து செய்ய வேண்டிய நெறிமுறைகளையே உணர்த்தி வருகிறார்.

நாவாய்=மரக்கலம், மிதவை, வங்கம், தோணி, கப்பல் என இதற்குப் பெயர்கள் வந்துள்ளன. கடல் நடுவே பாய் விரித்து ஓடும் இயல்பினது ஆதலால் **நாவாய்** என வந்தது.

முந்நீர் வழங்கும் நாவாய். (புறம் 13)
கரை சேரும் நாவாய். (பரிபாடல் 10)
கடல் நடுவண் நாவாய். (பெருங்கதை 3, 20)

இவற்றுள் நாவாய் இவ்வாறு வந்துள்ளது.

பண்ணார் களிறேபோல் பாய்ஓங்கு உயர் நாவாய்
கண்ணார் கடல்மண்டிக் காற்றில் கவிழ்ந்தால்
மண்ணார் மணிப்பூணாய் மக்கள் உறுந்துன்பம்
நண்ணா நரகத்தின் நான்கா மடியன்றே.
(சீவக சிந்தாமணி 2793)

கடலிடையே நாவாய் கவிழ நேர்ந்தால் மக்கள் பதைத்துத் துடித்துப் படுந் துன்பங்களை இது குறித்துள்ளது,

பித்த மயக்காம் சுறவெறியும் பிறவிப் பெரிய கடல் கடக்க
உய்த்து மீண்ட நாவாயில் தாமும் போவார் ஒக்கின்றார்.
(இராமா, 2:5;73)

இறந்துபோன தசரதன் உடலைச் சுற்றியிருந்த அவனுடைய மனைவியர் நிலையை இது வருணித்துளது. அந்த உடலில் இருந்த உயிர் பிறவிக்கடலைக் கடந்து பேரின்ப முத்தியைப் பெற்றுள்ளது. அதுபோல் தாமும் அதனைப் பற்றிக்கொண்டு உய்யவேண்டும்

என்று உறுதி பூண்டு பொறுதியுடன் மூண்டு நின்றனர் என்னும் இது ஈண்டு ஊன்றி உணரவுரியது.

கரிய பெரிய கடலைக் கடத்தி உற்றவரை உரிய கரையில் சேர்க்க வல்லது நாவாய் என்பது இங்கே நன்கு தெரிய வந்தது. இவ்வளவு சீரும் சிறப்பும் நீரில் பெற்றுள்ள இது நிலத்தில்வரின் ஒரு சிறிதும் நகராது.

தன்மேல் எறியுள்ள வீரர்களை யாண்டும் விரைந்து கொண்டு சென்று அவர்க்கு வெற்றித்திருவைத் தருவது தேர். நிலத்தில் இத்துணை மகிமை யுற்றுள்ள இது நீரில் புகுந்தால் நிலை குலைந்து தாழ்ந்துபோம். இந்த நிலைமைகளை உய்த்து உணர்ந்து அரசர் தலைமைகளைத் தேர்ந்துகொள்வது நல்லது. எத்தகையவரும் தத்தமக்கு உரிமையான இடத்தை உறுதியாய் எய்திநின்றே எதையும் கருதிச் செய்யவேண்டும்.

மாற்றலர் வலிமை ஓர்ந்து, மருவிய பொழுதைத் தேர்ந்து,
ஏற்றமாம் இடத்தை எய்தி, எதிர்வன எல்லாம் எண்ணி,
ஊற்றமாய் உறுதி நாடி உறுபடை ஊக்கி நின்றால்
ஆற்றல்கள் எல்லாம் அங்கே அடையுமால் யாரும் வெல்வார்

வலி காலம் இடம் முதலிய நிலைகளைத் தெளிவாகத் தெரிந்து வினைபுரிந்து வருபவர் எவ்வழியும் வெற்றியை எளிதே அடைந்து வியனாய் உயர்ந்து கொள்வர் என்பதை இதில் அறிந்து தெளிந்து கொள்கிறோம்.

திண்மையும் திடமும் தனக்கு எவ்வளவு அமைந்திருந்தாலும் எதிரியின் தன்மையும் இடமும் அறியாமல் போனால் அவன் அவமானமடைந்து இழிந்து படுவான்.

இவ்வுண்மை இராவணன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

அரிய திறலுடைய பெரிய வேந்தனான இவன் தனது அழகிய இராசமாளிகையுள் அரியணையில் அமர்ந்திருக்கும்பொழுது ஒருநாள் நாரதமுனிவர் அங்கே வந்தார். வந்த அந்த முனிவரை இவன் உவந்து உபசரிக்கவில்லை. அயலே யிருந்த ஆதனத்தில் அவர்

இயல்பாயமர்ந்தார். இதமாய்ப் பேசினர்; "மன்னர் பெரும! உங்கள் புகழ் எங்கும் ஓங்கி ஒளிவீசிவருகிறது; யாவரும் புகழ்ந்து வருகின்றனர்; ஒருவன் மாத்திரம் இகழ்ந்து நிற்கின்றான்; அவன் ஒரு வானரர் தலைவன்; கிட்கிந்தை நகரிலிருக்கிறான்; வாலி என்னும் பேரினன். **வாலி வால் எதிரே இராவணன் கோல் அதிரும்** என இவ்வாறு கேலியாய்க் கூறி வருகிறான்" என்று கூறி விட்டு அவர் விடைபெற்றுப் போயினர். மறுநாளே இவன் போருக்கு எழுந்தான்; நேரே அவன் ஊருக்கு வந்தான். அப்பொழுது வாலி அங்கேயில்லை. சிவ பூசை செய்யும்பொருட்டு வழக்கம்போல் அவன் கடற் கரைக்குப் போயிருந்தான். இவனும் அங்கே போனான். அவனுடைய நெடியவால் நீண்டுகிடப்பதைக் கண்டான்; அதனைப் பற்றிப் பிடித்தான்; கையை அது சுற்றிக் கொண்டது; மற்றக் கைகளாலும் கால்களாலும் அதைத் தள்ளினான். எல்லாவற்றையும் சுற்றிக் கொள்ளவே அந்த வால் நுனியில் இவன் சுருண்டு கிடந்தான்; பூசையை முடித்துவிட்டு வானவீதிவழியே தாவித் தனது அரண்மனையில் வந்து அவன் அமர்ந்தான்; வாலில் கட்டுண்டு கிடப்பவனைக் கண்டான்; முன்னே வளைத்துக் கட்டு அவிழ்த்துவிட்டு "நீ யார்? ஏன் இங்கு வந்தாய்?" என்று கேட்டான், உற்றதையெல்லாம் ஒளியாமல் இவன் உரைத்தான். "அப்படியானல் மறுபடியும் நேரே போராடி வெற்றி தோல்விகளைப் பார்க்கலாம்" என்று வாலியுரைத்தான், இவன் மறுத்து வேண்டாம் என்று மொழிந்து தோழமை கொண்டாடினன். அவனும் உரிமையாய் அமைந்தான். அயலே வருவன காணுக.

பின்னுகன் பூசை பேணுதல் வேண்டிப்
பெருங்கடல் தொறும்செல விரையும்
அந்நிலை யதனில் அரக்கன் நீ வந்த
காரியம் அறிந்திலென்; அங்கே
வெந்நிடை வந்த காரண மதனை
விளம்பு! என இராவணன் விளம்பும்:

உன்ஞெடு பொருவான் வந்தகப் பட்டேன்
உண்மையீ தென,அவன் உரைக்கும்: (1)

மின்ஞெளிர் முடியாய்! வென்றவர் தோற்பர்
தோற்றவர் வெல்வர்வெஞ் செருவில்
என்ஞெடு பொருவான் இச்சையுண் டாயின்
இராவணு! பொருதியீண் டென்னக்
கன்னெடுந் தோளாய்! கலங்கினேன் வாலால்
கட்டுண்டு பட்டது கிடக்க
இன்னமும் பொரவோ? இனிச்செரு வமையும்
இன்றுநின் தோழன் நான் என்ருன். (2)

(உத்தரகாண்டம்)

நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இவை வரைந்து காட்டியுள்ளன. இடம் அறியாமல் வந்து பொருது வாலியிடம் தசமுகன் தோல்வியடைந்தான். நீரில் ஓடும் நாவாய் நிலத்தில் ஓடாததுபோல் போரில் யாரும் நிகரிலர் என நின்ற இவனுடைய பலம் இங்கே நிலை குலைந்துள்ளது.

இராவணன் சிறைப்பட்டது.

கார்த்தவீரியார்ச்சுனன் கீர்த்திமிகுந்த வேந்தன். அதிசய ஆற்றல்கள் அமைந்தவன். அரிய பெரிய வர பலங்களுடையவன். அவனுடைய நிலைமை தலைமைகளை யாதும் உணராமல் அவனை வென்று கொள்ளவேண்டும் என்று மாறுபாடாய் இராவணன் வீறுகொண்டு நின்ருன். படைகளோடு மூண்டு வந்தான். போர் கடுமையாய் மூண்டது; அவ்வீரனுடைய அதிசய வில்லாடல்களால் இவனுடைய சேனைகள் சிதைந்து வீழ்ந்தன. முடிவில் இவனையும் பிடித்துப் போய்த் தன்நகரில் அவன் சிறைப்படுத்தினுன். எண்ணுமல் போய் அண்ணன் இழிந்துபட்டுள்ளதை வீடணன் அறிந்தான்: புலத்தியமுனிவரிடம் போய் முறையிட்டான். அம் மாதவர் இரங்கி வந்தார்; அம்மன்னவன் அப்பெரியவரைத் தொழுது வணங்கினுன். அவரது உரையின்படி சிறையைவிட்டு நீக்கி இவனை வெளியே விட்டான்.

கெட்டவாள் அரக்கர் கிளர்பெரும் பயத்தார்
கேடில்சீர் இராவணன் அமரில்
பட்டபா டெல்லாம் வீடணற் குரைப்பப்
பரிவுறு மனத்தினன் அவன்போய்ச்
சிட்டனுயுள்ள பிதாமகற் குரைப்பச்
சிந்தைநொந்து அச்சிறை விடுப்பான்
வட்டமா மதில்சூழ் அருச்சுனன் வாழும்
வளநகர் மாமுனி வந்தான். (1)

அந்தமா முனிவன் அடியிணை வணங்கி
அருச்சுனன் அருச்சனை செய்திங்கு
எந்தைநீ வந்த காரணம் என்கொல்?
இயம்புதி! என்றவன் இசைப்ப
இந்திரா தியரை வென்றுற நெடுநாள்
ஈட்டிய விறலெலாம் உனக்குத்
தந்திரா வணன்நின் தலைக்கடைச் சிறையான்
தராபதி யாருனைத் தடுப்பார்? (2)

ஏறிய வலியே யினியுனக் கமையும்
இறைவகேள் இராவணன் தன்மேல்
சீறிய சீற்றந் தவிர்ந்துநீ அவனைச்
சிறைவிடு கெனமுனி செப்ப
ஆறிய மனத்த னுயவன் விடுப்ப
அரக்கனை இலங்கையில் விடுத்துத்
தேறிய சிந்தைச் செழுமறை முனியாம்
திசைமுகன் தன்னுல கடைந்தான். (3)
(கார்த்தவீரியம்)

இலங்கைவேந்தன் எதையும் எண்ணிநோக்காமல் இறுமாந்துவந்து போராடிப் பட்டுள்ள அவமானங்களை இவற்றால் அறிந்துகொள்கிறோம். நிலத்தில் ஓடும் தேர் நீரில் ஓடாததுபோல் இடவகை தெரியாமல் மூண்டு போராட வந்து ஈண்டு இவன் இடரடைந்துள்ளான்.

அவரவர்க் கான இடமே வலியாம்
தவறின் மெலிவாம் தளர்ந்து.

வலிய இடம் ஓர்ந்து கொள்.

497 ஓர்துணையும் இல்லாமல் ஒன்னலரை வென்றசனேன்
கூர்புகழ்கைக் கொண்டான் குமரேசா—சீரமைந்த
அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின். (எ)

இ-ள்.

குமரேசா! வேறு துணை வேண்டாமல் தனியே நின்று அசன் ஏன் அரசரனைவரையும் வென்றான்? எனின், எஞ்சாமை எண்ணி இடத்தால் செயின் அஞ்சாமை அல்லால் துணை வேண்டா என்க.

உரிய பெரிய துணை ஈங்கு உணர வந்தது.

யாவும் குறையாமல் ஆராய்ந்து உரிய இடத்தில் நின்று வினைசெய்யின் ஊக்கம் அல்லது வேறுதுணை அந்த வேந்தனுக்குத் தேவையில்லை.

வினைசெயயும் திறங்களை இதில் வியந்து காண்கின்றோம்.

எஞ்சுதல் = குறைதல். இதன் எதிர்மறை வினையெச்சம் எண்ணுதலை நண்ணி வந்தது. நேர்ந்துள்ள நிலைகளையெல்லாம் கூர்ந்து ஓர்ந்து வழுவற ஆய்ந்து தேர்ந்துகொள்ளவேண்டும் என்பார் **எஞ்சாமை எண்ணி** என்றார். வினைதொடங்குதற்கு முன்னதாக விரைந்து விழைந்து செய்யவுரியது தெரியவந்தது. உறுதியுடன் ஊக்கி ஆராய்ந்தே செய்க என்றதனால் அங்ஙனம் செய்யாவழி நேரும் சிறுமையும் சிதைவும் தெரிய நின்றன. கருதாத கருமம் விருதாவாய விளிகிறது.

அஞ்சாமை = கலங்காத மனவுறுதி.

அச்சம் மனிதனைக் கொச்சையாக்கி விடும். நல்ல வகையில் அஞ்சாத திண்மை எல்லா வகையிலும் அவனை உச்சமாக்கி உயர்த்தி வரும். இது வேந்தர்க்கு உரிமையான உயர் இயல்பாம். மாந்தரை எங்கும் நன்கு பாதுகாத்து ஆளவுரிய மன்னர்க்கு அஞ்சாமை முதலிய அரிய பான்மைகள் உரிமையுடன் எங்கும் மேன்மையாய் அமைந்திருக்க வேண்டும்.

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்கு இயல்பு. (குறள் 382)

அரசர்க்குரிய தன்மைகளுள் **அஞ்சாமை** முதன்மை யானது என்பதை இதனால் அறிந்து கொள்கிறோம். புறத்திலுள்ள காரியங்களைச் சரியாக நிறைவேற்று தற்கு உள்ளத்திண்மை உரிமையாய் உறுதிபயந்து வருகிறது. வரவே யாவும் நன்கு நிறைவேறுகின்றன.

தக்க இடம் வாய்த்தாலும் மிக்க திண்மையில்லை யாயின் பேடிகை வாள்போல் அது பிழைபடும் ஆதலால் தளராத மனவுறுதி அதற்கு உறுதியாய் உரிமைபூண்டு நின்றுளது. ஊக்கமே ஆக்கங்களை அருளுகின்றது.

**நெடும் புனலுள்ளும் வலிய முதலை வெல்லுமே** அன்றி மீன், ஆமை முதலியன வெல்லா. அகத்தில் அஞ்சாமையும் புறத்தில் இடமும் ஒருவனுக்குத் தக்க படி அமையின் அவன் மிக்க கரும வீரனாய் விளங்கி நிற்பன். வெற்றியும் திருவும் அவன்பால் விரைந்துவரும்.

வினையின் அஞ்சாமை நிற்றல்
வினைஞருக் களித்தல் செய்யும்
வினையிடை மனமேல் சேறல்
விளங்கிய அறிவு வல்லே
வினையினை முடித்தல் ஆண்மை
வெங்கொலை யாதி நீக்கல்
வினைவளர் மானம் மற்றும்
வேந்தருக் கியல்பு மைந்தா. (விநாயக புராணம்)

வேந்தருக்கு உரிய நீர்மைகளை இது விளக்கியுளது. **வினையின் அஞ்சாமை** எனத் தலைமையில் குறித்திருக் கிறது. நிலைமையைச் சிந்தித்துத் தெளிந்து கொள்க.

உரிய இடமும் அரிய திடமும் அதிசய ஆற்றல்களை அருளிவரும். வரவே அவர் வெற்றி வீரராய் விளங்குவர்.

இந்த உண்மை அசன்பால் அறிய நின்றது.

**சரிதம்.**

இவன் சூரிய குலதிலகனாகிய இரகுவினுடைய அருமைத் திருமகன். பேரழகும் பேரறிவும் போரான்

மையும் பெருங்கொடையும் பெருவீரமும் இவனிடம் ஒருங்கே நிறைந்திருந்தன. இவன் இளவரசனாயிருக்கும் பொழுது விதர்ப்பதேசத்து வேந்தன் மகளாகிய இந்துமதிக்குத் திருமணம் புரிய அரசு முறைப்படி சுயம் வரம் நிகழ்ந்தது. அந்த அதிசய அழகியை மணந்து கொள்ள விழைந்து தேசமன்னர் யாவரும் அங்கே திரண்டு வந்தனர். இந்தக் குலமகனும் போயிருந்தான். அந்த அரச சபையில் வரிசையுடன் அமர்ந்திருந்த வேந்தர் குழு விடையே இவன் விழுமிய நிலையில் விளங்கி யிருந்தான். குறித்த நேரம் வந்தது; வரவே கையில் நறுமண மாலையுடன் இந்துமதி வந்து மேடையில் ஏறி நின்றாள். இளமை ஒளி தவழ எழில் ஒழுக இளைய ஒரு இந்திராணிபோல் நிலவிநின்ற அக்குல மகளைக் கண்டதும் அனைவரும் மனமயலோடு மறுகி யிருந்தனர். அயலே நின்ற தோழி அரசர் யாவரையும் விளக்கிக் கூறினாள். எவரையும் யாதும் மதியாமல் வந்து அந்த அழகி இந்த அழகனுக்கே மாலையைச் சூட்டினாள். எனக்கு எனக்கு என்று மனக்கடுங்காதலோடு மயல்கொண்டிருந்த மன்னரெல்லாரும் பொறாமைக்கொண்டு இவனோடு போருக்கு மூண்டனர். மனைவி மறுகினாள். அவளைத் தேற்றித் தந்தையிடம் இருத்திவிட்டு இவ்வீரன் ஒருவனே தனியேநின்று அனைவரையும் பொருது தொலைத்தான். இவனுடைய வில்லாடல்களைக் கண்டுஎல்லாரும் வியந்து புகழ்ந்தனர்.

வில்என்னும் நெடுவரையால் வேந்தென்னும் கடல்கலக்கி
எல்என்னும் மணிமுறுவல் இந்துமதி எனுந்திருவை
அல்என்னும் திருநிறத்த அரிஎன்ன அசன்என்பான்
மல்என்னும் திரள்புயத்துக் கணியென்ன வைத்தானே.

(இராமா, குலமுறை 12)

இந்த வீரனுடைய வினையாண்மையையும் வெற்றித் திறத்தையும் வியந்து சனகமன்னனிடம் கோசிக முனிவர் இவ்வாறு கூறியுள்ளார். திருமால் பாற்கடலைக் கடைந்து இலக்குமியை அடைந்தான்; அசன் வேந்தராகிய கடலைக் கலக்கி இந்துமதியை இனிய மனைவியாகக்

கொண்டான் என்று குறித்திருக்கிறார். இதனால் இவனுடைய திவ்விய மகிமைகள் தெரிய நின்றன. உரிய மாமனது உறைவிடம் உறுதியாய் வாய்த்தமையால் தன் உள்ளத்திண்மையால் யாதொரு உதவியும் வேண்டாமல் தனியே நின்று பொருதுவென்று வெற்றித் திருவை இவன் பெற்று மகிழ்ந்தான். எஞ்சாமல் எண்ணி இடத்தால் செய்யின் அஞ்சாமை யல்லால் துணை வேண்டா என்பதை இவன் தெளிவா விளக்கி நின்றான். இவனது சரிதம் **இரகுவம்சம்** என்னும் வட மொழி நூலில் விரிவாய் விளங்கியுளது.

**நல்ல இடநிலையை நாடி வினைசெய்யின்**
**எல்லாம் இனிதாம் எதிர்.**

ஊக்கமும் இடமும் ஆக்கம் பலதரும்.

---

498 சென்றான் சராசந்தன் சேனையுடன் பின்பேறே
குன்றி யழிந்தான் குமரேசா—என்றும்
சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும். (அ)

இ-ள்.

குமரேசா! மிக்க படைகளுடன் சென்றும் சராசந்தன் ஏன் எதிரியால் இழிந்து அழிந்தான்! எனின், சிறு படையான் செல்இடம் உறுபடையான் சேரின் ஊக்கம் அழிந்து விடும் என்க.

சேனைச்செருக்கால் சிறுமை யுறுதே என்கின்றது.

சிறிய படையுடையானுக்கு உறுதியான வலிய இடத்தில் பெரிய படையுடையான் போராடச் சென்றால் அவன் உறுதி யிழந்து இழிந்து படுவான்.

பொருள் படை வலி முதலியன மனிதனுக்கு மமதையை விளைத்துவரும். அந்த உள்ளத் திமிரால் செல்லும் இடம் செல்லா இடங்களை எண்ணிநோக்காமல் வினைகளில் விரைந்து இறங்குவன்; அதனால் இழிவும் பழியும் விளையும் ஆதலால் அவ்வாறு துடுக்காய்ச்

செல்லலாகாது; சென்ருல் அல்லலேயாம் என்று தேவர் இவ்வாறு இட நிலைமையைத் தெளிவுறுத்தி யுள்ளார்.

படை என்னும் சொல் வேல் வாள் வில் முதலிய ஆயுத வகைகளையும், தேர் யானை குதிரை காலாள் முதலிய சேனை வகைகளையும் குறித்துவரும். படுப்பது படை என வந்தது. படுத்தல்=சிதைத்தல்; வதைத்தல். சிறுபடையான்=சிறிய சேனையை யுடையவன். சிறுமை அளவின்மேல் நின்றது. செல்இடம் என்றது, தனது அதிகாரம் தடையின்றி நடைபெறுகின்ற பக்கத்தை. ஒருவனது காரியம் இடையூறின்றி இனிது நடைபெறின் அக்காலத்தை அவனுக்குச் செல்காலம் என்பர். அது போல் தனக்கு வலிமையுள்ள நிலம் செல்இடம் என வந்தது. செல்லும் இடத்தில் இருப்பவனை வெல்லும் படி வருபவன் அல்லலுழந்து படுவான்.

உறுபடை என்றது மிகுந்த சேனையை. அளவிலும் வலியிலும் பெரியது என்பதாம். உறு என்னும் உரிச் சொல் மிகுதியை உணர்த்திவரும். மிக்க படையுடை யேம் என்று களித்துத் தக்க இடம் அறியாது தருக்கிச் சென்ருல் அவன் ஒக்க அழிந்து கெடுவான்.

தன்பால் படைவலி குறைந்திருந்தாலும் தனக்கு இடவலி நன்கு அமைந்திருந்தால் அவன் பெரும் படைகளையுடைய பேரரசனையும் ஒருங்கே வென்றுவிடுவான்.

உறுபடை மன்னர் தம்மை யுடற்றிஒன் ருனு மின்றிச்
சிறுபடை யவர்கள் வென்று செகுப்பவோ? என்னவேண்டா
செறிஎயிற்று ஆளி வேழப் பேரினஞ் செகுத்த தன்றே
உறுபுலி ஒன்று தானே கலையினம் உடற்றிற் றன்றே.

(சீவக சிந்தாமணி 814)

சிறுபடையாளர் உறுபடையாளரை வென்று தொலைப் பர் என்று இது உறுதி கூறியுள்ளது. தேவர் வாய் மொழிகள் இதில் மேவி யுள்ளன. தனக்கு உற்ற இடத்தில் உறுதியாய் நிற்பவன் யாளி போலவும், புலி போலவும் வலிமை பெற்று நிற்கின்ருன். நிலைமை தெரி யாமல் அவன்மேல் போருக்கு வருபவர் நிலை குலைந்து போகின்ருர் என்பதை இங்கே உணர்ந்து கொள்கிருேம்.

எதிரியுடைய தானத்தின் நிலைமையை எண்ணிப் பாராமல் தனது தானைப்பெருக்கை எண்ணிச் செருக்கிச் செருச்செய்ய வருபவன் சீரழிந்து சிதைந்து கெடுவான்.

தானம் அறியாமல் வந்து பொருதால் மானம் பறிபோம். மதிப்பிழந்து நொந்து அவன் வருந்துவான்.

இது சராசந்தன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் மகதநாட்டு மன்னன். கிரிவிரசம் என்னும் இராசதானியிலிருந்து அரசுபுரிந்து வந்தான். கஞ்சனுக்கு இவன் மாமன் முறையினன். கண்ணபிரானோடு மாறுபாடு மண்டி அவன் மாண்டுபோனபின் அந்த மாயனை எப்படியாவது மாய்த்துவிட வேண்டும் என்று இவன் மூண்டு நின்றான். காலம் கருதியிருந்தவன் தனக்கு உரிய பெரிய படைகளோடு பொங்கிவந்து வடமதுரையை வளைந்துகொண்டான். யாதொரு ஆயத்தமுமில்லாமல் இருந்த கண்ணன் அண்ணன் பலராமரை ஊக்கிப் போர்புரிய நேர்ந்தான். தம்பியை அரண்மனையில் அமைதியாயிருக்கும்படி பணித்துவிட்டு யாதவர்களைத் திரட்டிப் பலராமரே உள்ளம் துணிந்து ஊக்கிப் பொருதார். வந்த பெரும் படைகளை நின்ற சிறுபடைகள் எங்கும் கடுத்துத் தடுத்து யாண்டும் மூண்டு போராடின. அந்தச் சேனைகள் சிதைந்து அழிந்தன. அரசனும் பிடிபட்டான். அவனைப் பாசத்தால் பிணித்துக் கொண்டுபோய் பலராமர் சிறைப்படுத்தினர். கண்ணன் அந்தக் கட்டை அவிழ்த்து வெளியே விட்டுவிடும்படி கூறினர். அவ்வாறு சிறை நீக்கிவிடவே இவன் நாணி நொந்து தன்நகரை நோக்கிப் போனன். நேர்ந்த அழிவுகளையும் இழிவுகளையும் நினைந்து நினைந்து நெடுந்துயரடைந்தான். நெஞ்சம் கவன்று உலகவாழ்வை வெறுத்துத் துறவியாக நேர்ந்தான்.

வாளினை நோக்கும்; நாஞ்சில் வலத்தினன் சிக்கயாத்த
தோளினை நோக்கும்; இற்ற சுற்றமை வரவை நோக்கும்;

கேளினை நோக்கல் செய்யான்; சினைவரால் கௌிறு பாயப்
பாளைவாய் விரியும் பூகப் படப்பைசூழ் மகத வேந்தே. (1)

பரந்ததன் பழியை நோக்கும்; படிந்ததன் பழியேபோலச்
சுரும்பொடு வண்டு பாடச் சொரிமதம் செருக்கித் துஞ்சாக்
கருங்களிற் றீட்டமெல்லாம் களத்திடைக் கவிழ்ந்து துஞ்சி
இரும்பெருங் குருதிச் சேற்றின் இடையிடைக் குவிதல் நோக்கும். (2)

அற்றதன் புகழை நோக்கும்; அற்றதன் புகழே போலக்
கற்றைவெண் ணிலவு கான்ற கவிகையும் கவரிக் காடும்
ஒற்றைவெள் வளையும் சிந்தி ஒழுகொளி யோடைநெற்றிக்
கொற்றமால் களிறு மாய்க்கும் குருதியா றெழுகல் நோக்கும்.

இன்னன பலவும் நோக்கி எள்ளினன் அரசின் வாழ்க்கை
மன்னிய சிறப்பு வாய்ந்த மாதவம் புரிதல் நன்றென்று
உன்னினன் மற்றென் என்செய்வான்? ஒளிறுவெள் ளருவி மாலைப்
பொன்னெடுங் குன்றம் நோக்கிப் போவது புரிந்தான் மன்னே. (4)
(பாகவதம் 10-21)

நீண்ட படைகளோடு மூண்டுவந்து போராடிப் படைகளையிழந்து பழிபல படிந்து அழிதுயர்களோடு இவன் மீண்டு போயுள்ளமையை இவற்றால் உணர்ந்து கொள்கிறோம். உறுபடை யுடையான் எனினும் சிறு படையான் செல்இடம் சேரின் அல்லலுழந்து அழிவான் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

சேர்ந்த படைச்செருக்கால் சேரா இடம்சேரின்
ஆர்ந்த அழிவாம் அது.

தானம் அறியாவிடின் தானை அழிவுறும்.

---

499 நின்ற விராடன் நிலத்தில் சுயோதனன்போய்க்
குன்றியேன் மீண்டான் குமரேசா—ஒன்றும்
சிறைநலனும் சீரும் இலரெனினும் மாந்தர்
உறைநிலத்தோ டொட்டல் அரிது. (கூ)

இ-ள்.

குமரேசா! விராடன் நகரில் போய்த் துரியோதனன் வெல்லமாட்டாமல் ஏன் வெட்கி மீண்டான்? எனின்,

சிறை நலனும் சீரும் இலர் எனினும், மாந்தர் உறை நிலத்தோடு ஒட்டல் அரிது என்க.

அரண் அமைதியும் ஆன்ற சீர்மைகளும் இல்லாதவராயினும் நல்லமானிகளை அவர் உள்ள இடத்தில்போய் வெல்ல இயலாது.

சிறை = அரண்; காவல்.

சீர் என்றது பொருள்படை முதலிய வளங்களை.

உறை நிலம் = உரிமையாய்த் தங்கியுள்ள இடம்.

ஒட்டல் = பொருந்துதல்; கூடுதல். ஊக்கி வந்து தாக்கிப் போராடுதலை ஈண்டு இது குறித்து நின்றது.

மாந்தர் என்றது வேந்தர் அல்லாதவரை.

அரச பதவியும் ஆன்ற பாதுகாப்பும் செல்வம் பெருமை சீர்மை முதலிய சிறப்புக்களும் நிறைந்துள்ள வேந்தரும், அந்த நலன்கள் யாதும் இல்லாத மாந்தரை அவர் வாசமாய்த் தங்கியிருக்கும் இடத்தில்போய் எளிதே வென்று விடமுடியாது.

உற்ற இடம் உறுதிமிக வுடையது; அதன்மேல் ஊறு செய்ய ஊக்கிப்போவது ஊனமேயாம். தான் சொந்தமாய்த் தங்கிப் பழகி வாழ்ந்து வருகிற இடம் எந்த மனிதனுக்கும் உறுதி ஊக்கங்களைத் தந்துநிற்கும்; அவனை யாரேனும் தாக்க நேர்ந்தால் வீறுடு வெகுண்டு எழுவன்; உயிரையும் வெறுத்து உருத்து நிற்பன்; சாதற்கும் அஞ்சாமல் தறுகண்மை பூண்டு அவன் மூண்டு நிற்கவே போராட வந்தவர் புறங்காட்டி ஓட நேர்வர். ஒட்டவந்த ஒட்டலர் ஒட்டாமல் ஓடி ஒழியும்படி உற்ற உறைவிடம் அவனுக்கு உறுதி தந்துள்ளது. அந்த உண்மை நுண்மையாய் ஈண்டு உணர வந்தது.

காட்டுப் பன்றியை வேட்டையாடச் சென்றவர் அது வெளியேறித் திரியும்போதுதான் அதனை வெல்லவும் கொல்லவும் வல்லவராவர்; தன் இருப்பில் அது இருந்துகொண்டால் அதன் கிட்டநெருங்க அஞ்சுவர்;

கடுவேகமான கொடிய கடிநாய்களும் அதன் அருகே அணுக மாட்டாமல் அயலே அலமந்து நிற்கும்.

உற்ற இருப்பில் உறைந்திருக்கும் பன்றியை
வெற்றியுறு வேடரும் வென்றுகொள்ளார்—உற்றநிலம்
பற்றி யிருப்பவரைப் பற்றலராய் வல்லோர்வரினும்
முற்ற வெறிது முடிந்து.

இதனை இங்கே உய்த்து உணர்ந்து கொள்ளவேண்டும்.

தனக்கு உரிமையான நிலம் எவர்க்கும் உறுதியான வலக்கத்தையும் ஆற்றலையும் தருதலால் அதில் உறைந்திருப்பது நல்லது; அந்த நிலையில் நிலைத்திருப்பவர் பிற இடங்களுக்குப் போவது சீர்கேடான செயலாம்.

தன்னிலத்தினில் குறுமுயல் தந்தியின் வலிது என்று
இந்நிலத்தினில பழமொழி அறிதிநீ இறைவ!
அந்நிலத்திலும் வலக்கெளி தாயினும் இவர் நம்
தந்நிலத்தினில் வரு அமர் தொடங்குதல் நன்றோ. (பாரதம்)

விராடன்பதியில் துரியோதனன் போர் செய்ய மூண்ட பொழுது அந்த மன்னனை நோக்கி விதுரன் இவ்வாறு கூறியிருக்கிறான். தன்னுடைய தனி நிலத்தில் உறைந்திருக்கின்ற சிறிய முயல் பெரிய யானையினும் வலிமிக உடையது என்பது பழமொழி ஆதலால் அயலார் இடத்தே மயலாய்க் காலேறிப் போகலாகாது; போனல் பொல்லாத கேடாம் என்று அந்த மதிமான் இப்படி அதி விநயமாய் மதிநலம் அருளியுள்ளான்.

தந்தி=யானை. தந்தங்களையுடையது என்பதாம். ஆகவே ஆற்றல் மிகுந்த ஆண்யானை என்பது தெரிய வந்தது. இந்த மதகரியும் நிலம் பெயரின் நிலைகுலையும்.

அரிய வலியுடைய பெரிய யானையே ஆயினும் இடம் சரியாக அமையவில்லையானல் மெலிய பிராணியும் அதனை வென்றுபோய் விடும்; வேதனையாய் அது நோதலுழந்து படும் என்பது விளங்கி நின்றது.

புதரிடைக் குறுமுயல் போகும் ஓடியே;
அதன்பினே அடுகரி ஆற்றல் ஆற்றுமோ ?

இதமுடன் இடம் இனிது அமையின், யாவரும்
மதவலி யுடையராய் மாண்பு கூர்வரே.

மெலியராயினும் உரிய இடம் அரிய அடலாண்மை களை அருளும் ஆதலால் வேந்தர் இதனை ஓர்ந்து தேர்ந்து வினைபுரிய வேண்டும் என்பதை இந்த உவமானம் உள்ளம் தெளிய நன்கு உணர்த்தியுள்ளது.

ஊக்கம் இலனாயினும் இடத்தோடு
உற்ற வினைசெய் குவனாயின்
ஊக்கம் உடையார்க் கிடனின்றாய்
ஒழியும்; ஊக்கம் இலாதவனுக்கு
ஊக்கம் உடையான் ஆயிடினும்
உற்ற படையும் பலவேனும்
ஊக்கம் அழிவன் இடத்தோடும்
உற்று வினைசெய் யாவிடினே. (விநாயகபுராணம்)

ஊக்கம் இல்லாதவனாயினும் தான் உறைந்துள்ள இடத்தோடு பொருந்தி வினைசெய்தால் எவரும் அவனை வெல்ல முடியாது; திடமான இடம் அறிந்தே அமர்புரிய வேண்டும் என்று ஓர் அரசன் தன் மகனுக்கு இவ்வாறு இடத்தின் வலியை வலியுறுத்திச் சொல்லியிருக்கிறான்.

எதிரியின் இடவலியை உணர்ந்து கொள்ளாமல் தன் உள்ளச் செருக்கால் ஊக்கி அவன்மேல் போருக்குச் செல்பவன் எள்ளலடைந்து இழிந்து படுவான்.

துரியோதனன் இதனை நேரே காட்டி நின்றான்.

சரிதம்.

தன் பகைவர்க்கு இடங்கொடுத்து ஆதரித்தான் என்று கருதி விராடன் மீது துரியோதனன் போருக்கு மூண்டான். மாற்றார் உறைந்திருக்கும் வேற்றிடத்துக்கு வீணே போகலாகாது என்று அறிஞர் தடுத்தனர். தடுத்தும் கேளாமல் கடுத்து விரைந்து பெரும் படைகளோடு வந்து மச்சநாட்டுள் புகுந்து விராடநகரை முற்றுகையிட்டு வெறியனாய் நின்று அவன் போராடினான். அங்கே மாறு வடிவமாய் மருவியிருந்த விசயன்

தனக்கு நேர்ந்திருந்த அஞ்ஞாத வாசகாலம் அன்றோடு தீர்ந்து போனமையால் வென்றிவீரரோடு வெளியேறிச் செருக்களம் புகுந்து சீறிப்பொருது நேர்ந்த சேனைத் திரள்களை நெட்டழித்து ஒழித்துத் துரியோதனனை நேரே வந்து முட்டினான். அதிவிரைவில் அவனை இவன் வென்று தொலைத்தான். தேர் இழந்து பரியிழந்து படையிழந்து திறலிழந்து மறுகிநின்று மீள நேர்ந்த அவ்வரசனை இவ் வீரக்குரிசில் பரிவுடன் நிறுத்தி அறிவுரை கூறினான்; அந்த வார்த்தைகள் இந்தக்குலமகனுடைய உள்ளத்தில் நீண்ட காலமாய்க் கொதித்திருந்த கொதிப்புக்களை வெளியே வார்த்துக் காட்டின. பலவும் உணர உணர்த்திய அவ்வுரைகளுள் சில அயலே வருவன காணுக.

### விசயனுடைய வீர மொழிகள்

கார்முகம் கைத்தலத் திருப்பக் கைம்மிகு
போர்முகம் தன்னில்நீ புறந்தந் தேகினால்,
ஊர்முகக் களிற்றின்மேல் உலாவும் வீதியின்
வார்முகக் கனதன மாதர் என் சொலார்? (1)

இருபுறம் சாமரம் இரட்டத் திங்கள்போல்
ஒருகுடை நிழற்றஇவ் வுலகம் நின்னதா
மருவலர் கைதொழ வாழு கின்றநீ
பொருமுனை காண்டலும் போதல் போதுமோ? (2)

உன்பெருந் துணைவரோடு உன்னை ஓர்கணத்து
என்பெருங் கணைகளுக்கு இரைகள் ஆக்குவேன்;
வன்பெருங் கொடிமிசை மடங்கல் ஏற்றினான்
தன்பெரும் வஞ்சினம் தப்புமே கொலாம்! (3)

எங்களைக் கானில்விட் டு இரவி ஏகவெண்
திங்களைப் போல்நெடுந் திகிரி ஓச்சினீர்;
சங்களை பயில்வள நாடன் தண்டினால்
உங்களைக் களப்பலி யூட்டும் நாளையே: (4)

இரவலர் இளையவர் ஏத்தும் நாவலர்
விரவிய தூதுவர் விருத்தர் வேதியர்
அரிவையர் வெஞ்சமர் அஞ்சு வோர்பெருங்
குரவர்என் றிவர்களைக் கோறல் பாவமே. (5)

(பாரதம், நிரை)

உரைகளில் மருவியுள்ள பொருள் நயங்களையும், அறிவு நலன்களையும், உணர்ச்சி வேகங்களையும் ஓர்ந்து உணர்ந்து கொள்ளவேண்டும். போர்முகத்தில் கொல்லத் தகாதவரைச் சுட்டிக் காட்டி அந்த ஒன்பது பேர்களுள் எட்டாவது இனத்தை நீ சேர்ந்து நிற்றலால் இன்று உன்னைக் கொன்று தொலைக்காமல் உயிரோடு விட்டிருக்கின்றேன்; உன் ஊரை நோக்கி ஓடிப்போ! என்று இவ்வெற்றி வீரன் அவ்வெய்யவனை இகழ்ந்து விளம்பியிருப்பது வியந்து சிந்திக்கத் தக்கது. சிறை நலனும் சீரும் இல்லாதவன் என்று விராட மன்னனை மாறுபாடாக எண்ணிவந்து சுயோதனன் அவமானம் அடைந்து மீண்டு போயிருக்கிறான். மாந்தர் உறைநிலத்தோடு ஒட்டல் அரிது என்பதை வேந்தர் எவரும் தேர்ந்து தெளிய இவன் நேர்ந்து விளக்கியுள்ளான்.

உரிய இடத்தில் உறைவோன் மிகவும்
அரிய திறலின னாம்.

ஒன்னார் ஊருள் ஊறு புரியேல்.

---

500 கண்டுடைந்த உத்தரனும் காவலர்மேல் பாய்ந்தணிகள்
கொண்டுவந்தான் என்னே குமரேசா—மண்டிநின்ற
காலாழ் களரில் நரியடும் கண்ணஞ்சா
வேலாழ் முகத்த களிறு. (ம)

இ-ள்.

குமரேசா! அஞ்சி ஓடின உத்தரனும் சமர்க்களத்தில் வீழ்ந்த அரசரை ஏன் அடர்த்து வந்தான்? எனின், கண் அஞ்சா வேல் ஆழ் முகத்த களிறு கால் ஆழ் களரில் நரி அடும் என்க.

அரிய ஓர் அதிசயக் காட்சி தெரிய வந்துளது.

அஞ்சாமையும் வேல்பட்ட தழும்பு முகத்தில் உள்ளதும் ஆகிய பெரிய மதயானை கால் அழுந்தும் சேற்றில் சிக்கின் சிறிய நரியும் அதனைக் கொல்லும்.

தமக்கு உரிய இடம் அல்லாத இடத்தில் புகுந்தால் எவ்வளவு பெரிய வலியுடையராயினும் அவ்வளவும் நிலைந்து அவர் அடுதுயரடைய நேர்வர். இந்த உண்மையைத் தெளிவாக விளக்குதற்கு ஓர் உவமையை இதில் நயமாக இணைத்துக் காட்டியிருக்கிறார். எடுத்துக் காட்டுகள் பொருள்களை எவ்வழியும் செவ்வையாய் வடித்துக் காட்டி வருகின்றன.

களர் = உவர்நிலம். களிமண்ணும் கழிநீரும் கலந்து குழைசேருய்க் கிடக்கும் இழிநிலம் களர் என வந்தது.

இந்தச் சேற்று நிலத்தில் யானை புகுந்தால் அதன் நான்கு கால்களும் ஆழ்ந்து தாழும்; தாழவே அது யாதும் மீள முடியாமல் அயர்ந்து கிடக்கும்; அயலே பெயர முடியாமல் மயலாய் மறுகிக் கிடக்கும் அக்கரியின் தசையை நரிவந்து கடித்துத் தின்னும்; தின்னவே அது இன்னுயிர் நீங்கநேரும் ஆதலால் கால் ஆழ் களரில் சிக்கிய களிற்றை நரி அடும் என்றார்.

உருவத்தாலும் வலிமையாலும் தலைமை யுடைய யானை தவருன வழியில் சென்று வழுவாய் இழிந்தமையால் அழிதுயரமாய்த் தாழ்வடைந்து மடிந்தது.

கண் அஞ்சா = எதைக் கண்டும் யாதும் அஞ்சாத. அதன் திடமும் திண்மையும் தீரமும் இதனால் தெரிய வந்தன. இவ்வளவு வன்மைகளும் புன்மையாயின.

வேல் ஆழ் முகத்த களிறு = கூரிய வேலாயுதம் ஆழ்ந்து பாய்ந்த தழும்புகள் தோய்ந்த முகத்தையுடைய யானை. போர்முகத்தில் யாண்டும் அஞ்சாமல் புகுந்து மூண்டு போராடுங்கால் பகைவர்கள் வெகுண்டு வீசிய நெடிய வேல்கள் பாய்ந்து வடுக்கள் பல முகத்தில் படிந்திருந்தன ஆதலால் அந்த வீரப்பாடுகளை இந்த விசேடணங்கள் இங்கு நன்கு விளக்கி யுள்ளன.

**வேலாள்** எனப் பாடங்கொண்டு வேறு பொருள் கூறுவது யாரும் தேருத மாறுபாடாம்.

அச்சம் என்பதை யாதும் அறியாத உச்ச நிலையது; உறுதி ஊக்கங்கள் உடையது; பொரு திறம் வாய்ந்தது; பல போர் முனைகளில் முனைந்து புகுந்து மூண்டு போராடி வென்று வெற்றி விருதுகளோடு மீண்டு வந்துள்ளது; அத்தகைய விறலுடைய வித்தக வேழம் ஈண்டு இத்தகைய நிலையில் தெரிய வந்துளது.

களிறு என்றது ஆண்மை நிறைந்த அதன் மேன்மையுணர.

வேழக் குரித்தே விதந்து களிறென்றல். (தொல்காப்பியம்)

களிறு என்னும் பெயர் ஆண் யானைக்கு உரியது என ஆசிரியர் **தொல்காப்பியனுர்** அதன் பேராண்மையை இங்ஙனம் குறித்திருக்கிருர்.

வீதிகளில் ஊர்வலங்களுக்காக அலங்காரமுடன் வைத்து வளர்த்து வருகிற கோயில் யானை அன்று இங்கே குறித்தது. கோவேந்தரும் குணநலன்களைக் கண்டு கொண்டாடி வருதற்குரிய அரிய குலவேழமாம்.

பிறப்பில் உயர்ந்தது; சிறப்பு மிகுந்தது; திடதைரியங்கள் செறிந்தது; பேராண்மைகளோடு போராண்மைகள் புரிந்தது என ஈண்டு வந்துள்ள வேழத்தை நாம் உணர்ந்து கொள்கிருேம். இவ்வளவு மேன்மைகள் செவ்வையாய் மேவி யிருந்தும் இடம் அறியாமல் சென்றதால் சிறுமையாய் மடிய நேர்ந்தது.

ஆண்மை ஆற்றல் அறிவு வீரம் முதலிய நிலைமைகளில் தலைமை எய்தி யாண்டும் உயர்குலவேந்தராய் ஓங்கியிருந்தாலும் தமக்கு இயலாத இடத்தில் மயலாய் இறங்கினல் தோல்வியும் பழியும் அடைந்து தொலைய நேர்வர் என்பது மேலே வந்துள்ள உவமையால் இங்கே தெரிய வந்தது.

இடம் முதலிய எவற்றையும் முன்னதாக நன்கு எண்ணித் தெளிந்தே எவரும் வினை தொடங்க வேண்டும்; எண்ணியுணராமல் இறுமாந்து துணிந்து சென்ருல் ஏற்றமெல்லாம் இழந்து அவர் இழிந்து படுவர்.

இழைபொறை ஆற்ற கில்லா திட்டிடை தளர நின்ற
குழைநிற முகத்தி னார்போல் குறித்ததே துணிந்து செய்யார்;
முழையுறை சிங்கம்பொங்கி முழங்கிமேல் பாய்ந்து மைதோய்
வழையுறை வனத்து வன்கண் நரிவலைப் பட்ட தன்றே.
(சீவக சிந்தாமணி 1928)

இடத்தின் அபாயத்தை எண்ணி நோக்காமல் இறுமாந்து மூண்டு சென்ற சிங்கம் நரியின் சூழ்ச்சியில் அகப்பட்டு மாண்டது; அதுபோல் அரசர் உரிய நிலைகளை ஆய்ந்து பாராமல் சென்றால் இழிந்தவராலும் அழிந்து படநேர்வர் என இது குறித்துள்ளது.

இடம் அறியாது போனால் பெரிய மதயானையும் சிறிய நரியால் கொல்லப்படும் என்பதை முன்பு அறிந்தோம்; அரிய திறலுடைய சிங்கமும் மெலிய நரியால் மாய்ந்து படும் என்பதை இதில் அறிந்து கொள்கிறோம்.

உலையாச் சிலைக்கும் உழுவையும் தான்தன்
அலையில் நீர்ந்து ஊரடைந்த தாக—இளிவந்து
உயிரிழப்ப தென்றால் உறுமிடநீத் தென்கொல்
செயிருழக்கும் தீங்கு செயல். (பாரதம்)

தனது இடமாகிய வனத்தை விட்டு ஊருள் புகுந்தால் வலிய புலியும் துயருழந்து உயிரிழக்கும்; ஆகவே உரிய இடத்தைப் பேணி ஒழுகுவோரே பெருமையுடன் வாழ்வார்; பேணாது போனால் பிழையாய்ச் சாவர் என இது நிலைமையை நேரே உணர்த்தியுளது.

ஆண்யானை சிங்க ஏறு புலிப் போத்து ஆகிய மூன்றும் இங்கே பார்வைக்கு வந்துள்ளன. அருந்திறலுடைய இவை இடந்தெரியாமல் புகுந்தமையால் மடம் படிந்து திடம் அழிந்து திறல் ஒழிந்து மாண்டன. இவற்றைக் கண்டு தெளிந்தாவது வேந்தர் இடம் தேர்ந்து வினைபுரிந்து உயர்ந்து கொள்ள வேண்டும்.

சிங்க ஏறுபோல் சிறந்த வீரம் உடையவனாயினும் இடம் அல்லாத இடத்தில் புகுந்தால் எவரும் இடர் செய்ய நேர்வர்; ஆகவே தானம் தவறினால் மானவீரம் வாய்ந்த பெரிய மன்னரும் இன்னலுழந்து வருந்துவர்.

அரிமா வளைந்த நரிமாப் போல
இகல்முனை வேட்டுவர் இடுக்கண் செய்யப்
புகைமிகு வெவ்அழல் பூம்பொழில் புதைப்பக்
கான வெந்தீக் கடும்புகைப் பட்ட
மான்அமர் பிணையின் மம்மர் எய்தித்
தளையவிழ் தாரோன் தனிமைக்கு இரங்கிக்
களைகண் காணது கையறு துயரமொடு
பெய்வளைத் தோளி வெய்துயிர்த்து ஏங்க.
(பெருங்கதை 1-56)

உறுதி மிகவுடைய உதயணமன்னன் தனியே ஒரு காட்டுள் போகும்பொழுது அங்குள்ள வேடர்கள் அவனை வளைந்துகொண்டு அல்லல் விளைத்துள்ளதை இதனல் அறிந்து கொள்கிருேம்.

**அரிமா வளைந்த நரிமா** என்றது வேந்தனையும் வேடர்களையும் முறையே ஓர்ந்து கொள்ள வந்தது. அரிமா=சிங்க ஏறு. சிங்கம் அனைய திறலுடையவரும் இடவலியை இழந்துவிடின் நரிகள் போன்ற சிறியவர்களாலும் பங்கம் அடைவர் என்பது இங்கு நன்கு தெரிய வந்தது. புலியும் ஊருள்வரின் பூனையாய் ஊறுபடும்.

அரிய பெரிய வலிமைகள் அமைந்திருந்தாலும் உரிய **இடன் அறிந்து** ஒழுகிவரும் அளவே அவை பெருமை அடைந்துவரும்; அறியாது வழுவின் பரிதாபமாய் அழிய நேர்வீர்! என அரசரை நோக்கி இங்ஙனம் தெளிய உணர்த்தி யுள்ளார்.

நேரே வெளிப்படையாக உரையாமல் குறிப்பாகச் சொல்லி யிருத்தலால் **நுவலா நுவற்சி** என்னும் அலங்காரம் இதில் அமைந்துள்ளது. கருதிய பொருளை அழகுற மொழிவது அணி என வந்தது.

ஏலா இடம் தோல்வியாம்; ஏலும் இடம் வெற்றியாம்.
இவ்வுண்மையை உத்தரன் விளக்கி நின்ருன்.

## சரிதம்.

இவன் மச்சநாட்டு மன்னனுகிய விராடன் புதல்வன். அழகும் அறிவும் உடையனுயினும் உளவுறுதியில்லாத

வன், இவன் இளவரசனாயிருக்கும்பொழுது துரியோதனன் இவனுடைய நாட்டின்மேல் படையெடுக்க நேர்ந்தான். உருமாறி அங்கே பஞ்சைகளாய் வந்து புகுந்த பஞ்சவர்க்கு இடம்கொடுத்து அவரை ஆதரித்து வருதலால் விராடன்மேல் மாறுபாடு கொண்டு, எப்படியாவது பாண்டவரை வெளியேற்றிவிட வேண்டும் என்று படைகளோடு அவன் மூண்டு வந்தான். முதலில் பசுத்திரள்களைக் கவர்ந்தான். கவரவே விராடமன்னன் சேனைகளோடு சேர்ந்து போராட நேர்ந்தான். தென் திசையில் இவ்வேந்தன் போராடிக்கொண்டிருக்கும் பொழுது எதிரி படைகள் சில வடதிசையில் வந்து வளைந்தன. வளையவே அரசி உளம் மிக உளைந்தாள். அப்பொழுது இக்குமரன் ஊக்கி எழுந்தான். தன் தேரைச் செலுத்த ஒரு சாரதியிருந்தால் தானேபோருக்குச் செல்வதாக உரைத்தான். அங்கே பேடிவடிவில் உருமாறி மருவியிருந்த விசயன் அதற்கு விரும்பி யிசைந்தான். விரைந்து குதிரைகளைப் பூட்டித் தேரை ஆயத்தம் செய்து நேரே நிறுத்தினான். வில்லும் கையுமாய் உத்தரன் தேர்மேல் ஏறினான். படைகளை நோக்கித் தேர் விரைந்தது. எதிரிகளுடைய சேனைத் திரள்களைக் கண்டதும் இவன் உடல் நடுங்கி உள்ளம் கலங்கினான்: "தேரை ஊருக்குத் திருப்பு" என்று உளறினான். பெண்ணுருவில் மருவியிருந்த அப்பெருவீரன் புன்னகை செய்தான்; "அரசர் குலத்தில் பிறந்திருந்தும் போருக்கு அஞ்சலாமா? நீ சும்மா வா; வெற்றி உனக்கு உண்டாகும்படி நானே செய்கின்றேன்" என்று சாரதி நயமாய்க் கூறினான். யாது கூறியும் கேளாமல் தேரிலிருந்து குதித்து இவன் ஓடினான்; சாரதி விரைந்துபின் தொடர்ந்து இவனைப்பிடித்து வந்து தேரில் இருத்தினான்.

கைந்நடுங்கவும் கால்நடுங் கவும்கருத் தழிந்து
மெய்ந்நடுங்கவும் நாப்புலர்ந் துயிர்ப்புமேல் விஞ்சிச்
சொன்னடுங்கவும் சுடர்முடி நடுங்கவும் சோர்ந்தான்
மைந்நெடுங்களிற் றுரனுடை விராடர்கோன் மைந்தன். (1)

அஞ்சல் அஞ்சல்நீ! பகைவரை ஆருயிர் அடுதல்
துஞ்சல் என்றிவை இரண்டலால் துணிவுவே றுண்டோ ?
வெஞ் சமந்தனில் வந்துபுண் படாதினி மீண்டால்
வஞ்ச நெஞ்சுடை வஞ்சியர் என்சொலார்? மறவோய்! (2)

நிலையு முட்டியும் நிலைபெற நின்றுநேர் படத்திண்
சிலைவளைத்துவெஞ் சிலீமுகம் சிற்சில தொடுத்து
மலையிலக்கென யாரையும் மலைந்திடு! மலைந்தால்
அலைகடற்புவி அரசரில் ஆரெதிர் நிற்பார் ? (3)

தூண்டு மாவிவை சொரிமதக் களிறிவை துரங்கம்
பூண்ட தேரிவை பதாதிமற் றிவைஎனப் புகல
ஈண்டு நின்றவை யாவையும் யாவெனத் தெரியா
மீண்டு போவதே உறுதியென் றனன்இகல் வீரன். (4)

வெயர்த்த மேனியை நறும்பனி நீரினல் விளக்கி
அயர்த்து நீமுது கிடாதொழி இமைப்பொழு தையா!
உயர்த்த பல்கொடிப் பகைஞரைத் தனித்தனி ஓட்டிப்
பெயர்த்து நல்குவேன் நிரையும்என் றுரைத்தனன் பேடி.(5)

கொடித்த டந்தனித் தேரில்நின் றுகைத்துமுன் குதியா
அடித்தலம் பிடர் அடித்திட ஓடவும் அவனைத்
தொடித்தடம்புயம் இரண்டையும் தொடர்ந்து போய்த் துவக்கிப்
பிடித்து வந்தொரு நொடியினில் தேருடன் பிணித்தான். (6)

பிணித்த தேரினைப் பெற்றமும் பிற்படக் கடாவித்
திணித்தரும்பெரும் பொதும்பரில் சேர்த்திய சிலையும்
துணித்து மேவலர் முடியுகு சோரிதோய் தொடையும்
கணித்த எல்லையில் கொண்டுமீண் டமர்க்களம் கலந்தான்(7)

(பாரதம், நிரை மீட்சி)

நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளை இங்கே வியந்து காணு கின்றோம். இவ்வாறு தெவ்வரைக் கண்டு அஞ்சி நடுங்கிய உத்தரன் பின்பு சமர பூமியில் சாரதி செய்த அதிசய அமராடல்களை நோக்கி உள்ளம் ஊக்கி உறுதி மீக்கொண்டு நின்றான். அந்த வீரனுடைய பாணங்களால் அடிபட்டு மண்ணில் மருண்டு புரண்டு மயங்கிக் கிடந்த மன்னர்களிடம் இவன் நன்னயமாய்ச் சென்று

வில் வேல் முதலிய ஆயுதங்களையும் உயர்ந்த மணியணிகளையும் வெற்றி விருதுகளையும் கவர்ந்து கொண்டு வந்தான். அரிய பெரிய மதயானையும் சேற்று நிலத்தில் விழுந்து அழுந்திக் கிடந்தால் அதனை நரியும் கொல்லும் என்பதை இவன் செயல் அன்று நன்கு விளக்கி நின்றது.

வலிஅறிதல், இடம் அறிதல், காலம் ஓர்தல்,
மாற்றலர்தம் நிலைமையெலாம் வரைந்து தேர்தல்,
பொலிவுறுதன் படைவலியும் தானை வேந்தர்
பொருந்தியுள திடநிலையும் புலனும் நாடி
மெலிவுறுதல் எவ்வகையும் மேவா வண்ணம்
வேண்டியன யாவுமே விரைந்து கொண்டு
வெலும்வகையில் படைஎழுச்சி செய்யும் வேந்தன்
வெற்றிமிகப் பெற்றுலகில் விளங்கு மன்றே.

**ஏற்றஇடம் வாய்த்தால் எலியும் புலியினை**
**ஆற்றல் அழிக்கும் அடர்ந்து.**

இயலா இடத்து முயலாதே.

---

இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

1 உரிய இடம் கண்டு உற்றவினை தொடங்கு.
2 அரண் உரமாய் ஆக்கம் பலவும் தரும்.
3 அதனால் ஆற்றல்கள் உளவாம்.
4 மாற்றாரும் மடங்கி யடங்குவர்.
5 ஏற்ற இடமே எவர்க்கும் வலிமையாம்.
6 மாறுபட்ட இடத்தில் வலிமை இழந்து படும்.
7 இடம் எண்ணிச் செய்தால் திடம் நண்ணி வரும்.
8 இடவலிமுன் எதிரியின் படைவலி பாழாம்.
9 தன்னிலமே தனக்கு வன்மையாம்.
10 இடநலம் இலதேல் எந்நலமும் பழுதாம்.

50-வது இடன் அறிதல் முற்றிற்று.

---

# ஐம்பத்தோராவது அதிகாரம்

## தெரிந்து தெளிதல்

அஃதாவது வினையாளர்களை வேந்தன் தேர்ந்து தெளிந்து கொள்ளுந் திறம். வலி அறிந்து காலம் ஓர்ந்து இடம் தெரிந்து வினைபுரியும் திறங்களை முன்னர்க் கூறினர்; தமக்கு உரிய கருமத் துணைவர்களை அரசன் கூர்ந்து ஆராய்ந்து தேர்ந்து தெரிந்து எடுக்கும் வகைகளை இதில் உணர்த்துகின்றார்; ஆகவே அவற்றின் பின் முறையே இது வைக்கப்பட்டது.

501குன்று நிமித்திகனைக் கொற்றவனேன் கூர்ந்தறிந்து
குன்றுமல் தேர்ந்தான் குமரேசா—நன்றும்
அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும். (க)

இ-ள்.

குமரேசா! நிமித்திகனை அரசன் பலவகையினும் ஆராய்ந்து ஏன் தேர்ந்து தெளிந்து கொண்டான்? எனின், அறம் பொருள் இன்பம் உயிர் அச்சம் நான்கின் திறம் தெரிந்து தேறப் படும் என்க.

ஆளை அளந்து அறிந்து கொள்க என்கின்றது.

தருமம் செல்வம் சுகம் பிராணபயம் ஆகிய இந் நான்கு வகைகளாலும் ஆராய்ந்து அறிந்து வினையாளர் வேந்தரால் தெளிந்து கொள்ளப் படுவார்.

பரிசோதனைக் கருவிகள் நான்கு ஈங்கு அறிய வந்துள்ளன. மானச மருமங்கள் இதில்மருவியிருக்கின்றன.

பொன்னின் ஏற்றத் தாழ்வுகளையும், தகுதியான மாற்றின் நிலைகளையும் தெளிவாக அறிந்து கொள்ளுதற்கு உரைகல் அமைந்துள்ளது. அதுபோல தன் ஆட்சிக்கு உரிய காரியங்களை மாட்சிமையாகச் செய்யவுரிய நல்ல வினையாளரை அரசன் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து தெளிந்து கோடற்குச் சிறந்த தெளிகருவிகள் இங்கே தெளிவாய் வெளி வந்திருக்கின்றன.

அறம் பொருள் இன்பம் வீடு என்பன மனிதன் அடைந்து அனுபவிக்க வுரிய இனிய செல்வங்கள்.

இறுதியில் உள்ளது பெறலரும் பேருக மருவி யுள்ளது. மையல் மருள்கள் யாவும் நீங்கிப் பூரணமாக மெய்யுணர்வு மேவிய பொழுது ஆன்மா அதனை அடைந்து அதிசய ஆனந்தம் நுகர்கிறது. யாவும் விட்டது வீடு என்றதனல் அதன் பீடும் பெருமையும் தெரியலாகும். முன்னுள்ள மூன்றும் இம்மையிலேயே மனிதன் செம்மையாய் எய்தி அனுபவிக்க வுரியன.

அவை ஈண்டு மனிதனை அளந்து அறிந்து தெளிந்து கொள்ளுதற்கு உரிமையாய் வந்தன.

உழவு வாணிகம் முதலிய தொழில்களுக்கு வேலை ஆளைச் சேர்ப்பவரும் அந்த ஆளின் நிலைமை நீர்மைகளை முன்னதாக ஆய்ந்தறிந்தே சேர்த்துக் கொள்கின்றனர்.

பெரிய அரச காரியத்துக்கு ஆளைத் தேர்ந்து எடுக்கும் மன்னன் அவனைப் பலவகையிலும் அளந்தறிந்து உளம் தெரிந்தே துணையாக அமைத்துக் கொள்கிருன்.

திறம் தெரிந்து என்பதை அறம் முதலியவற்ருேடு தனித்தனியே கூட்டிக் குறிப்புகளை நுனித்து நோக்குக.

திறம் = வகை; நிலை; கூறுபாடு.

1. அறத்தின் திறம் தெரிதல்.

தருமநீதி தழுவி யுள்ளவனு? விதி விலக்குகளை வழுவறத் தெரிந்தவனு? அந்த நெறிமுறையில் ஒழுகுபவனு? அவ்வழியில் இவனுடைய முன்னேர்கள் ஒழுகி வந்துள்ளனரா? என்று இவ்வகையில் ஓர்ந்து உணர்தல்.

2. பொருளின் திறம் தெரிதல்.

இவன் பொருள்வளம் உடையவனு? அதை ஈட்ட வல்லவனு? அதனை நெறிமுறையே போற்றி வாழ்பவனு? பொருள் நசையால் இழிவழிகளில் இழிபவனு? என்று இன்னவாறு முன்னுற ஆராய்ந்து கொள்ளுதல்.

### 3. இன்பத்தின் திறம் தெரிதல்.

அருந்தல் பொருந்தல் முதலிய போகநுகர்வுகளில் இவன் விவேகம் உடையவனா? நெறியான முறையில் உள்ளவனா? நெறிகடந்து பிறர் மனைவியர்களை விழைதல் முதலிய இழிவுகள் படிந்தவனா? என இன்னவாறு அவனது வாழ்வைத் தெளிவாக எண்ணியறிதல்.

### 4. உயிர் அச்சத்தின் திறம் தெரிதல்.

தொழில் செய்ய மூண்டபொழுது அவ்வழியில் நேர்கின்ற வருத்தங்களுக்கு வருந்துபவனா? பிறர் புகுந்து ஏதேனும் இடையூறுகள் செய்ய நேரின் அவற்றிற்கு அஞ்சித் தளர்பவனா? "இது செய்ய நேர்ந்தால் உன் உயிர்க்கு இறுதி நேரும்" என்று மாற்றலர் அச்சுறுத்தினும் அதற்கு அஞ்சாது வினைபுரியும் ஆண்மையாளனா? என இன்னவாறு தேர்ந்து தெளிதல்.

இந்த நான்கு வகையிலும் பழுது படாமல் பாங்கோடு தேறி உயர்ந்து வந்தால் அவன் அரசுக்கு உரிய சிறந்த கருமத் துணைவனைத் தெளியப்படுகின்றான்.

தரும நீர்மை, செல்வச் சீர்மை, நெறிமுறை நேர்மை, யாண்டும் அஞ்சாத ஆண்மை ஆகிய இந்த மேன்மைக் குணமுடையவர்களையே பான்மையுடன் ஆய்ந்து தனக்கு விழுமிய துணையாக வேந்தன் விழைந்து உவந்து தெரிந்து தெளிந்து கொள்ளவேண்டும்.

பொருள் போகம் அஞ்சாமை பொன்றுங்கால் போந்த
அருள்போகா ஆரறமென் றைந்தும்—இருள்தீரக்
கூறப் படுங்குணத்தான் கூர்வேல்வல் வேந்தனால்
தேறப் படுங்குணத்தி னன். (சிறுபஞ்சமூலம் 59)

அறம், பொருள், போகம், அஞ்சாமை, அருள், ஆகிய இந்த ஐந்தின் திறங்களிலும் உறுதியாய்ச் சிறந்துள்ளவனையே தன் காரியத்துக்குச் சீரிய துணைவனாக வேந்தன் தேர்ந்துகொள்ள வேண்டும் என்று சங்கப் புலவராகிய காரியாசானும் இவ்வாறு கூறியிருக்கிறார்.

தேவர் நான்கு கூறினர்; அருளைச் சேர்த்து இவர் ஐந்து கூறியுள்ளார். பொருள்கள் சிந்தனைக்கு உரியன.

**திறம்தெரிந்து தேறப் படும்** என்று அவர் பொதுவாக வுரைத்தார். **வேந்தனுல் தேறப்படும் குணத்தினன்** என்று சிறப்பாக விரித்து இப்பாவில் இவர் உரைத்திருக்கிருர். உரைக் குறிப்புகளை உய்த்து உணர்க.

**கூர்வேல் வல்** என்று வேந்தனை விசேடித்தது, அவனது வீரமும் வெற்றியும் இத்தகைய காரிய நிபுணர்களைக் கருதித் தெளிந்து உரிமையாத் தழுவிக் கொள்வதிலேயே மருமமாய் மருவியுள்ளன என்பது தெரிய.

**பாபி, வறியன், நோயன், கோழை** என இவ்வாறு பீழை படிந்துள்ளவன் வினையாளன் ஆகான் என்பது எதிர்மறையால் இங்கே இனிது தெரிய வந்தது.

இக்குறளுக்கு வேறு பொருள் கூறினரும் உளர் :

இந்த அரசன் அறநெறி நில்லாதவன், பொருள் ஈயாத உலோபி, கடுங்காமி, உயிர்களை அச்சுறுத்தும் கொடியவன் எனத் தன்னைக் குறித்து மன்னன் மாறுபாடுடன் ஒருவனிடம் மருமமாய் உரைத்து விடுத்து அவ்வுரைகளைக் கேட்டு அவ்வினையாளன் மனநிலை திரிவானுகில் அவனைச் சேர்க்கலாது; திரியாமல் உறுதியாய் உறவுடன் நின்ருல் அவனை சேர்த்துக்கொள்ளலாம் என்று இங்ஙனம் அவர் வார்த்து வரைந்திருக்கிருர்.

**காமந்தகம்** என்னும் ஆரிய நூலில் காரிய விசாரணையாளரைத் தெரிந்தெடுக்கும் உபாயங்கள் சில குறிக்கப்பட்டுள்ளன. அதற்கு **உபதா** என்று பேர். அதைப் பின்பற்றி அவர் இவ்வாறு உரைக்க நேர்ந்துள்ளார் என்று குறிப்பால் தெரிகின்றது.

புதிதாய் வந்த ஆளைத் திறந்தெரிந்து தெளிந்து கொள்வதையே ஈண்டு அறிய வந்துள்ளோம். பழமையாய் அரசனிடம் படிந்துள்ளவனைச் சோதிக்க இங்கே தேவையில்லை. சோதனை செய்ய நேர்ந்துள்ள இந்த நிலைமைகளை ஈண்டுக் கூர்ந்துஓர்ந்து கொள்ளவேண்டும்.

அறம் முதலிய நான்கின் திறத்தால் வினையாளனை ஆராய்ந்து தெளியவேண்டுமேயன்றி, அரசன்மீது மருமமாய்க் குறைகள் கூறிக் குற்றங்களை ஏற்றி முன்னமே வந்து சேர்ந்து வினை புரிந்து வருபவனை வஞ்சமாய் மயக்கி மருட்ட நேர்வது சீராகாது. பலவும் ஆராய்ந்து நிலைமையைக் கூர்ந்து சிந்தித்துக் கொள்ள வேண்டும்.

தேர்ந்து கொளல் என்று விதிமுறையாய்க் கூருமல் தேறப்படும் என்று செயப்பாட்டு வாய்பாட்டால் குறித்திருக்கிருர். அரசர் தேர்ந்தெடுக்கும் மரபு முறையை இது உறவாயுணர்த்தியுளது. செய்யும் என்னும் வினைமுற்று ஆண்பால் ஒருமையில் வந்து வினையாளனைச் சுட்டி நின்றது.

அமைச்சர் தூதர் ஒற்றர் படைத்தலைவர் முதலியோர் அரசனது ஆட்சிக்கு உரிய மாட்சிமையான வினையாளர்கள். இத்தகையோரை வித்தக விவேகமாய் ஓர்ந்து தேர்ந்து வேந்தன் தழுவிக் கொள்ளின் அந்த ஆட்சிமுறை துறைகள் தோறும் சிறந்து விழுமிய நிலையில் யாண்டும் உயர்ந்து விளங்கி வரும்.

கருமத் துணைவர் தக்கவராய் அமையின் அந்த ஆட்சி எவ்வழியும் செவ்வையாய் நடந்துவரும்; வரவேமாந்தர் மகிழ்ந்து வாழ்ந்து வருவர்; நாடு வளமாய்ச் செழித்துவரும்; வேந்தன் வியனுய் விளங்கி வருவன்.

இவ்வகையான உயர்வுகள் எல்லாம் வினையாளரைத் திறந்தெரிந்து தேர்ந்து கொள்வதால் வாய்ந்து வருதலால் அத்தேர்வு ஈங்கு உரிமையோடு ஆய்ந்து கொள்ள வந்தது.

தரும நீர்மை நேர்மை ஆண்மை முதலிய சீர்மைகளையுடையவனைத் தனக்கு அமைச்சனுகத் தெளிந்து அரசன் தழுவிக் கொள்வன். அவனல் ஆட்சி மாட்சிமையாம்.

இது நிமித்திகன்பால் தெரிய வந்தது.

**சரிதம்.**

இவன் ஏமாங்கத நாட்டிலே நேரி என்னும் ஊரில் இருந்தவன். தெளிந்த மதிமான்; சிறந்த நீதிமான்.

கலைகள் பலவும் கற்றுத் தேர்ந்து அறத்துறைகளை ஆராய்ந்து நெறி நியமங்களோடு வாழ்ந்து வந்தான். இவனுடைய நிலைமை நீர்மை சீர்மைகளை அறிந்து வியந்து அந்நாட்டு மன்னன் ஆகிய சச்சந்தன் இவனைத் தனக்கு அமைச்சனாக அமைத்துக் கொண்டான். அரச காரியங்களை அதிசய சாதுரியமாய் இவன் நடத்தி வந்தான். வருங்கால் அரசன் காமபோகங்களில் மூழ்கிக் களித்து ஆட்சிப் பொறுப்பை வேறு ஒரு அமைச்சனிடம் ஒப்பித்துவிட்டு அரண்மனையில் ஒதுங்கியிருக்க நேர்ந்தான். அந்த நிலையை அறிந்து இவன் நெஞ்சம் வருந்தினான்; நேரே துணிந்து அரசனுக்கு அறிவு கூறினான். "மன்னர் பெரும! அரசபதவி தெய்வத் திருவருளால் அமைவது; அதை அயலானிடம் தருவது அவலமான பிழையாம்; அதனால் பழி யிழிவுகள் விளையும்" என இவ்வாறு இதமாக அறிவுரைகள் கூறியும் அவன் கேளாமல் பழைய வழியிலேயே களி மீறி நின்றான். மீறவே மாறியும் மதி நலன்களை இவன் வலியுறுத்தினான். அயலே வருவன காணுக.

காவல! குறிப்பன் றேனும் கருமமீ தருளிக் கேண்மோ!
நாவலர் சொற்கொண் டார்க்கு நன்கலால் தீங்கு வாரா;
பூவலர் கொடிய னார்கண் போகமே கழுமி மேலுங்
பாவமும் பழியும் உற்றார் பற்பலர் கேளி தென்றான். (1)

பெரும்பெயர்ப் பிரமன் என்னும் பீடினால் பெரிய நீரான்
அரும்பிய முலையி னாளுக்கு அணிமுகம் நான்கு தோன்ற
விரும்பியாங் கவளை எய்தான் விண்ணகம் இழந்த தனறித்
திருந்தினாற்கின்று காறும் சிறுசொல்லாய் நின்ற தன்றே! (2)

கைம்மலர்க் காந்தள் வேலிக் கணமலை யரையன் மங்கை
மைம்மலர்க் கோதை பாகம் கொண்டதே மறுவ தாகக்
கொய்ம்மலர்க்கொன்றை மாலைக் குளிர்மதிக்கண்ணியாற்குப்
பெய்ம்மலர் அலங்கல் மார்ப! பெரும்பழி யாயிற் றன்றே! (3)

நீனிற வண்ணன் அன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன்
பானிற வண்ணன் நோக்கின் பழியுடைத் தென்று கண்டாய்
வேனிறத் தானை வேந்தே! விரிபுனல் தொழுனை யாற்றுள்
கோனிற வளையி னார்க்குக் குருந்தவன் ஒசித்த தென்றான் (4)

படுபழி மறைக்க லாமோ பஞ்சவர் அன்று பெற்ற
வடுவுரை யாவர் பேர்ப்பார்? வாய்ப்பறை அறைந்து தூற்றி
இடுவதே யன்றிப் பின்னும் இழுக்குடைத் தம்ம காமம்
நடுவுநின் றுலகம் ஓம்பல் நல்லதே போலும் என்றான். (5)
(சீவக சிந்தாமணி)

காமத்தின் இழிவுகளை நயமாய் எடுத்துக் காட்டி அரசனுக்கு இவன் புத்தி போதித்திருக்கும் நிலைமை நீர்மைகளை இதில் உய்த்து உணர்ந்து கொள்கிறோம். கவிகளில் குறித்துள்ள பொருள் நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவேண்டும். அரசன் நெறிபிறழ்ந்து இழிய நேர்ந்தமையால் அரசை இவன் துறந்து போயினான். இவனுடைய தரும நீதிகளையும் மனவுறுதிகளையும் வியந்து மறுபுல மன்னர்களும் புகழ்ந்து வந்தனர். அறம் பொருள் முதலிய நிலைகளில் திறம் தெரிந்து தேறப் படுபவனே சிறந்த மந்திரியாய் உயர்ந்து விளங்குவான்; அவனே ஆட்சிக்கு உரிய மாட்சிமையாளன் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

உள்ளம் தெளிந்த உரவோனை வேந்தன்தன்
உள்ளம் உவந்து கொளல்.

அறவனை ஆய்ந்து கொள்க.

---

502 பண்டு கபிலரைநேர் பார்த்தவுடன் பாரியேன்
கொண்டு தெளிந்தான் குமரேசா—கொண்ட
குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு. (௨)

இ-ள்.

குமரேசா! குலநலமும் குணநலனும் உடைய கபிலரைப் பாரி ஏன் உவந்து தெளிந்து கொண்டான்? எனின், குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும் நாண் உடையான் கட்டே தெளிவு என்க.

தெளிய வுரியாரை இது தெளிவித்துளது.

நல்ல குடியில் பிறந்து குற்றங்கள் இன்றிப் பழிக்கு

அஞ்சுகிற நாணம் உடையவனிடமே அரசனது தெளிந்த தேர்வு சிறந்து அமைந்துள்ளது.

தனக்கு உறுதித் துணையாக வேந்தன் தேர்ந்து தெளிந்து கொள்ள உரியவரை இன்னவாறு குறித்துக் காட்டியுள்ளார். வரிசை அறிவதே அரசு முறையாம்.

முன்பு அறம் பொருள் இன்பம் அச்சம் ஆகிய நான்கு வகையால் வினையாளரைத் தெளிக என்றார். இதில் குடிப் பிறப்பு முதலாக நான்கு குறித்துள்ளார். முன்னது எல்லார்க்கும் பொது; பின்னது சிறப்பு. ஆகவே சோதனைக் கருவிகள் எட்டு ஈண்டு எண்ண வந்துள்ளன. தேர்வுகள் சீராய்த் தெரிய நின்றன.

மனிதப் பிறப்பினர் எல்லாரும் குடியில்தான் பிறந்து வருகின்றனர். வந்தும் குடிப்பிறப்பு என்று தனியே சிறப்பாகப் பிரித்து உயர்ந்த மதிப்போடு நூலோரும் மேலோரும் வழங்கி வருகின்றனர்

சிறந்த குடி எது? அந்தச் சிறப்பு அதற்கு எப்படி வந்தது? அன்பு அறிவு மானம் வீரம் வாய்மை தூய்மை நேர்மை சீர்மை முதலிய நீர்மைகள் எந்த மனிதரிடம் பரம்பரையாய் வளர்ந்து வருகின்றனவோ, அந்த மரபினர் பிறந்து வருகிறகுடி உயர்ந்த குடி என ஒளி பெற்று உலகம் போற்றச் சிறந்து வந்துள்ளது.

ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். (குறள் 952)

குடிப் பிறந்தாருடைய சிறந்த இயல்புகள் இவ்வாறு செவ்வையாக அறிய வந்துள்ளன.

வாய்மை சீலம் நாணம் முதலிய நீர்மைகள் அவரிடம் வழுவாமல் அமைந்துள்ளன என்றமையால் அவரது விழுமிய நிலைமையும் அவரால் உலகம் அடைந்து வரும் பலன்களும் நலமாய்த் தெரிய நின்றன.

குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையின்

காதல் இன்பத்துள் தங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை அவாவின்மை என்றுங்கு
இருபெரு நிதியமும் ஒருதாம் ஈட்டும்
தோலா நாவின் மேலோர் பேரவை
உடன்மரீஇ இருக்கை ஒருநாள் பெறும்எனின்,
பெறுகதில் அம்ம! யாமே: வரன்முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
ஞாங்கர் ஞாங்கர் நின்றுழி நில்லாது
நிலையழி யாக்கை வாய்ப்பஇம்
மலர்தலை உலகத்துக் கொட்கும் பிறப்பே.

(ஆசிரியமாலை)

குடிப்பிறப்பு முதலிய குணநலன்கள் வாய்ந்தவர்களோடு ஒருநாள் கூடி நான் இருக்கப்பெறின் இன்னுத பிறவியும் எனக்கு இனியதே என ஒரு பெரியவர் இதில் உணர்த்தி யிருப்பதை நாம் உவந்து காண்கின்றோம்.

உடுக்கும் உடைபோல் குடிப்பிறப்பு என்று குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்க வுரியது. உடை மானம் காத்து மனிதனை மகிமைப் படுத்துகிறது. குடிப்பிறப்பும் அவ்வாறே சிறப்புறச் செய்கிறது. உடலுக்கு உடைபோல் உயிர்க்குக் குடிப்பிறப்பு உயர்வு புரிந்துளது.

இத்தகைய மாட்சி மருவியிருத்தலால் குடிப்பிறந்து என்று இதனை முதலில் குறித்தார். நல்ல குடியில் பிறந்திருந்தாலும் பொல்லாத பழக்கத்தால் குற்றம் உற நேரினும் நேரும். அவ்வாறுன மாசு யாதும் இருக்கலாகாது என்பார், குற்றத்தின் நீங்கி என்றார்.

குற்றத்துள் நீங்கி எனவும் பாடம் உளது.

வடு=பழி; வசை. பரிதல்=நடுங்குதல்; ஒடுதல். வடுப்பரியும் என்றது பழிக்கு அஞ்சுகின்ற பண்பினை.

நாண்=நாணம்; இலச்சை; வெட்கம்.

பழி தீமைகளுக்குப் பயந்து மாசு படியாதபடி உள்ளம் கூசி ஒடுங்குதல் நாணம் என்க. நவைகள் நண்ணுதபடி மனிதனை நன்கு பாதுகாத்து எங்கும் மேன்மை அருளி வருவது நாணம் என வந்தது.

கட்டே=கண்ணதே; கண் என்னும் இடப்பெயரடியாய்ப் பிறந்த குறிப்பு முற்று. ஏகாரம் பிரிநிலை.

தெளிவு=சாரமாத் தேர்ந்து தெளிந்து கொண்டது.

சிறந்த குடியில் பிறந்து உயர்ந்த குணங்கள் நிறைந்து வடுவுறாமல் மதிமாண்போடு நெறிமுறையே ஒழுகி வருகிற விழுமியோரையே தனக்கு உரிமைத் துணையாக வேந்தன் தழுவிக் கொள்ளவேண்டும்.

நல்ல குடியில் பிறந்து ஆறு
நவையும் மறப்பும் மடிபிழைப்பென்று
அல்ல லுறுக்கும் இவைமுதலாம்
அனைத்தும் நீக்கிப் பழிக்கஞ்சி
ஒல்ல லுறுநாண் உடையானே
ஓர்ந்து தெளியப் படுமைந்தா!
வல்ல கலைதேர்ந் தாசற்றார்
மாட்டும் வெளிறு மருவிடுமே.

(விநாயக புராணம்)

ஈண்டு இது எண்ணி உணரவுரியது. அரசன் ஆராய்ந்து தேர்ந்து தெளிந்து கொள்ள வுரியவரை இங்ஙனம் நன்கு வரைந்து காட்டியுளது.

குடிப்பிறப்பு, குற்றத்தின் நீக்கம், வடுப்பரிதல், நாணுடைமை என்னும் இவை மனிதனை மாண்புடையனாக்குகிறது; அம்மாட்சி இங்கே காட்சிக்கு வந்துள்ளது.

குற்றங்கள் நீங்கிக் குணங்கள் ஓங்கிய அளவே எவரும் உயர்ந்து ஒளிபெற்று வருகிறார். மாசு கழியவே தேசு வெளியாகிறது. ஆகவே மேன்மை யுறுகின்றார்.

சிறந்த குணநலன்களுடைய மேலோரையே தமக்கு உறுதித் துணையாகத் தெளிந்து அரசர் உவந்து தழுவிக் கொள்ளுவர். அவரால் நாடு நலம் பல பெறுகிறது,

இவ்வுண்மை கபிலர்பால் தெரிய வந்தது.

### சரிதம்.

இவர் பாண்டி நாட்டிலே திருவாதவூரிலே பிறந்தவர். மறையவர் மரபினர். அரிய பல குண நலன்

கள் இயல்பாக அமைந்தவர். பெரிய புலமையாளர். சிறந்த கவிஞர். சங்கப் புலவர்களுள் ஒருவராய் இவர் விளங்கி யிருந்தார். நாயனர் திருக்குறளை அங்கே அரங்கேற்றும்பொழுது அதன் அருமை பெருமைகளை இவர் வியந்து புகழ்ந்தார்.

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட ! வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி. (கபிலர்)

சிறிய புல் நுனியிலுள்ள பனித்துளி பெரிய பனை மரத்தைத் தெளிவாக் காட்டுதல் போல் குறுகிய குறள் வெண்பா விரிந்த பல பொருள்களை ஒருங்கே விளக்கி யுளது என இவ்வாறு குறித்திருக்கிறார். இவரது புலமை தலைமை நிலைமை நீர்மைகளை அறிந்து வியந்து விழைந்து பாராட்டி இவரைத் தனக்கு உறுதித் துணையாகப் பாரி மன்னன் உவந்து தழுவிக்கொண்டான். அந்த வள்ளலுடைய குணம் செயல்களையும் அறிவு நலன்களையும் உணர்ந்து உள்ளம் உவந்து இவர் உரிமை மீதூர்ந்து வந்தார். கைம்மாறு கருதாமல் யாருக்கும் உதவி புரிந்து வருகிற அவனது பரோபகார நீர்மையை வியந்து இவர் பல பாடல்கள் பாடியுள்ளார்.

பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்;
பாரி ஒருவனும் அல்லன்,
மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே. (புறம்)

நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்
புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னு ஆங்கு
மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே. (புறம் 106)

இன்னவாறு அம்மன்னனுடைய ஈகைத் திறங்களையும் பெருந்தகைமைகளையும் உவந்து கூறியிருக்கிறார். பாரி பாரி என்று சீரிய புலவர்கள் எல்லாரும் புகழ்ந்து போற்றுகின்றனர். பாரி ஒருவன் தானு இவ்வுலகத்

தைப் பாதுகாக்கிருன்? மாரியும் உண்டு என்று கூறி யுள்ளதில் குவிந்துள்ள நயத்தையும் நளினத்தையும் கூர்ந்து சிந்திக்க வேண்டும். வாசனையில்லாத எருக்கம் பூவையும் கடவுள் அணிந்துகொள்ளுகிருர்; அதுபோல அறிவில்லாத எவர் வரினும் அவரை உவந்து பேணி ஈந்து உதவி புரிந்து வருகிருன் என்று உலகம் அவனை வியந்து புகழ்ந்துவர இவர் விழைந்து பாடியிருக்கிருர். உரிமைத் துணையாக இவரை உவந்து கொண்ட பின்பு அக்குறுநில மன்னன் புகழ் பெருநிலவேந்தர் எவரினும் பேரொளி பெற்று ஞாலம் எங்கும் விளங்கியது.

நிலமிசைப் பரந்த மக்கட் கெல்லாம்
புலனழுக்கு அற்ற அந்த ணாளன்
இரந்துசெல் மாக்கட்கு இனியிடன் இன்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன்;
பொய்யா நாவிற் கபிலன்.

மாறோக்கத்து நப்பசலையார் என்னும் சங்கப்புலவர் இங்ஙனம் இவரைப் புகழ்ந்திருக்கிருர். இவரது பிறப்பும் சிறப்பும் வாய்மையும் தூய்மையும் இதனுல் அறிந்து மகிழ்ந்து கொள்ளுகிறோம். குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கியுள்ள குணநலனுடையாரைத் தனக்கு இனமாகத் தெரிந்து தெளிந்துகொண்ட அந்த அரசன் சிறந்த புகழோடு உயர்ந்து விளங்குவான் என்பதை உலகம் இவரால் உணர்ந்து வியந்து உவந்துள்ளது.

**நலமாய் அரசு நடந்துவரும் நல்ல**
**குலமகனைத் தேர்ந்து கொளின்.**

*நல்லவரை நாடிக் கொள்க,*

---

503 கற்றுயர்ந்த வேதாவின் கண்ணுமொரு வெண்மைகண்டு
**குற்றமென்ருய் என்னே குமரேசா—முற்றும்**
**அரியகற் ருசற்ருர் கண்ணும் தெரியுங்கால்**
**இன்மை யரிதே வெளிறு.** (ங)

இ-ள்

குமரேசா! வேதங்களை எல்லாம் ஓதி உணர்ந்த

பிரமாவின் கண்ணும் ஒரு வெண்மையைக்கண்டு ஏன் உண்மையை உணர்த்தி உறுதி நலன் அருளினாய்? எனின், அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும் தெரியும் கால் வெளிறு இன்மை அரிதே என்க.

அறியாமை நிலையை இது அறிவிக்கின்றது.

அரிய நூல்களைப் பயின்று தெளிந்து குற்றம் அற்ற மேதைகளிடத்தும் ஆராய்ந்து நோக்கின் அறியாமை உள்ளே மருவி யிருக்கும்.

மனித அறிவின் மருமம் இனிது தெரிய வந்தது.

அறிவு இயற்கையாகவே மனிதனுக்கு இனிது அமைந்திருக்கிறது. விலங்கு பறவைகளை விட மனிதன் உயர்ந்தவனாய்ச் சிறந்திருப்பது பகுத்தறிவாலேயாம். ஆயினும் அந்த அறிவு கல்விப் பயிற்சியால் உயர்ச்சி யடைந்து ஒளிபெற்று வருகிறது.

கல்லாத அறிவு செல்லாத காசுபோல் தியங்கி நிற்கும்; கற்ற அறிவு எங்கும் வெற்றி பெற்று விளங்கி வரும். ஆகவே கல்விக்கும் அறிவுக்கும் உள்ள உற வுரிமைகள் ஈண்டு உய்த்து உணர வந்தன

அரிய என்றது எளிதே கற்க முடியாத அரிய பெரிய கலைகளை. பல வகைகளின் நிலை தெரிய வந்தன.

இலக்கியம் இலக்கணம் தருக்கம் கணிதம் காவியம் இதிகாசங்கள் புராணங்கள் அரசியல் உளவியல் உயிர் இயல் உணர்வியல் பூகோளம் ககோளம் முதலிய துறைகளோடு யோகம் ஞானம் என்னும் இத்தகைய தத்துவக் கலைகளும் பலவாறு விரிந்து பரந்துள்ளன. இவை யாவும் ஒருங்கே கற்று வல்லராகுதல் அரிய பெரிய செயலாம். இத்தகைய அரிய கலைகளைக் கற்றுப் பெரிய மேதையாய்த் தேர்ந்து தெளிந்து வந்தாலும் மனத்தில் மாசு அற்றிருத்தல் அரிதாம்.

ஆசு = புறக்குற்றம். மாசு = அகக்குற்றம்.

ஆசையாலும் அச்சத்தாலும் மனிதன் செய்கிற பிழைகள் ஆசு என நேர்ந்தன. பிறர் மனை விழைதல் முதலியனவே பெரிய கொடிய பிழைகளாம்.

கல்வி அறிவுகளையும் தாழ்த்தி வீழ்த்தி ஆசுகளும் மாசுகளும் மனிதரை நீசப்படுத்தி வருகின்றன. இந்த நீச மருள்கள் நேராத வழியே ஈசன் அருள் ஒளிவீசி எவ்வழியும் தேசு மிகுந்து வருகிறது.

அரிய கற்று ஆசு அற்று நிற்பார் அரியர். அத்தகைய அரியநிலைகளை உரிமையாயடைந்து பெருமை பெற்றுள்ள பெரிய மேதைகளிடமும் பேதைமை புகுந்திருக்கும். எனவே அதன் இயல்பு தெரிய நின்றது.

கண்ணும் என்றதில் உம்மை அவரது உயர்ந்த பயிற்சி முறைகளையும் சிறந்த அறிவுத் திறங்களையும் நிறைந்த மேன்மைகளையும் ஓர்ந்து உணர வந்தது.

வெளிறு = அறியாமை; மடமை.

திண்மையான சாரம் இல்லாத்து வெண்மை என நேர்ந்தது. அதன் அடியாய்ப் பிறந்து வந்துள்ள வெளிறு ஈண்டு அறிவின்மையை உணர்த்தி நின்றது. ஒளிறு = பிரகாசம். அது இல்லாதது வெளிறு.

வெளிறு இலாக் கேள்வியான். (சிந்தாமணி 200)
வெளிறில் நோன்காழ். (புறம் 23)
வெளிற்றின் புன்சாய். (முருகு 312,
✓வெளிறு நீங்கிய பாலை. (இராமா, வனம் 47)

இவற்றுள் வெளிறு உணர்த்தி நிற்றலை உணர்ந்து கொள்கிறோம். ஒளிறுள் வெளிறு விரவியுளது.

வெளிறு நீரரும் பெரியரை மேவிடின் அவர்தம்
ஒளிறு நீரெலாம் உறுவர்என் பதுதிடம்; உவரி
குளிரு நீரும்வண் ணமும்குரூஉத் தழலும்பேர் ஒலியும்
துளிசெய் மாட்சியும் பெற்றன தோய்ந்தவெண் மேகம்.
(விநாயக புராணம்)

வெண்மையான மேகம் கடலில் படிந்தது; அதன் நிறம் நீர்மைகளை அடைந்தது; வெள்ளையான சிறியரும் ஒள்ளிய பெரியரைச் சேர்ந்தால் பெருமையுறுவர் என இஃது உணர்த்தியுளது. வெளிறு இதில் குறித்துள்ள பொருளை அறிகிறோம். முற்றும் வெளிறு இல்லாதவர் கிடைப்பது அரிது. கிடைத்தவர்களைக்கொண்டு உன்

காரியத்தை நடத்துக எனச் சீரிய ஓர் உறுதி நலனை அரசனுக்கு இவ்வாறு அறிவுறுத்தி யுள்ளார்.

ஈசன் ஒருவனன்றி இவ்வுலகில் யாருமே
ஆசற் றிருத்தல் அரிதாகும்—ஆசின்
குறைவை அறிந்து குணமும் தெரிந்து
நிறைவை யுறுக நினைந்து.

இதன் பொருளைக் கருதி யுணர்ந்து கருமம் புரிக.

கூர்ந்து ஓர்ந்த போதன்றிப் பெரிய அறிவாளிகளிடம் அறியாமை மருவியிருப்பது சரியாகத் தெரியாது ஆதலால் **தேரியுங்கால்** என்றார்.

உண்டே உளத்து வெளிறு என்று கூறாமல் இன்மை அரிதே என்று குறித்திருப்பதில் உள்ள நயத்தைக் கருத்தூன்றிச் சிந்திக்க வேண்டும். எதிர்மறையும் ஏகாரமும் பரிதாப தொனியாய்ப் பரவியுள்ளன. மனிதனுடைய குறைபாடுகளைக் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து தெளிந்து சாந்தம் உற இது நேர்ந்துள்ளது.

எவ்வளவு கல்வியறிவுகளை ஒருவன் எய்தியிருந்தாலும் மடமையும் மருளும் மயக்கமும் அவனிடம் மருமமாய் மருவி யிருக்கும். மனிதனது நிலைமை இவ்வாறு பரிவோடு உணர வந்துளது.

ஒருவன் அறிவானும் எல்லாம்; யாதொன்றும்
ஒருவன் அறியா தவனும்; ஒருவன்
குணன்அடங்கக் குற்றமு ளானும்; ஒருவன்
கணன்அடங்கக் கற்றானும் இல். (நான்மணி 104)

கல்வி குணம் குற்றம் அறிவு அறியாமைகளில் மனிதன் மருவியுள்ள நிலைமையை **விளம்பி நாகனார்** இங்ஙனம் விளம்பி யிருக்கிறார். நான்கு குறிப்புகளையும் ஈங்கு நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.

அரிய கல்வியுடைய பெரிய மேதையிடமும் பேதைமை சிறிது சேர்ந்திருக்கும்; ஆயினும் அவரை உரிய துணையாக அரசன் பேணிக்கொள்ள வேண்டும் என்பது ஈண்டு அதிகாரத்தால் அறிய வந்தது.

There is a foolish corner even in the brain of the sage.
(Aristotle)

தெளிந்த ஞானியின் அறிவிலும் அறியாமை சிறிது உள்ளே ஒளிந்திருக்கும் என அரிஸ்டாட்டல் என்னும் கிரேக்க தேசத்து அறிஞர் இவ்வாறு கூறியிருக்கிருர்.

மதியுள்ளும் ஓர்மறு வுண்டு; மதியின்
அதிபதி என்றே அகங்கொள்—விதியுமுன்
செவ்வேளால் உண்மை தெளிந்தான்; அறிவுநிலை
எவ்வளவென் றெண்ணி யினைந்து.

இதன் பொருளை எண்ணி ஓர்ந்து சிந்திக்கவேண்டும்.

அரிய வேதங்கள் யாவும் ஓதியுணர்ந்து எல்லாம் தெளிந்த மேதாவி என யாண்டும் நீண்ட புகழுடன் நிலவியுள்ள அதிசய மேதையிடமும் பேதைமை சிறிது உள்ளே மேவியிருக்கும்.

இவ்வுண்மை பிரமாவின்கண் உணர வந்தது.

## சரிதம்

அகிலவுலகங்களையும் படைத்தருளும் தலைமையில் பிரமதேவன் என்றும் நிலவியுள்ளார். வேதம் முதலிய கலைகளையெல்லாம் நன்கு தெளிந்தவர். வரன், பிதா, வேதா, போதன் முதலிய காரணப் பெயர்கள் இவருடைய பேரறிவையும் பேராற்றல்களையும் பெருமித நிலைகளையும் பூரணமா விளக்கிக்கொண் டிருக்கின்றன. கலைகளின் அதிதேவதையான சரசுவதி தேவிக்கு நாயகன். இத்தகைய மேதை சிவபெருமானை ஒருமுறை தரிசிக்க விரும்பிச் சென்றுர். கைலாசவாசனைக் கண்டு வணங்கி உரையாடி மகிழ்ந்து மீண்டு வெளியே வந்தார். வருங்கால் அங்கே இளமைக் கோலமாய் எழிலொளி வீசிமிளிர முருகப்பெருமான் உல்லாச விநோதமாய் முன் மாளிகையில் அமர்ந்திருந்தார். இளைஞர் என்று எண்ணி யாதும் கவனியாமல் இவர் இறுமாந்து சென்றுர். இவரது மமதை நிலையை அறிந்த குமரப் பெருமான் "கமலப்புத்தேளே! இங்கு வருக" என்று அழைத்தார். இவர் அருகே போய் நின்றுர்; அவர்

அயலே இருக்கப் பணித்தார். இருந்த இவரை நோக்கி "வேதப் பொருள்களையெல்லாம் தாங்கள் நன்கு தெளிந்திருப்பீர்கள்! ஒன்றை ஓதிக் காட்டுங்கள்" என்று அவர் உரைத்தருளினர். இவர் ஓதத் தொடங்கி முதலில் ஓம் என்று ஒலித்தார். ஒலிக்கவே "நில்லும்" என்று நிறுத்தி இதன் பொருளைச் சொல்லும் என்றார். இது ஆதி ஒலி; நாதகீதம்; மூல மந்திரம்; பிரணவம்; குடிலை என இன்னவாறு இவர் கூறினர். கூறவே அப்பிள்ளைப் பெருமான் மெள்ளச் சிரித்து "பரியாய நாமங்களை நான் கேட்கவில்லை; இதன் உண்மைப் பொருளை உரைத்தருளும்" என்றார். இவர் திகைத்து விழித்தார்; விழிக்கவே "ஓர் எழுத்துப் பொருளையும் உணராத நீர் ஈரேழு புவனங்களையும், எல்லா உயிரினங்களையும் எப்படிப் படைப்பீர்! என்று இப்படிச் சுட்டி உரைத்துத் தலையில் குட்டி இவரை அவர் சிறையில் இருத்தினர்.

தெருள தாகிய குடிலையைச் செப்புதல் அன்றிப்
பொருள் அறிந்திலன் என்செய்வான்? கண்ணுதற் புனிதன்
அருளினல் அது முன்னரே பெற்றிலன்; அதனல்
மருளு கின்றனன்; யார் அதன் பொருளினை வகுப்பார். (1)

தூமறைக்கெலாம் ஆதியும் அந்தமும் சொல்லும்
ஓமெ னப்படும் ஓரெழுத் துண்மைய உணரான்
மாமலர்ப்பெருங் கடவுளும் மயங்கினன் என்றல்
நாமினிச்சில அறிந்தனம் என்பது நகையே. (2)

எட்டொ ணுதஅக் குடிலையின் பயனினைத் தெரிந்தே
கட்டு ரைத்திலன் மயங்கலும் இதன்பொருள் கருதாய்
சிட்டி செய்வதித் தன்மையதோ? எனச் செவ்வேள்
குட்டினன் அயன் நான்குமா முடிகளும் குலுங்க. (3)
(கந்த, அயன்சிறை)

நாலுமுகன் ஆதி அரி ஓம் எனவ தாரம் உரை
யாதபிர மாவைவிழ மோதிபொருள் ஓதுகென
நாலுசிர மோடுசிகை தூளிபட தாளமிடும் இளையோனே!
(திருப்புகழ் 1302)

நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இவை வரைந்து காட்டியுள்ளன. அதிசய மதிமானை பிரமதேவனும் அறியா

மையால் மயங்கினன். மனிதராகிய நாம் அறிவுடையேம் என்று மதத்துச் செருக்குவது மடமையாம் என இச்சரிதம் உறுதியாய் அறிவுறுத்தி யுள்ளது.

அரிய கற்று ஆசு அற்ருர் கண்ணும் அறியாமை புகுந்திருக்கும் என்பதை அதிசய மேதையான பிரம தேவனும் பேருலங்கள் அறிய நேரே விளக்கி நின்ருன்.

**தெளிந்தஅறி வுள்ளும் தெளியா மடமை**
**ஒளிந்துள் இருக்கும் உறைந்து.**

மதியுள்ளும் மறுவுண்டு.

———

504 குற்றம்சேர் கள்ளுண் குரங்கரசை ஏன்கொண்டான்
கொற்ற இராமன் குமரேசா—உற்ற
குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். (சு)

இ-ள்.

குமரேசா! குடிகாரனைக் குற்றமுற்றுள்ள சுக்கிரீவனை ஏன் இராமன் உறவுரிமையாக் கூடிக் கொண்டான்? எனின், குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளல் என்க.

குணம் குற்றங்களைச் சீர்தூக்கி நோக்கி அவற்றுள்ளே மிக்க நிலைகளை ஆராய்ந்து மிகுதியைக்கொண்டு ஒருவன் தகுதியைத் தேர்ந்து தெளிந்து கொள்ளுக.

குணம் மனிதனை மணமா உயர்த்தி மாண்புறுத்துகிறது. குற்றம் அவனைக் குறையாத் தாழ்த்தி வீழ்த்தி எவ்வழியும் குறுகச் செய்கிறது.

கல்வி கல்லாமை, அறிவு அறியாமை, புகழ் இகழ், புண்ணியம் பாவம், பெருமை சிறுமை, நன்மை தீமை, குணம் குற்றம் என இன்னவாருன இரட்டைகள் மனித இனத்தை யாண்டும் இனமாப் பற்றி வருகின்றன. ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் இருப்பது அதன் அதன் பிறப்பு உரிமையாய்த் தொடர்ந்து பெருகி வந்துளது.

இயன்ற வரையும் முயன்று நல்லதைப் பழகி வருப வன் நல்லவனாய் உயர்ந்து கொள்கிறான்; அவ்வாறு பழ காதவன் அல்லலான வழியில் தாழ்ந்து நிற்கின்றான்.

அன்பு அடக்கம் அமைதி சீலம் கருணை சத்தியம் முதலியன குணநலன்களாய் ஒளிபெற்றுள்ளன; இவற் றைத் தழுவி ஒழுகி வருபவர் விழுமிய மேலோராய் உயர்ந்து யாண்டும் விளங்கி வருகின்றனர்.

செருக்கு சினம் துடுக்கு பொய் கொடுமை மடமை இழிநசை முதலியன குற்றங்களாய்ப் பெருகியுள்ளன. இவற்றை மருவி நிற்பவர் இழிந்த மாக்களாய்க் கழிந்து நிற்கின்றனர். சார்ந்த நிலைகளின் அளவே எவரும் நேர்ந்து எங்கும் தேர்ந்து திகழ்கின்றனர்.

குற்றம் யாதும் இன்றி முழுதும் குணமே உடை யாரும், குணம் சிறிதும் இல்லாமல் குற்றமே யுடை யாரும் இவ்வுலகில் யாரும் இலர். ஆகவே குணத்தை யும் குற்றத்தையும் கூர்ந்து ஆராய்ந்து குணம் குறைந்து குற்றம் கூடியிருந்தால் அவரைக் கூடாமல் தள்ளிவிட வேண்டும்; குற்றம் குறைந்து குணம் நிறைந்திருந்தால் அவரைத் தனக்கு உரிமைத் துணையாக அரசன் தெளிந்து கொள்ளலாம் என்பது இங்கே கருமச் சூழ்ச்சி யாய் நன்கு அறிந்து கொள்ள வந்தது.

குற்றம் இல்லாத குணசீலர்களே வேண்டும் என்று விழைந்து தேடி யாண்டும் நீண்டு அலைந்தால் ஈண்டு ஒருவரும் உரிமையாய்க் கிடைக்க மாட்டார்.

குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை.

குற்றத்தைக் கூர்ந்து பார்க்க நேர்ந்தால் ஒருவரை யும் உறவாக இவ்வுலகில் அடைய முடியாது என்று ஔவையார் இவ்வாறு உறுதி கூறியிருக்கின்றார்.

நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லார் எனினும் அடக்கிக் கொளல்வேண்டும்;
நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கும் உண்டு. (நாலடி (221)

நெல்லுக்கு உமி, நீர்க்கு நுரை, பூவுக்கு இதழ் புல்லி யிருத்தல் போல் மனிதனிடமும் சிறு சிறு குற்றம் உண்டு; ஆயினும் உறவாத் தழுவிக் கொள்ளவேண்டும். உமி உடையது என்று அரிசியைத் தள்ள நேர்ந்தால் பட்டினி கிடந்து பதைக்க நேரும்; குற்றம் உடையவன் என்று ஆளைத் தள்ளிவிட நேரின் வினையாள் கிடையாது; ஆகவே அரச காரியம் கெட்டுப்போம். நீர்போல்நிறைந்த குணமும், நுரைபோல் சிறிய குற்றமும் இருந்தால் அவரை உவந்து போற்றிக் கொள்ள வேண்டும்.

குற்றம் குறையக் குணமே லிட அருளை
உற்றவரே ஆவிக்கு உறவாம் பராபரமே. (1)

கற்றும் பலபல கேள்விகள் கேட்டும் கறங்கெனவே
சுற்றும் தொழில்கற்றுச் சிற்றின்பத் தூடு சுழலின் என்னும்?
குற்றம் குறைந்து குணமே லிடும் அன்பர் கூட்டத்தையே
முற்றும் துணையென நம்புகண்டாய் சுத்த மூடநெஞ்சே! (2)
(தாயுமானவர்)

குணம் நிறைந்து குற்றம் குறைந்துள்ளவரே உயிர்க்கு இனிய உறவினர்; அவரையே முற்றும் துணை என நம்பு என்று தம் மனத்தை நோக்கித் தாயுமானவர் இவ்வாறு இதமாய் இனத்தைக் கூறி யிருக்கிறார்.

குணம் நாடிக் குற்றமும் நாடித் தக்கவரைத் தழுவிக் கொள் என்ற இக்குறள் அவர் உள்ளத்தில் தோய்ந் திருந்து இவ்வாறு உருவெடுத்து வந்துள்ளது.

குணத்தை முதலில் குறித்தது அதன் தலைமை கருதி. முதன்மையாக நாட வுரியதும் நயக்க வுரியதும் அதுவே. குற்றமும் என்றதிலுள்ள உம்மை அதன் இழிவை உணர்த்தி முன்னதையும் தழுவி நின்றது.

குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு. (குறள் 793)

பின்னரும் இன்னவாறு தேர்தலைக் குறித்துள்ளார்

நாட்டு மக்களை நன்கு பாதுகாத்துவரும் அரசன் குணநலமுடையவனாயிருப்பன்; அவன் உவந்து தெரிந்து தெளிந்து கொள்ள வுரியவன் குணநிறை வுள்ளவனே

யாவன். ஆகவே அந்த உறவும் உரிமையும் கருதி உறுதி யாளனை உணரக் குணம் இங்கே முன்னுற வந்தது.

> குணம்நன் குணராக் கொடியோர் இடத்தில்
> குணம்நன் குடையார் குறுகார்—குணமுடைமை
> நண்ணுச் சமண நகரத்தில் தூசொலிக்கும்
> வண்ணானுக் குண்டோ வழக்கு. (நீதிசாரம் 26)

குணம் மிகவுடையார் குணம் இல்லாரைக் குறுகார் என இன உறவின் இயல்பு தெரிய இது குறித்துளது.

குற்றம் இருந்தாலும் ஒருவனிடம் குணம் மிகுந்திருந்தால் அவனைச் சுற்றமாக நல்லோர் தழுவிக் கொள்ளுவர். அவனும் உற்ற துணையாய் ஒழுகி வருவன்.

இந்தவுண்மை சுக்கிரீவன் பால் தெரிய வந்தது.

### சரிதம்.

வானர வீரர்களுக்குத் தலைவனான இவன் அண்ணன் வாலியால் அல்லலுழந்து தனியே ஒதுங்கியிருந்தான். வனவாசமாய் வந்த இராமன் இடையே மதங்கமலைச் சாரலில் இவனைக் காண நேர்ந்தான். இவனுடைய இயல் செயல் குணம் குற்றம் நிலைமை தலைமை முதலிய நிலைகளையெல்லாம் அனுமான் மூலமா அறிந்து அக் கோமகன் இவனை நட்புக் கொண்டான். கொள்ளவே தன் பகைவனை வெல்ல முயன்றான். அவ்வில் வீரன் துணைபுரிந்து நின்றான். கொலையில் மூண்டுள்ள அந்த நிலையைக் கண்டதும் இலக்குவன் கலக்கமாய் அண்ணனை விலக்கினான்: "அண்ணா! இவனோடு பழகினது தவறு; தன் உடன் பிறந்தவனையே பகைத்துப் பழிசெய்யத் துணிந்துள்ளான்; இவ் வழியில் நாம் இறங்கலாகாது; ஆராய்ந்து தெளியாமல் ஒருவனைத் துணைக்கொள்வது தீராத துயரமாம்; இவனை விட்டு விலகிவிட வேண்டும்" என்று இவ்வாறு இளையவன் கூறவே இராமன் அவனுக்குத் தேறுதல் கூறினான்: "தம்பி இலட்சுமணா! இவனிடம் சகோதர வாஞ்சை யில்லையே! என்று நீ உள்ளம் வருந்துகிறாய்; பரதனை யும் உன்னையும் போல் எல்லாரிடமும் நல்ல நீர்மைகள்

இரா. இது ஒரு முரடான சாதி; இங்கே உயர்ந்த பண்பாடுகளை எதிர்பார்க்க முடியாது; நமக்கு வேண்டிய அளவே நாம் உவந்து கொள்ளவேண்டும்; குற்றமே இல்லாத குணசாலிகள் யாண்டும் கிடைப்பது அரிது; அமைந்ததைக் கொண்டு நாம் அமைதியுற வேண்டும்" என்று இவ்வண்ணம் இளவல் உளம்தெளிய உலக நிலைகளை உணர்ந்து அண்ணன் அறிவுரை கூறி அடக்கினன்.

இலக்குவன் இசைத்தது.

வள்ளற்கு இளையான் பகர்வான் இவன்தம்முன் வாழ்நாள்
கொள்ளக் கொடுங்கூற் றுவனைக் கொணர்ந்தான்; குரங்கின்
எள்ளற் கரும்போர் அஃ திசைகலன் என்னும் இன்னல்
உள்ளத்தின் ஊன்ற உணர்வுற்றிலன் ஒன்றும் என்றான். (1)

ஆற்றாது பின்னும் பகர்வான் அறத்தாறு அழுங்கத்
தேற்றாது செய்வார்களைத் தேறுதல் செவ்வி தன்றால்;
மாற்றான் எனத் தம்முனைக் கொல்லிய வந்து நின்றான்;
வேற்றோர்கள் திறத்திவன் தஞ்சம் என்? வீர! என்றான். (2)

இராமன் எதிர் மொழிந்தது.

அத்தா! இதுகேள்என ஆரியன் கூறுவான்: இப்
பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேச லாமோ?
எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்கள் எல்லாம்
ஒத்தால் பரதன் பெரிதுஉத்தமன் ஆத லுண்டோ? (3)

விற்றாங்கு வெற்பன்ன விலங்கெழில் தோள! மெய்ம்மை
உற்றார் சிலர் அல்லவரே பலர்; என்பது உண்மை;
பெற்றார்உழைப்பெற்ற பயன்பெறும் பெற்றி அல்லால்
அற்றார் நவைஎன் றலுக் காகுநர் ஆர்கொல்? என்றான். (4)

(இராமாயணம் 4:5)

இலக்குவனது இனிய மனநிலையும் இராமனது அரிய மதிநலனும் இங்கே நன்கு தெரிய வந்துள்ளன.

கவிகளில் மருவியுள்ள பொருள் நயங்களைக் கருதி யுணர்ந்து கொள்ள வேண்டும். உண்மையும் நல்ல குணங்களும் உடையவர் இவ்வுலகில் சிலரே உளர்; பலர் அவ்வாறு இலர். ஈண்டு நாம் துணையாகக் கொண்டவரால் கொள்ளவுரிய பயனை மாத்திரம் பெறவுரி

யோம். முற்றும் குற்றம் இல்லாதவரை யாண்டும் காண்டல் அரிது. அமைந்த அளவு அமைதியுறவேண்டும் என்று தமையன் கூறவே தம்பி அடங்கி நின்றான். நவை அற்றார் என்றலுக்கு ஆகுநர் யார்? என்ற கேள்வி எவரும் இலர் என்பதை விளக்கி நின்றது. குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளல் வேண்டும் என்பதைக் குறிக்கொண்டு அக்கோமகன் சுக்கிரீவனைத் துணைக்கொண்டிருக்கின்றான். அவ்வுண்மையை ஈண்டு நாம் உணர்ந்து கொள்கின்றோம்.

**குற்றம் குறைந்து குணநிறைந் துள்ளவனை**
**உற்றதுணை யாக்கொள் உணர்ந்து.**

ஆனவரையும் நல்லவனை ஆய்ந்து சேர்.

———

505 சார்ந்த தருமகுத்தன் சானகனேன் தம்செயலால்
கூர்ந்தறிய நின்றார் குமரேசா—ஆர்ந்த
பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். (ரு)

இ-ள்.

குமரேசா! தருமகுத்தனும் சானகனும் தம் செயல்களால் ஏன் உயர்வு தாழ்வுகளை உலகம் அறிய நின்றனர்? எனின், பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தம் தம் கருமமே கட்டளைக் கல் என்க.

செயலே மனிதன் இயல்பை அயலே காட்டுகிறது.

பெரிய தகைமைக்கும் மற்றைச் சிறிய வகைமைக்கும் அவரவருடைய செயல்களே அளவு கருவியாய் மனிதரிடம் அமைந்து நிற்கின்றன.

கட்டளைக் கல் = அளவு; நிறையறிகருவி; உரைகல்.

ஒத்த பிறப்புடைய மக்கள் இடையே உயர்ந்தவர் தாழ்ந்தவர், மேலோர் கீழோர், பெரியோர் சிறியோர், மேதையர் பேதையர், என இன்னவாறு பல வகைகளில் பிரித்துப் பேசப்பட்டு வருகின்றனர்.

எந்த வகையால் இந்த வேறுபாடுகள் நேர்ந்தன? இவை சிந்தனை செய்ய வுரியன. கல்வி, செல்வம், வயது, பிறப்பு என்னும் இவற்றால் சிலர் பெரியர்போல் உலக நிலையில் உயர்ந்து தோன்றுகின்றனர்; அவ்வாறு தோன்றினும் இவர் உண்மையில் பெரியர் அல்லர்.

பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர்;
சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்.
பெருமையும் சிறுமையும் தான்தர வருமே.
(நறுந்தொகை)

போலியான உயர்வு தாழ்வுகளைக் கேலி செய்து விலக்கி உண்மையான பெருமை சிறுமைகளை **அதிவீர ராமபாண்டியன்** இவ்வாறு நயமா உணர்த்தியிருக்கிறார்.

அறிவு சீலம் சால்பு தவம் ஞானம் என்னும் இவற்றால் உயர்ந்தவரே உண்மையான சிறந்த பெரியோர்கள்; இவற்றை இழந்தவர் வேறு எவற்றை எய்தினும் இழிந்த சிறியோர்களாய்க் கழிந்து நிற்கின்றனர். தமது நீர்மையால் உயர்ந்தோரே சீர்மையான மேலோர்.

தீதும் நன்றும் பிறர்தர வாரா. (பூங்குன்றனார்)

நன்மைக்கும் தீமைக்கும் பெருமைக்கும் சிறுமைக்கும் தம்தம் கருமங்களே காரணமாய் இருத்தலால் மாந்தருடைய நிலைமைகளை ஓர்ந்து தேர்ந்து கொள்கிறோம்.

**கருமமே** என்றதில் ஏகாரம் அதன் தலைமையை உணர்த்தி நின்றது. வார்த்தை முதலிய வேறு கருவிகளால் ஒருவனைச் சரியாக நேரே அறிய முடியாது. செயலாலேதான் செவ்வையாய்த் தெரியலாம்.

படிக்கல்லைக் கொண்டு பண்டங்களைச் சரியாக நிறுத்துப் பார்த்துக் கொள்ளுகிறோம்; அதுபோல் ஒருவனது கருமத்தைக் கொண்டு அவனுடைய பெருமை சிறுமைகளைத் தெளிவாக அறிந்து கொள்கின்றோம்.

**கட்டளைக் கல்** என்று கருமத்தை உரிமையாய்ச் சுட்டிக் காட்டியது. ஏன்? எனின், அதைக்கொண்டே எவரையும் அளந்து அறிந்து தெளிந்து கொள்ள வேண்டி என்க. தேர்வின் தீர்வை தெரிய வந்தது.

அருமந் தற்றம் அகற்றும் வில்லியார்
ஒருமைந் தற்கும் அடாத துன்னினர்;
தருமம் பற்றிய தக்க வர்க்கெலாம்
கருமம் கட்டளை என்றல் கட்டதோ?
(இராமா, கிட்கிந், அரசியல் 16)

இராமன் சிறந்த குலமகன்; உயர்ந்த பெருந்தகை; அரிய தருமவான்; பெரிய நீதிமான். அத்தகைய உத்தமன் வாலியை மறைந்து நின்று அம்பு எய்து கொன்றானே! இச்செயல் அவன் இயல்புக்கு ஒக்குமா? ஒருவனுடைய பெருமைக்கும் சிறுமைக்கும் அவன் செய்யும் கருமமே கட்டளைக் கல் என்று மேலோர் கட்டளை யிட்டுள்ளனரே! அது இவன் வகையில் பொய் யாய்ப் போயதோ? என வாலியின் மனைவி இவ்வாறு மறுகிப் புலம்பி யிருக்கிறாள். மெய்யான தரும வீரனது கருமம் தேவ ரகசியமாய் இங்கே மருவியுளது.

தேவர் வாய்மொழியை இது மேவி வந்துள்ளது. அந்த உண்மையை உரைக் குறிப்புகளால் ஓர்ந்து காவியக் கவியின் தலைமையைத் தேர்ந்து கொள்கின்றோம்.

பெருமை சிறுமை அளந்துகொளப் பேணும் கருவி தத்தமது
கருமம்; அதுபோல் பிறகருவி கழியச் சிறந்த அல அறிக;
மருவு காத லால்அறியார் மாட்டு வினையை வையற்க;
ஒருவர் தமையும் தேராமே ஒரு காலத்தும் தெளியற்க.
(விநாயக புராணம்)

இதனை ஈண்டுச் சிந்தித்துக் கொள்ள வேண்டும்.

முன்பு குணம் குற்றங்களைக் கூர்ந்து அறிந்து கொள்க என்றார்; இதில், பெருமை சிறுமைகளைத் தேர்ந்து தெளிந்து நல்லவரைச் சேர்க என்கின்றார்.

தன்னைப் பெரியவனாக உயர்த்திப் பிறர்க்கும் இனிமை பயந்து வருகிற தன்மைகளை யுடையவன் பெருந்தகையாளனாய் விளங்குகிறான். தன்னைச் சின்னவனாக்கி இன்னல் புரியும் இயல்புகளையுடையவன் சிறியவனா யிழிகிறான். சிறுமையாளனைத் துணைக்கொண்டால் இருமையும் சிறுமையாம். அவனை அருகே மருவலாகாது.

பொற்கலத் தூட்டிப் புறந்தரினும் நாய்பிறர்
எச்சிற் கிமையாது பார்த்திருக்கும்—அச்சீர்
பெருமை யுடைத்தாக் கொளினும்கீழ் செய்யும்
கருமங்கள் வேறு படும். (நாலடி 345)

பொன் கலத்தில் நல்ல உணவுகள் ஊட்டி நாயைப் போற்றி வரினும் அது பிறர் எச்சிலை நச்சி நக்க ஓடும்; சிறியரைப் பெருமைப் படுத்தி அரச காரியங்களில் அமர்த்திக் கொண்டாலும் அவர் இழிநசையாளராய் ஈனவழிகளிலேயே இழிந்து உழலுவர் என இது உணர்த்தியுளது, பெருமையாக் கொளினும் கீழ் செய்யும் கருமங்கள் வேறுபடும் என்பது இங்கே கருதி யுணர வுரியது. கீழான சிறியரை மேலோர் சேர லாகாது.

செய்யும் செயல்களே மனிதரை வையம் அறிய விளக்கி விடுகின்றன. தருமகுத்தனும் சானகனும் மருமமாய் இருப்பினும் தம் கருமங்களால் காண நேர்ந்தனர்.

## சரிதம்.

தருமகுத்தன் என்பவன் சந்திரகுல வேந்தனுகிய நந்தன் மைந்தன். நல்ல தன்மைகள் இல்லாதவன். உருவ அழகு பெருகியிருந்தும் இவனிடம் உணர்வொளி அருகியிருந்தது. புலனுகர்வுகளில் ஓடித் தன்னலமே நாடி நயவஞ்சகனுய் இவன் நீடி யிருந்தான். உற்ற துணைவர்களோடு கூடி ஒருநாள் இவன் வேட்டைக்குப் போனுன். காட்டில் நீண்ட தூரம் போனமையால் இடையே துணைவரைப் பிரிந்தான்; தயங்கித் திரிந்தான். பகல் மறைந்தது; இரவு வந்தது; வரவே அங்கு ஓர் ஆலமரத்தை அடைந்தான். புலி முதலிய கொடிய மிருகங்களுக்கு அஞ்சி அதில் ஏறி ஒரு பெரிய கிளையில் தங்கியிருந்தான். சிறிது நேரத்தில் ஒரு வேடன் ஓடி வந்து அந்த மரத்தில் ஏறினுன். கரடி முகமும் மனித உருவமும் உடையவன்; சானகன் என்னும் பேரினன். பெரிய சிங்கம் ஒன்று தன்னைக்கொல்லவந்தமையால் அதற்குத் தப்பி அங்கே வந்து அவன் தங்க நேர்ந்தான். அவனைக் கண்டதும் இவன் அஞ்சி நடுங்கினுன். “அஞ்சாதே !

நான் ஒரு வனசரன்; உனக்கு யாதும் இடர் செய்யேன்; என்னைத் துரத்தி வந்த சிங்கம் இதோ மரத்தடியில் நிற்கிறது; இரவு கழிந்தால் அது போய்விடும்; அது வரையில் நாம் இருவரும் இங்கே தங்கியிருக்கலாம்" என்று அவன் நயமாய்ச் சொன்னன். இவன் பயம் நீங்கி யிருந்தான். கீழே நின்ற சிங்கம் நெடுநேரம் ஆகியும் போகவில்லை. பத்திரன் என்னும் கந்தருவனே கவுதம முனிவர் சாபத்தால் அந்த உருவை அடைந்து வந்துள்ளமையால் பேசுதல் முதலிய உணர்வு நலன்கள் அம்மடங்கலிடம் மருவியிருந்தன. நடுநிசி யடைந்ததும் சிறிது கண்ணயர்ந்து இவன் உறங்கினன். சிங்கம் மேலே பார்த்தது. "அவன் மிகவும் பொல்லாதவன்; அவனைக் கீழே தள்ளிவிடு; நான் போய் விடுகிறேன்" என்று அந்த வேடனை நோக்கி அது கூறியது. அதற்கு அவன் இசையவில்லை; "நம்பினவனுக்கு மோசம் செய்வது நீசம்; நான் நாசமடைய நேர்ந்தாலும் அந்த நீச வேலையைச் செய்யேன்" என்று அவன் நேர்மையாயிருந்தான். பிறகு இரவு இறுதியில் அவன் உறங்க நேர்ந்தான். இவன் விழித்திருந்தான். சிங்கம் இவனை நோக்கி "ஏ! நீ ஒரு அரசகுமாரன்; அவன் வேடன்; அவனோடு கூடியிராதே; அவனைக் கீழே தள்ளு" என்று மெல்ல உரைத்தது. உடனே இவன் அவனைக் கீழே தள்ளி விட்டான்; விடவே அரியேறு அவ்வேடனைப் பரிவோடு பார்த்துப் பாராட்டியது; இவனைக் கொடிய படுபாதகன் என்று எள்ளி யிகழ்ந்து போயது. தம்முடைய செயல்களே மனிதனுடைய உயர்வு தாழ்வுகளை உணர்த்துகின்றன என்பதை இந்த இருவரும் அன்று உணர்த்தி நின்றார். பெருமைக்கும் சிறுமைக்கும் கருமமே கட்டளைக் கல் என்பதை இவரிடம் உலகம் கண்டு தெளிந்தது. விரிவை சேது புராணத்தில் காண்க.

மதிமரபில் உயர்குடியில் பிறந்திருந்தும்
மதிகெட்டு மாட்சி யின்றிப்
பதிதனய்த் தருமகுத்தன் தன்செயலால்
பழிபட்டான்; படர்ந்த காட்டில்

வதிசரனும் மதிமிகுந்து வடுவஞ்சி
மாண்பமைந்து மகிமை பெற்றான்;
அதிமேன்மை கீழ்மையெலாம் அவரவர்தம்
செயல்வழியே அமையும் அம்மா!

**செய்யும் செயலே சிறுமை பெருமைகளை**
**ஐயமறக் காட்டும் அளந்து.**

*ஆளை வினையால் அறி.*

---

506 சென்றுநின்ற நீலியைமுன் தேர்ந்தார் பழியடைந்து
குன்றிநொந்தார் பின்பேன் குமரேசா—ஒன்றியகேள்
**அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்**
**பற்றிலர் நாணார் பழி.** (சா)

இ-ள்

குமரேசா! நிலையற்ற நீலியை நல்லவள் என்று தேர்ந்தவர் பின்பு ஏன் அல்லலுழந்து அழிந்தார்? எனின், அற்றாரைத் தேறுதல் ஓம்புக; மற்றவர் பற்று இலர் பழி நாணார் என்க.

*தேறாதவரை இது தேற்றி யுள்ளது.*

ஒழுக்கம் உறவு இல்லாதவரைத் தேறாது விடுக; அவர் பிறர்பால் அன்பு புரியார்; பண்பு படியார்; பழிச் செயல்களுக்கு நாணி ஒடுங்கார்.

அற்றார் என்பது பொருள் அற்ற வறியாரையே பெரும்பாலும் குறித்துவரும். அற்றார் அழிபசிதீர்; அற்றார்க்கு ஒன்று ஈ என்று முன்னும்பின்னும் வந்துள்ளமையால் இந்த உண்மையை உணர்ந்து கொள்கிறோம். ஈண்டு அது எதைக் குறித்துள்ளது? எது அற்றார்? அறிவற்றார்; கல்வி அற்றார்; ஒழுக்கம் அற்றார்; சுற்றம் அற்றார்; பரிவு அற்றார்; பண்பு அற்றார் என இன்னவாறு பலவகை நிலைகளையும் உய்த்துணரவுற்றுளது.

தன்னுடைய காரியங்களை நன்கு கருதிச் செய்யவுரிய அதிகாரியை அரசன் ஆராய்ந்து தேர்ந்து எடுக்குங்கால் அவனுடைய பான்மை மேன்மைகளைக் கூர்ந்து

உணர்ந்த பின்பே உரிமையாய்த் தெளிந்து கொள்கிறன். அவனது தெளிவுக்கு வழிகள் பல உள்ளன; அவற்றுள் சில விழி தெரிய இங்கே வந்திருக்கின்றன.

மேல், சிறுமையுடையாரைச் சேராதே என்றார்: இதில், சீலம் உறவு திண்மை திறமை யில்லாரைத் தேருதே என்கின்றார்.

சுற்றம் சூழ இருந்து குடும்பத்தை நன்கு பாதுகாத்து வந்துள்ள பண்புடையாளரே அரச காரியங்களை ஆராய்ந்து திறமையாய் நடத்த வல்லவராவர்: அத்தகைய வித்தகரையே வேந்தன் தேர்ந்து தெளிந்து கொள்ளவேண்டும். பிறந்த குடும்பத்தையும் பெற்ற சுற்றத்தையும் உற்ற உரிமைகளையும் உறுதி சூழ்ந்து அன்போடு பேணுதவன் சிறந்த அரச காரியத்துக்கு ஆகான் ஆதலால் அவனை யாதும் தேறலாகாது.

சுற்றம் இலரானவர் தம்மைச்
சூழேல்! பழிபாவமும் நாணுர்;
பற்றும் இலராகுவர் விடுக;
பண்பார் தகுநற் குணங்களே
முற்றும் உடையார் இலர் அதனுல்
முனியும் குற்றம் குணமிவற்றைத்
தெற்றென் றுணர்ந்து குணமிகுந்த
செம்மையுடையார் தமைத் தெளிக.

(விநாயக புராணம்)

இதனை ஈண்டு ஓர்ந்து உணர்ந்து கொள்ளவேண்டும்.

விளிந்தாரே போலப் பிறராகி நிற்கும்
முளிந்தாரைத் தஞ்சம் மொழியலோ வேண்டா;
அளிந்தார்கண் ஆயினும் ஆராயா ளுகித்
தெளிந்தான் விளிந்து விடும். (பழமொழி 42)

தன்பால் நேசம் உடையவன்போல் நேர்ந்துவரினும் தன்னைச் சேர்ந்தவரிடம் பாசமும் பண்புமின்றிப் பகையுற்றுச் சினமுற்றிருப்பின் அவனை அரசன் சேர்க்கலாகாது. தகுதி யில்லாதவனை ஆராயாமல் தெளிந்து கொண்டால் அவன் விளிந்தவனுய் அழிந்தான் என்று முன்றுறையரையர் இங்ஙனம் மொழிந்துள்ளார்.

தேறுதல் ஓம்புக=தெளிதலை ஒழிக. சரியாகத் தெரியாமல் யாரையும் தேருதே; மயலான தேறுதல் துயராய் வரும்; ஆதலால் அதில் இருந்து விலகி நயமாய் உன்னைப் பாதுகாத்து கொள்ளுக. தேர்ந்து தெளிவதில் ஆர்ந்த மதியூகம் தோய்ந்து வருவதே நலமாம்.

பற்று=அன்பு; பாசம். பழி=வசை.

அமைந்த குடும்பத்தாரிடம் அன்பும் ஆர்வமும் படிந்துவரும் பண்பாளனே பிறரிடம் பரிவு மருவி யிருப்பன்; பழி யிழிவுகளுக்கு அஞ்சி விலகுவன். அவ்வகையான செவ்வியோனையே எவ்வழியும் தெளிவாய்த் தேறுக; அல்லாதானை யாதும் தேருது விடுக.

ஆராயாமல் தெளியநேரின் அது பெரிய அவலமாம்.
இந்த உண்மை நீலிபால் நேரே தெரிய வந்தது.

### சரிதம்.

இவள் திருவாலங்காட்டிலே வேளாளர் குலத்திலே புரிசைக்கிழான் என்பவனுக்குப் புதல்வியாய்ப் பிறந்தாள். பருவம் எய்திஞள்; பழவினை வயத்தால் அறிவு திரிந்து அனைவரையும் பிரிந்து தனியே அலைந்தாள். பிசாசின் ஆவேசம் இவளிடம் பெருகியிருந்தது. வேண்டியபொழுது வேண்டிய உருவங்களைஎடுத்து யாண்டும் சென்று அல்லல் இழைத்து வந்தாள். வருங்கால் ஒரு நாள் தரிசனன் என்னும் வணிகன் ஒருவன் வாணிகத்தின்பொருட்டு அவ்வழியே வந்தான். அவனுடைய மனைவிபோல் வடிவம்கொண்டு அவனைப் பின் தொடர்ந்தாள். அவன் திரும்பி பார்த்தான்; முதலில் மயங்கிஞன்; பின்பு கலங்கிஞன். பெண் பேய் ஒன்று அப்பக்கங்களில் திரிந்து படர்புரிந்து வருகிறது என்று கேள்வியுற்றிருந்தான் ஆதலால் அழகிய மங்கைபோல் வந்து அவளைக் கண்டதும் கடுகி நடந்தான். பொழுது அடையு முன்னே பழையனூர் என்னும் பதியை அடைந்தான். அவளும் கூடவே புகுந்தாள். அவ்வூர்த் தலைவர்களிடம் முறையிட்டாள்; "பெரியோர்களே! இவர் என் கணவர்; என்னைத் தனியே தள்ளிவிட்டு வேறு ஒருத்தியைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று இப்படி-

வெளியேறி வந்திருக்கிருர்; இவருக்குப் புத்திபோதித்து என்னை வைத்துப் பிழைக்கும்படி செய்தருளுங்கள்'' என்று அவள் வெய்துயிர்த்து மொழிந்தாள். "நல்ல இளமையும் அழகும் உடைய இவள் இருக்கும்பொழுது நீ வேறு ஒருத்தியை மணந்துகொள்ள விரும்புவது தகாது; இவளோடு கூடி வாழுக'' என்று அவர் கூறினர். கூறவே, "ஐயகோ! இது ஒரு மாறுபாடான பேய்; இவள் சொல்லுவதை நம்பாதீர்கள்'' என்று வணிகன் வாதாடினன். "என் கழுத்தில் இந்தத் தாலியைக் கட்டி விட்டுக் கொண்ட மனைவி என்றும் பாராமல் யாதும் கூசாமல் சந்தியில் நிறுத்தி இப்படிக் கேலி பண்ணு கிருரே!'' என்று நீலி கண்ணீர் சொரிந்து அழுதாள். அவளது நிலைமையைக் கண்டதும் அனைவரும் இரங்கி னர்; உண்மை என்றே நம்பினர். ஒரு வீட்டில் அவ் விருவரும் தங்கியிருக்கும்படி பணித்தார். இரவு நடு நிசியில் பெண் உருவமாறிப் பேய் வடிவமாய் நீண்டு அவனைக் கொன்றுவிட்டு இவள் வெளியேறிப் போய் விட்டாள். விடிந்தது; செட்டி இறந்து கிடந்தான். அதைக் கண்டதும் யாவரும் உள்ளம் துடித்துப் பதைத் தார். ஆராயாமல் தேர்ந்ததால் இந்தப் பேரிழவு நேர்ந் ததே! என்று எல்லாரும் அல்லலுழந்து நொந்தார். அன்று மன்றத்தாராய்க் கூடியிருந்த எழுபது பேரும் தீயுள் பாய்ந்து மாய்ந்து போனர்; அற்றூரைத் தேற லாகாது; தேர்ந்தால் பேரழிவு நேர்ந்து விடும் என்பதை உலகம் இவர்பால் அன்று ஓர்ந்து வருந்தி நின்றது.

மாறுகொடு பழையனூர் நீலி செய்த
வஞ்சனையால் வணிகனுயிர் இழப்பத் தாங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்து,செந்தீக்
குழியில்எழு பதுபேரும் முழுகிக் கங்கை
ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்பர்
அண்டமுற நிமிர்ந்தாடும் அடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால்
பிறித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ?

(சேக்கிழார் புராணம் 15)

மேலே குறித்த சரிதத்தை இதுவும் விளக்கியுள்ளது.

**நல்ல இனமும் நயமும் இலாதவரை**
**ஒல்லை உறுமல் ஒழி.**

தெளிவு அற்றவரைத் தேருதே.

---

507 வென்றி மித்ரசகனேன் விந்தமணைத் தேர்ந்ததனுல்
குன்றி யிழிந்தான் குமரேசா—ஒன்றிநின்ற
காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாம் தரும். (எ)

இ-ள்.

குமரேசா! அறியாத விந்தமணைத் தேர்ந்துகொண்ட மித்திரசகன் ஏன் அல்லுற்று இழிந்தான்? எனின், காதன்மை கந்தா அறிவு அறியார்த் தேறுதல் பேதைமை எல்லாம் தரும் என்க.

உரிய அறிவு இல்லாதவரை ஒருவுக என்கிறது.

அறிய வுரியன அறியாதவரை அன்புரிமையால் அரசன் தேர்ந்து கொள்ளின் அது மடமைகள் எல்லாம் தந்து விடும்.

காதல்=அன்பு; பிரியம். கந்து=பற்றுக்கோடு.

கருமங்களைச் செய்தற்கு உரிய மருமங்களை எல்லாம் நன்கு அறிந்த அறிவாளரே ஆட்சித் துணைக்கு உரிமையாளராவர்; அவரையே அரசன் தெரிந்து தெளிந்து கொள்ள வேண்டும். அல்லாதவரைக் கொள்ளலாகாது. கொண்டால் அல்லல்களே யாம்.

தன் உறவினன்; தனக்கு உரியவன்; தன்பால் அன்புள்ளவன் என இன்னவாறு மன்னனுக்குப் பலர் மருவியிருப்பர். காரியத் துறைகளை அறியாராயின், அவர்க்கு வேறுவகைகளில் உதவிபுரிந்து வரவேண்டுமே யன்றி வினையாளராக அவரைச் சேர்க்கலாகாது. சேர்த்துக்கொண்டால் செயல்வகை தெரியாத அவரால் காரியங்கள் கெட நேரும். கெடவே அறிவிலிகளால் நேர்ந்த

அவகேடுகளை நினைந்து அறிவாளிகள் வருந்துவர். தேர்ந்து தெளியாத தனது மடமையால் விளைந்த பிழைகளை எண்ணி மன்னனும் இன்னலுழந்து இனைந்து மறுகுவன் ஆதலால் பேதைமை எல்லாம் தரும் என்றார்.

அறிவு அறியார் என்றது காரியங்களைச் செய்ய வுரிய அறிவுகள் நன்கு தெரியாதவரை. தேர்ந்த அறிவுடையாரையே தேச காரியங்களில் நியமிக்கவேண்டும்.

தெற்ற அறிவுடையார்க் கல்லால் திறனில்லா
முற்றலை நாடிக் கருமம் செயவையார்;
கற்றென் றறிந்து கசடற்ற காலையும்
மற்றதன் பால்தேம்பல் நன்று. (பழமொழி 373)

தெளிந்த அறிவுடையாரையே தேர்ந்து எடுத்துக் கருமம் செய்ய வைப்பர்; அறிவில்லாரை வைத்துக் கொள்ளார். கற்று அறிந்திருந்தாலும் குற்றம் உடையாரைக் கூடாமல் இருப்பது நல்லது என்னும் இது இங்கே கூர்ந்து அறிந்து கொள்ள வுரியது.

வினைக்குரிய அறிஞரைத் திறந்தெரிந்து தெளிந்து கொள்ளுவதே மேதைமையாம்; அறியாரைத் தேறுவது பேதைமையாய்ப் பிழைபடும்; தன் கடமையைக் கருதிச் செய்யாத மடையன் என்று வையமும் அவனை வையும்.

எவருடைய நிலைகளையும் தவருமல் தெளியவுரிய அரசன் எவ்வழியும் தெளிவுடையனுயிருக்க வேண்டும். காமக்களிப்பு மிகின் நேமத் தெளிவு நிலை குலையநேரும்.

காதல் ஆகிய இருளால் மயங்கிய பொழுதுதான் பேதைகளைப் பிழையாய்ச் சேர்க்க நேர்வன் என்பது காதன்மை கந்தா என்னும் குறிப்பு மொழிகளால் கூர்ந்து உணர வந்தது.

பல்லாயிரக் கணக்காய் எங்கும் பரந்து விரிந்துள்ள மக்களைப் பாதுகாத்து நாட்டை நன்கு புரக்கவல்ல வேந்தன் எவ்வழியும் செவ்வியனு யிருக்க வேண்டும். மக்களுக்குத் தாய் போல மாந்தருக்கு வேந்தன் உளன்.

தீயூட்டித் தாம் உண்ணும் செய்தவத்தோர் ஆனினங்கள்
நோயூட்டு காயம் இகழ்ந்தியற்றும் நோன்பினோர்,
வேயூட்டு தோளார் விருத்தர்சிறு பாலர்தமைத்
தாயூட்டிப் போற்றுதல்போல் தார்வேந்தன் காக்குமால். (1)

தேவர் நிலைகடவார்; மேலோர் திறம்பிழையார்;
நாவின் இரண்டுரையார்; நன்கல்லவை புரியார்;
காவல் முறைதிறம்பார்; காமச் செயல்பெருக்கார்;
பூவலயம் காவல் புரியும் புரவலரே. (2)

(பிரமோத்தரகாண்டம்)

அரசருடைய பாதுகாப்பு முறைமைகளையும் நிலைமை நீர்மைகளையும் ஈண்டு அறிந்து கொள்கின்றோம்.

இத்தகைய பொறுப்பிலுள்ளவர்கள் பொறுப்பற்றவர்களைத் தொழிலில் நியமிக்கலாகாது. தக்கவர்களையே தகுதியாய்த் தேர்ந்து தெளிந்து கொள்ள வேண்டும்.

அறிவில்லாதவரை ஆர்வத்தால் சேர்த்தால் அது பெரிய அவலமாய்ப் பெருங்கேடுகளை விளைத்து விடும்.

இவ்வுண்மை மித்திரசகன்பால் தெரிய வந்தது.

## சரிதம்.

இவன் சூரிய குலத்து வேந்தன். சுதாசன் என்னும் மன்னனுடைய அருமைத் திருமகன். அரிய பல குண நலன்கள் அமைந்தவன். பெரிய போர் வீரன்; பெருங் கொடையாளன். சிறந்த மாதவர்களும் இவனுடைய பெருந் தகைமைகளை அறிந்து வியந்து வந்தனர்.

சுதாசன் என்பவன் அன்பினில் ஈன்ற அத் தோன்றல்
பதார விந்தம்வந் திறைஞ்சவெம் பகைஎனும் இருளுக்கு
உதாச னன்தனை நிகர்தரு மானவேல் உழவன்
மதாச லத்தினன் மித்திர சகன்எனும் மன்னன். (1)

உரைத்த மன்னவன் உவரிசூழ் உலகொரு புயத்தில்
பரித்து வண்டினம் காமரம் பாடிமட் டருந்த
விரித்த கிங்கிணி வாய்மலர் வேரியந் தொடையல்
தரித்த நல்லெழில் மதயந்தி தனைமணந் துவந்தான். (2)

(பாகவதம் 9-7)

சுகமுனிவர் இவ்வாறு இவனைக் குறித்துப் புகழ்ந்திருக்கிறார். அழகிலும் அறிவிலும் சிறந்த தனது அருமை மனைவியோடு அமர்ந்து இனிய போகங்களை நுகர்ந்து இவன் அரசு புரிந்து வந்தான். வருங்கால் விந்தமன் என்னும் பேருடைய ஒரு விந்தையான மனிதன் இவனிடம் வந்து சேர்ந்தான். அவன் வஞ்ச நெஞ்சமும் சாதுரிய சாகசங்களும் உடையவன். பேசுவதில் சதுரன். தொழில் முறைகளையும் அரச காரியங்களையும் யாதும் அறியாத அவனுடைய வாய்மொழிகளைக்கேட்டு மயங்கி இவன் அவன் மீது பிரியம் மீதூர்ந்து பந்தி விசாரணைகளைக் கவனித்து வரும்படி பணித்தான். அருந்தவர்களுக்கு ஒருமுறை இவன் விருந்து புரிந்தான். அதில் புலையுணவை அவன் கலந்து வைத்தான். முனிவர் தெரிந்தார்; முனிந்து எழுந்தார்; நிலைமை யாதும் தெரியாத இந்த மடையனை மடமையாய்ச் சேர்த்து எங்கள் புனித நிலையைக் கெடுத்து விட்டாயே! என்று கடுத்து வைதார். அதனால் இவன் பரிந்து வருந்தினான்; படுதுயரடைந்தான். மூடனால் நேர்ந்த பீடைகள் என்று நாடும் நகரமும் வைதன. அறிவு அறியாரைத் தேறுதல் பேதைமை எல்லாம் தரும் என்பதை யாவரும் இவன்பால் தெரிந்து தெளிந்தனர்.

> தேர்ந்த தொழிலறிவு தேருனைத் தேறினே
> ஆர்ந்த துயரமே யாம்.

வினையில் தேருதானை வீணே தேருதே.

---

508 கேதமனைத் தேர்ந்ததனால் கேமதரன் பின்பிழிந்து
கோதடைந்தான் என்னே குமரேசா—ஆதலினால்
தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும். (அ)

இ-ள்.

குமரேசா! தேராமல் தெளிந்த கேமதரன் பின்பு ஏன் நீங்காத துன்பங்களை அடைந்தான்? எனின், பிறனைத் தேரான் தெளிந்தான் வழிமுறை தீரா இடும்பை தரும் என்க. இடும்பை = கொடுந் துன்பம்.

பிழையான தெளிவு பீழையாம் என்கிறது.

அயலானை ஆராயாமல் தெளிந்த அரசன் தனது சந்ததிகட்கு நீங்காத துன்பங்களைத் தந்தவனுவான்.

பிறன் என்றது புதிதாய் வேலைக்கு வந்தவனை.

தனது மரபு உறவு பழக்கங்களில் இல்லாத ஒருவன் அரச காரியங்களை ஆற்றுவதாக வரின் அவனை அரசன் மிகவும் கவனித்து ஆராயவேண்டும்; அவனது பிறப்பு இருப்பு பயிற்சி குணம் முதலியவைகளைக் கூர்ந்து விசாரித்துப் பலவகையிலும் ஆய்ந்து நல்லவனு? அல்லவனு? என்று கூர்ந்து தேர்ந்து தெளிய வேண்டும்; தெளியாமல் எதையும் செய்யலாகாது.

தேரான் = ஆராயாமல்; எதிர்மறை முற்று எச்சமாய் நின்றது. தேர்பவனே தெளிய வுரியவனுகிருன்.

தேர்தலும் தெளிதலும் நல்ல அறிவின் பலன்கள்; அவை வழுவின்றி வரின் எவ்வழியும் நன்மையாம்; வழுவுறநேரின் யாண்டும் தீமையாய் நீண்டு வரும். தேராமையும் தெளியாமையும் அரசனுக்கு இழிவாம் ஆதலால் தேர்ந்து தெளிதல், அவனுடைய குலமுறைகளுள் தலைமையான கடமையாய் நன்கு மருவியுளது.

தன்னை நாடிவந்த விபீடணனை இராமன் உடனே சேர்த்துக் கொள்ளவில்லை; பலவும் கூர்ந்து சிந்தித்தான்; சுக்கிரீவன் சாம்பவன் நீலன் அனுமான் முதலிய மதிமான்களோடு உசாவி ஓர்ந்து ஆராய்ந்தான். அவரவருடைய கருத்துக்களைத் தெளிவா எடுத்து உரைத்தனர்.

**தெரிந்து தெளிதல்** என்னும் இந்த அதிகாரம் முழுவதுக்கும் ஒரு சிறந்த விரிவுரைபோல் அவை விரிந்து வந்துள்ளன. இறுதியில் மாருதி கூறியவற்றுள் ஒரு சிறு பகுதியை மட்டும் அயலே காண வருகின்றேம்.

அனுமன் அறிவுரை.

வண்டுளர் அலங்கலாய்! வஞ்சர் வாள்முகம்
கண்டதோர் பொழுதினில் தெரியும்; கைதவம்
உண்டெனின் அஃதவர்க்கு ஒளிக்க ஒண்ணுமோ?
விண்டவர் பலபகல் மருவி வீழ்வரோ? (1)

உள்ளத்தின் உள்ளதை உரையின் முந்துற
மெள்ளத்தம் முகங்களே விளம்பும்; ஆதலால்
கள்ளத்தின் விளைவெலாம் கருத்திலா இருட்
பள்ளத்தின் அன்றியே வெளியிற் பல்குமோ? (2)

கொல்லுமின்! இவனை என்று அரக்கன் கூறிய
எல்லையில் தூதரை எறிதல் என்பது
புல்லிது; பழியொடும் புணரும்; போர்த் தொழில்
வெல்லலாம் பின்னை என்று இடை விலக்கினன். (3)

மாதரைக் கோறலும், மறுத்து நீங்கிய
ஆதரைக் கோறலும், அழிவு செய்யினும்
தூதரைக் கோறலும், தூய்தன் றும்என
ஏதுவில் சிறந்தன எடுத்துக் காட்டினன். (4)

எல்லியில் யான்இவன் இரண மாளிகை
செல்லிய போதினும் திரிந்த போதினும்
நல்லன நிமித்தங்கள் நனிந யந்துள
அல்லதும் உண்டுநான் அறிந்தது ஆழியாய்! (5)

நிந்தனை நறவமும் நெறியில் ஊன்களும்
தந்தன கண்டிலென்; தரும தானமும்
வந்தனை நீதியும் பிறவும் மாண்பமைந்து
அந்தணர் இல்எனப் பொலிந்தது ஆழியாய்! (6)

(இராமா, விபீடணன்)

அதிசய மதிமானை அனுமான் இராமபிரானை நோக்கி இவ்வாறு பேசியிருக்கிறான். மனிதருடைய இயல்புகளையும் உள்ள நிலைகளையும் உரை செயல்களையும் முறையே விளக்கி நேரே தான் கண்ட அனுபவ வகைகளையும் துலக்கி ஈண்டு வந்துள்ளவன் நல்லவனே என்பதை நயமாய்க் காட்டியுள்ளான். கவிகளில் மருவியுள்ள பொருள் நயங்களையும் கருத்துக்களையும் குறிப்புக்களையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவேண்டும்.

உற்ற துணைவர்களுடைய உறுதி மொழிகளைக் கேட்டுத் தானும் உய்த்துணர்ந்தபின்பே அக்கோமகன் வீடணனைச் சேர்க்க நேர்ந்துள்ளான். தேர்ந்து தெளிவது மாந்தர் இயல்பு என்பதை அவ்வேந்தர் பிரான் யாண்டும் நன்கு விளக்கி நலம் புரிந்து வந்துள்ளான்.

வழிமுறை=பின்வரும் சந்ததி. தலைமுறை என்பது முன்பு சென்றது ஆதலால் அதன் பின்பு முறையே தொடர்ந்து வருவது வழிமுறை என நேர்ந்தது.

பிறனை வழிமுறையே தேர்ந்து தெளியாதவன் தனது வழிமுறைக்கு ஒழியாத பழியையும் அழி துயரங்களையும் ஒருங்கே விளைத்தவனாகின்றான்.

அறியாத ஒருவனை ஆராயாமல் சேர்த்தால் காரியக் கேடுகளாம்; ஆகவே அரசுநிலை குலையும்; பகைவர் புகுவர்; படுதுயர்கள் விளையும்; வழிவழியே அழிவாம் ஆதலால் **வழிமுறை தீரா இடும்பை தரும்** என்றார்.

நன்றறியாத் தீயோர்க் கிடம்கொடுத்த நல்லோர்க்கும்
துன்று கிளைக்கும் துயர்சேரும்—குன்றிடத்தில்
பின்னிரவில் வந்தகரும் பிள்ளைக் கிடம்கொடுத்த
அன்னமுதல் பட்ட துபோ லாம். (நீதிசாரம் 74)

இனிய மலைச்சாரலில் தன்கிளையுடன் அரச அன்னம் இனிது வாழ்ந்து வந்தது. ஒருநாள் இரவு மழையில் நனைந்து காகம் ஒன்று அங்கே மறுகி வந்து நின்றது. அதற்கு இரங்கி அன்னம் இடம் கொடுத்தது. மறுநாள் காலையில் அது பறந்து வெளியே போயது. அதன் மூலம் ஒரு வனவேடன் அந்த அழகிய பறவையின் இருப்பிடத்தை அறிந்தான்; கரவராய் வந்து யாவும் பிடித்துப் போனான். தீய ஒருவனுக்கு இடம் தந்தால் தூய பெரிய அரசகுலம் சந்ததியோடு கெடும் என்பதை இந்தச் சரிதம் விளக்கியுள்ளது. கரும்பிள்ளை=காக்கை.

தன் மரபும் ஆட்சியும் மாட்சியாய் வளர்ந்து வர வேண்டுமானால் அந்த வேந்தன் வினையாளரைத் தேர்ந்து தெளிவதில் தேர்ச்சியடைந்து வரவேண்டும்.

தெளியாதவன் வழிமுறை அழிதுயரமாய் இழிவுற நேரும்.

இது கேமதரன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் பரிதி மரபினன். வனதரன் என்னும் அரசனுடைய அருமைப் புதல்வன். பருவம் எய்தியதும்

பெரிய அரசுரிமையை இவன் பேண நேர்ந்தான். மதனவதி என்னும் தனது அழகிய மனைவியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து ஆட்சியை மாட்சியாய் நடத்தி வந்தான். இனிய பல இயல்புகள் இவன்பால் இயல்பாக அமைந்திருந்தன. கல்வியறிவும் நல்ல பண்பும் உடையனுய் எல்லார்க்கும் இதம் புரிந்து எவ் வழியும் செவ்வையாய் இவன் அரசு புரிந்து வருங்கால் **கேதமன்** என்னும் பேருடைய தீயவன் ஒருநாள் இவ னிடம் வந்தான். உருவப்பொலிவும் வஞ்சகச் சூழ்ச்சி யும் வாய்ச்சாலமுமுடைய அவனுடைய வார்த்தைகளைக் கேட்டு வியந்து அவன்மீது இவன் பிரியம் கொண்டான். மறுபுல மன்னரால் மருமமாய் உய்த்த அவனை யாதும் ஆய்ந்து அறியாமல் இவன் தேர்ந்து கொள்ளவே அரசி யலுள் அவன் புகுந்து கொண்டான். வினைக்கு உரியனுய் நின்று பின்பு அமைச்சுரிமை பூண்டான். அரசனிடம் மாத்திரம் அமைதி யுடையனுய் நடித்துக் குடிகளுக்கு நெடிய துயர் விளைத்தான். யாவரும் வருந்தி அரசை நொந்தனர். உரிய சமையம் நோக்கி நின்ற பகைவர் ஊக்கி எழுந்தனர். விதர்ப்ப தேசத்து வேந்தனுகிய உக்கிரசேனன் இவன்மேல் படை எடுத்து வந்தான். போரில் வென்று யாவும் அவன் கவர்ந்து கொண்டான். அரச திருவை இழந்து இவன் பரிதாபமாய் ஒழிந்தான். பின்பு, இவனுடைய சந்ததிகளும் நொந்து தவித்தனர். தேரான் பிறனைத் தெளிந்தவன் வழிமுறை தீரா இடும் பையுறும் என்பதை இவன் குடும்பம் விளக்கி நின்றது.

**நாடி உணராமல் நண்புகொளின் பின்பதனுல்**
**கோடிதுயர் கூடி வரும்.**

தேராமல் எவனையும் தெளியாதே.

---

509 தேர்ந்த பிரமதத்தன் சேர்ந்தவர்பின் செய்வினையைக்
கூர்ந்துணர்ந்தான் என்னே குமரேசா—சார்ந்தென்றும்
**தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்**
**தேறுக தேறும் பொருள்.** (கூ)

இ—ள்.

குமரேசா! அறிஞரை ஆய்ந்து தேர்ந்த பிரம

தத்தன் வினைகளையும் ஏன் விரைந்து உணர்ந்தான்? எனின், யாரையும் தேராது தேறற்க; தேர்ந்தபின் தேறும் பொருள் தேறுக என்க.

தேறும் வகைகள் தெரிய வந்தன.

எவரையும் ஆராயாமல் தெளியாதே; தெளிந்து கொண்ட பின் அவர் செய்ய வுரிய வினைகளைத் தெளிவாக அறிந்து உரிமையுடன் வழங்கி யருள்.

யாரையும் என்றது பலரையும் பலவகை நிலையினரையும் கருத வந்தது. தனது உறவினர், தனக்கு உரியவர், கற்றவர், குடிப்பிறப்பு குணச்சிறப்பு அழகு ஆற்றல் முதலிய மேன்மைகள் உற்றவர் எவர் ஆயினும் அவருடைய உள்ளப் பான்மைகளை ஆராய்ந்து அறிந்தே அரசன் தேர்ந்து தெளிந்து கொள்ளவேண்டும்.

முன், பிறனைத் தேருதே என்றார்; இதில், யாரையும் தேருதே; கூர்ந்து ஆராய்ந்தே தேறுக என்கின்றார்.

ஆராய்ந்து தேறுவதில் அரசனுடைய திறமையும் சீர்மையும் சிறந்து வருகின்றன. உள்ளம் தூயராய் நல்ல தகுதி வாய்ந்திருப்பவரை ஓர்ந்து தேர்ந்துகொள்ள வேண்டுமேயன்றி உற்ற உறவினர் உரிய நண்பர் பிரியமானவர் என வாரம் பற்றி யாரையும் தேறலாகாது.

சுற்றத்தார் நட்டார் எனச்சென்று ஒருவரை
அற்றத்தால் தேறுர் அறிவுடையார்—கொற்றப்புள்
ஊர்ந்துலகம் தாவிய அண்ணலே யாயினும்
சீர்ந்தது செய்யாதார் இல். (பழமொழி 67)

சிறந்த பொருள் வரவைக் கண்டால் எவரும் மனம் திரிந்து விழைந்து கொள்வர். திருமாலே ஆயினும் அதில் பெருமால் உறுவர்; அரச காரியம் செல்வச் செழிப்புள்ளது ஆதலால் நெஞ்சம் தூய நெறியுடையாரையே அதில் அதிகாரியா அமைத்தல் வேண்டும்; கிளைஞர், நேசர் என்று பாச பந்தத்தால் எவரையும் சேர்க்கலாகாது என இங்ஙனம் இது குறித்துள்ளது.

முதலில் ஆளை நன்கு தேர்ந்து தெளிந்துகொள்; பின்பு அவன் செய்யவுரிய கருமத்தைக் கருதியுணர்ந்து உரிமையுடன் அவனிடம் நேரே உதவி விடுக.

உற்ற ஆளையும், உரிய ஆள்வினையையும் சரியாகத் தேர்ந்து கொளின் அந்த அரசு • எந்த வகையிலும் சிறந்து எவ்வழியும் உயர்ந்து விளங்கி வரும்.

தக்க கருமத் துணைகள் அமையின் அவை மிக்க தருமத் துணைகளாய் ஆட்சிக்கு மாட்சி புரிந்து வரும்.

மறந்தானும் தாம்உடைய தாம்போற்றின் அல்லால்
சிறந்தார் தமர்என்று தேற்றார்கை வையார்;
கறங்குநீர் கல்அலைக்கும் கானலம் சேர்ப்ப!
இறந்தது பேர்த்தறிவார் இல். (பழமொழி 43)

தெளிவாகத் தேர்ந்து கொள்ளாதவரிடம் தமது உடைமையை வைக்கலாகாதுஎன இதுஉணர்த்தியுளது.

தக்கவரைத் தேர்ந்து தகுதியான வினைகளை ஓர்ந்து நடத்துபவன் வேந்தருள் வேந்தனாய் விளங்கி வருவன். இது பிரமதத்தன்பால் தெரிய வந்தது.

### சரிதம்.

இவன் பாஞ்சால தேசத்து வேந்தன். நல்ல குண நீர்மைகள் உடையவன். அரிய பல கலைகளை நன்கு பயின்று தெளிந்தவன். பறவை விலங்கு ஊர்வன நீர் வாழ்வன முதலிய பிராணிகளின் இயல்புகளை உயர் வாயுணர்ந்தவன். உலக நிலைகளையும் உயிர்பரங்களின் உறவுரிமைகளையும் உணர்ந்து தெளிந்து உறுதி நலன் களைக் கருதி வந்தவன். பெருந்திருவுடையனா யிருந்தும் யாவும் துறந்த துறவிகளையும் முனிவர்களையும் தொழுது வணங்கி அவருடைய அருள் மொழிகளைக் கேட்டுத் தெருள் மிகுந்து தெளிந்து சிறந்து நின்றான்.

மனத்தினில் பாவமே வைத்து மாண்பினர்
எனத்தவம் இயற்றுவோர் இழைத்த மாதவம்
தினைத்துணை யாயினும் பலத்தைச் சேர்ந்திடா
வினைக்கொடு நிரயத்தில் வீழ்த்தும் என்பரால்.

பொய்யுரைத் திடுவதே புன்மை; போற்றிய
மெய்யுரைத் திடுவதே மேன்மை; மேவினேன்
வையகத் திருந்தவன் சமாதி வானுளோர்
செய்தரு பூச்சியம் சேர்வன் என்பரால். (மச்சபுராணம்)

அட்டக மாதவன் என்னும் மாதவர் ஆதரவோடு கூறிய இவ்வறிவுரைகளைச் சிந்தனைசெய்து எவ்வுயிர்க்கும் இதம் புரிந்து ஆட்சியை மாட்சியாய் நடாத்திவருங்கால் இரண்டு மந்திரிகளை மதிமாண்புடன் இவன் தேர்ந்து எடுத்தான். கண்டரீகன், சுவாலன் என்னும் இந்த இருவரும் அரசியல் முறைகளை நன்கு தெரிந்தவர். அறிவு நலமுடைய இவர் நாட்டுப் புறங்களில் ஒதுங்கி வாழ்ந்து வந்தனர். தன்பால் வந்தவர் எவரையும் தேருமல் இந்த இருவரையும் கூர்ந்து ஓர்ந்து பலவகையிலும் ஆராய்ந்து தனது வினைக்கு உரிமையாளராக இனிது அமைத்துக் கொண்டான். ஆட்சியில் அவர் ஆற்றி வரவேண்டிய கருமங்களையெல்லாம் மருமமாக் கருதியுணர்ந்து அவரிடம் உரிமையுடன் உவந்து விடுத்தான். அரசியல் முறைகள் வரிசையாய் நடந்து வருவதைக் கண்டு இவன் மனமகிழ்ந்து வந்தான். எவரையும் தேர்ந்தே தெளிக; தெளிந்தபின் தேறும் பொருளை நன்கு தேர்ந்து அவர்பால் தருக என்னும் அரச தருமத்தை இவன் உரிமையோடு ஆற்றி வந்ததைப் பார்த்து உலகம் இவனைப் போற்றி வந்தது.

தக்கவரைத் தேர்ந்து தகும்கருமம் ஓர்ந்துதரின்
மிக்கநல மாகும் அரசு.

உரியன உணர்ந்து செய்.

---

510 அன்றசுவத் தாமன்மேல் ஐயுற்ற வேந்தனேன்
குன்றி யிழிந்தான் குமரேசா—நன்றுகத்
தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும். (ய)

இ-ள்.

குமரேசா! மெய்யான அசுவத்தாமன்மேல் ஐயம்

உற்றதால் துரியோதனன் ஏன் துன்பம் உற்ருன்? எனின், தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும் தீரா இடும்பை தரும் என்க.

துயரம் நேராமல் உயர்க என்கின்றது.

ஆராயாமல் ஒருவனைத் தெளிவதும் ஆய்ந்து தெளிந்தவனிடம் ஐயப்படுவதும் நீங்காத நெடிய துன்பங்களைக் கடுமையாய் விளைத்து விடும்.

தேர்தல்=ஆராய்ந்து அறிதல். தேரான் என்றது ஈண்டு எச்சமாய் நின்றது. தேர்ந்து நிச்சயித்துத் தெளிந்து கொள்வது தெளிவு என வந்தது. தெளிவில் வழுவுறநேரின் அது பெரிய இழிவாய்இடர்களே புரியும்.

தெரிந்து தெளிதலே நல்லது; தெரியாமல் தெளிவது எவ்வழியும் தீதாம்; ஆகவே அதுவும் ஈண்டறியவந்தது.

நல்லவன் என்று ஒருவனைத் தேர்ந்து தெளிந்து கொண்ட பின்பு காரியங்களை அவனை நம்பி விடவேண்டும்; நம்பாமல் அவன்மீது அரசன் சந்தேகம் கொண்டால், அவன் உள்ளம் உறுதி குலையும்; ஊக்கம் குன்றும்; பிரியம் பிறழும்; "நாம் எவ்வளவு உண்மையாயுழைத்தாலும் இவர் நம்மை நம்பவில்லை; ஐயுறுகிருர்" என்று வெய்துயிர்த்து அவன் விலக நேர்வன். அதனல் வினைக் கேடுகளாம்; வெய்ய துயரங்கள் விளைந்து வரும்.

தேராமல் ஒருவனைத் தெளிவதும்; தெளிந்தவன் மேல் ஐயம் உறுவதும் தீராத கொடிய துயரங்களாம். ஆதலால் அவற்றை யாண்டும் அரசன் செய்யலாகாது என்பது ஈண்டு நன்கு தெரிய நின்றது.

தேற லார்தமைத் தேறலும்; தேறினர்த்
தேற லாமையும், என்றும்
மாற லாருடன் மலைதலும், மாறுடன்
மருவி வாழ்தலும், முன்னே
ஆற லாதன அரசருக்குஎன்று கொண்டு
அரச நீதியிற் சொன்னர்;
கூற லாதன சொல்வதென்? செல்வதென்?
கொடியவன் அருகென்ருன். (பாரதம்)

துரியோதனன் வஞ்சகமாய்த் தம்மை அழைத்த பொழுது அக்கொடியவன்பால் செல்லலாகாது என்று விசயன் இவ்வாறு தருமரிடம் சொல்லி யிருக்கிறான். நாயனர் வாய்மொழியை நயமாய் நன்கு தழுவி இது விழுமிய அரசநீதி என்று காவியக் கவிஞர் ஈண்டு ஓவிய உருவமாய் உரைத்திருப்பது ஊன்றி உணர வுரியது.

தேராதவனை முதலில் குறித்தது, ஆளைச் சேர்க்கு முன்னரே அவசியம் ஆராய வேண்டியதை அறிந்து கொள்ள; தெளியாத தெளிவால் விளியாத இளிவு விளையும் என்றதனுல் அதன் பழிநிலைகளும் படு புலை களும் அழிதுயர்களும் வெளியாய் நின்றன.

தெளிவிலார் நட்பிற் பகைநன்று; சாதல்
விளியா வருநோயின் நன்ருல்—அளிய
இகழ்தலின் கோறல் இனிதே;மற் றில்ல
புகழ்தலின் வைதலே நன்று. (நாலடி 219)

தெளிவு இலாதார் தொடர்பு பகைமையினும் கொடியது என இது குறித்துளது. அறிவில்லாதவரை யும், தேர்ந்து தெளியாதவரையும் சேர்ந்து கொள்வது தீராத துன்பமாம். தெளிந்தவரை ஐயுறலாகாது.

தேர்ந்து தெளியப் பட்டவன்பால்
தேர்ந்தே வினையும் தகவிடுக்க;
தேர்ந்து தெளியப் பட்டவனைத்
தீது காணுது அயிரற்க;
தேர்ந்து தெளியப் பட்ட அவன்
தீர வினையை விடும்; அதனைத்
தேர்ந்து பகைவர் பிரித்திடுவர்;
தேரான் தெளிவே போல்கேடாம்.
(விநாயக புராணம்)

இதனை ஈண்டு ஓர்ந்து உணர்ந்து கொள்ளவேண்டும்.

தேராதவனிடம் வினையை வைத்தால் காரியம் சீராகாது; தேர்ந்தவனிடம் ஐயுறவுற்ருல் செய்வினை சிதைந்து போம். தேர்ந்து தெளிவதிலும், தெளிந்து

தழுவிக் கொண்டவன்பால் பின்பு நயமா ஒழுகுவதிலும் வேந்தனது விநய விவேகம் வியனுயிருக்க வேண்டும்.

நிறைமதி புரையாது; நிறைமதி புரையாது;
**தோரான் தெளிவு எனும் திருக்குறள் புகுந்தும்**
குறைமதி மனனே! நிறைமதி புரையாது;
உவர்க்கடற் பிறந்தும், குறையுடல் கோடியும்,
கருங்கவைத் தீநாப் பெரும்பொறிப் பகுவாய்த்
தழல்விழிப் பாந்தள் தான் இரை மாந்தியும்,
மிச்சில் உமிழ்ந்தும், மெய்யுள் கறுத்தும்,
தணந்தோர்க்கு எரித்தும், மணந்தோர்க்கு அளித்தும்,
குமுதம் அலர்த்தியும், கமலம் குவித்தும்,
கடல்சூழ் உலகில் மதிநடு விகந்தும்,
பெருமறை கூறி அறைவிதி தோறும்,
முத்தழற்கு உடையோன் முக்கட் கடவுள் என்று
உய்த்திடும் வழக்குக் கிடக்க ஒருகால்
வான்வர நதிக்கரை மருள்மகம் எடுத்த
தீக்குணத் தக்கன் செருக்களம் தன்னுள்
கண்தொறும் விசைத்த கருப்புத் தரளமும்,
வளையுமிழ் ஆரமும், சுரிமுகச் சங்கும்,
வலம்புரிக் கூட்டமும், சலஞ்சலப் புஞ்சமும்,
நந்தின் குழுவும் வயல்வயின் நந்தி
உழவக் கணத்தர் படைவாள் நிறுத்தும்
கூடற்கு இறையோன் குரைகழற் படையால்
ஈரெண் கலையும் பூழிபட்டு உதிர
நிலனெடு தேய்ப்புண்டு அலமந்து அலறியும்,
சிதைந்து நைந்து எழுபழித் தீமதி புரையாது;
முண்டகம் விளர்த்தி முதிராது அலர்ந்தும்,
அமுதம்நின் றுறைந்தும், அறிவறி வித்தும்,
தீக்கதிர் உடலுள் செல்லா திருந்தும்,
திளையாத் தாரைகள் சேரா
முளையா வென்றி இவள்முக மதிக்கே. (கல்லாடம் 62)

இந்தக் கவியைக் கருத்து ஊன்றிக் கவனியுங்கள். சிறிது விரிவா யிருந்தாலும் அரிய பொருள்கள் பல மருவி யுள்ளமையால் பிரியமாய்ப் படித்துக் குறிப்பு நயங்களைக்கூர்ந்து ஓர்ந்துஉணர்ந்துகொள்ளவேண்டும்.

புதிய தலைவியின் முகத்தைத் தலைவன் கண்டான். பூரண சந்திரன்போல் பொலிந்து எழில் மிகுந்துள்ளதே! என்று எண்ணி வியந்தான். அவ்வாறு வியந்தவன் உடனே தன் உள்ளத்தை இகழ்ந்தான். வான வீதியில் உலாவி வருகிற அம் மதி பல இழிவுகள் உடையது; அந்த இழிந்த மதியை இந்த உயர்ந்த முகத்தோடு ஒப்பிடுவது தப்பு. தேர்ந்து தெளிந்தே எதையும் ஓர்ந்து சொல்லவேண்டும். தேராது மொழிவது சீராகாது. சீர்மை சிதையப் பேசுவது சிறுமையாம்.

முத்தழல் வேள்விக்கு முதன்மைக் கருத்தா முக்கட் கடவுள் என்றே வேதங்கள் முழங்கியுள்ளன. இருந்தும் பேதைமையால் மருண்டு தக்கன் கங்கைக் கரையில் ஒரு யாகம் செய்தான்; தேவர்கள் அங்கே வந்து கூடியிருந்தனர். சிவபெருமானை மதியாமல் மதங்கொண்டு செய்தமையால் உக்கிர வீரபத்திரர் உருத்து எழுந்து போய் அவ்வேள்வியை அழித்தார்; தேவர்கள் யாவரும் அடிபட்டு அலறி ஓடினர்; சந்திரன் அவர் காலில் மிதி பட்டுச் சிதைந்து போனான். அவ்வாறு வசையுற்ற மதியா எவ்வழியும் இசை பெற்றுள்ள இவள் முகத்துக்கு நிகர்? யாதும், என்றும், எவ்வாற்றானும் இசையாது என்று தலைவன் இங்ஙனம் இசைத்துள்ளான்.

தேரான் தெளிவு என்னும் திருக்குறளின் பொருளை நன்றாக ஆராய்ந்துள்ள மனமே! இன்று இவ்வாறு நீ தேராமல் கூறினமையால் குறை மதி ஆனாய்! என்று அவன் குறைகூறி யிருக்கிறான். இந்த அருமைத் திருக்குறளைக் கல்லாடர், வில்லிபுத்தூரார், கச்சியப்ப முனிவர், முதலியோர் உள்ளம் உவந்து எடுத்தாண்டிருக்கும் வித்தக நிலைகளை ஈண்டு உய்த்து உணர்ந்து கொள்கிறோம்.

நிறைமதி = கலை நிறைந்த சந்திரன்; புரையாது = ஒப்பாகாது. குறைமதி = தேர்தலில் குறைந்துள்ள அறிவு. பாட்டின் குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளின் ஆர்ந்த பல கருத்துக்களை அறிந்து கொள்ளலாம்.

பாண்டி நாட்டின் வளம், மதுரையம்பதியின் மாண்பு, இங்கே கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரப் பெருமானுடைய திவ்விய மகிமைகள் கலையின் துறைகள் இக்கவியில் கனிந்து சுரந்திருக்கின்றன. கருதிக் காணுங்கள்! அறிவின் சுவைகள் அதிசய இன்பங்களாம். தேர்ந்து தெளிந்தவன்பால் அரசன் ஐயுறவுறின் அது வெய்ய துயரமாய் வரும்.

இவ்வுண்மை அசுவத்தாமன்பால் அறிய வந்தது.

சரிதம்.

இவன் துரோணாச்சாரியுடைய அருமைத் திருமகன். அரிய பெரிய ஆற்றல்கள் உடையவன். அதிசய வில் வீரன். குருகுல வீரர்களுள் பலவகையிலும் இவன் தலை சிறந்து விளங்கி நின்றான். பாரதப்போர் மூண்டால் தன் படைகளுக்கு இவனைத் தலைவனாக்க வேண்டும் என்று துரியோதனன் துணிந்திருந்தான. இவன் சேனாதிபதியாய் நின்றால் பாண்டவர் வெல்வது அரிது என்று கண்ணன் கருதினான்: எவ்வண்ணமாவது இவனைப் பேதித்துப் பிரித்து விடவேண்டும் என்று குறித்திருந்தான். பாண்டவர்க்குத் தூதுவனாய் வந்து துரியோதனன் எதிரே யாவும் பேசி, முடிந்தபின் அரசவையைவிட்டு மாயன் வெளியே வந்தான். அவ்வாறு வருங்கால் அங்கேயிருந்த அசுவத்தாமனைக் கண்சாடைகாட்டி அழைத்தான்; அவனும் வெளியே வந்து நின்றான். "நான் வந்த காரியம் சரியாய் முடியவில்லை; இனி எந்த விதம் முடியுமோ? என்ன நடக்குமோ? ஆண்டவனுக்குத் தான் தெரியும்; போர் மூண்டால் யாவரும் மாண்டு மடிய நேர்வரே! வருந்துகிறேன்" என்று இவ்வாறு கூறிக் கொண்டே தன்விரலணியைக் கழற்றி நயமாய்க் கீழே நழுவ விட்டான்; தரையில் விழுந்த மோதிரத்தைஅசுவத்தாமன் எடுத்துக் கண்ணன் கையில் கொடுத்தான்; அதனை உடனே வாங்காமல் வானத்தைநோக்கிப் "பரிதியைப் பரிவேடம் சூழ்ந்திருக்கிறதே" என்று சூழ்ச்சியோடு சொன்னான்; அவனும் பார்த்தான்; அதன்பின்

மோதிரத்தை வாங்கிக்கொண்டான். இந்த நிகழ்ச்சிகளை உள்ளேயிருந்து பார்த்துக்கொண்டிருந்த துரியோதனன் உள்ளம் மாறினன். "பாண்டவர்க்கே போரில் நான் உதவி புரிவேன்; இது உண்மை" என்று பூமியைத் தொட்டு ஆகாயம் சாட்சியாகக் கண்ணனிடம் கையடித்துக் கொடுத்திருக்கிருன்; இனி இவனை எப்படி நம்புவது? என்று இப்படிச் சந்தேகம் கொண்டு அவன் சிந்தை திரிந்தான். இவனும் பின்பு தன்னை அரசன் நம்பவில்லை என்று வெம்பி ஊக்கம் குன்றி ஒதுங்கியிருந்தான். அதனுல் அவன் அழிதுயரங்கள் அடைந்து நொந்தான், தேர்ந்தான் கண் ஐயுறவு தீரா இடும்பை தரும் என்பது இவன் மூலம் தெளிவாய்த்தெரியநின்றது.

ஆயோ தனத்தில் அடலரியேறு
அனையான் தன்னை இவ்வாறு
மாயோன் உரைத்துத் தன்விரலின்
மணியாழியைமண் ணிடைவீழ்த்தான்;
சேயோன் அதனை எடுத்தவன்தன்
செங்கைக் கொடுக்க வாங்காமல்
தூயோய்! ஊர்கோள் பரிதிதனைச்
சூழ்ந்த தகல்வான் மீதென்றே: (1)

வரித்தா மரைக்கண் திருநெடுமால்
வான்வாய் நோக்க, வரிவிற்கைப்
பரித்தா மாவும் ஆழியுடன்
பரிதி வடிவம் தனைப்பார்த்தான்:
கிரித்தாழ் கவிகைக் கருங்கள்வன்
கிளர்நூல் முனிவன் மைந்தனையும்
பிரித்தான்; அவனும் சூளுற்ருன்;
என்ருர் இருந்த பேரவையோர். (2)

தனிவந் தகலும் தூதனைப்போய்த்
தானே அணுகித் தடஞ்சாப
முனிவன் புதல்வன் மோதிரம் தொட்
டருஞ்சூள் முன்னர் மொழிகின்ருன்;
இனிவந் துறவாய் நின்ருலும்
எங்ஙன் தெளிவது? இவனைனத்

துனிவந் தரசர் முகம்நோக்கிச்
சொன்னான் இடியே றன்னானே. (3)

துளியார் மதுவின் வலம்புரித்தார்த்
துரியோ தனன்தான் சொல்லியதும்,
ஒளியார் அவையில் வாள்வேந்தர்
ஒருவர்க்கு ஒருவர் உரைத்தனவும்,
களியானை அனன் செவிப்படலும்
கலங்கிச் சித்தம் இவர் என்னைத்
தெளியா வண்ணம் பேதித்தான்
திருமால் என்றே சிந்தித்தான். (பாரதம்) (4)

நடந்துள்ள விசித்திர நிகழ்ச்சிகளை இங்கே நாம் வியந்துகாண்கின்றோம். தேர்ந்து தெளிந்தவனிடம் ஐயம் கொள்ளுதல் ஆர்ந்த துன்பங்களாம் என்பதை இந்தச் சரித்திரம் யாவரும் சிந்தை தெளியச் செய்துள்ளது.

**ஓர்ந்து துணையா ஒருவனைக் கொண்டபின்**
**போர்ந்துமா றெண்ணல் பிழை.**

ஆய்ந்து கொண்டவனை ஐயம் கொள்ளாதே.

---

இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

1. அறம் முதலியவற்றால் ஒருவனை ஆய்ந்து தெளி.
2. குடிப்பிறப்பும் குணச்சிறப்பும் உள்ளவனைக்கொள்.
3. அரிய கற்றவரிடமும் சிறிய குற்றம் உண்டு.
4. குணம் நிறைந்துள்ளவனைக் கூர்ந்து தழுவுக.
5. ஒருவனது பெருமைசிறுமைகளை அவன்செயலாலறி.
6. உறவு அற்றவரை உரிமையாக் கொள்ளாதே.
7. அறிவு அற்றவரை ஆதரவா யணையாதே.
8. ஆய்ந்து பாராமல் கொண்டால் அல்லல் உளவாம்.
9. தேர்ந்து தெளியாமல் எவரையும் சேராதே.
10. தேராமல் தெளியாதே; தெளிந்தபின் ஐயுறாதே.

**51-வது தெர்ந்து தெளிதல் முற்றிற்று.**

---

# ஐம்பத்திரண்டாவது அதிகாரம்

## தெரிந்து வினையாடல்

அ∴தாவது தக்கவரைத் தகுதியாய் ஆராய்ந்து கொண்டு உரிய காரியங்களைத் தந்து அவரை அரசன் ஆளும் திறம். ஆட்சிக்கு உரிமையான துணைவராக அறிஞரைத் தெரிந்து தெளிந்து கொண்டபின்பே இது நன்கு நிகழும் ஆதலால் அதன் பின் வைக்கப்பட்டது.

511 அன்றரிசி லாரை அமைச்சாக ஏனரசன்
குன்றுமல் கொண்டான் குமரேசா—நன்றாக
நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும். (க)

இ-ள்.

குமரேசா! அரிசில்கிழாரை ஏன் சேரமன்னன் அமைச்சராக நாடி அமைத்துக் கொண்டான்? எனின், நன்மையும் தீமையும் நாடி நலம் புரிந்த தன்மையான் ஆளப்படும் என்க.

வினையாளின் நிலைமையை இது விளக்கியுளது.

நன்மை தீமைகளை நன்கு ஆராய்ந்து நல்லது செய்து வந்த தன்மையாளனையே வினையாளனாக விழைந்து கொண்டு அரசன் ஆள வேண்டும்.

இராச காரியங்களை உரிமையோடு செய்ய வுரிய தகுதியாளரின் தகைமைகள் வகையாத் தெரிய வந்தன.

நன்மை = தருமநீர்மை. தீமை = பாவப்புன்மை.

மாந்தர் செய்து வருகிற செயல்கள் எல்லாம் நல்லது தீயது என இரு வகைகளில் அடங்குகின்றன. பிற உயிர்கட்கு இதமா யிருப்பது நன்மை; அகிதமா யிருப்பது தீமை.

நன்மை செய்பவன் புண்ணியவானாய் உயர்ந்து எவ்வழியும் இன்பமும் புகழும் எய்தி வருகிறான்.

தீமை செய்பவன் பாபியாய் இழிந்து போகிறான்.

தான் செய்யும் செயல்களின் நலம் தீங்குகளின் படியே நல்லவன் என்றும், தீயவன் என்றும் மனிதன் சொல்லப்படுகிருன். உருவ நிலையில் ஒத்திருப்பினும் செயல் வகைகளால் உயர்வு தாழ்வுகளை மனிதன் யாண்டும் நியமமாய் அடைந்து வருகின்ருன்.

நல்லது கெட்டதுகளைப் பகுத்தறிந்து எவ்வழியும் நலம்புரிந்து வருபவன் சிறந்த மேலோன் ஆகின்ருன். அத்தகைய உத்தமனையே அரசன் உரிமையாய்த் துணைக்கொள்ள வேண்டும் என்பார் **நலம்புரிந்த தன்மையான் ஆளப்படும்** என்ருர். **படும்** என்றது அடிப்பட்ட அரசவழக்கத்தைத் தெளிவா வெளிப்படுத்தி நின்றது.

புரியும் என்னுது புரிந்த என்று இறந்த காலத்தால் கூறியது, நல்ல செயல்களில் பண்டே பழகி வளமையாய்த் தேர்ந்து வந்துள்ள கிழமை தெரிய.

நல்லவும் தீயவும் நாடி நாயகற்கு
எல்லையின் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்;
ஒல்லைவந் துறுவன உற்ற பெற்றியின்
தொல்லை நல் வினைஎன உதவும் சூழ்ச்சியார்.
(இராமா, மந்திரம் 12)

தசரத மன்னனுடைய மந்திரிகளை இந்தவாறு காவியக் கவி காட்டியிருக்கிருர். **நன்மையும் தீமையும் நாடி** என்னும் இக்குறளை உள்ளம்கொண்டே இது உருவாகி வந்துளது. நோய் நீக்கிச் சுகம் ஆக்கும் மருத்துவன் போலவும், எவ்வழியும் இன்பமே நல்கும் நல்வினை போலவும் என்றது, **நலம்புரிந்த தன்மையான்** என்பதற்குத் தெளிவான விரிவுரையாய் ஒளிபுரிந்துள்ளது. உண்மையை ஊன்றி நோக்கி உற்றுள்ள குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

எவ்வகையிலும் அரசனுக்கும் நாட்டுக்கும் இதமே நாடிச் செய்யும் அறிவாற்றலுடையவரே அமைச்சர் ஆதற்கு உரியவர் என்பது இங்கே தெரிய வந்தது.

நல்லவும் தீயவும் நாடிப் பிறருரைக்கும்
நல்ல பிறவும் உணர்வாரைக் கட்டுரையின்

வல்லிதின் நாடி வலிப்பதே புல்லத்தைப்
புல்லம் புறம்புல்லு மாறு. (பழமொழி 104)

தனக்கு வேண்டிய வினையாளரை அரசன் தேர்ந்தெடுக்கும் விதத்தை முன்றுறையரையர் இங்ஙனம் குறித்திருக்கிறார். நாயனார் வாய்மொழியை இதுவும் நயந்து வந்துள்ளது. பொருள் வகைகளைக் கருதியுணர்பவர் உரிய நிலைகளைத் தெரிந்து தெளிந்து கொள்வர்.

விரிந்து பரந்த நிலமண்டலத்தை ஆண்டு வருகிற வேந்தனுக்கு உரிய காரியங்களை உரிமையாய்ச் செய்ய வல்ல கருமவீரர்கள் பலர் வேண்டும் ஆதலால் அவரது நிலைமை நீர்மைகளைப் பலவகையிலும் கூர்ந்து ஆய்ந்து தேர்ந்துகொள்ள அவன் நேர்ந்து நிற்கின்றான்.

தனக்கு நலமாய், நாட்டு மக்களுக்கு இதமாய், வினையாற்றல்களில் வியனான திறமாய் விளங்கி நிற்பவனையே தலைமையாய் அவன் தழுவிக் கொள்கிறான். வினையாளரைத் தேர்ந்து தெளியும் பாங்கு ஈங்கு ஒரு தேர்தல் காட்சியாய் உணர வந்துள்ளது.

வீங்குநீர் உலகம் காக்கும் விழுநுகம் ஒருவ னாலே
தாங்கலாம் தகைமைத் தன்று; தளையவிழ் தயங்கு தார்ச்சீர்ப்
பாங்கலார் பணியச் சூழும் நூல்வலார் பாகம் ஆகப்
பூங்குலாம் அலங்கல் மாலைப் புரவலன் பொறுக்கு மன்றே.
(சூளாமணி, மந்திரம்)

இந்தக் கவியின் பொருளைக் கருத்தூன்றிக் கவனியுங்கள். உலகத்தைக் காக்கும் அரசனுடைய நிலைமை தலைமைகளை இது நன்கு விளக்கியுள்ளது. கல்வியறிவும் நல்ல சூழ்ச்சித்திறனும் வாய்ந்தவர் தனக்கு உறுதித் துணையாக வாய்த்த அளவுதான் அந்த அரசனது ஆட்சி மாட்சியுற்று வரும் என்பது இதில் காட்சியுற வந்தது.

நாட்டை ஆளும் அரசனால் நலமா நாடிக் கொள்ளப் படுபவரது பீடும் பெருமையும் ஈண்டு ஓர்ந்து உணர வந்துள்ளன. நாடுதல் அறிவாற்றலையும், நலம் புரிதல் வினை ஆற்றலையும் விளக்கி நின்றன. நல்ல அறிவுள்ளவரையே அமைச்சராக அரசன் ஆக்கிக் கொள்கிறான்.

இவ்வுண்மை அரிசில்கிழார்பால் அறிய வந்தது.

## சரிதம்.

இவர் அரிசில்கரை என்னும் ஊரில் இருந்தவர். வேளாளர் மரபினர். பல நூல்களையும் நன்கு பயின்று தெளிந்தவர். தெளிந்த புலமையோடு சிறந்த கவிகளை இயற்றும் ஆற்றலும் இவரிடம் ஒருங்கே நிறைந்திருந்தன. சங்கப் புலவருள் ஒருவராய் இவர் விளங்கி இருந்தார். தமிழ்ச் சங்கத்தில் திருக்குறளை நாயனூர் அரங்கேற்றியபொழுது அந்த அருமை நூலை வியந்து பாராட்டி இவர் புகழ்ந்து போற்றினர். அன்று இவர் பாடிய வெண்பா அயலே வருகிறது.

பரந்த பொருள் எல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறும் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால்? (திருவள்ளுவமாலை 13)

அரிய கல்வியறிவும் இனிய சொல்வன்மையும் உடைய இவர் பேகன் முதலிய குறுநில மன்னர்களுக்கு உறுதி நலன்களையுணர்த்தி எல்லார்க்கும் யாண்டும் இதம்புரிந்து வந்தார். நன்மை தீமைகளை நாடியறிந்து எவ்வழியும் செவ்வியராய் நலம்புரிந்து வருகிற இவரது பெருந்தகைமையை அறிந்து பெருஞ்சேரலிரும் பொறை என்னும் சேரமன்னன் இவரை ஆர்வத்துடன் அழைத்து நேரே தனக்கு மதி மந்திரியாகப் பேணிக் கொண்டான். அந்த அரசனுடைய நீதி கொடை வீரங்களை உணர்ந்து உவந்து அவன்மீது பத்துப் பாடல்கள் பாடினர்.

உயிர்போற் றலையே செருவத் தானே;
கொடைபோற் றலையே இரவலர் நடுவண்;
பெரியோர்ப் பேணிச், சிறியோரை அளித்தி;
நின்வயிற் பிரிந்த நல்லிசை கனவினும்
பிறர்நசை அறியா வயங்குசெந் நாவிற்
படியோர்த் தேய்த்த ஆண்மைத் தொடியோர்
தோளிடைக் குழைந்த கோதை மார்ப!
அனைய வளப்பருங் குரையை அதனால்;

நின்னொடு வாரார் தந்நிலத்து ஒழிந்து
கொல்களிற் றியானை எருத்தம் புல்லென
வில்குலை அறுத்துக் கோலின் வாரா
வெல்போர் வேந்தர் முரசுகண் போழ்ந்தவர்
அரசுவா அழைப்பக் கோடறுத்து இயற்றிய
அணங்குடை மரபிற் கட்டில்மேல் இருந்து
தும்பை சான்ற மெய்தயங் குயக்கத்து
நிறம்படு குருதி புறம்படின் அல்லது
மடையெதிர் கொள்ளா அஞ்சுவரு மரபிற்
கடவுள் அயிரையின் நிலைஇக்
கேடில வாக பெரும நின் புகழே.

(பதிற்றுப்பத்து 79)

இன்னவாறு அம்மன்னனுடைய அறிவு ஆண்மை வண்மை திண்மை முதலிய குணநலன்களைப் புகழ்ந்து இவர் பாடியுள்ளார். இதற்கு ஒன்பது நூறாயிரம் பொன்னும் ஒரு சிங்காதனமும் அவ்வரசன் இவருக்குப் பரிசில் வழங்கினன். அரியணை அரசுக்கே உரியது என்று அதை இவர் திருப்பிக் கொடுத்து விட்டார். இவரது பண்பை வியந்து அனைவரும் அன்பு கூர்ந்தனர். நலம் தீங்குகளை நாடியறிந்து யாண்டும் நன்மை புரியும் தன்மையுடையவனே அமைச்சனாக ஆளப்பெறுவான் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து மகிழ்ந்தது.

"மன்பதை காப்ப அறிவுவலி யுறுத்தும்
நன்றறி உள்ளத்துச் சான்றோர்". (அரிசில்கிழார்)

மந்திரிகளுடைய மாட்சிமைகளை இவர் இவ்வாறு குறித்திருக்கிறார். மாந்தரை எங்கும் நன்கு பாதுகாத்து வரும்படி வேந்தருக்கு அறிவு நலன்களை வலியுறுத்திப் போதித்து, எவ்வழியும் **நன்மைகளையே** செவ்வையாக நாடித் தெளிந்துள்ள உள்ளத்தையுடைய **சான்றோர்** என்று அமைச்சரை இவ்வண்ணம் இவர் உணர்த்தி யிருப்பது ஈண்டு ஓர்ந்து சிந்திக்க வுரியது.

**உள்ளத்தில் தூய்மை உணர்வுறுதி வாய்மைநலம் உள்ளவனே நல்ல துணை.**

நலம்புரிபவன் நல்ல வினையாளன்.

512 தெள்ளுபுகழ் அக்குரூரன் தேர்ந்தேன் பெருவளங்கள்
கொள்ளவினை செய்தான் குமரேசா—உள்ளிநின்று
வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
ஆராய்வான் செய்க வினை. (உ)

இ-ள்.

குமரேசா! உறுவதை ஓர்ந்து வளங்களை வளர்த்து அக்குரூரன் ஏன் வினைசெய்து வந்தான்? எனின், வாரி பெருக்கி வளம் படுத்து உற்றவை ஆராய்வான் வினை செய்க என்க.

தொழில்செய்ய உரியவனை இது துலக்கியுளது.

வருவாய்க்கு உரிய வழிகளை விரித்து நிலங்களை வளமுறச் செய்து நேர்ந்துள்ள நிலைமைகளை ஆராய்ந்து அறிய வல்லவன் அரச காரியம் புரிய வுரியவன்.

வாரி=பொருள் பெருகி வருகிற வழி.

வரவையுடையது வாரி என வந்தது.

வாரி பெருகப் பெருகிய காதலை
வாரி சுருங்கச் சுருங்கி விடுதலின்
மாரி பெருகப் பெருகி அறஅறும்
வார்புனல் ஆற்றின் வகையும் புரைப. (வளையாபதி)

புதுப்புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும்
விதுப்பற நாடின்வே றல்ல—புதுப்புனலும்
மாரி யறவே அறுமே; அவர் அன்பும்
வாரி அறவே அறும். (நாலடியார்)

பொருள் வருவாய் உள்ளவரையும் விலைமகளிர் உறவு உரிமையாய்த் தோய்ந்து வரும்; **வாரி** அறின் அவரது வாரமும் அறும் என இவை குறித்துள்ளன. இவற்றுள் **வாரி**யின் பொருளை அறிந்து கொள்கிறோம்.

பொருள் வருவாயை முதலில் குறித்தது, எல்லாப் பெருமைகளுக்கும், ஆட்சியின் மாட்சிக்கும் மூல ஆதாரமாயிருக்கும் அதன் முதன்மை கருதி.

உழவு வாணிகம் ஓவியம் போக்குவரத்து முதலிய தொழில்கள் எங்கும் விரிந்து பரந்திருக்கின்றன. அவை

யாவும் வருவாய்க்கு உரிய துறைகள். தொழில்வரி சுங்கவரி நிலவரி முதலாகப் பலவகை நிலைகளில் பொருள் வருவாயை விரியச்செய்ய வேண்டும் என்பார் **வாரி பெருக்கி** என்றார்.

ஏரி குளம் கூவம் கால்வாய் ஆறு முதலிய நீர் நிலைகளை விரித்து விளைபுலங்களை வளமுறச் செய்து யாண்டும் செழிப்பாக்கி எதையும் செவ்வையாகச் செய்ய வேண்டும் என்பார் **வளம் படுத்து** என்றார்.

கள்வர் குறும்பர் பகைவர் முதலானவர்களால் நாட்டு மக்களுக்கு அல்லல்கள் யாதும் நேராதபடி எங்கும் நாடி ஆராய்ந்து விரைந்து இதம் புரிய வேண்டும் என்பார் **உற்றவை ஆராய்வான்** என்றார். உறுமுன்னரே ஓர்ந்து செய்வதே தேர்ந்த வினையாண்மையாம்.

வேந்தனுடைய காரியங்களைச் செய்ய நேர்ந்தவன் தெளிந்த விவேகியாய்ச் சிறந்த மதியூகியாய் நிறைந்த உறுதி ஊக்கங்களுடையனாய் யாண்டும் ஆக்கம் கருதி இருக்கவேண்டும் என்பது ஈண்டு உணர வந்தது.

நன்மையும் தீமையும் நாடி நலம் புரியும் தன்மையான் அரசுவினைக்குத் தக்கவன் என்று முன்பு குறித்தார்; அந்த நலத்தை இதில் விரித்து விளக்கினார்.

சிறந்த செல்வங்களால் வேந்தன் விளங்கிவர, நீர்வளம் நிலவளங்களால் நாடு செழித்துவர, மனநலம் மதிநலங்களால் உயர்ந்து மாந்தர் எவ்வழியும் சுகமாய் வாழ்ந்துவர ஓர்ந்து தொழில் புரிந்துவருபவனே உயர்ந்த கரும வீரனாய் ஒளி மிகுந்து வருகிறான்.

கருதி ஆராய்ந்து உரிமைகளை ஓர்ந்து உறுதியாய் வினை செய்பவன் அரச காரியத்துக்கு உரியவனாய் வரிசை மிகப் பெறுகிறான்.

இது அக்குரூரன்பால் அறிய வந்தது.

சரிதம்.

இவன் யதுகுலச் செல்வன் ஆன சுவபலகன் புதல்வன். தாய் பெயர் காந்தினி. இவன் சாந்தகுண

சீலன். தனது பெயரியல்புக்கு ஏற்ப எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் உள்ளவனாய் யாண்டும் இவன் இதம் புரிந்து வந்தான். குரூரம் = கொடுமை; அது இல்லாதவன் அக்குரூரன். கல்வியறிவும் நல்ல பண்பும் காரியத்திறனும் சீரிய நீர்மையில் இவனிடம் சிறந்திருந்தமையால் யாவரும் இவனைப் பேரறிவாளன் என்று போற்றி வந்தனர். **சித்திரரதை** என்னும் உத்தமியை மணந்து இவன் சிறந்து வாழ்ந்து வந்தான். இவனுடைய உத்தம குணங்களையும் உறுதியுண்மைகளையும் வினவியறிந்து **உக்கிரசேனன்** என்னும் மன்னன் இவனைத் தனக்கு அமைச்சன் ஆக்கிக்கொண்டான். அரசகாரியங்களை எவ்வழியும் செவ்வையாய்ச் செய்து எங்கும் வளங்களை உளவாக்கிச் செல்வ நிலைகளைப் பெருக்கி எல்லாரும் இன்புற்றுவர இவன் இசைபெற்று வந்தான். இவனுடைய வினைத்திறங்களையும் மனத்தூய்மையையும் உணர்ந்து மகிழ்ந்து கண்ணனும் இவனை உரிமை நண்பனா உவந்துகொண்டு பேரன்பு புரிந்து வந்தான். வேந்தன் வியந்து மகிழ நாட்டு மக்கள் புகழ்ந்து போற்ற நல்லோர்கள் உவந்துவர எல்லார்க்கும் இனியனாய் ஆட்சி வினையை இவன் ஆற்றி வருங்கால் கண்ணன் மன்னனோடு கலந்து ஆலோசித்து இவனைக் குருநாட்டுக்குத் தூதனாக அனுப்ப விரும்பினான். பாண்டுமன்னன் இறந்துபோனமையால் பாண்டவரை **திருதராட்டிரன்** எப்படிப் போற்றி வருகிறான்? என்பதைப்பார்த்து வரும்படி அத்தினபுரிக்கு இவனை அனுப்பியருளினான். இவன் நேரே சென்றான். குருகுல வேந்தனைக் கண்டான். அறிவு நலன்களை உரைத்தான்; ஆக வேண்டியன எல்லாம் முடித்து மீண்டு வந்தான்; நிலைமைகளை எல்லாம் நேரே தெரிய விளக்கினான்.

பெற்ற புதல்வர் போலப் பிள்ளைச் சுரும்பர் பாடும்
பொற்றார் ஐவர் தம்மைப் போற்றிக் கொள்ளல் வேண்டும்;
ஒற்றைத் திகிரி யுருட்டி உலகம் புரப்பாய்! என்னா
வெற்றிக் கதிர்வேல் தடக்கை வேந்தற்குரைத்தல்செய்தேன்

பொதுநின் றுலகம் புரத்தி பொங்கு புகழே அல்லால்
எதுநின் றதுமற் றென்னு இனிய பலவாங்கு இயம்ப
மதுநின் ஞெழுகுந் தாரான் மைந்தர் தம்மேல் காதல்
முதிர்கின் றதனுல் உளத்தில் மொழிசார் கிலதென்
றுரைத்தான். (பாகவதம் 10-20)

அத்தி நகரம் சென்று அரசனைக்கண்டு பாண்டவர் பால் பரிவு கொள்ளும்படி உறுதி நலங்களை உரைத்து இவன் மீண்டு வந்துள்ள நிலைகளை ஈண்டு அறிந்து கொள்ளுகிறோம். இன்னவாறு அரிய காரியங்களைச் செய்து அரசுக்கு வேண்டிய நன்மைகளை யாண்டும் உரிமையாய் ஆற்றி வந்தான். பொருள் வருவாய்களை விரித்துப் புதிய வளங்களை உளவாக்கி எதையும் ஆராய்ந்து எவ்வழியும் கருமங்களை இனிது முடிப்பவனே வேந்தனுக்கு உரிய நல்ல வினையாளன் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

**தேர்ந்த அறிவும் செயல்புரியும் திண்மையும்**
**வேந்து வினையாள் விறல்.**

ஆய்ந்து வினைசெய்க.

---

513. மோசியரை ஆய்முதலோர் முற்றும் தெளிந்தேனே
கூசாமல் கொண்டார் குமரேசா—மாசகன்ற
அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. (௩)

இ-ள்.

குமரேசா ! ஆய் முதலிய அரசர் அனைவரும் மோசியாரை ஏன் உறவாத் தெளிந்த கொண்டார் ? எனின், அன்பு அறிவு தேற்றம் அவா இன்மை இந்நான்கும் நன்கு உடையான் கட்டே தெளிவு என்க.

தெளிய வுரியவனை இது தெரிவிக்கின்றது.

அன்பும் அறிவும் துணிவும் ஆசையின்மையும் ஆகிய இந்நான்கு பண்புகளும் நன்கு உடையானிடமே அரசரது தெளிவு வழிமுறையே உரியது.

தேற்றம்=தெளிவான திடம்; துணிவு. தேர்ந்து தேறி ஓர்ந்து துணிந்து கொண்டது தேற்றம்.

கட்டே=கண்ணதே. பிறரிடம் தெளிவு கொள்ளலாகாது என்பதை ஏகாரம் தெளிவுறுத்தி நின்றது.

**நாணுடையான் கட்டே தெளிவு** என முன்னம் வந்துள்ளதையும் ஈண்டு எண்ணிக் கொள்ள வேண்டும்.

நான்கு நீர்மைகள் பாங்குடன் இங்கே பார்வைக்கு வந்துள்ளன. மானச மருமங்களைத் துருவிநோக்கி உறுதி நலங்களை உணர்த்தி யிருக்கிறார். வேந்துவினையாடலில் விவேகங்கள் விளையாடி வருகின்றன.

அன்பை முன்பு வைத்தது ஏன்? எனின், எல்லா இன்ப நலன்களையும் அருளவல்ல அதன் உரிமை தெரிய என்க.

தன்னைத் துணையாக நம்பினவன்மேல் வினையாளனுக்கு அன்பு இல்லையானால் **விச்சுவ வுருவன்** போல் தன் இச்சைப்படியே ஏதேனும் கேடு விளைப்பன்; அவ்வாறான துன்பங்களை ஒழித்தற்கு அன்புரிமை வேண்டும் ஆதலால் அதனை முன்பு குறித்தார்.

அன்பு இருந்தாலும் ஆவன புரியும் அறிவு இல்லையானால் அந்தப் பிரியம் வறிதாய்ப் பிழைபடும் ஆதலால் அறிவை அதன்பின் முறையே அமைத்தார்.

அறிவு நன்கு அமைந்திருந்தாலும் அறிந்ததைத் துணிந்து செய்யும் ஆற்றல் இல்லையானால் அது வழுவுறும் ஆதலால் தேற்றத்தை அதன்பின் நிறுத்தினர்.

இம்மூன்றும் இருந்தாலும் அவலமான ஆசை யிருப்பின் கட்டியங்காரன்போல் அனைத்தையும் கவர்ந்து கொள்ளத் துணிவன் ஆதலால் அவாவின்மையை இறுதியில் உறுதியாய் அமைய வைத்தார்.

அரசனுக்கு உரிமைத் துணைவராய் நின்று எவ்வழியும் செவ்வையாய்க் காரியம் புரியவுரியவர் சீரிய

நீர்மையாளராய்ச் சிறந்திருக்க வேண்டும் என்பது இங்கே குறித்துள்ள குறிப்புக்களால் தெரிய வந்தது.

ஆளும் அரசன் பால் அன்பும்,
அவனுக்கு ஆவது அறியறிவும்,
நாளும் அவற்றைக் கலங்காமல்
நன்று முடிக்கும் உளத்துணிவும்,
மூளும் வினைக்குத் தன் கரத்தில்
மொய்த்த பொருளில் விழையாத
கோளும் உடையான் புரிவினையில்
குற்றமுறுது; குணமேயாம்.

(விநாயக புராணம்)

இந்தக் கவி இங்கே நன்கு சிந்திக்க வுரியது.

நாட்டை நன்கு ஆண்டு வருகிற மன்னர் தம்முடைய காரியங்களைச் சீர்மையாய் ஆளவுரிய நீர்மையாளரையே கூர்மையா ஓர்ந்து ஆராய்ந்து யாண்டும் தேர்ந்து தெளிந்து கொள்ளுகின்றனர்.

நல்ல பண்பாளரையே நண்பரா அரசர் நயந்து கொள்வர்.

இவ்வுண்மை மோசியார்பால் தெரியவந்தது.

**சரிதம்.**

இவர் சோழ நாட்டிலே ஏணிச்சேரி என்னும் ஊரிலிருந்தவர். மறையவர் மரபினர். நிறைபெருங் குணத்தினர். அரியபுலமையும் பெரிய தகைமையும் இவரிடம் பெருகியிருந்தன. எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் உள்ளவர். உலக இயல்புகளையும் உள நிலைகளையும் நன்கு தெரிந்தவர். உண்மையை யாண்டும் உறுதி பெறக் கூறும் திண்மை யுடையவர். இவருடைய கவித் திறங்களையும் மதிநலங்களையும் குணநீர்மைகளையும் அறிந்து மகிழ்ந்து அந்துவஞ்சேரலிரும்பொறை என்னும் சேர மன்னன் இவரை உரிமை நண்பரா விழைந்து தெளிந்து கொண்டான். அந்த அரசனேடு அரண்மனை மேல் மாடத்தில் ஒருநாள் இவர் உடனமர்ந்திருந்தார். அது பொழுது பெருநற்கிள்ளி என்னும் சோழ மன்னனது பட்டத்து யானை களிமதம் கொண்டு கருவூரை அணுகி

யது. இயல்பாகவே பகைமை கொண்டிருந்த அவ் வேந்தன் படைவீரர்கள் புடைசூழ யானைமேல் வருவதைக் கண்டதும் சேரன் திகைத்தான். அங்கேயிருந்த இவர் அவனுக்கு உரிமையோடு உண்மையை உரைத்தார். இவருடைய உரைகள் பரிவும் பண்பும் தோய்ந்து அறிவு நலங்கள் சுரந்து வந்தன. அயலே வருவன காணுக.

இவன் யார்? என்குவை யாயின், இவனே
புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
எய்கணை கிழித்த பகட்டெழில் மார்பின்
மறலி யன்ன களிற்று மிசையோனே;
களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்,
பன்மீன் நாப்பண் திங்கள் போலவும்,
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோர் அறியாது மைந்துபட் டன்றே;
நோயில னாகிப் பெயர்கதில் அம்ம!
பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே. (புறம் 13)

இவன் சோழ மன்னன்; மதமீறிய யானையால் நிலைமாறி இவ்வூரை அணுகினான். யாதொரு ஊறுமின்றி இவன் சுகமே செல்வானாக என்று இவர் கூறிய இந்த அறிவுரைகளைக் கேட்டதும் அவன் பகைமை நீங்கினான். வளவனை உவந்து உபசரித்தான். இரு பெரு வேந்தரும் நண்பராய் இன்புறலாயினர். இவரது பண்பாட்டால் நேர்ந்த பலன் என்று இருநாட்டாரும் இவரைப் புகழ்ந்து போற்றி உவந்து வாழ்த்தினர். இவருடைய இனிய நீர்மைகளை வினவியறிந்து ஆய் என்னும் குறுநில மன்னன் இவரை விழைந்து அழைத்துத் தன்னுடன் வைத்து உவந்து உபசரித்து வந்தான். யாரிடமும் காணாத பெருந்தகைமையும் பெருங்கொடையும் பேரருளும் அவனிடம் இயல்பா யமைந்துள்ளதைக் கண்டு இவர் ஆர்வ மீதூர்ந்தார். அவ்வள்ளலை முன்னமே காணாமல் கழிந்ததை எண்ணி இவர் உள்ளம் இரங்கினார்.

முன் உள்ளு வோனைப் பின் உள்ளினேனே!
ஆழ்கென் உள்ளம்; போழ்கென் நாவே;
பாழூர்க் கிணற்றில் தூர்கஎன் செவியே. (புறம் 132)

அவன்பால் இவர் கொண்டுள்ள அன்பும் மதிப்பும் இதனால் அறியலாகும். உயிர்களுக்கு அவன் செய்து வந்துள்ள உபகார நிலைகளை வியந்து பல கவிகள் பாடி யுள்ளார். அவை சுவை சுரந்து உணர்வு நலன்கள் நிறைந்துள்ளன. **திருந்துமொழி மோசி பாடிய ஆய் என** இவரால் அவன் பாடப் பெற்றுள்ளதைப் **பெருஞ் சித்திரனார்** இவ்வாறு பாராட்டி இருக்கிறார். அரசர் பலரும் போற்ற இவர் வரிசை மீதூர்ந்து வந்துள்ளார். அன்பு அறிவு தேற்றம் அவாவின்மை யுடையானை உற வுரிமையாய் வேந்தர் விழைந்து தெளிந்து கொள்வர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து தெளிந்தது.

**நல்லகுண நீரரை நாடி நயந்தரசர்**
**வல்லே தெளிவர் வரைந்து.**

நல்லோரை நயந்து கொள்க.

---

514. கற்றுயர்ந்த சந்திரனைக் கட்டியனைத் தேர்ந்துவைத்தும்
குற்றமேன் செய்தார் குமரேசா—முற்றும்
எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகும் மாந்தர் பலர். (௪)

இ-ள்.

குமரேசா! நன்றாகத் தெளிந்து வைத்தும் சந்திர னும் கட்டியங்காரனும் ஏன் இழிந்து வேறுபட்டார்? எனின், எனை வகையான் தேறியக் கண்ணும் வினை வகையான் வேறு ஆகும் மாந்தர் பலர் என்க.

மாந்தர் மனநிலையை இது விளக்கியுளது.

எவ்வளவு வழிகளில் செவ்வையாக ஆராய்ந்து தெளிந்து கொள்ளினும் செயல் வகையால் மாறுபடு பவர் பலர் இவ்வுலகில் எங்கணும் உளர்.

எனைவகை என்றது தெரிந்து தெளிதற்கு உரிய எல்லா வகைகளும் தொகையாய் ஈண்டு அறிய வந்தது.

முன்பு குறித்த அன்பு அறிவு துணிவு நசையின்மை குடிப்பிறப்பு குணச்சிறப்பு படிப்பு பயிற்சி முயற்சி பழக்கம் பண்பாடு முதலிய எல்லா வழிகளாலும் கூர்ந்து ஓர்ந்து ஆராய்ந்து தேர்ந்து தெளிந்து நல்லவர் என்று தழுவிக் கொண்டாலும், பின்பு பொல்லாதவ ராய்த் திரிந்து வேறுபட்டு விபரீதங்களை விளைப்பவர் பல பேர்கள் யாண்டும் நிலையாய் இருக்கின்றனர்.

அந்த உண்மையை ஈண்டு உணர்த்தியது, நன் மையை நாடிக் கொள்ள. மனிதர்களுடைய மாறுபாடு கள் அதிசய மருமங்களாய் மருவியுள்ளன. **மாந்தர்** என்பது பன்மைப் பெயர். மனிதத்திரள்களை யெல்லாம் ஒருங்கே குறித்து வருகிற இதனை ஈங்கு உரைத்தது ஏன்? எனின், யாவும் கூர்ந்து ஓர்ந்து தெளிய என்க.

சிலர் என்னுமல் பலர் என்றது வேறுபடுகிற தொகையின் மிகுதி தெரிய. நெஞ்சம் திரியாத நேர்மை யாளர் அருகி யுள்ளனர்; அல்லாதவரே எங்கும் பெருகி இருக்கின்றனர். தேர்ந்து தெளியும் வரை செம்மை யுடையராயிருந்து, தெளிந்து காரியத்தில் வைத்தபின் அதிகாரமமதையும், பொருளாசையும், மண்டி மருளராய் மாறுபட்டு நம்பினவர்க்கு மோசம் செய்யும் நாசகாரிகள் பலர் நாட்டில் உள்ளனர் என்று சுட்டிக்காட்டியிருக்கிறார்.

வினையாளர் எவரையும் மிக்க எச்சரிக்கையுடன் யாண்டும் வேந்தன் கண்காணித்து வரவேண்டும் என் பதைக் கருதியுணர இவ்வுறுதி மொழியை ஈண்டு இவ்வாறு வலியுறுத்தியுள்ளார்.

மனிதர் நிலையற்ற நெஞ்சினர்; சார்ந்த சார்புகளால் நேர்ந்த நிலைகளால் மாறுபாடுற்று வேறுபடுபவர். நேரே கண்டால் நண்பர்போல் நயந்து பேசுவர்; காணுதபோது வீணே இகழ்ந்து கூறுவர்.

விண்டுழி ஒருநிலை நிற்பர்; மெய்ம்முகம்
கண்டுழி ஒருநிலை நிற்பர்; கைப்பொருள்
கொண்டுழி ஒருநிலை நிற்பர்; கூழுடன்
உண்டுழி ஒருநிலை நிற்பர் உற்றவர்.

(இராமாயணம் 6-4)

மாந்தருடைய நிலைமைகளை இது வடித்துக் காட்டியுள்ளது. பொருளின் காட்சிகளைக் கருதியுணர்ந்து கொள்ளவேண்டும். சிறுமைகளே பெருகியுள்ள அவல நெஞ்சினரே எங்கணும் பெருகி யுள்ளனர். இத்தகைய நிலைகளில் இழிந்துள்ள மக்களுள் தனக்கு வேண்டிய வினையாளர்களை வேந்தன் பலவகையிலும் ஆய்ந்து தேர்ந்து தெளிந்து கொள்ள நேர்ந்துள்ளான்.

தெளிவு வழுவாய பொழுது இளிவுகள் உளவாகின்றன. அந்த இழிதுயர்கள் நேராதவாறு யாரையும் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து கொள்ளுக.

நெஞ்சத் தூய்மையும் நேர்மையும் உடையவரே தேர்தலுக்கு உரியவர்; வஞ்சத் தீமையரை எவ்வகையிலும் யாதும் தேறலாகாது.

இழிந்த புன்மைகளையுடையவர் எவ்வழியும் கீழோராயிருப்பர் ஆதலால் அவரை மேலான அரச காரியத்துக்கு யாண்டும் தீண்டலாகாது.

காட்டிக் கருமம் கயவர்மேல் வைத்தவர்
ஆக்குவர் ஆற்ற எமக்கென் றமர்ந்திருத்தல்;
மாப்புரை நோக்கின் மயிலன்னாய்! பூசையைக்
காப்பிடுதல் புன்மீன் தலை. (பழமொழி 128)

மேலான வினைகளைக் கீழ்மக்களிடம் விடின் அவர் கீழ் நோக்கராய்க் கீழ்மையே புரிவர்; அவரை எவ்வகையிலும் தழுவ லாகாது. கயவரைக் காரியம் செய்ய வைப்பது பூனையை மீனுக்குக் காவல் வைத்தது போலாம் என இது காட்டியுள்ளது. உவமைக் குறிப்பால் பொருள் நிலைகளை ஓர்ந்து கொள்ளவேண்டும்.

அகந்தூய்மை யில்லாரை ஆற்றப் பெருக்கி
இகந்துழி விட்டிருப்பின் அஃதால்—இகந்து
நினைந்து தெரியானாய் நீள்கயத்துள் ஆமை
நனைந்துவா வென்று விடல். (பழமொழி 263)

மனம் தூய்மை இல்லாத வஞ்சக நெஞ்சரைக் காரியத்தில் ஏவினால் தமக்குவேண்டிய ஊதியத்தைப் பார்த்

துக்கொண்டு அவர் விரைந்து மறைந்து போவர் என முன்துறையரையர் இங்ஙனம் வரைந்துகாட்டியிருக்கிருர்.

அரசனது ஆட்சிக்கு உரிய காரியங்கள் அறிஞர் பலரால் செய்ய வுரியனவாய்ப் பெருகியுள்ளன. தக்க வினையாளர்களைத் தகுதியாகத் தேர்ந்து எடுத்து ஓர்ந்து நடத்திவரின் அரசுமுறை வரிசையாய் நடந்துவரும்; அரசனும் மகிமையுடையனுய் நன்கு விளங்கி வருவன்.

மாலமர் நெடுங்கடல் மதலை மாசிலாக்
காலமைந்து ஒழுகுமேல் கரையும் காணுமே;
நூலவர் நுழைவொடு நுழைந்து செல்லுமேல்
வேலவர் ஒழுக்கமும் வேலை காணுமே. (சூளாமணி)

கடலில் ஓடுகிற மரக்கலம் காற்ருல் இயங்கி வருகிறது; அதுபோல் நிலத்தில் நடக்கிற ஆட்சிமுறை அறிவுடையரால் நெறியே நடந்துவர வேந்தன் வியனுய் விளங்கி வருகிருன். இத்தகைய வினையாளர்களைத் தேர்ந்து கொள்ளுவதில் கூர்ந்த மதியூகம் வாய்ந்துவரின் ஆர்ந்த நன்மையாய் அது நேர்ந்து வரும்.

நல்லவர் என்று பல்வகையிலும் ஆய்ந்து நம்பிக் கொண்டால் அல்லவராய் அல்லல் புரிபவர் பலர் உளர்.

இவ்வுண்மையைச் சந்திரனும் கட்டியங்காரனும் யாவரும் கண்டு வருந்த நேரே காட்டி நின்றனர்.

சரிதம்.

வானவரின் வான ஒளியாய்ச் சந்திரன் வயங்கி வருகிருன். அழகும் அறிவும் இனிய நீர்மைகளும் உடையவன். கலைகளை நன்கு கற்க விரும்பித் தேவ குருவாகிய வியாழ பகவானிடம் வந்தான். அவர் இவனை நல்லவன் என்று தேர்ந்து தெளிந்து கற்பித்து வந்தார். வருங்கால் அவருடைய மனைவியாகிய தாரையைக் காதலித்துக் கலந்து மகிழ்ந்தான். பின்பு அவளைக் கவர்ந்து சென்ருன். மாணவனிடம் மனைவியை இழந்து அவர்

காணமடைந்து நொந்தார், எவ்வளவு தேறி நம்பினும் மாறுபட்டு வஞ்சம் புரிபவர் வானுலகிலும் உண்டு என்பதை இவனிடம் கண்டு அனைவரும் மறுகி நின்றனர்.

தன்குருவின் மனைவி எனத் தான் உணர்ந்து
பாராமல் தாரை என்னும்
மின்குலவு மடந்தைதனைக் கலந்துமதி
விழைந்துகொண்டு விரைந்து போனான்;
பொன்குருவும் உளமுடைந்து புகுந்தபழி
யினை நினைந்து புலம்பி நொந்தான்;
மன்குலவு கலைமதியும் புலைபுரிந்தான்
எனஅமரர் மறுகி நின்றார்.

எல்லா வகையாலும் தேர்ந்து இவர் நல்லவர் என்று தெளிந்துகொண்டாலும் பொல்லாதவராய் வேறுபட்டுப் புலைபுரியும் புல்லர் எங்கணும் உளர் என்பதை அங்கண் வானுலகில் தங்கியுள்ள திங்களும் தெளித்து நின்றான்.

கட்டியங்காரன்.

இவன் ஏமாங்கத நாட்டு மன்னன் ஆன சச்சந்தன் உடைய மந்திரிகளுள் ஒருவன். மிக்க தந்திரங்கள் வாய்ந்தவன். வஞ்சச் சூழ்ச்சிகளில் வல்லவன். நய வஞ்சகனை இவன் தனது கரவுநிலைகளை யாதும் வெளிப்படுத்தாமல் மிக்க நல்லவன்போல் அரசனிடம் தக்கபடி வரிசையாய் நடித்து வந்தான். தன்பால் பேரன்புடையவன் என்று இவனை அவன் நம்பினான். நிமித்திகன் உருத்திர தத்தன் முதலிய வேறு அமைச்சர்களினும் இவன்மீது அவன் பிரியம் மீதூர்ந்து வந்தான். முடிவில் ஆட்சிப் பொறுப்புகள் யாவும் இவனிடம் தலைமையோடு கொடுத்துவிட்டு அவன் காமச் சுவையில் ஆழ்ந்திருக்க நேர்ந்தான். அடுத்திருந்த மந்திரி தடுத்தான். "அரச திருவை அயலானிடம் தரின் அது விரைந்து நீங்க நேரும்" என்று உணர்த்தியும் கேளாமல் இவன்மேல் வைத்த பிரியத்தால் அரசன் உறுதி செய்து தந்தான்.

நிமித்திகன் தடுத்தது.

வலம்புரி பொறித்த வண்கை மதவலி விடுப்ப ஏகிக்
கலந்தனன் சேனை காவல் கட்டியங் காரன் என்ன

உலந்தரு தோளி னய்! நீ ஒருவன்மேல் கொற்றம் வைப்பின்
நிலந்திரு நீங்கும் என்றுஓர் நிமித்திகன் நெறியிற்சொன்னன்.

மன்னன் மொழிந்தது.

எனக்குயிர் என்னப் பட்டான்
என்னலால் பிறரை இல்லான்;
முனைத்திறம் முருக்கி முன்னே
மொய்யமர் பலவும் வென்றன்;
தனக்கியான் செய்வ செய்தேன்;
தான்செய்வ செய்க! ஒன்றும்
மனக்கின மொழிய வேண்டா
வாழியர் ஒழிக என்றன். (சீவக சிந்தாமணி)

நேர்ந்துள்ள நிலைகளை இவற்ருல் ஓர்ந்து கொள்ளு கிறேம். இன்னவாறு முழுவதும் நம்பி அரிய பெரிய தலைமைப் பதவியைத் தனக்கு உரிமையுடன் அளித்த அந்த மன்னவனையே பின்னர் இவன் சதிபுரிந்து கொன்று அரசைக் கவர்ந்து கொண்டான். எனைவகை யால் தேறியக் கண்ணும் வினை வகையால் வேருகும் மாந்தர் பலர் உளர் என்பதை வேந்தர் எவரும் தெரிய இவன் தெளிவாக உணர்த்தி நின்றன்.

தன்னை நம்பித் தேர்ந்த மன்னனைப் படுகொலை புரிந்து அரசைக் கவர்ந்து கொடிய ஆட்சி செய்துவந்த இவனை அவ்வேந்தன் மகன் ஆன சீவகன் பருவம் எய் தியபின் இத்தீயவனை மாய்த்து அரசைமீட்டி அரிய கீர்த்தி பெருகிவர ஆட்சியை மாட்சியுடன் நடத்தினன்.

வானிடை ஒருவன் தோன்றி மழைஎன முழங்கிச் சொல்லும்
தேனுடை அலங்கல் வெள்வேல் சீவகன் என்னும் சிங்கம்
கானுடை அலங்கல் மார்பின் கட்டியங் காரன் என்னும்
வேன்மிடை சோலை வேழத்து இன்னுயிர் விழுங்கும் என்றன்

மொய்வார் குழலார் முலைப்போர்க்களம் ஆய மார்பில்
செய்யோன் செழும்பொற் சரம்சென்றன சென்றது ஆவி;
வெய்தா விழியா வெருவத் துவர்வாய் மடியா
மையார் விசும்பின் மதிவீழ்வது போல வீழ்ந்தான். (2)
(சீவக சிந்தாமணி)

**வினைவகையால் வேறுபட்டு** வேந்துரிமையை மாறு பாடாக மேவி நின்றவன் ஆவி நீங்கி அழிந்து பட்டுள்ளான். அவ்வுண்மையைஈண்டுஅறிந்து கொள்ளுகிறோம்.

சிவகனைச் செய்யோன் என்றது அவனது மெய்யான மேன்மை தெளிய. பகல் ஒளி ஆகிய சூரியன் வரவே இரவு இருளில் மினுக்கி நின்ற சந்திரன் தேய்ந்து போவதுபோல் அந்த வஞ்சநெஞ்சன் மாய்ந்து போனான். இந்த உரைக் குறிப்புகளில் உள்ள பொருள் நயங்களை ஓர்ந்து கூர்ந்து உணர்ந்து கொள்ளுக.

**மாறு படுதல் மனிதரிடம் மாறாமல்**
**கூறுபட் டுள்ள குணம்.**

*நிலையற்ற நிலையரை நினைந்து தெளி.*

---

515 பெண்டிரையேன் ஏவிப் பெருமுனியை மன்னவன்முன்
கொண்டுவரச் செய்தான் குமரேசா—மண்டி
அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று. (ரு)

இ-ள்.

குமரேசா! பெரிய முனிவரைக் கொண்டு வரும்படி உரோமபதன் ஏன் பெண்டிரை ஏவினான்? எனின், அறிந்து ஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான் சிறந்தான் என்று ஏவற்பாற்று அன்று என்க.

ஆற்ற உரியவரை ஆக்கிக்கொள்க என்கிறது.

உணர்ந்து ஊக்கிச் செய்யவல்லவனுக்கு அல்லாமல் சிறந்தவன் என்று எவனையும் காரியத்தில் ஏவலாகாது.

ஏவல் பாற்று அன்று = ஏவும் பான்மையுடையது அல்லை.

செயல்வகை தெரிந்த தக்கவரையே காரியத்தில் ஏவுதல் வேண்டும். தகாதவரை ஏவலாகாது; ஏவினால் காரியம் கெடும்; இயற்றச் சென்றவனுக்கும் இழிவாம்; ஏவிநின்றவனுக்கும் துயராம். கருமக்கேடுகள் கருத்

தாவுக்குத் துன்பங்களாம். துன்பம் நேராமல் சுகங்கள் நேர்ந்துவர ஓர்ந்து செய்வதே தேர்ந்த வினையாடலாம்.

அறிந்து=காரியங்களைச் செய்யும் முறைகளைக் கருதி உணர்ந்து. அறியும் அவனே வினைபுரிய உரியவன்.

ஆற்றி=கருமம் புரியுங்கால் நேரும் இடர்களைச் சகித்து.

வினைகளை ஆற்றிவரும் திறலுடையாரே வேந்தனுக்கு ஆக்கம் தரும் விறலுடையார். அவரையே வினைகளில் ஆதரவோடு ஆண்டுவர வேண்டும். காரியத் திறங்களைக் கருதிச் செய்வது சீரிய ஆண்மையாம்.

கல்வி செல்வம் உறவு முதலிய வேறு வகைகளில் எவ்வளவு சிறந்தவராயிருந்தாலும் வினையாற்றும் திறம் இலராயின் அவரைக் காரியங்களில் விடுதலாகாது. அவரவர் பயிற்சியின்படியே எவ்வழியும் முயற்சிகள் உருவாகி வந்துள்ளன.

குயவன் செய்வதை வயவன் செய்ய முடியாது; வயவன் செயலைக் குயவன் செய்யமாட்டான். தச்சன் செய்யும் வினையைத் தட்டான் செய்ய இயலாது; தட்டான் செய்வதைக் கொல்லன் செய்ய ஒல்லாது. செய்து பழகினவர்க்கே செய்வினைகள் கிழமைகளாகின்றன. உரிய தொழில்கள் அரிய பயிற்சிகளால் உயர்ச்சியடைந்து உலகம் தெரிய வருகின்றன.

தம்தொழில் ஆற்றும் தகைமையார் செய்வன
வெந்தொழில ராய வெகுளிகட்குக் கூடுமோ?
மைந்திறை கொண்ட மலைமார்ப! ஆகுமோ
நந்துழுத வெல்லாம் கணக்கு. (பழமொழி 245)

வினை ஆற்றும் தகைமையர் செய்வன மற்றையர் செய்யார்; அறியாதார் தொழில் செய்ய நேர்வது நத்தை உழுத உழவுபோல நகைக்கு இடமாம் என இது உணர்த்தியுளது. இந்த உவமைக் குறிப்பைக் கூர்ந்து ஓர்ந்து உரிமையைத் தேர்ந்து கொள்ள வேண்டும்.

வினைத்திறம் உடையாரையே வினையில் அரசன் ஆண்டு வரவேண்டும் என்பது ஈண்டு உணர வந்தது.

அடுத்த காரியத்தை உறுதியாய் முடித்துவர உரிய வரையே அரசர் யாண்டும் தேர்ந்து வினைமேல் ஏவுவர்.

இவ் வுண்மை உரோமபதன்பால் உணர வந்தது.

சரிதம்.

இவன் அங்க தேசத்து வேந்தன். அரிய பல கலைகளை நெறிமுறையே பயின்று தெளிந்தவன். அதிசய ஆற்றல்கள் உடையவன். மதியூகியான இவனது ஆட்சி மாட்சியாய் நடந்து வந்தது. வருங்கால் ஒருமுறை மாரி மாறி நின்றது. மழைவளம் சுரந்துவர விரும்பிய இவன் கலைக்கோட்டு முனிவரைத் தன் நாட்டுக்கு அழைத்து வரக் கருதினன். அவர் அரிய மாதவர்; ஆசை யற்றவர்; எவரையும் மதியாதவர்; மாந்தரை விலங்குகள் என்று எண்ணி யிருப்பவர். அந்தப் புண்ணிய முனிவரை நேரே காண வேண்டும் என்று வேணவாவுற்று நின்ற இவன் அதற்கு ஆன உபாயங்களை ஆராய்ந்தான்: அரிய மதி மந்திரிகளாலும், பெரிய தந்திரிகளாலும், பேர் பெற்ற பண்டிதர்களாலும், வேறு எவராலும் அவரைக் கொண்டுவர முடியாது என்று தெரிந்தான். அந்த மாதவரை ஆதரவுடன் அழைத்துவர வுரியவர் தனது அவையில் நடித்து வருகிற மாதர் இருவரே என்று மன்னன் மனந்துணிந்தான். அந்த அழகிய மங்கையர் இருவரும் உளம் உவந்து இசைந்தார். இசையவே காரிய சித்தியை உணர்ந்து உயர்ந்த வரிசைகள் தந்து சிறந்த ஒரு தேரில் அவரைச் சீருடன் அனுப்பினன்.

ஓதநெடுங் கடலாடை உலகினில் வாழ்
மனிதர்விலங் கெனவே யுன்னும்
கோதில்குணத் தருந்தவனைக் கொணரும் வகை
யாவதெனக் குணிக்கும் வேலைச்
சோதிநுதல் கருநெடுங்கண் துவரிதழ்வாய்த்
தரளநகைத் துணைமென் கொங்கை
மாதர்எழுந்து யாம்ஏகி அருந்தவனைக்
கொணர்தும் என வணக்கம் செய்தார்: (1)

ஆங்கவரம் மொழியுரைப்ப அரசன் மகிழ்ந்து
அவர்க்கணிதூ சாதி யாய
பாங்குளமற் றவையருளிப் பனிப்பிறையைப்
பழித்தநுதற் பணைத்த வேய்த்தோள்
ஏங்குமிடை தடித்தமுலை இருண்டகுழல்
மருண்டவிழி யிலவச் செவ்வாய்ப்
பூங்கொடியீர்! ஏகும்எனத் தொழுதிறைஞ்சி
இரதமிசைப் போயி னரே. (2)

(இராமாயணம்)

மாதவரை அழைத்துவர மாதரை இம்மன்னன் மாட்சியுடன் அனுப்பியுள்ள காட்சிகளை இங்கே கண்டு மகிழ்கின்றோம். நிலைமைகளைக் கருதியுணர்பவர் இவனது தலைமையான மதிநலத்தை வியந்து கொள்வர். வினைமேல் மூண்டுசென்ற மங்கையர் காரியசித்தியுடன் விரைந்து வந்தனர். வேந்தன் உவந்தான்; தேசம் செழித்தது; மாந்தர் யாவரும் மகிழ்ந்து வாழ்ந்தனர். அறிந்து செய்ய வல்ல ஆற்றலுடையார்க்கே ஏற்றமாக வினையை வேந்தர் விடுத்தருளுவர் என்பதை உலகம் அறிய இவன் உணர்த்தி யருளினன்.

**வினையை முடித்துவரும் வித்தகரைத் தேர்ந்தே**
**வினையை விடுக விரைந்து.**

காரியம் புரிபவரைக் கருதி யருள்க.

---

516 விண்டலத்து வேந்தால் வினைநாடிக் கண்ணனேன்
குண்டலத்தை கொண்டான் குமரேசா-மண்டலத்தில்
செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல். (சு)

இ-ள்.

குமரேசா! முந்துறநாடி இந்திரனை ஏவிக் கண்ணன் ஏன் கன்னன் குண்டலத்தைக் கொண்டான்? எனின், செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு எய்த உணர்ந்து செயல் என்க.

உரியவனை ஓர்ந்து வினைசெய் என்கின்றது.

வினையாளை ஆராய்ந்து வினைநிலையை ஓர்ந்து பருவத்தோடு பொருந்த உணர்ந்து யாவும் கருதிச் செய்க.

செய்வானை என்றது வினைசெய்ய மூண்டுள்ள வேலையாளை. செயலால் குறித்தது அவன் இயல் தெரிய.

வினையாளை முதலில் குறித்தது, யாவும் அவனால் விளைந்து வருதல் கருதி. செயல்கள் எல்லாம் செய்வானுடைய இயல்புகளால் உயர்வடைந்து வருகின்றன.

நாடி = கண் ஊன்றி ஆராய்ந்து; நாட்டம் = கண்; முகக் கண்ணாலும் அகக் கண்ணாலும் கூர்ந்து ஓர்தல் நாடி என வந்தது.

மேல், செயலாளனைத் தேர்ந்து செயலில் ஏவுக என்றார்; இதில், காலம் முதல் யாவும் கருதி உணர்க என்கின்றார்.

குறித்த காரியத்தைக் குறித்த காலத்தில் குறித்தபடி திருத்தமாகச் செய்ய வுரியவனைத் தேர்ந்து கொண்டாலும் செயல் முடிவுகளை அரசன் அயராமல் ஓர்ந்து வரவேண்டும் என்பது கூர்ந்து ஈண்டு உணர வந்தது.

உரிய தலைவன் உரிமையோடு நாடி உணர்ந்துவரின் வினையாளர் விழைந்து ஊக்கி வேலை செய்து வருவர்; வினைகளும் வியன முடிந்து வரும்; அவற்றின் பலன்களும் வளமாய்ப் பெருகிவரும். நாடாது ஒழியின் யாவும் கேடாயிழியும்.

> பண்டாரம் பல்கணக்குக் கண்காணி பாத்தில்லார்
> உண்டார் அடிசிலே தோழனிற்—கண்டாரா
> யாக்கைக்குத் தக்க அறிவில்லார்க் காப்படுப்பிற்
> காக்கையைக் காப்படுத்த சோறு. (சிறுபஞ்சமூலம் 40)

நிதியறை கணக்கு வினையாள் மனையாள் முதலாயினோரை உரிமையுடன் கண்காணித்து யாண்டும் காத்து வரவேண்டும்; காவாது விடின் காக்கைக்கு வைத்த சோறுபோல் தாறுமாறாய் யாவும் சிதைந்துபோம் எனக் **காரியாசான்** இவ்வாறு காரியநிலையைக் கூறியிருக்கிறார்.

விட்டுக் கருமம் செயவைத்த பின்னரும்
முட்டா தவரை வியங்கொளல் வேண்டுமால்
தொட்டக்கால் மாழ்கும் தளிர்மேலே நிற்பினும்
தட்டாமல் செல்லா துளி. (பழமொழி 279)

காரியத்தைக் கருதிச் செய்து வரும்படி ஒருவரை நியமித்திருந்தாலும் அவரை இடையறுமல் நாடி உரியவன் ஏவி வரவேண்டும்; மெல்லிய தளிர்மேல் நின்ருலும் கூரிய உளியை நேரே கையால் அடித்த போதுதான் அது கடுத்துப் பாயும் என இது குறித்துள்ளது.

உரிய காலத்தே அரிய வினையை உரியவரைக் கொண்டு பெரியவர் பெருமையாச் செய்து கொள்வர். இவ்வுண்மை கண்ணன்கண் காணவந்தது.

சரிதம்.

துரியோதனனிடம் கண்ணன் தூது சென்றிருந்த பொழுது கன்னனைத் தனியே கண்டான். அவனது பிறப்பின் உண்மையை உணர்த்தினன். தருமன் முதலிய ஐவருக்கும் தமையன் என்பதை அமைய வுரைத்து அவர்பால் வந்து சேரும்படி வேண்டினன். அவ்வீரன் இசையவில்லை: "ஊரும் பேரும் தெரியாத என்னைச் சீரும் சிறப்புமாச் செய்து வைத்துள்ள மன்னனைப் பிரியேன்" என்று அவன் உறுதியாயுரைத்தான். கண்ணன் விதுரன் அரண்மனையில் தனியே அமர்ந்து நிலைமைகளை எண்ணினன்; "கவசம் குண்டலம் என்னும் இரண்டு அணிகள் கன்னனேடு உடன் பிறந்தன. தெய்வத்தன்மையுடையன; அவற்றை அணிந்திருக்கும் வரையும் போரில் யாரும் அவனை வெல்ல முடியாது. அவற்றைப் பிரித்தாலன்றி ஐவருக்கும் பிழைப்பில்லை" என்று இன்னவாறு சிந்தனைசெய்து இந்திரனை எண்ணினன். வானவர்கோனும் வந்தருளினன். அவனை உவந்து உபசரித்து விரைந்து செய்ய வுரிய வினைகளை விளக்கினன்.

கண்ணன் கழறியது.

கிரியின் சிறகை அரிபடையோய்!
கேண்மோ வாண்மைக் களமீதில்

வரிவெஞ் சிலைக்கை விசயனுக்கு
மாருய் முனிந்து வருகின்ற
எரியும் கனல்வாய் விடஅரவு ஒன்று
இவனுக் குற்ற பகையான
அரியின் புதல்வன் தனக்கொருபேர்
அம்பா கியதார் அறியாதார் ? (1)

கன்னன் விசயன் தனைக்கொல்லின்
கடற்பார் முழுதும் கண்ணில்லா
மன்னன் புதல்வன் தனக்கேயாம்;
ஒழிந்தோர் தாமும் மடிந்திடுவார்;
முன்னம் சூதில் மொழிந்தபகை
முடியா திருக்கில் அவர்க்கல்ல
நின்னெஞ் சறிய யானறிய
நினக்கே வசையும் நிலையாமே: (2)

கவசம் கனக குண்டலமென்
றிரண்டும் புனையின் கற்பாந்த
திவசம் பொரினும் கன்னன்உயிர்
செகுப்பார் மண்ணில் சிலருண்டோ?
அவசம் கிளைஞ ருறத்துணைவர்
அரற்றக் களத்தில் அடுகுரக்குத்
துவசம் படைத்தோன் படும்பயந்த
துணைவா ! இன்னே சொன்னேனே· (3)
(பாரதம், கிருட்டிணன்)

கூறியுள்ள குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். இன்னவாறு நன்னயமாக் கூறி அந்த அணிகளைக் கவர்ந்து வரும்படி இந்திரனைக் கண்ணன் தந்திரமாய் ஏவினன். ஏவவே அமராதிபதி முதிய ஒரு முனிவரன்போல் வடிவம்கொண்டு அவ்வள்ளலை அணுகி விரகுடன் பேசிக் கவச குண்டலங்களைப் பெற்று மீண்டு வந்து கண்ணனிடம் கொடுத்தான். கருதிய கருமம் இனிது முடிந்தது என்று கண்ணன் கழி பேருவகை கொண்டான். அந்தக் காரியசித்தி பாண்டவர்க்கு வீரிய வெற்றியாய் விளங்கி நின்றது. செய்வானை நாடி வினை நாடிக் காலத்தோடு எய்த உணர்ந்து செயல் என்பதை

இந்த மாயவனுடைய செயல்களில் நேரே கண்டு நிலைமையைத் தெளிந்து உலகம் வியந்து கொண்டது.

**வினையை முடித்துவரும் வித்தகரைத் தேர்ந்தே**
**வினையை விடுக விரைந்து.**

*காரியத்தைக் காலத்தோடு கருதிச்செய்க.*

---

517 வெற்றியுயர் அங்கதனை வேந்தனிடம் செல்லென்று
கொற்றவனேன் விட்டான் குமரேசா—உற்ற
இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்
ததனை அவன்கண் விடல். (எ)

இ-ள்.

குமரேசா! இலங்கை வேந்தனிடம் சென்று வரும்படி அங்கதனை ஏன் இராமன் விடுத்தான்? எனின், இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து அதனை அவன்கண் விடல் என்க.

தக்கவனைத் தேர்ந்து வினையில் விடுக என்கிறது. இந்த வினையை இந்த உபாயத்தால் இந்த மனிதன் முடிக்க வல்லவன் என்று ஆராய்ந்து அந்த வினையை அவனிடம் உரிமையுடன் தந்து விடுக.

இதனை என்னும் அண்மைச் சுட்டு நேரே செய்ய நேர்ந்துள்ள வினையைக் குறித்து நின்றது. அரச காரியங்கள் பல உள ஆதலால் அவற்றுள் ஒன்று என்பது ஒருமையால் உணர வந்தது.

இதனால் என்றது காரியத்தைச் செய்யவுரிய சாதனங்களை. கருவி வகை துருவி அறிய வந்தது.

இவன் என்றது வினையைச் செய்யவல்ல கரும வீரனை.

கருமம் கருவி கருத்தா ஆகிய மூன்று நிலைகளும் முறையே தெரிய வந்தன. எல்லாம் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து விடின் அந்த வினை இனிது முடிந்து வரும்.

ஆய்ந்து என்னும் வினையெச்சம் விடல் என்னும் உடன்பாட்டு வியங்கோளைக்கொண்டு முடிந்தது. யாவும் சரியாக அமைந்திருந்தாலும் ஆராயாமல் விடலாகாது.

காரியத்தை வீரியமாய்ச் சாதித்து வரும் தன்மை சிலரிடமே திண்மையாயமைந்துள்ளது. அந்த உண்மை நிலையை நுண்மையா உணர்ந்து தெளிந்து உரிய வனையே உரிமையான வினையில் ஊக்கி விட வேண்டும்.

போர் வீரம்போல் கரும வீரமும் மருமமாய் மருவி யுளது. உருவம் பருத்திருந்தாலும் உடல் வலி மிகுந்து நின்றாலும் உள்ளே வீரம் இல்லையானால் அவன் போர் புரிதற்கு உதவான்; அதுபோல் வேறு வகைகளில் திறம் இருந்தாலும் காரியம் புரியும் சீரிய தீரம் இல்லையானால் அவனை வினைமேல் ஏவலாகாது.

அறிவுடை முதியர் என்றும் ஆண்டிளை யோர்கள் என்றும்
சிறியவர் பெரியர் என்றும் திருத்தகு வளத்தர் என்றும்
வறியவர் என்றும் வீரர் மதிக்கிலர்; யாவ ரேனும்
விறல்வலி படைத்து நேரின் வெஞ்சமர் விளைப்ப ரன்றே.
(கந்த புராணம்)

செல்வம் கல்வி பெருமை சிறுமை வறுமை முதலிய வேறு எதையும் கவனியாமல் வீரத்திறல் ஒன்றையே கருதி வீரர் மதிப்பர் என இது விளக்கியுளது. இன்ன வாறே வினைத்திறம் உடையவனையே கருமவீரன் என்று வேந்தர் கருதிப் போற்றிக் காரிய சித்திகளைப்பெற்று வீரிய வெற்றிகளோடு நன்கு விளங்கி வருகின்றனர்.

தகுதிகளை உய்த்து உணர்ந்து தக்கவர்களை வினைகளில் ஏவி வருவதே மிக்க நலமாம்; அன்பு அபிமானங்களால் மருண்டு தகுதியில்லாதவர்களை ஏவின் அது மிகுதியும் அபாயமாம்.

உற்றான் உறுஅன் எனவேண்டா; ஒண்பொருளைக்
கற்றானை நோக்கியே கைவிடுக;—கற்றான்
கிழவன் உரைகேட்கும்; கேளான் எனினும்
இழவன்று எருதுண்ட வுப்பு. (பழமொழி 38)

உற்றவன் உறவினன் என்று அபிமானித்து யாரையும் நம்பாமல் வினைத் திறங்களைக் கற்றவனிடமே கருமப் பொருளைக் கைவிடுக என்று இது உணர்த்தியுளது.

அரிய வினையை ஆற்றி வருமாறு உரியவனையே ஊக்கி விடுவர். அவன் உற்றதை முடித்து வருவன்.

இவ்வுண்மை அங்கதன்பால் அறிய வந்தது.

சரிதம்

இவன் வானரவேந்தன் ஆன வாலியின் அருமைத் திருமகன். அரிய பல பண்பாடுகள் அமைந்தவன். பெரிய போர்வீரன். அறிவிலும் ஆற்றலிலும் அனுமானுக்கு அடுத்த படியாய்ப் போற்றத் தக்க ஏற்றம் உடையவன். தந்தை மாண்டபின் இராமபிரானுக்குச் சேனைத் தலைவனாய் இவன் சிறந்து விளங்கினான். இலங்கையை வளைந்து முற்றுகையிட்ட பின் "இனிமேலாவது எதிரி சமாதானத்துக்கு வருவானா"? என்று அறிய விரும்பிஇராவணனிடம் ஒரு தூதுவனை அனுப்பவேண்டும் என்று கோதண்ட வீரன் கருதினான். அதற்கு உரியவனை ஆராய்ந்தான். இதனை முடித்து வெற்றியுடன் மீள வல்லவன் அங்கதனே என்று துணிந்தான். உறுதி யுண்மைகளை யுணர்த்தி இவனை உள்ளே விடுத்தான். அனுப்பிய அந்த நிலைகளை அயலே காண வருகிறோம்.

இராமன் கருதியது.

மாருதி இன்னும் செல்லின் மற்றிவன் அன்றி வந்து
சாருதல் வலியார் இல்லை என்பது சாலும் அன்றே?
யாரினி ஏகத் தக்கார் அங்கதன் அமையும்; ஒன்னார்
வீரமே விளைப்பர் ஏனும் தீதின்றி மீடல் வல்லான். (1)

அங்கதனை ஏவியது.

நன்றென அவனைக் கூவி நம்பிநீ நண்ண லார்பால்
சென்றிரண் டுரையின் ஒன்றைச் செப்பினை திரிதி என்றான்;
அன்றவன் அருளப்பெற்ற ஆண்டகை அலங்கற் பொற்றோள்
குன்றினும் உயர்ந்த தென்றால் மனநிலை கூறலாமோ? (2)

அவ்வீரன் சென்றது.

பார்மிசை வணங்கிச் சீயம் விண்மிசைப் படர்வ தேபோல்
வீரன்வெஞ் சிலையில் கோத்த அம்பென விசையிற்போனான்;
மாருதி அல்ல னாகில் நீஎனும் மாற்றம் பெற்றேன்
ஆரினி என்னோடு ஒப்பார் என்பதோர் இன்பம் உற்றான். (3)

இலங்கை புகுந்தது.

அயில்கடந் தெரிய நோக்கும் அரக்கரைக் கடக்க ஆழித்
துயில்கடந்து அயோத்தி வந்தான் சொற்கட வாத தூதன்
வெயில்கடந் திலாத காவல் மேருவின் மேலும் நீண்ட
எயில்கடந் திலங்கை எய்தி அரக்கனது இருக்கைபுக்கான் (4)
(இராமா, அங்கதன் தூது)

இந்தப் பாசுரங்களில் பரந்து சுரந்துள்ள பொருள் நயங்களையும் உணர்வு நலங்களையும் உறுதி ஊக்கங்களையும் ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்ளவேண்டும். அறிவும் ஆற்றலும் நெறியும் நீதியும் வீரமும் தீரமும் விழுமிய நிலையில் ஈண்டு வெளியாகி யுள்ளன. அடலாண்மையோடு அதிசய வீரனைத் துதிகொண்டுள்ள இராவணன் எதிரே சென்று வீர கம்பீரமாய்ப் பேசி வெற்றியுடன் அங்கதன் சிங்க ஏறுபோல் மீண்டு வந்தான். இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து அதனை அவன்கண் விடல் என்னும் இவ்வினையாண்மை இந்தக் கரும வீரனிடம் வியனாய் விளங்கி நின்றுளது.

**உற்ற வினையை உரியவன்பால் ஓர்ந்துவிடின்**
**வெற்றியுடன் ஆகும் விரைந்து.**

*அரிய வினையை உரியவனிடம் தருக.*

---

518 அன்றுசுபன் ஏகன் அரிமுகர்க்கேன் ஆளுரிமை
குன்றாமல் செய்தார் குமரேசா—என்றும்
வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல். (அ)

இ-ள்.

குமரேசா! சுபன் முதலியோரை வினைக்கு உரியவராகத் தெரிந்து ஏன் பெருமை செய்தார்? எனின், வினைக்கு உரிமை நாடிய பின்றை அவனை அதற்கு உரியன்ஆகச் செயல் என்க.

கருமத்தையும் கருத்தாவையும் கருதுக என்கிறது.

இந்த வினையைச் செய்தற்கு இவன் உரியவன் என்று தெரிந்த பின்பு அவனை அந்த வினைக்கு உரிமையாளனாக உயர்த்தி யருளுக.

பின்றை = பின்பு; சாரியை சார்ந்து இங்ஙனம் வந்துளது. பிற்றை என வலிந்தும் வரும்.

அவனை = வினையாளனாகத் தேர்ந்துகொண்ட அந்த மனிதனை. சுட்டிய குறிப்பு அவன் நிலையை விளக்கியது.

அதற்கு = அமைந்த அந்தக் காரியத் தலைமைக்கு.

காரியங்களைச் செய்ய உரிமையாத் தெரிந்து தெளிந்து கொண்ட கருமத் தலைவனுக்கு அதிகார ஆற்றல்கள் முதலிய பெருமைகளைத் தந்து பேணிவரின், அவை சீர்மையாய்ச் சிறந்து நடந்து வரும். அவ்வரவால் ஆட்சி மாட்சியாய் உயர்ந்து விளங்கும் ஆதலால் அந்தக் கருமக் காட்சியை இங்ஙனம் உணர்த்தியருளினர்.

வினைகளை இனிது முடிக்க வுரிய வினையாளனுடைய மனம் மகிழ்ந்து வரும்படி பான்மையோடு மன்னன் அவனை மேன்மைப் படுத்தி வரவேண்டும்.

வினையாளன் உவந்துவர வினைகள் உயர்ந்து முடிந்து வரும்; அதனால் செல்வம் சுரந்து வரும்; அரசு செழித்து வரும். கரும வீரர்களைப் பெருமைசெய்து வருவதில் காரிய சித்திகள் மருமமாய் மருவி யுள்ளன.

தெளிந்த வினையில் தெளிந்தவனைச்
சிறந்த காலத் தொடும் விடுக்க;
விளைந்த அறிவாற் றலுமிலையேல்
மிக்க வுரிமை நின்பாலே
தளைந்த மனத்தான் ஆயிடினும்
தன்பால் வினையைச் சார்த்தற்க;
அளந்து வினையில் விடுத்தவனை
அதற்குத் தகுமாறு உரிமை செய்க.
(விநாயக புராணம்)

வினையாளரைத் தெரிந்து தெளிதலும், தேர்ந்து கொண்டபின் வினைகளில் அவரை விநயமாய் ஆண்டு வருதலும், அரசியில் துறைகளாய் ஆட்சி முறைகளாய் யாண்டும் நீண்டு வருகின்றன. செயல் வகைகள் செம்மையாய்ச் சிறந்து வரும் அளவே அரசு நிலைகள்

நன்மையாய் உயர்ந்து வருகின்றன. செயலாளரை உயர்த்தி வருபவர் எவ்வழியும் சிறந்து வருவர்.

இது சுபன் முதலானவர்பால் தெரிய வந்தது.

சரிதம்.

சுபன் என்னும் இவன் பாண்டி நாட்டிலே திருச் செந்தூரில் இருந்தவன். செங்குந்தர் மரபினன். உண்மையும் திண்மையும் உறுதியும் ஊக்கமும் பொறுதியும் போர்த்திறனும் உடையவன். இவனுடைய நிலைமை நீர்மைகளை வினவி யறிந்து உறையூரி லிருந்து அரசு புரிந்த சோழ மன்னன் இவனை வினையாளனாக விழைந்து கொண்டான். படைத்தலைவனுக்கு உரிய பெருமைகளை இவனுக்கு அவன் உரிமையோடு உதவியருளினன். அவ் வேந்தன் ஈழ்நாட்டு அரசன்மேல் படையெடுக்க நேர்ந்த பொழுது இவன் ஆர்ந்த துணையாய் நின்று ஆள்வினை புரிந்தான். அவன் வெற்றி பெற்று மீண்டான். இவனுடைய வினையாண்மைகளை வியந்து வேண்டிய மேன்மைகளை அரசன் உரிமையோடு செய்தான்.

ஆழநீள் கடற்கும் ஆங்கோர் அம்பிமேல் சென்றே அப்பால்
சூழ்திருச் செந்தூர் உற்ற சுபன்என்பான் துணையாக்கொண்டு
வாழி ராசாதி ராசன் மன்னவன் மருவ லான்தன்
ஈழநாடு ஒருநாள் தன்னில் திறைகொண்டு ஈண்டுற்றகுந்தம்.
(ஈட்டி எழுபது)

இவனை வினையாளனுக்கிப் பெருமை செய்துவைத்து வேந்தன் மேன்மை யடைந்துள்ள உண்மையை இதில் நுண்மையாய் ஓர்ந்து உணர்ந்து கொள்கின்றோம்.

ஏகன்.

இவன் சோழ நாட்டிலே ஆற்றூர் என்னும் ஊரில் இருந்தவன். நேர்மையாளன். சீரிய குணநலன்கள் இவனிடம் சீர்மையாய் அமைந்திருந்தன. இவனது நீர்மையை அறிந்து வாணமுதலியார் என்னும் பெருஞ் செல்வர் இவனைத் தமக்குச் செயலாளனாக அமைத்துக் கொண்டார். தலைமையான உரிமை யாவும் தந்திருந்து

மையால் அவரது பண்ணையைப் பலவழிகளிலும் செழிக்கச்செய்து இவன் விருத்திசெய்து வந்தான். முதலியார் இடையே காலமாயினர். அவருக்கு மகன் இருந்தான். அவன் பெயர் பூபதி. அந்தச் சிறுவனைப் படிக்கவைத்து சிறந்த அறிவாளியாய்த் தெளிவுறச் செய்தான். அவன் பருவம் அடைந்தபின் இவனுடைய உரிமை உதவிகளை வியந்து உவந்து நன்றி பாராட்டி நலம் பல புரிந்தான்.

ஏகன் என்பவனை வாணன்
இனிய ஓர் துணையாக் கொண்டான்;
வாகைமீக் கூர்ந்து வந்தான்
வளங்களும் பெருகி வந்த;
யூகமும் வஞ்சம் இல்லா
உள்ளமும் உடையான் நண்பன்
ஆகவே வாய்த்தால் அன்னான்
ஆக்கமேல் வளரும் அன்றே.

இவ்வாறு உலகம் போற்றிவர இவன் உயர்ந்து நின்றான்.

அரிமுகர்.

இவர் பாண்டி நாட்டிலே பன்றிமலை என்னும் பதியில் இருந்தவர். மதிநலம் வாய்ந்தவர். பன்றி முகமும் மனித உருவும் மருவிப் பன்னிருவராய் இவர் மன்னியிருந்தார். பழைய ஒரு சாபம் அற்று இறைவன் அருள்பெற்று விழுமியராய் இவர் விளங்கி நின்றார். இவரது நிலைமையைப் பாண்டிய மன்னன் அறிந்தான். அமைச்சரை விடுத்து அழைத்துவரச் செய்தான். வந்து வணங்கிய இவரைக் கண்டு அரசன் உவந்தான். தெளிந்த அறிவும் சிறந்த ஆண்மையும் உயர்ந்த சொல் வன்மையும் உடைய இவரை வினையாளரா விழைந்து கொண்டான்; வேண்டிய பெருமைகளை உரிமையுடன் செய்தான். பாண்டிய மன்னன் செய்த பண்பாடுகளை யாவரும் வியந்து பாராட்டி உவந்து வந்தனர்.

வந்தி றைஞ்சிய வராகமா மைந்தரை நேர்கண்டு
அந்த மில்களிப் படைந்துவேந்து அமைச்சியற் கிழமை
தந்து வேறுபல் வரிசையும் தக்கவா நல்கிக்
கந்து சீறிய கடகரிக் கைதவன் பின்னர். (1)

பழைய மந்திரக் கிழார்மடப் பாவைபோல் வாரை
விழவு சால்கடி மங்கல விதியினுல் புணர்த்தி
அழகி தாமென நடத்தினுன் அணையரும் வீரக்
கழலி னுற்கொரு கவயமும் கண்ணுமாய் நடப்பார். (2)

உடம்பா திரண்டிற் குயிரொான் றெனஒன்றி ஐவாய்
விடம்பாய் அரவம் விழுங்கும் இரைஒத்து நெஞ்சம்
திடம்பாடு கொள்ள வினைவாங்கிச் செழியன் கல்வி
இடம்பாடு நல்கும் பயன்போல் மகிழ்வெய்த நின்ருர். (3)
(திருவிளையாடல் 46)

தனது கருமத் தலைவராக இவரை அமைத்துக் கொண்ட பின்பு, வேந்தன் இவர்க்குப் பெருமை செய்துள்ள அருமைகளை இவை வரைந்து காட்டியுள்ளன. பொருள் நயங்களைக் கருதிக் கண்டு கொள்க. வினைக்கு ஒருவனை உரிமை ஆக்கிய பின்பு அவனை அதற்கு உரிய பெருமையில் அரசன் உயர்த்தி வைக்க வேண்டும் என்பதை ஈண்டு இவர்பால் உணர்ந்து கொள்கின்ருேம்.

**காரியம் செய்யும் கருமத் தலைவரைச்**
**சீரியராச் செய்க தெளிந்து.**

வினையாளரை மேன்மைப் படுத்துக.

---

519 நின்றதிரு நீங்கியதே நீடுகுபன் கேண்மையன்று
குன்றியதால் என்னே குமரேசா—என்றும்
வினைக்கண் வினையுடையான் கேண்மைவே ருக
நினைப்பானை நீங்கும் திரு. (கூ)

இ-ள்.

குமரேசா! செயலாளன் உரிமையை மாருக எண்ணிய குபன் ஏன் திரு இழந்து இழிந்தான்? எனின், வினைக்கண் வினையுடையான் கேண்மை வேறு ஆக நினைப்பானை திரு நீங்கும் என்க.

நம்பின பின்பு ஐயுறுவது வெய்ய துயரமாம்.

காரியத்தில் கருத்துடைய வினையாளன் நட்புரிமையைத் தவருக நினைப்பவனை இகந்து திருமகள் நீங்குவள்.

வினையாளனையும் திருவாளனையும் ஈண்டு மருமமா யுணர்ந்து கொள்கிறோம். அரசன் பெருஞ் செல்வம் உடையவன்; அந்தச் செல்வ வளங்கள் மேலும் மேலும் பெருகி வருவது வினையினாலேயாம். ஆகவே வினையுடைமைக்கும் திருவுடைமைக்கும் உள்ள உறவுரிமைகள் ஈண்டு இனமாய்த் தெரிய வந்தன.

முயற்சி திருவினை ஆக்கும் என்றதனால் வினையின் உயர்ச்சியை ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம்.

இத்தகைய வினையைச் செய்து வருபவனை வித்தக விவேகமாய்ப் பேணிவரவேண்டும் என்பது காண வந்தது. ஆற்றலாளனை ஆதரித்து வருதலே ஆக்கிய தலைவனுக்கு ஏற்றமான மேன்மையாம்.

வினைக்கண் வினையுடையான் என்றது தான்செய்ய நேர்ந்த கருமத்தில் கண்ணும் கருத்துமாய் உழைத்து வருகிற உண்மையான உரிமையாளனை.

நெஞ்சம் நேர்மையுடையவன் ஆதலால் அஞ்சாமை இவனிடம் இயல்பாயமைந்திருக்கும். தன்னை வினையில் நியமித்த தலைவனுடைய நன்மையையே யாண்டும் கருதி வருபவன்; அந்த உரிமையால் அரசன் எதிரே எதையும் அவன் துணிந்து பேசுவான்.

வினையாண்மையுடையானது இந்தக் கேண்மையை வேந்தன் மேன்மையாய்ப் போற்றிக்கொள்ளவேண்டும். போற்றாமல் வேறாய் மாறுபடின் வினையாள் விலகி விடுவன்; வினை பழுதாம்; உண்மையான அத்தகைய உத்தமனை பிரிய நேர்ந்தானே! இந்தப் பித்தனிடம் வேலை செய்வது பிழை என்று எவரும் நுழைய அஞ்சுவர்.

உரிய உழைப்பாளியை ஒழிய விடுவது பெரிய இழவாம். பழகினவனைப் பழுது படுத்த லாகாது.

ஆக்கி வருகிற காரியம் கெடின் ஆக்கம் கெடும்; அது கெடவே அரசுக்கு அவலக் கேடுகளாம்.

நினைப்பானை நீங்கும் திரு என்றதனால் அந்த நினைப்பின் தீமையும் நினைக்கப்பட்டவனது நன்மையும் தெரிய வந்தன. உரிய வினையாளைப் பிரியமாப் பேணுக.

தனயன் என்ன செய்யினும் தந்தை பொறுத்துக் கொள்ளுதல் போல் வினையன் யாது செய்யினும் வேந்தன் சகித்து அணைத்துக் கொள்ள வேண்டும்.

இன்னா செயினும் விடற்பால ரல்லாரைப்
பொன்னாகப் போற்றிக் கொளல்வேண்டும்—பொன்னொடு
நல்லில் சிதைத்ததீ நாள்தொறும் நாடித்தம்
இல்லத்தில் ஆக்குத லால். (நாலடியார் 225)

தனக்கு இதம் செய்யும் இனிய கேண்மையாளர் சில சமையங்களில் இன்னா செய்ய நேரினும் அவரைப் பொன்னாகப் போற்றிக்கொள்ள வேண்டும் என ஒரு சங்கப் புலவர் இங்ஙனம் நன்கு உணர்த்தி யுள்ளார்.

எரி ஒரோவழி இல்லைச் சுடநேரினும் சமையல் முதலியன செய்ய நாளும் அதனை நயந்து பேணி வருகிறோம். அதனைப் பேணாதுவிடின் வாழ்வு என்னாம்? அது போல் வினையாளர் சில சமையம் கடுமையாய் நடந்து கொண்டாலும் அவரை வெறுக்கலாகாது: விழைந்து பேணிக் கொள்ளவே வேண்டும்; அதனால் இருவர்க்கும் நலமாம் என்பது இதனால் விளங்கி நின்றது.

வாழ்வுக்கு இன்றியமையாத துணையாய் ஒன்றி யுள்ள நேயரை நேயமாய்த் தழுவி வருபவனே காரிய வாதியாய் யாண்டும் பெருமை மிகப் பெறுகிறான். உழைப்பாளி உள்ளம் உவந்துவரின் உழைப்பின் பலன்கள் வெள்ளமாய் விரிந்து வரும்.

நல்ல வினையாளரை நயந்து தழுவிக் கொள்வதே நலமாம்; நயவாது இகழ்ந்தால் செல்வம் கெடும்.

இவ்வுண்மை குபன்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் சாளுவ தேசத்து அரசன். பெருந் திருவும் அருந்திறலாண்மைகளும் அறிவு நலன்களும் இவனிடம் நன்கு அமைந்திருந்தன. அரசியல் முறைகளை இனிது அறிந்து இவன் ஆட்சி புரிந்து வந்தான். காட்சிக்கு எளியனாய்க் கடுஞ்சொல் இல்லாதவனாயிருந்தாலும்

யாரையும் எளிதில் நம்பும் பேதைமையும் இவனிடம் பெருகி இருந்தது. தாபதர் என்னும் பெரியவர் ஒருவரைப் பேரன்போடு இவன் போற்றி வந்தான். அவர் கருமத் தலைவராயும் மதிமந்திரியாயும் குருவாயும் அமர்ந்து இவனுக்கு உறுதியுண்மைகளை உரிமையோடு உரைத்து வந்தார். அரசன் வணங்கி வழிபட்டுப் போற்றி வந்தமையால் நாட்டில் அவர்க்கு மதிப்பு மிகுந்து வந்தது. இதைக் கண்டு சிலர் பொருமை கொண்டனர். அமையம் பார்த்துக் கோள்கள் மூட்டினர். தீய கோளர் வாய்ச்சொல் இவனது தூய உள்ளத்தையும் பழுது படுத்திப் பாழாக்கியது. தெளிந்த ஞான சீலரான அவர்மேல் இவன் பொழிந்து வந்த அன்பு புலையாய் மாறியது. வேறுபாடு மண்டி மாறுபட்டு இவன் மதிமருண்டு வருவதை அறிந்ததும் அப்பெரியவர் பதியை விட்டு அகன்றார். ஞானஒளி நீங்கவே ஈன இருள் எங்கும் படர்ந்து ஓங்கியது. அரிய செல்வ வளங்கள் குறைந்தன. வறிய நிலைகள் வந்து புகுந்தன. பெரியவரை இழந்ததால் பேரிழவு வந்ததென்று அறிவாளிகள் யாவரும் பரிதாபமாய் இவனை வைய நேர்ந்தனர். விரிவை இலிங்க புராணத்தில் அறிக.

அரிய தாபதர் அறிவருள் அமைந்தவர் குபன்பால்
பெரிய மந்திரி யாகிமுன் பிருந்தவர் பிழையாய்
உரிய கேண்மையை உவந்திலன் எனவுணர்ந் தகன்றார்
கரிய தீமைகள் விளைந்தன; கழிந்திவன் ஒழிந்தான்.

உரிய பெரியவர் உறவை உவந்து பேணுமல் வேறாய் நினைந்து மாறுபட நேர்ந்தமையால் திருவிழந்து இவன் தேய்ந்து போயுள்ளான். அந்த வுண்மையை இதில் ஓர்ந்து உணர்ந்து கொள்கின்றோம்.

**செயலாளர் சிந்தை திரியினே செல்வம்**
**அயலாய் ஒழியும் அழிந்து.**

உரிமையாளர் உளம் நோகச் செய்யாதே.

———

520 வாடாமல் நாடி இக்கு வாகுநிற்ப ஞாலமெலாம்
கோடாத தென்னே குமரேசா—வீடாமல்
நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு. (ம)

இ-ள்.

குமரேசா! வினையாளரை நாடிவந்த இக்குவாகுவின் நாடு ஏன் எவ்வழியும் வளமாய்க் கூடி வந்தது? எனின், வினை செய்வான் கோடாமை உலகு கோடாது; மன்னன் நாள்தோறும் நாடுக என்க.

வேந்தும் வினையாளும் வியனுற அறிய வந்தனர்.

வினையாளன் செம்மையாய்க் காரியம் செய்துவரின் உலகம் நன்மையாய் நீடிவரும் ஆதலால் அரசன் நாளும் அவனை நன்கு ஆய்ந்து வருக.

மன்னனது நாட்டம் மன்னிய தேட்டமாய்ப் பெருகி வருதலால் அதன் மகிமை இங்ஙனம் தெரிய வந்தது.

வினை செய்வான் என்றது அரசகாரியங்களை ஆற்றி வருபவனை. அரசாட்சிக்கு உரிய கருமங்களை உரிமையுடன் செய்து வருபவர்களுள் தலைமையானவர் அமைச்சர். அவரும் பல துறைகளில் பிரிந்து தனித்தனியே தலைமை தாங்கி நிற்பர். கல்வி நிதி வாணிகம் உழவு முதலாகப் பல வகைகளிலும் பரவி மந்திரிகள் பலர் உள்ளனர். எல்லாருக்கும் தலைவரா யிருப்பவர் முதல் மந்திரி. அவர் அரசனோடு நேரே அதிகமான தொடர்புடையவர். அரசு முறையை ஊக்கி வருபவர் அவரே.

அமைச்சர்களை அடுத்துப் பல்வேறு அதிகாரிகள் ஆட்சியில் பங்கு பூண்டுள்ளனர். இவ்வாறு நேர்ந்துள்ளவர்கள் தம் காரியங்களைச் செவ்வையாய்ச் செய்துவரின் வேந்தனுடைய ஆட்சி மாட்சியாய் நடந்துவரும்; நாட்டில் எவ்வழியும் வளங்கள் ஓங்கி விளங்கும். நாட்டு மக்கள் யாண்டும் இன்பமாய் இனிது வாழ்ந்து வருவர்.

உரிமையாய் அமைந்த வினையாளரை அரசன் ஒழுங்காக் கவனித்துவரின் தம் தம் கருமங்களை அவர் சரி

யாய்ச் செய்து வருவர்; வரவே எங்கும் சேமங்கள் இசைந்து வரும்; எல்லாரும் சிறந்து மகிழ்ந்து வாழுவர்.

உலக மக்களுக்குத் தலைமையாய் உயிர்போல் இருப்பவன் அரசன் ஆதலால் எவர்க்கும் யாதும் பழுது நேராதபடி யாண்டும் விழிப்பா யிருந்து பாதுகாக்க வேண்டிய பொறுப்பு அவனுக்குப் பிறப்புரிமையாய் நேர்ந்துள்ளது. புரந்துவரும் அளவே புரவலனாகிறான்.

வீவில் வீங்குநீர் வேலி வாழ்பவர்க்கு
ஆவி யாபவர் அரைசர் ஆதலால்
காவல் ஓவுங்கொல்? என்று கண்படான்;
மாவல் தானையம் மன்னர் மன்னனே. (சூளாமணி)

உலக உயிர்களைக் கண்ணும் கருத்துமா நோக்கி ஒரு மன்னன் பாதுகாத்து வந்துள்ள உண்மையை யாவரும் உவந்து காண இது நயமா உணர்த்தியுளது.

காரியம் புரிபவரைக் கருதி நோக்காமல் தலைவன் பராமுகமா யிருப்பின், தம்மை நாடி மேல் நோக்குவார் இல்லை என்று எண்ணி வினை செய்பவர் மடியுறுவர் ஆதலால் அஃது உறாதபடி இடையறாது கவனித்து வருக என்பார் **நாள்தோறும் நாடுக** என்றார். வினையாளரை வேந்தன் நாடிவரின் கோடி வருமானம் கூடி வரும்; நாடு முழுவதும் நலமாய் வாழ்ந்து வரும்.

வேலையாள் செய்துவரும் வேலையை வேந்தனேர்
காலையும் மாலையும் கண்டுவரின்—வேலையே
வேலியா யுள்ள வியனுலகம் மேன்மையெலாம்
பாலியா நிற்கும் பரந்து.

இதனை ஈண்டு ஓர்ந்து சிந்திக்க வேண்டும்.

விரிந்து பரந்துள்ள உலகத்தைத் தான் ஒருவனே சென்று எப்படிக் கவனிக்க முடியும்? என்று கவலுகின்ற அரசனுக்கு இப்படி ஓர் உபாயத்தை உணர்த்தியருளினார். வினையாளர் செய்து வருகிற செயலை நயமாய்க் கவனித்து வா; யாவும் நலமாய்ச் செழித்துவரும்.

அமைச்சர் முதலிய தன் காரியத் தலைவர்கள் தம் கருமங்களில் கோடாதபடி நாள்தோறும் அரசன் நாடி வரின் நாடெல்லாம் செம்மையாய் நீடிவரும் என்பார், **வினைசெய்வான் கோடாமை உலகு கோடாது** என்றார்.

காரகனை நாடி ஒரு ஊரையும், காருகனை நாடி ஒரு குறு நிலத்தையும், மண்டலீகனை நாடி ஒரு மண்டலத்தையும், பட்டவர்த்தனனை நாடி ஒரு தேசத்தையும், இங்ஙனமே வினைக்குரியாரை நாடி அனைத்தையும் கோடாமல் கொண்டு ஆண்டு வருபவர் மன்னர் மன்னவராய் மாண்போடு யாண்டும் நீண்டு வருகின்றார்.

முயற்சியால் உயர்ச்சிகள் உளவாகின்றன; அந்த முயற்சிகளைச் செய்துவருபவரை உயர்த்தி ஊக்கிவரின் ஆக்கங்கள் உயர்ந்துவரும் ஆதலால் வினையாளரை நாளும் நோக்கி வருவது நல்ல பாக்கியமாய் வந்தது.

வினைக்கண் முயற்சி தவறாது வினையன் கேண்மை வேறாக
நினைக்கும் அவன்மற் றவ்வினையி னிங்குப்; பிறரும் அதில் நேரார்;
முனைக்கும் வினைஞன் கோடாதே முதிர்நீ ருலகம் கோடாது;
தனைப்பின் வைகல் தொறும்நாடிச் சாரும்வினையும் நாடுகவே.
(விநாயக புராணம்)

தெரிந்து வினையாடலை இது தெளித்து வந்துள்ளது.

கருமக் காட்சிகள் ஆட்சியின் மாட்சிகளாய் அமைந்துள்ளன. அவற்றைக் கருதியுணர்ந்து வருபவன் உறுதிநலன்களை யடைந்து உயர்ந்து கொள்ளுகிறான்.

செயலாளரை அரசன் ஆராய்ந்துவரின் நாடு உயர்வாய் ஓங்கி எவ்வழியும் வியனாய் விளங்கி வரும்.

இவ்வுண்மை இக்குவாகுபால் உணர வந்தது.

## சரிதம்.

இவ்வேந்தன் சூரியகுலத் தோன்றல். மனுவின் பேரன். தந்தை பெயர் வைவச்சுவதன். இவன் அதிசய அறிவும் அற்புத ஆற்றலும் அரிய பெரிய வர பலங்களும் உடையவன். திருவயோத்தியிலிருந்து அரசு புரிந்த சக்கரவர்த்திகளுள் இவன் தனிமுதல் தலைவன்.

அலம்புசை என்னும் அழகிய மங்கையை மணந்து இனிய போகங்களை நுகர்ந்து மாந்தர் யாவரும் மகிழ்ந்து வாழ்ந்துவர இவன் ஆட்சிபுரிந்து வந்தான். பெரிய மெய்ஞ் ஞானிகளும் அரிய தவயோகிகளும் இவனுடைய குணநலன்களை வியந்து உளம் உவந்து வந்தனர். இவன் வழிபட்டு வந்த திருமாலின் திரு உருவமே திருவரங்கத்தில் கோயில் கொண்டுள்ளது. **வைகுந்தப் பெருமாளை வையம் தந்த பெருமான்** என்று வையமாந்தர் எல்லாரும் இவனை வழிமுறையே வாழ்த்தி வந்துள்ளனர்.

பிணியரங்க வினையகலப் பெருங்காலம் தவம்பேணி
மணியரங்க நெடிமுடியாய்! மலரயனை வழிபட்டுப்
பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாம்காண
அணியரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார்.

(இராமா, குலமுறை 2)

விசுவாமித்திர முனிவர் சனக மன்னனிடம் இவ் வேந்தனைக் குறித்து இவ்வாறு வியந்து புகழ்ந்துள்ளார். அறிவுடையவர் எவரும் இவனை அறிவர்; சிறந்த அறிவுக்குப் பயன் இவனை அறிந்து கொள்வதே; இவனை அறியாதவர் அறிவிலிகளே யாவர் என முனிவர் மொழிந்திருத்தலால் இவனது மகிமையை உணர்ந்து கொள்கிறோம். **அறியாதார் அறியாதார்** என்றதில் அறிவின் சுவை மருவியுளது. இவனுடைய ஆட்சி முறைகள் மாட்சிமிக வுடையன. சூரியன் எதிரே உலகம் இயங்கி வருதல்போல் இவன் ஆளுகையில் நாடு நடந்து வந்தது. கருமத் துணைவர்களாய் மருவியிருந்த அமைச்சர் முதலாயினோரை நாளும் இவன் கருதி வந்தமையால் தேசம் எவ்வழியும் செவ்வையாய்த் தேசு மிகுந்து வந்தது. வினைசெய்வாரை நாள்தோறும் மன்னவன் நாடிவரின் நாடு யாதும் கோடாமல் யாண்டும் செம்மையாய் நன்மை தோய்ந்துவரும் என்பதை யாவரும் இவன் ஆட்சியில் காட்சியாய்க் கண்டு களித்து வந்தனர்.

நாடோறும் ஈசன் நடத்தும் தொழில் உன்னூர்;
நாடோறும் ஈசன் நயந்தூட்டல் நாடிடார்;

நாடோறும் ஈசன் நல் லோர்க்கு அருள் நல்கலால்
நாடோறும் நாடார்கள் நாள்வினை யாளரே.

(திருமந்திரம் 2022)

ஈசனும் நாள்தோறும் அகில உலகங்களையும் நாடியாண்டும் அயராது வினைகள் புரிந்து வருகிறான். நல்லோரை உவந்து காத்தும் தீயோரைச் சினந்து தண்டித்தும் எவ்வழியும் இனிது பாதுகாத்து வருவதைக் கருதியேனும் மாந்தரும் வேந்தரும் தம் கடமைகளை நாடோறும் நாடிச் செய்து வரவேண்டும் என்பதை இதனால் உறுதியாய் அறிந்து கொள்கின்றோம்.

காரியம் புரியும் கருத்தனை அரசன்
கருத்துடன் நாள்தொறும் கருதின்
சீரிய கருமம் செம்மையாய்ச் சேரும்;
செல்வமும் ஆட்சியும் சிறந்து
நேரிய முறையில் மன்பதை இன்ப
நிலையினில் நெறியுடன் வாழ்வார்;
பாரியல் உணர்ந்த மன்னவன் பார்வை
பரிதியின் பார்வையாம் பரந்தே.

**ஆய்ந்து வினையாளை ஆண்டுவரின் வேந்துவளம்
வாய்ந்து வளர்ந்து வரும்.**

காரியம் செய்வாரைக் கருதி வருக.

---

இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

1 நல்ல வினையாளனை நாடிக் கொள்க.
2 வருவாயைப் பெருக்கி வளம் செய்பவனை ஆளுக.
3 அன்பு முதலிய பண்பாளரை ஆய்ந்து சேர்.
4 வினைவகையால் வேறு படுபவர் பலர் உளர்.
5 திறமுடையாரைத் தெரிந்து செயலில் ஏவுக.
6 காலம் கருதிக் கருமம் செய அருள்.
7 அரிய வினையை உரியவனிடம் விடுக.
8 வினையாளைத் தேர்ந்தபின் வினைக்கு உரியனாக்குக.
9 வினையாளனை விழைந்து பேணுக.
10 நாளும் செயல் நிலைகளை நாடி வருக.

**52-வது தெரிந்து வினையாடல் முற்றிற்று.**

---

# ஐம்பத்து மூன்ருவது அதிகாரம்

## சுற்றம் தழால்

அஃதாவது உற்ற உறவினரை அரசன் உரிமையுடன் ஆதரித்தல். வினையாளரைத் தேர்ந்து தழுவி அரச காரியங்களை இனிது நடத்தவேண்டும் என்று முன்னம் உரைத்தார். இதில் சுற்றத்தாரைத் தழுவி ஒழுக வேண்டும் என்று உணர்த்துகின்ருர். அது புறக்காட்சி; இது அகக்காட்சி; ஆதலால் அதன் பின் அமைந்து நின்றது. தழால் = தழுவுதல்; அணைத்தல்.

521 பற்றற்ற காலத்தும் பாண்டவர்பின் சோமகரேன்
குற்றமறப் போனுர் குமரேசா—முற்றுமே
பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. (க)

இ-ள்.

குமரேசா! செல்வம் நீங்கிய காலத்தும் பாண்டவர் பால் அன்பு பாராட்டி ஏன் சோமகர் பின்பு சென்ருர்? எனின், பற்று அற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல் சுற்றத்தார் கண்ணே உள என்க.

கிழமையாளரை இது கிளர்ந்து காட்டுகிறது.

செல்வம் இல்லாத பொழுதும் உள்ளன்புடன் உரிமை கொண்டாடிவரும் இயல்புகள் உறவினர் இடமே இயல்பா யிசைந்து உள்ளன.

பிறரிடம் இல்லை என்பதை ஏகாரம் உணர்த்தி நின்றது.

பற்று என்றது இங்கே செல்வத்தை. மக்கள் மிக்க ஆர்வத்துடன் பற்றி வருவது ஆதலால் **பற்று** என்று பொருளுக்கு ஒரு பெயர் உறவாய்த் தோன்றியது.

> பரிந்து ஓம்பிப் பற்றுஅற்றேம் என்பர்; விருந்தோம்பி
> வேள்வி தலைப்படா தார். (குறள் 88)

இதில் **பற்று** என்னும் சொல் பொருளைக் குறித்து வந்திருத்தலைக் கூர்ந்து ஓர்ந்து கொள்கின்றோம்.

பழைமை=கனிந்த உரிமை.

முதிர்ந்து கனிந்த கனி பழம் என நின்றது. மரபு முறையே தொடர்ந்து படிந்து எவ்வழியும் கிழமை சுரந்து வருகிற உறவுரிமை பழைமை என வந்தது.

பாராட்டுதல்=உவந்து கொண்டாடுதல்.

சுற்றத்தார்=உரிமையான உறவினர்.

இன்பம் உறினும் துன்பம் வரினும் அன்புடன் வந்து சுற்றி நிற்கும் கிழமையாளர் **சுற்றத்தார்** என வந்தார்.

கண் இரண்டனுள் முன்னது பெயராய்க் காலத்தைக் குறித்தது; பின்னது உருபாய் நின்று இடத்தை உணர்த்தியது.

சுற்றத்தாரை ஆதரவுடன் அணைத்து எவ்வழியும் செவ்வையாய் அரசன் ஒழுகி வர வேண்டும் என்று உணர்த்துகின்றார் ஆதலால் அவருடைய உண்மையான உறவுரிமைகளையும் நிலைமை நீர்மைகளையும் முன்னதாக இங்ஙனம் இனிது விளக்கி யருளினர்.

பிறருடைய அன்புரிமைகளை நன்கு அளந்து அறிதற்கு வறுமை ஒரு நல்ல கருவி. அந்த உரைகல்லில் உரைத்துப் பார்த்தால் உண்மை உறவுகள் தெளிவாய்த் தெரியவரும். உரிய உறவே பிரியாத பிரியம் உடையது.

ஒரு குளத்தில் நீர் நிறைந் திருந்தபொழுது தவளைகள் பல வந்து சேரும்; அந்நீர் வற்றியவுடன் அவை யாவும் அதனைவிட்டு அகன்று போம். செல்வம் உள்ள பொழுது இல்லாத உரிமைகளை யெல்லாம் எடுத்துக் கொண்டாடி எல்லாரும் வந்து அவனை அடுத்து நிற்பர்; அது ஒழிய நேரின் யாவரும் ஒருங்கே ஒழிந்துபோவர். கிளைஞர் மாத்திரம் பரிவுடன் பழைய வுரிமையாளராய்க் கிழமை கூர்ந்து கெழுமி வளமை தோய்ந்து நிற்பர்.

அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு. (மூதுரை 17)

நீர் உற்றபொழுது கொக்கு நாரை முதலிய பறவை கள் குளத்தில் வந்து கூடி நிற்கும்; அது அற்றபோது அவை அயலே பறந்துபோம்; குமுதம் நெய்தல் முதலிய மலர்கள் நீர் உற்ற போதும் அற்ற போதும் அலர்ந்தும் புலர்ந்தும் அங்கேயே தங்கியிருக்கும். இந்த மலர்கள் போல்பவரே நல்ல உறவினர் என ஔவையார் இவ்வாறு சுவையாய் உணர்த்தி யிருக்கிருர்.

பற்று அற்ற நிலைக்கு நீர் அற்ற குளமும், பழமை யற்ற புலைக்குப் பறந்துபோன பறவைகளும், கிழமை யுற்ற கேண்மைக்கு மேன்மையான மலர்களும் இதில் ஒப்பாய் வந்துள்ளன. கொட்டி=நீரில் நிலவும் கொடி.

பழமை பாராட்டும் பண்பு கிழமையான சுற்றத்தா ரிடமே வளமையாய் வலிமை வாய்ந்துள்ளது என்பதை உவமானத்தால் இது தெளிவா விளக்கியுளது.

எத்தகைய நிலையிலும் மாருமல் அன்பு புரிகிற இத்தகைய உறவினரைப் பேணி வருபவர் பெருமை யுறுவர். உறவு உரமாய் வரின் அரசு உயர்வாய் வரும்.

பற்றும் வெறுக்கை ஒழிந்துழியும்
பழைமை எடுத்துப் பாராட்டும்
சுற்றம்; அதனைப் பெருங்கொடையால்
தூய மொழியால் தழுவலுறின்,
அற்றம் அவனுக்கு ஒருகாலும்
அணுகாது; ஆக்கம் மிகப்பெருகும்;
முற்ற நினைக்கும் பகைவர் தொழில்
முற்றுது; ஏம கண்டனே! (விநாயக புராணம்)

சுற்றத்தைத் தழுவி ஒழுகும்படி தனது இளவரச னுக்கு ஒரு வேந்தன் இவ்வாறு உறுதி கூறியுள்ளான். சுற்றத்தாரை ஆதரித்து வரவேண்டிய முறைகளையும் அவரால் உளவாகும் ஊதியங்களையும் உறுதி நலன்களையும் இதனல் அறிந்து கொள்கிறோம்.

முன்இன்னர் ஆயினும் மூடும் இடர்வந்தால்
பின்னின்ன ராகிப் பிரியார் ஒருகுடியார்;
பொன்னுச் செயினும் புகாஅர் புனலூர!
துன்னினர் அல்லார் பிறர். (பழமொழி 66)

ஏதேனும் ஒரு காரணத்தால் பகையாயிருந்தாலும் இடர் நேர்ந்தபோது உறவினர் உரிமையுடன் வந்து உதவுவர்; எவ்வளவு இதம் செய்திருந்தாலும் பிறர் இவ்வாறு உதவி புரியார்; ஒதுங்கி விடுவர் என இது உரைத்துளது.

சுற்றத்தாரின் உள்ளப் பரிவும், மற்றவரின் கள்ளக் கரவும் தெள்ளத் தெளிய இங்கே தெரிய வந்துள்ளன.

செல்வம் அற்று வறுமை யுற்றபோதும் உறவினர் உரிமையுற்று உள்ளன்புடன் சூழ்ந்து உதவ வருவர். இவ்வுண்மை சோமகர் பால் தெரிய வந்தது.

## சரிதம்

இவர் பாஞ்சால தேசத்தில் இருந்தவர். அரசர் மரபினர். பெருந்திருவினர். அருந் திறலாண்மைகள் நிறைந்தவர். பஞ்ச பாண்டவர்க்குத் தாய்வழியில் நெருங்கிய உறவினர். தருமர் முதலிய ஐவரும் அரசிழந்து அடவியில் புகுந்ததை அறிந்ததும் இவர் பரிந்து வருந்தினர். விரைந்து அவரை நேரே காண வந்தனர். விராடன் துருபதன் முதலிய அரசர்களும் இவ்வுறவின ரோடு சேர்ந்தனர். காமியம் என்னும் வனத்தில் வந்து அவரைக் கண்டனர். பாஞ்சாலியோடு பரதேசிகளாய் அவர் வனவாசம் செய்ய நேர்ந்துள்ளதை நோக்கி நெஞ்சம் துடித்தனர். துரியோதனன் ஆதியரை வென்று அரசை மீட்டித் தருகிறோம் என்று இவர் வீர வாதம் கூறினர். உரியவர் உரைகள் பரிவு மீதூர்ந்து வந்தன.

பாரிழந்தஇப் பாதகச் சூதுகேட்டு
ஈரும் நெஞ்சினர்; ஏமுறு நோக்கினர்;
பேர றன்தரு பிள்ளையைப் பார்த்தருள்
கூர அன்பொடு இவையிவை கூறுவார்: (1)

மரபின் வல்லியை மன்னவை ஏற்றிய
குருகு லேசனைக் கொற்றவெஞ் சேனையோடு
இரிய எற்றுதும் இப்பொழு தேயென
உரமும் சீற்றமும் தோற்ற உரைசெய்வார்: (2)

தம்பி மாரைத் தனித்தனி யேயுயிர்
வெம்பி வீழ விரைந்துவில் வாங்கியின்று
உம்பர் காண உயிரழிப் போம்எனத்
தும்பை சூடக் கருதினர் சொல்லுவார்: (3)

வஞ்ச கச்சுப லன்தரு மைந்தனை
வெஞ்ச மத்தினில் வீழக் கணத்திடைச்
செஞ்ச ரத்தின் வழியுயிர் செல்லவே
எஞ்சுவிக்க எழும்! என்று இயம்புவார். (4)

(பாரதம் 3-1)

நெஞ்சம் கனன்று இன்னவாறு இவர் மூண்டு நிற்கவே கண்ணன் ஆற்றி யருளினன். "வனவாசம் செய்து பாண்டவர் மீண்டு வந்தபின் வேண்டியதைச் செய்வோம்" என்றான்: இவர் அடங்கி நின்றார். கிழமையோடு இவர் உரிமை கொண்டாடிய நிலைகளை இவ்வுரைகளால் உணர்ந்து கொள்கிறோம். பற்று அற்ற கண்ணும் பழமை பாராட்டும் பரிவுகள் சுற்றத்தார் கண்ணேயே உள என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

**உற்ற உறவே உருகிவரும் ஊறுறுங்கால்**
**மற்றவர் போவர் மறைந்து.**

உரிய சுற்றமே உற்ற துணை.

---

522 திண்டோள் இராசவர்மன் சேர்ந்தசுற்றத் தாலுயர்சீர்
கொண்டான்முன் என்னே குமரேசா—கொண்ட
**விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா**
**ஆக்கம் பலவும் தரும்.** (௨)

இ-ள்.

குமரேசா! அன்புள்ள சுற்றத்தால் இராசவர்மன் எல்லா இன்ப நலன்களையும் ஏன் பெற்று வந்தான்? எனின், விருப்பு அறாச் சுற்றம் இயையின் அருப்பு அறா ஆக்கம் பலவும் தரும் என்க.

அன்பு நீங்காத உறவினர் அரசனுக்கு அமையின் வளர்தல் குன்றாத பல செல்வங்களையும் வளமா உதவி எவ்வழியும் அது வலிமை பயந்தருளும்.

விருப்பு=ஆசை; பிரியம். அறு=அறுத.

உள்ளே விருப்பம் இல்லாமல் வெளியே சுற்றத்தவர் போல் உற்றிருப்பவரும் உளர் ஆதலால் அவரை விலக்கி ஒழித்தற்கு இவ்வாறு விசேடித்து விளக்கினர். என்றும் மாறாத நிறைந்த அன்புடைய உறவு நிலை இங்ஙனம் நயமாய் உணர வந்தது.

இயையின் என்றது அவ்வாறு செவ்விய உறவினர் இயைதல் அரிது என்பது தெரிய நின்றது.

இயைதல்=எய்தல்; அமைதல். இயல்பாக வந்து இசைவதே உயர்வான உறவாய் உரிமை சுரந்து வரும்.

அரும்புதல் என்னும் தொழிற் பெயர் விகுதிகுன்றி அருப்பு என வலித்தல் விகாரம் பெற்று நின்றது.

அரும்புதல்=முளைத்தல்; கிளைத்தல்; வளர்தல்.

அருப்பு அறு ஆக்கம்=வளர்ச்சி குன்றாத செல்வம். மேலும் மேலும் கிளர்ச்சியாய் வளர்ச்சி மிகுந்து ஓங்கி வருகிற திரு ஈங்கு இங்ஙனம் உணர வந்தது.

விருப்பு என்று முதலில் வந்தமையால் அதற்கு இயைய அருப்பு என எதுகைத் தொடையாய் அமைந்தது. முதல் சீரிலும், நான்காம் சீரிலும் இவ்வாறு அமைந்து வருவது **ஒரூஉ எதுகை** எனப்படும். இந்த எதுகையை மிகவும் பிரியமாய் நூல் எங்கணும் அடிகள் அமைத்துள்ளார். அந்த உண்மையை இடங்கள் தோறும் நன்கு கண்டு கொள்ளலாம்.

இருசீர் இடையிடின் ஒரூஉவென மொழிப.

(தொல்காப்பியம், செய்யுளியல் 99)

இந்த இயல் விதி ஈண்டு எண்ணி யுணர வுரியது.

நான்காம் சீரில் வந்துள்ள எதுகையின் இன எழுத்திலேயே அடுத்த அடியைப் பெரும்பாலும் தொடுத்தருளுவார். **அருப்பு** என வந்திருத்தலால் **ஆக்கம்** என அமைத்தார். யாப்பு வகையில் விளைந்து வந்திருக்கும் விசித்திர நடைகள் வியந்து காணவுரியன. அறிவின்

சுவைகள் எவ்வழியும் பெருகிச் செவ்வையாய் வந்துள்ளமையால் திவ்விய நூலாய் இது சிறந்து திகழ்கிறது.

சுற்றத்தாரைத் தழுவி ஒழுகு என்று விதித்தார்; அவரது பழமை கிழமைகளை முதலில் தெளிவாக விளக்கினர்; அன்புரிமையுடைய அவரால் அரிய பல ஆக்கங்கள் உளவாம் என இதில் உணர்த்தியுள்ளார்.

நல்ல கிளைகள் அடர்ந்த தரு பலவகை நிலைகளிலும் தழைத்துச் செழித்துப் பணைத்து விளங்கும். அது போல் சிறந்த கிளைஞர்கள் அமைந்த நிருபன் எல்லா வழிகளிலும் வளமாய் உயர்ந்து வனப்புடன் வயங்கி எங்கும் சிறப்போடு திகழ்வான்.

நல்ல உறுப்புகளை உற்ற உடல் வலியும் வனப்பும் பெற்று விளங்கும்; உரிமையான உறவினரை உற்றவன் உரமும் திருவும் பெற்று உயர்ந்து விளங்குவான். உரிய இனிய உறவினர் அரிய பெரிய திருவினர் ஆதலால் அவரைப் பிரியமாய்ப் பேணி வருபவன் எவ்வழியும் பெருமை மிகப் பெறுகின்றன்.

உற்ற கவலைகளை நீக்கி உரிமையுடன் உதவி புரிய உரியவர் சுற்றத்தாரே. அவரை இனியராகப் பெற்றவன் இடர் நீங்கி இன்பம் ஓங்கி வருகின்றன்.

> வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்
> கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு
> அசாஅத்தான் உற்ற வருத்தம் உசாஅத்தன்
> கேளிரைக் காணக் கெடும். (நாலடி 201)

பெற்ற பிள்ளையைக் கண்டவுடனே தாய் பெரு மகிழ்ச்சி யடைகிருள். உற்றிருந்த பிரசவ வேதனைகள் முற்றும் மறைந்து போகின்றன. அதுபோல் உரிய உறவினரைக் கண்டபோது ஒருவன் துன்பங்கள் நீங்கி இன்பம் மிகப் பெறுகிறன். உவமானம் உவமேயங்களிலுள்ள நயங்கள் ஓர்ந்து சிந்திக்க வுரியன.

பிள்ளை சுற்றத்தார்க்கும்; தாய் அரசனுக்கு ஒப்பாம்.

தன் பிள்ளையைத் தாய் பேணி வருதல்போல் தனது சுற்றத்தாரை அரசன் தழுவி ஆதரித்து வர வேண்டும். உறவுரிமைகள் மரபு முறையாய் மருவி வந்துள்ளன. ஆதரித்து வளர்த்து வருகிற மகன் தாய்க்கும் தந்தைக்கும் ஆக்கம் பயந்து வருகிறான். தழுவி வருகிற சுற்றம் அரசனுக்கும் ஆட்சிக்கும் ஆக்கம்புரிந்து ஊக்கம் தந்து வருகிறது. நல்ல சுற்றம் வாய்த்தால் அது நல்ல பிள்ளைப்பேறு போல் எல்லா நலங்களையும் நல்கி எவ்வழியும் இன்பம் சுரந்து வரும்.

நல்ல உறவினர் யார்? உள்ளன்புடையவர்.

இந்த உடைமையாளரை உரிமையுடன் பேணி வருவது அரசன் கடமையாம்; அதனால் அரிய பல நன்மைகளும் பெரிய ஆக்கங்களும் உளவாம்.

அன்பு கனிந்த சுற்றம் அமைந்தவன் ஆக்கம் நிறைந்து எங்கும் இன்பமுடன் விளங்குவான்.

இவ்வுண்மை இராசவர்மன்பால் அறிய வந்தது.

**சரிதம்.**

இவன் சூரிய குலத்து அரசன். **தமன்** என்னும் மன்னன் புதல்வன். அறிவு அழகு ஆற்றல் வீரம் கொடை முதலிய நிலைகளில் இவன் தலைசிறந்து நின்றான். **மானினி** என்னும் பேரழகியை மணந்து பெரும் போகங்களை நுகர்ந்து நெறிமுறையே இவன் அரசு புரிந்து வந்தான். இவன் ஆட்சி யாண்டும் மாட்சியாய் நடந்து வந்தது. குடிகள் எவ்வழியும் மகிழ்ச்சியாய் வாழ்ந்து வந்தனர். இவனுடைய தாய்வழியிலும் தந்தை வழியிலும் உறவினர்கள் பலர் உயர் நிலைகளில் ஒளி மிகுந்து ஓங்கி யிருந்தனர். அவரனைவரும் இவன்பால் பேரன்பும் பெரு மதிப்பும் பூண்டு நின்றனர். இவனுடைய குணநலன்களும் கொடைத் திறங்களும் எல்லாருடைய உள்ளங்களையும் கவர்ந்து வந்தமையால் யாவரும் இவனை ஆவலுடன் தெய்வம் எனப் போற்றி வந்தனர். பகை வகை யாதுமின்றி இவனது நாடு பலவகையிலும் வளஞ்சுரந்து எங்கும் செழித்து விளங்கியது.

"பெருநீரால் வாரி சிறக்க, இருநிலத்து
இட்டவித்து எஞ்சாமை நாறுக, நாறுர
முட்டாது வந்து மழைபெய்க, பெய்தபின்
ஒட்டாது வந்து கிளைபயில்க, அக்கிளை
பால்வார் பிறைஞ்சிக் கதிரீன, அக்கதிர்
ஏர்கெழு செல்வர் களநிறைக, அக்களத்துப்
போரெலாம் காவாது வைகுக, போரின்
உழுகெழும் ஓதை வெரீஇப் பெடையொடு
நாரை இரியும் விளைவயல்
யாணர்த் தாக அவன் அகன்றலை நாடே" (தகடூர்)

இன்னவாறு நாடு நலமாய் வளம் பெருகி வரக் குடிகள் யாண்டும் உளம் உவந்து வாழப் பீடும் திருவும் நெடிது ஓங்கி நிலவப் பெரு மேன்மையுடன் இவன் விளங்கியிருந்தான். ஆர்வம் தோய்ந்த சுற்றத்தாரால் இவ்வெற்றித்தார் வேந்தன் கொற்றமும் கோப்பெருஞ் செல்வமும் பெற்று விளங்கினன். அன்புள்ள உறவினர் ஒருவனுக்கு உரிமையாய் அமையின் அவன் ஆக்கம் மிக வுடையனாய் என்றும் இன்பம் மிகப் பெறுவான் என்பதை உலகம் இவனிடம் உணர்ந்து தெளிந்து மகிழ்ந்தது. விரிவை மார்க்கண்டேய புராணத்தில் காண்க.

**அன்பமைந்த சுற்றம் அமையின் அவன்பெரிய**
**இன்பம் அடைவன் இனிது.**

*பிரிய உறவு பெரிய திரு.*

---

523 சுற்றம் கலவாச் சுயோதனனும் சிம்மகனும்
குற்றமுற்றார் என்னே குமரேசா—பற்றி
அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. (௩)

இ-ள்.

குமரேசா! சுற்றத்தாரோடு கலவாத துரியோதனனும் சிம்மகனும் ஏன் வாழ்விழந்து தாழ்வடைந்தார்? எனின், அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக் கோடு இன்றி நீர் நிறைந்து அற்று என்க.

சுற்றம் சுற்ருத வாழ்வு தாழ்வாம் என்கிறது.

உறவினரோடு உரிமையாய்க் கலந்து வாழாதவன் வாழ்க்கை கரையில்லாத குளத்துள்ளே நீர் நிறைந்தது போல் சீர் சிதைந்து போம்.

அளவளாவு = ஒன்ருய்க் கலந்து உறவாடுவது.
அளவு = நிலைமை. அளாவுதல் = உசாவி விசாரித்தல்.
குளவளா = குளத்தின் உள்ளே வளைந்து பள்ளமாயிருக்கும் பகுதி. அஃதாவது நீர் பரந்து நிற்கும் இடம்.

கோடு = கரை. குளத்தைச் சுற்றி வட்டமாய் வளைத்திருப்பது ஆதலால் கோடு எனக் குறிக்க வந்தது.

குளத்துள் நீர் நிறைந்து நிலைத்து நிற்றற்குக் கோடு ஆதரவா யிருக்கின்றது. பயிர்க்கு வேலிபோல் நீர்க்குக் கரை. உரிய கரைபோல் பெரிய கிளை அரிய பல வளங்களை அரசுக்கு அருளி வருகிறது.

உறவினருடைய வாழ்க்கை வசதிகளையும் நிலைமை தலைமைகளையும் சேம லாபங்களையும் அரசன் அன்புடன் விசாரித்துவரின் அந்த விசாரணை அவர்க்குப் பெரிய இன்பமாம். தம்பால் மன்னன் வைத்துள்ள அன்புரிமைகளைக் கருதியுருகி எவ்வழியும் அவனுக்கு உதவிபுரிந்து வர உறுதி பூண்டு அவர் ஊக்கி நிற்பர். அந்த நிலை அரசுக்குப் பெரிய ஆக்கமாம். சுற்றத்தார் பால் அன்பு தோய்ந்துவரின் அவ்வேந்தன் வெற்றித்தார் ஏந்திவரும். உரியவன் பரிவுற உற்றவர் பணிவுற்று வருகின்ருர்.

இவன் பரிவு காட்ட வில்லையானல் அவர் உரிமை காட்ட மாட்டார். உள்ளம் திரிந்து வேறு படுவர். படவே அரசு வலி குறைந்து போம்: நலிவுகள் நேர்ந்து வரும்.

சுற்றத்தாரைத் தழுவி ஒழுகிவரின் ஆக்கம் பெருகி வரும் என்று முன்னம் குறித்தார்; தழுவாது விடின் செல்வம் சிதைந்துபோம் என இதில் உரைத்துள்ளார். நிலைகுலைவு தெளிவாய்த் தெரிய உவமை வந்தது.

குறித்த கருத்தை நவமா நன்கு விளக்கி வருதலால் உவமானம் ஒளி விளக்காய் எங்கும் நிலவியுளது.

குளம் அரசனுக்கும்; நீர் செல்வத்துக்கும்; கரை உறவினர்க்கும்; அளவளாவுதல் அதன் திண்மைக்கும் ஒப்பாம். உறவு உலேந்த அரசு உறுதி குலேந்து போம். குளத்தை ஒப்புக் காட்டியது அதன் வளத்தை நோக்கி.

உறவினர் உரிமையா யில்லேயாயின் அந்த அரச னுடைய செல்வ வளம் கரையில்லாத குளநீர்போல் நிலே குலேந்து விரைந்து சிதைந்து போம்.

உன் செல்வம் பெருகி நீயும் வலிமையாளனும் வளர்ந்துவர வேண்டின் மருவிய உறவினருடன் பிரியம் மீதூர்ந்து யாண்டும் அளவளாவி வர வேண்டும்.

அளவளா குளவளா என இதிலும் ஒரூஉத்தொடை வந்துளது. இந்தத் தொடை நடையை இடை இடையே கவனித்து வாருங்கள். கவிகளின் அமைப்பு முறைகளே யும் சுவைகளேயும் அறிந்து கொள்ளலாம்.

அரசன் பொருளே அள்ளிக் கொடுக்க வேண்டா; உரிமையுடன் உரையாடினுலே மக்கள் பெரு மகிழ்வடை வர்; மனம் உவந்து அவனே வாழ்த்திப் போற்றி எவ் வழியும் இன வுறவுடன் ஆர்வம் கூர்ந்து வருவர்.

இராமன் மாலே வேளேகளில் சோலேகளுக்குச் சென்று உலாவி வருவன். இளமை எழில் சுரந்த அந் தச் சக்கரவர்த்தித் திருமகன், அவ்வாறு வருங்கால் நகர் அயலே கண்ட சனங்கள் மிக்க பய பத்தியுடன் ஒதுங்கி இருபுறமும் வரிசையாக் கைகுவித்து நிற்பர்; அங்ஙனம் நிற்கின்ற அவரைப் பரிவுகூர்ந்து குறுமுறுவலுடன் நோக்கி அருகே அணுகி உரிமையோடு அளவளாவுவான்: "சேமமா? என்ன தொழில்கள் செய்கிறீர்கள்? குடும் பம் வளமாய் நடந்து வருகிறதா? மனேவி மக்கள் சுகமா யிருக்கிருர்களா? ஏதேனும் இடையூறு உண்டா?" என்று இன்னவாறு அன்பு கூர்ந்து விசாரிப்பான். இந்த உரைகளேக் கேட்டதும் அவர் உள்ளம் உருகி இன்பக் கண்ணீர் மல்கி "ஆண்டவா! நாங்கள் சுகமாயிருக்கி ருேம்; யாதொரு குறையும் இல்லே; உங்கள் அருள்

நிழலில் வாழுகின்ற எங்களுக்கு இது ஒரு பொருளா? ஊழி காலம் வரையும் நீங்கள் இந்த உலகை ஆண்டுவர ஈசனை யாண்டும் வேண்டி வருகிறேம்” என்று இவ்வாறு ஆர்வம் மீதூர்ந்து தொழுது மொழிந்தனர்.

இராமன் வினவியது.

எதிர்வரும் அவர்களை எமையுடை யிறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா
எதுவினை? இடரிலை? இனிதுநும் மனையும்?
மதிதரு குமரரும் வலியர்கொல்? எனவே: (1)

மாந்தர் பதில் மொழிந்தது.

அஃதைய நினைஎமது அரசென வுடையேம்
இஃதொரு பொருளல; எமதுயி ருடன்ஏழ்
மகிதல முழுதையும் உறுகஇ மலரோன்
உகுபகல் அளவென உரைநனி புரிவார். (2)

(இராமா, திருவவதாரம்)

இந்தக் கவிகளில் மருவியுள்ள பொருள் நயங்கள் கருதி வுணர வுரியன. இராமன் வினவியவைகளுக்கெல்லாம் அஃது ஐய! என்று ஒரே மொழியில் பதில் கூறியுள்ளனர். பெரியவன் எதிரே அதிகம் பேசலாகாது என்ற மரியாதையும் மதிப்பும் அவரது மதிநலனும் விதிமுறையும் இதில் தெரிய வந்துள்ளன.

குடிகளைத் தழுவி அரசன் எவ்வாறு ஒழுக வேண்டும் என்பதை இக்கோமகன் இவ்வாறு ஒழுகிக் காட்டி இருக்கிறன். விழுமிய பண்புகள் செழுமி யுள்ளன.

நாட்டு மக்களும் தன்னைச் சுற்றியுள்ள சுற்றங்களும் உள்ளம் உவந்துவர உரிமை புரிந்து அளவளாவி வரின் அந்த வேந்தன் எவ்வழியும் சிறந்து செழித்துச் சீர்மையுடன் விளங்கி வருகின்றன்.

கிளைகள் கிளர்ந்து படர்ந்து வருகிற மரம் உயர்ந்து வளர்ந்து திகழ்கிறது. கேளிர் சூழ்ந்து வருகிற மனிதன் வலிமையுடன் தழைத்து வாழ்ந்து திகழ்கிறன்.

நேர்ந்த உறவினர் நெஞ்சம் திரிய நேரின் எவரும் நிலைகுலைந்து தளர்ந்து வருந்த நேர்கின்றர்.

கேளிர்கள் நெஞ்சு அழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்
தாளிலான் குடியேபோல் தமியவே தேயுமால். (கலி 149)

சுற்றத்தாரைத் தழுவாமல் வழுவாய் நழுவ விடுபவன் செல்வம் தானாகவே தேய்ந்து மாய்ந்துபோம் என நல்லந்துவனார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் கூறியிருக்கிறார். குறிப்பைக் கூர்ந்து உணர்ந்து கொள்க.

கோடு உயரக் குளத்தில் நீர் நிறைகிறது; கூடிய உறவு உயர அரசனிடம் நீடிய செல்வம் நிறைந்து வருகிறது. ஆட்சியும் மாட்சியாய் நீட்சியுறுகிறது.

சுற்றத்தாரை அளவளாவி வாழாதான் வாழ்வு தாழ்வாம்.

இவ்வுண்மை துரியோதனனிடமும், சிம்மகன் பாலும் தெளிவாய் நேரே தெரிய வந்தது.

**சரிதம்.**

பெருந் திருவுடைய பேரரசனாயிருந்தும் துரியோதனன் வாழ்வு பரிதாபமாய் நின்றது. உரிய தாயாதிகளான தருமன் முதலாயினாரை வீணே பகைத்து வெந்துயர் விளைத்தான். அவர் வெறுத்து அகன்றார். சுற்றத்தாரைப் பேணாத இவனது குற்றத்தை நோக்கி மற்றவரும் இவனை இகழ்ந்து வந்தார். கிளைஞரைத் தழுவாமல் கேடுகளையே தழுவி வந்த இவன் இறுதியில் தனது சிறிய தந்தையாகிய விதுரனையும் பழித்தான். இவன் கூறிய பழிமொழிகளைக் கேட்டு அவ்விழுமிய வீரனும் தன் அரிய வில்லை ஒடித்து அயலே எறிந்து விட்டு உள்ளம் கொதித்து உருத்து வெறுத்து ஒதுங்கிப் போனான். அந்தச் சிலை ஒடிந்து போனபோது இவன் தலை இடிந்து போயது என்று உலகம் இவனை இகழ்ந்து மொழிந்தது. வில்லை இறுத்துப்போன அவ்வீரன் உள்ளம் கறுத்து உரைத்த உரைகள் இவனுடைய பொல்லாங்குகளையும் புலைநிலைகளையும் தெளிவா விளக்கி நின்றன.

விதுரன் விளம்பியது.

ஆவது கருதான் ஆகில் அமைச்சர்சொல் கேளான் ஆகில்
வீவது குறியான் ஆகில் விளைவதும் உணரான் ஆகில்

நாவது காவான் ஆகில் அவனுக்கா நடந்து போரில்
சாவது பழுதென் றன்றோ சகத்துளோர் சாற்றுகின்றார். (142)

செல்வம்வந் துற்ற காலைத் தெய்வமும் சிறிது பேணார்;
சொல்வன அறிந்து சொல்லார்; சுற்றமும் துணையும் நோக்கார்;
வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதென் றெண்ணார்;
வல்வினை விளைவும் ஓரார்: மண்ணின்மேல் வாழு மாந்தர்.
(பாரதம், கிருட்டிணன் தூது)

துரியோதனனுடைய மதிகேடான செயல்களை விதுரன் இவ்வாறு உள்ளம் நொந்து உரைத்துள்ளான். **சுற்றமும் துணையும் நோக்கார்** என்றது, உறவினரையும் உறுதித் துணையா யிருந்தவரையும் தழுவிக் கொள்ளாமல் நழுவவிட்டு நாசமடைந்துள்ளமையை நன்கு உணர்த்தி நின்றது. அளவளாவு இல்லாதான் வாழ்வு பழுதாய்ப் பாழ்படும் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

சிம்மகன்.

இவன் சிம்மசேனன் என்னும் மன்னன் மகன். அழகும் ஆண்மையும் அமையப் பெற்றவன். பருவம் எய்தியபின் அரசுரிமையை அடைந்தான். அறிவு நலம் இருந்தும் பொறி வெறியனு யிழிந்தான். சுரதி என்னும் அழகிய மனைவியோடமர்ந்து இனிய போகங்களை நுகர்ந்து இரவு பகல் தெரியாமல் காம வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தான். அவ்வளவோடமையால் அயல் மகளிரையும் விழைந்து கலந்து மயல் வழிகளிலேயே மயங்கிக் களித்து வந்தான். பெரியோர்கள் இவனுக்கு அறிவுரைகள் கூறினர். "காமம் கொடியது; தீவினை தீயது; உயிர் துயருறாமல் உயரவேண்டுமானல் நெறி நியமங்களோடு வாழ வேண்டும்; தரும நீர்மைகளே இருமையும் இன்பம் தரும்; அல்லாதனவெல்லாம் துன்பங்களே யாம்" என இன்னவாறு நன்னயமாய்ப் போதித்தும் இவன் புத்தி தெளியாமல் காமப் பித்தனுகவே பெருகி நின்றான்.

"யாக்கையும் கிளையும் ஆதி யாவையும் நின்ற இல்லை;
விக்கிய வினையின் துன்பம் விலக்கலாம் அரணும் இல்லை;

தீக்கதி நான்கிற் சார்ந்து செல்வுழித் துணையும் இல்லை;
நீக்கரும் குணங்கள் அல்லால் நின்றதான் இல்லையன்றே.''

இத்தகைய உறுதி நலன்களை உரியவர்கள் கூறியும் உள்ளம் திருந்தாமல் எள்ளல் புரிந்து நின்றமையால் உற்ற உறவினர் எல்லாரும் இவனை வெறுத்து விலகினர். விலகவே இவன் வாழ்வு பலவகையிலும் இழிந்து படுதுயரடைந்து கெடு நிலையில் விழுந்தது.

சுற்றம் நீங்கச் சுடுதுயர் ஓங்கிய;
கொற்ற வாழ்வு குலைந்து சிதைந்தது;
பற்ற லர்க்கும் பலர்க்கும் எளியனுய்க்
குற்றம் உற்றனன் கோன்பதம் அற்றனன்.

அரசதிருவை இழந்து இவன் அவலமடைந்துள்ள நிலைமையை இதனல் அறிந்து கொள்கின்றோம். கிழமையான கிளைஞரைத் தழுவி ஒழுகாதவன் வாழ்க்கை இழிவடைந்து கழிந்து அழிந்துபோம் என்பதை வையம் இவன் பால் கண்டு வருந்தியது. இவன் சரிதம் மேருமந்தர புராணத்திலும் வந்துள்ளது.

**உரிய கிளையோ டுறவாடான் வாழ்வு**
**பெரிய களையாம் பிழை.**

கிளைஞரைத் தழுவி வாழ்.

---

524 சுற்றமெல்லாம் வந்துதன்னைச் சூழவேன் மாலியவான்
கொற்றவனுய் நின்ருன் குமரேசா—பற்றுடைய
சுற்றத்தால் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன். (௪)

இ–ள்.

குமரேசா! வரம் பெற்ற மாலியவான் ஏன் தன் சுற்றத்தைச் சூழவைத்து வாழ்ந்தான்? எனின், தான் செல்வம் பெற்றத்தால் பெற்ற பயன் சுற்றத்தால் சுற்றப்பட ஒழுகல் என்க.

செல்வம் எய்திய பயன் தெரிய வந்தது.

ஒருவன் செல்வம் பெற்றதால் பெறத்தக்க பலன் சுற்றத்தாரால் தான் சுற்றி நிற்கும்படி வாழ்வதேயாம்.

தான் என்றது திருவடைந்த உருவனை. ஆடவனுய்ப் பிறந்தவன் ஆண்மை யாளனுய் வாழவேண்டிய வகை தெரிய ஈண்டு இப்பெயர் நீண்டு வந்தது.

சுற்றம்=சுற்றத்தார். அத்துச் சாரியையும் ஆல் உருவும் பெற்று வந்தது. உரிமையுடன் சுற்றிச் சூழ்ந் திருக்கும் இனிய உறவினர் சுற்றம் என வந்தனர்

பெற்றதால் என்பது எதுகைத் தொடை நோக்கி வலி மிகுந்து செல்வப் பேற்றினை விளக்கி நின்றது.

முன், சுற்றத்தோடு அளவளாவி வாழாதான் வாழ்க்கை பாழ் என்ருர்; இதில், அது சூழ வாழ்வதே செல்வ வாழ்வின் சிறப்பாம் என்கின்ருர்.

கற்றபடி ஒழுகலே ஒருவன் கல்விக்குப் பயன் ஆம்; செல்வம் பெற்றதற்குப் பயன் சுற்றம் சூழ ஒழுகலே. ஒழுக்கம் இல்லாதவன் கல்வி பழிக்கப்படும்: சுற்றத் தைத் தழுவி ஒழுகாதவன் செல்வம் இழிக்கப்படும். கடமை உரிமைகளைக் கருதி ஒழுகிவரும் அளவே மாந்தர் மாண்புற்று வருகிருர். கருதாது ஒழியின் அவர் வாழ்வு விருதாவாம். உண்டு வனைந்து புனைந்து அணிந்து கண்டு களித்துக் கலந்து அலைந்து தொலைந்து போவதே பொருள் பெற்ற பயன் என்று மருளாய் எண்ணலா காது. தமது கிளைஞர் கிழமையோடு தம்மைக் கெழுமிச் சூழ வாழ்வதே செல்வமான நல்வாழ்வு என்று செல்வம் பெற்றவர் உடனே நன்கு தெளிந்து கொள்ளவேண்டும்.

செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல். (நறுந்தொகை)

சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல். (கொன்றைவேந்தன் 30)

ஊப்போல் வளை. (ஆத்திசூடி 15)

இவை யாவும் ஈண்டு எண்ணி உணர வுரியன.

உறவாய்த் தொடர்ந்து வந்துள்ள உரிமையாள ரைப் பேணி வருபவனே பெருமை யடைந்து வருகிருன். வருந்தி ஈட்டிய செல்வத்துக்குத் திருந்திய பயன் யாது? பொருந்திய கிளைகளைப் போற்றி ஒழுகுதலே.

அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழல்மரம்போல் நேர்ஒப்பத் தாங்கிப்—பழுமரம்போல்
பல்லார் பயன் துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன். (நாலடி 202)

வெயில் வெப்பத்தைத் தான் தாங்கிக் கொண்டு தன்னை அடைந்துள்ளவர்கட்குக் குளிர்ந்த நிழலைத் தந்தருளும் குளிர் தருக்கள் போலவும், இனிய பழங்களை நல்கும் கனிமரங்கள் போலவும் தம்மை அடுத்தவரைத் தழுவி ஆதரித்து உதவி புரிந்து வருபவரே உத்தமமான உயர்ந்த மனிதராவர் என இது உணர்த்தியுளது. மரங்களின் தரங்களைக் கண்டாவது மனிதர் மதியுடன் வாழ வேண்டும். உதவியாளர் உயர்ந்து திகழ்கின்றார்.

சுற்றம் சூழ வாழ்பவரே செல்வம்பெற்ற பயனைப் பெறுகின்றார். அவரை எல்லாரும் உவந்து புகழ்கின்றார்.

இவ்வுண்மை மாலியவான்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவன் அரக்கர்குல முதல்வன். சுகேசன் என்னும் வீரனுடைய புதல்வன். தாய் பெயர் தெய்வவதி. இவன் அறிவும் ஆற்றலும் உறுதியும் ஊக்கமும் உடையவன். பருவம் எய்தியவுடன் பிரமனை நோக்கி அரிய தவங்களைச் செய்து பெரிய வர பலங்களைப் பெற்றான். தன் பெருமைக்கு ஏற்பத் தெய்வத் தச்சனைக் கொண்டு ஓர் அரிய நகரம் அமைத்தான். கடலிடையே யிருந்த அழகிய வளமான ஒரு தீவுள் திரிகூடம் என்னும் மலைச் சாரலில் தேவரும் ஆவலுறுமாறு சிறந்த நகரம் சமைத்து அதில் குடியேறினன். இலங்காபுரி என்னும் அந்த இராசதானியில் அமர்ந்து அரசு புரிய நேர்ந்த இவன் தனது மரபினரெல்லாரையும் அங்கே குடியேற்றி வரிசையோடு பேணினன். சுமாலி மாலி என்னும் துணைவர் இருவரும் இவனுக்கு மந்திரிகளாய் மருவியிருந்தனர். **சவுந்தரி** என்னும் கந்தருவ மங்கையை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து இந்திரனும் தலைவணங்க யாண்டும் மாட்சியாய் இவன் ஆட்சி புரிந்தான்.

சகரர் அகழ்ந்த நீள்வேலை தழுவும் இலங்கா புரிதன்னில்
நிகரில் கூட கோபுரநீண்டு அரங்க சாலை நிலை நீண்ட
சிகர மாட மணிச்சோதி திரண்டொன்றாகச் சிறந்தெழலால்
மகர வேலை யுட்டிகழும் வடவா முகத்தை ஒத்துளதால். (1)

இன்ன தாய இலங்கையினது எழிலை நோக்கி எதிரில்லா
மன்னு வீர மாலியவான் சுமாலி மாலி என்றுரைக்கும்
மன்னர் மூவர் மகிழ்ந்தகந்த ஆசாரியற்குப் பூசனைசெய்து
ஒன்னலார்கள் இடம்துடிப்ப ஒலிநீர் இலங்கையுட்புகுந்தார்.

யாவ ராலும் கண்களினால் எட்டிப் பார்க்க ஒண்ணாத
காவல் இலங்கை வீற்றிருந்த காலைக் கான கந்தருவப்
பாவை யான தருமதைதான் பயந்த மூவர் மங்கையரில்
மூவராய ஆங்கவர்க்கு மூத்தஅடைவின் முறைகொடுத்தார்.
(உத்தரகாண்டம் 3)

சிறந்த வர பலங்களோடு அரிய பல செல்வ வளங்களைப் பெற்று உயர்ந்த அரசனாய் இவன் விளங்கியிருத்தலை இதனால் அறிந்து கொள்கிறோம். தன் கிளைஞர் எல்லாரையும் வளம் பெறச் செய்து வந்தமையால் அவர் எல்லாரும் இவனை உவந்து சூழ்ந்து எவ்வழியும் புகழ்ந்து போற்றி வந்தனர். ஒருவன் பெற்ற செல்வத்திற்குப் பயன் அவன்சுற்றத்தால்சுற்றப்பட ஒழுகுதலே என்பதை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான்.

**உறவினர் யாரும் உளமகிழ வாழ்தல்**
**பெறலரிய செல்வத்தின் பேறு**

சுற்றம் சூழ்ந்து மகிழ்ந்து வர வாழ்ந்து வருக.

---

**525 திண்டோட் சகரனேன் சேர்ந்து பலகிளைஞர்**
**கொண்டணைய நின்றான் குமரேசா—கண்டு**
**கொடுத்தலும் இன்சொல்லும் ஆற்றின் அடுக்கிய**
**சுற்றத்தால் சுற்றப் படும்.** (ரு)

இ-ள்.

குமரேசா! கொடைவள்ளலான சகரன் ஏன் கிளைஞர் பலரால் சூழப்பட்டுச் சிறந்து விளங்கி யிருந்தான்? எனின், கொடுத்தலும் இன்சொல்லும் ஆற்றின் அடுக்கிய சுற்றத்தால் சுற்றப் படும் என்க.

ஈதலும் இனிய சொல்லும் ஒருவன் ஆதரவோடு இயற்றிவரின் பலவகையான சுற்றத்தாரால் அவன் என்றும் நன்கு சூழப் பெறுவான்.

ஆற்றின் என்றது அவ்வாறு இருவகையும் செய்து வருவது பெரிதும் அரிது என்பது தெரிய வந்தது.

ஆற்றுதல்= உறுதியாய் ஊக்கிச் செய்தல்.

இனிய வார்த்தையினும் கொடை எவரையும் விரைந்து வசப்படுத்தும் ஆதலால் அந் நிலைமையை உணர இங்கே அது தலைமையாய் நிலவி நின்றது.

அடுக்கிய= அடுத்துத் தொடர்ந்த.

தந்தை வழியிலும் தாய் வழியிலும் தொடர்ந்து படர்ந்து வந்துள்ள கிளைஞர்களைத் தொகுத்துக் காண அடுக்கிய சுற்றம் என்று குறித்து உரைத்தார்.

உறவினர் பெருகி வரின் அவ்வரவால் ஒருவனுக்கு மதிப்பும் பெருமையும் மருவி வருகின்றன. அரும்பு பிஞ்சு காய் கனிகள் நிறைந்த மரம் சிறந்து விளங்குவது போல் மிக்க ஒக்கல்களை உடையவனும் உலகில் உயர்ந்து ஒளி மிகுந்து விளங்குகிறான்.

வறியராயினும் பெரிய கிளைகளையுடையவர் பெருமை யுறுகின்றார். **கொடிக்குச் சுரை கனத்திருக்குமா?** என்னும் முதுமொழி எளியரும் பெரிய கிளைஞரை உரிமையுடன் உவந்து பேணுவர் என்பதை உணர்த்தி நின்றது. இயற்கை உரிமை எவர்க்கும் உவப்பை விளைத்து உறுநிலன்களை அருளி வருகிறது.

அடுக்கல் மலைநாட! தற்சேர்ந் தவரை
எடுக்கலம் என்னார் பெரியோர்;—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினும் இல்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு. (நாலடி 203)

தன்னைச் சேர்ந்த சுற்றத்தாரை எவ்வகையிலும் உரிமையோடு ஆதரித்து வருவது உயர்ந்தோர் இயல்பாம் என இது உணர்த்தியுளது. இதில் குறித்துள்ள உவமையைக் கூர்ந்து காண்பவர் மனிதனுக்கும் சுற்றத்

திற்கும் உள்ள ஒற்றுமையை ஓர்ந்து உணர்ந்து கொள்வர். சுற்றம் வளைந்து வர வெற்றி விளைந்து வரும்.

உறவினர் சூழ்ந்துவர வாழ்ந்து வருவது ஒருவனது வாழ்க்கையில் உயர்ந்த பேறும், மக்கட் பேறு போல் ஒக்கற் பேறும் மிக்க மாட்சியாய் மேவியுளது. சுற்றம் மிகப் பெற்றவன் எங்கும் துதிமிகப் பெறுகின்றான்.

தன்னைச் சார்ந்தவருக்கு உதவி புரிந்து வருவதே ஒருவன் செல்வம் பெற்றதற்கு உரிய பெரிய பயனும். அந்தப் பயனை இழந்துவிடின் அவன் பழி படிந்தவ னாகிறான். ஆகவே வாழ்வு பாழ்படிந்து கழிகிறது.

நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பம் துடையார்;
கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும்;
மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்;
விடுக்கும் வினையுலந்தக் கால். (நாலடி 93)

உற்ற சுற்றத்தார்க்கு உதவி வருபவனே செல்வம் பெற்ற பலனைப் பெறுகின்றான். அவ்வாறு உதவாது ஒழியின் அவன் ஒன்றுக்கும் உதவாதவனாய் இழிந்து பழி படிந்து கழிந்து போகின்றான்.

இனிய நீர்மை பெரிய சுற்றங்களைப் பெருக்கி வரும்.

இவ் வுண்மை சகரன்பால் தெரிய வந்தது.

### சரிதம்

இவன் சூரிய குலத்து வேந்தன். அயோத்தியில் இருந்து அரசு புரிந்தவன். சிறந்த மதிமான். உயர்ந்த போர் வீரன். பெருங்கொடையாளன். அசுவமேதம் என்னும் யாகத்தை யாரும் வியந்து புகழ இவன் புரிந் தருளினன். விதர்ப்பை, சுமதி என்னும் மனைவியர் இரு வரை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து உலகம் உவந்து வர இவன் அரசுபுரிந்து வந்தான். யார் வந்து எதைக் கேட்டாலும் இல்லை என்னாமல் உள்ளம் உவந்து வழங்கி வந்தான் ஆதலால் முதல் வள்ளல் என்று இவன் புகழ் மிகப்பெற்றான். இவனுடைய தாய் வழி யிலும் தந்தை வழியிலும் உறவினர் பலர் கல்வி செல்

வம் முதலிய பலவகை நிலைகளிலும் தலை சிறந்து நின்றனர். அவரனைவரும் இவன்பால் பேரன்புடையராய்ப் பெருகி வந்தனர். எல்லாரையும் உரிமையுடன் இவன் தழுவி ஒழுகி வந்தமையால் பெரும் கிளையாளன் என்று மறுபுல வேந்தரும் இவனை மதித்துப் புகழ்ந்தனர். வரையாது கொடுக்கின்ற வள்ளல்கள் ஏழு பேர்களை அக்காலத்து அறிஞர்கள் தேர்ந்தெடுத்தனர். அந்த எழுவருள் இவன் முதல்வனாய் விளங்கினான்.

" அழிவிலாச் சகரன் சகாரி செம்பியன் நிருதி
அணிநளன் துந்துமாரன் அறை விராடன் எழுவர் "
(ஆசிரிய நிகண்டு)

கொடையில் இவ்வாறு தலைமை எய்தி நின்ற இவன் இனிய சொல் முதலிய நல்ல குணநீர்மைகள் எல்லாவற்றிலும் உயர்வாய் ஒளிமிகுந்து நின்றான். இவனுடைய மக்கட் பேறும் ஒக்கல் முதலிய பக்கக் கிளைகளின் பெருக்கமும் யாண்டும் மிக்க வியப்புகளை விளைத்து வந்தன. சமுத்திரத்திற்குச் சாகரம் என்று ஒரு பேர். வடகீழ்த்திசையிலிருந்து தென்கோடி வரையும் பரவியுள்ள பெருங்கடல் இவனுடைய மக்களாலும் ஒக்கலாலும் மிக்க திறலுடன் உண்டாயது.

சகரர் தொட்டலால் சாகரம் எனப்பெயர் தழைப்ப
மகர வாரிதி சிறந்தது மகிதல முழுதும்
நிகரில் மைந்தனே புரந்தனன்; இவன்நெடு மரபில்
பகிரதன் எனும் பார்த்திபன் வந்தனன் பரிவால்.
(இராமாயணம்)

விசுவாமித்திர முனிவர் இராமனிடம் இவ்வாறு கூறியிருக்கிறார். சகரரால் அமைந்தது சாகரம் ஆயது.

இடரேட்ட இனநெடிய வரையுருட்டி இவ்வுலகம்
திடரேட்டம் எனக்கிடக்கும் வகையிரங்கித் தெவ்வேந்தர்
உடல்தோட்ட நெடுவேலாய்! இவர் குலத்தோர் உவரிநீர்க்
கடல் தோட்டார் எனின் வேறோர் கட்டுரையும்
வேண்டுமோ? (குலமுறை)

சனக மன்னனிடம் அந்த மாதவர் இந்தவாறு இவ் வேந்தனது உறவுறுதிகளை உரைத்துள்ளார்.

இவற்றால் இவ் வேந்தனுடைய கிளைப்பெருக்கங்களை நன்கு உணர்ந்து கொள்கிறோம். கொடையும் இன் சொல்லும் உடையவன் அடுக்கிய சுற்றத்தால் சூழப் படுவான் என்பதை இவன் உற்று உணர்த்தி நின்றான்.

**ஈகையுடன் இன்சொல் இயம்பிவரின் எல்லாரும்**
**ஓகையுடன் கொள்வர் உறவு.**

உறவினர் உவந்துவர ஒழுகு.

---

526 வள்ளல் வரகுணன்போல் மாநிலத்தில் ஏன்கிளையைக்
கொள்ளவில்லை மற்றோர் குமரேசா—உள்ளும்
பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில். (சு)

இ-ள்.

குமரேசா! வள்ளலான வரகுணன் மிக்க கிளைஞரை ஏன் என்றும் பக்கத்தே பெற்றிருந்தான்? எனின், பெருங் கொடையான் வெகுளி பேணான் அவனின் மருங்கு உடையார் மாநிலத்து இல் என்க.

உறவை வளர்க்கும் உபாயம் தெரிய வந்தது.

பெரிய கொடையும் கோபம் கொள்ளாமையும் உடையனாயின் அவன்போல் கிளைஞரை யுடையார் உலகில் யாரும் இலர்.

மாநிலம் = பெரிதாய் விரிந்து பரந்துள்ள உலகம்.

கொடைக்குப் பெருமை யாது? கொள்ள நேர்ந்தவர் சிறுமை யாவும் நீங்கிப் பெருமை ஓங்கத் தருவது. சிறு கொடைகளும் உள ஆதலால் அவற்றினும் வேறுபாடு தெரியப் பெருங்கொடை என்றார். எந்த வகையான கொடையும் எவரையும் வசப்படுத்திவரும் ஆதலால் அந்த அதிசய வசியம் இங்கே முந்துற வந்தது.

பேணான் = விரும்பிக் கொள்ளான்.

வெகுளும்படியான காரியம் நேர்ந்தாலும் அது விரைந்து மறைந்துபோம். சினத்தைப் பேணாதவன் மனத்தை ஓர்ந்து பேணி இனத்தவர் சூழ்ந்து நிற்பர்.

மருங்கு=பக்கம்; ஒழுங்கு; செல்வம்.

இது இங்கே அதிகார முறையால் பக்கத்தே சுற்றி நிற்கும் சுற்றத்தாரைக் குறித்து நின்றது. சுப அசுபங்களில் மருங்கே வந்து ஒருங்கே உரிமையுடன் மருவி நிற்பவர் உறவினர் ஆதலால் அவர் ஈண்டு மருங்கு என நேர்ந்தார். இவ்வாறு நேர்வது ஆகு பெயராம். இலக்கணை என்பது வடமொழி வழக்கு.

ஒக்கல் கிளைஞர் கேளிர் எனச் சுற்றத்தாரைக் குறித்துவரும் பெயர்கள் எல்லாம் காரணக் குறிகள் உடையன. உற்று நோக்கி உணர வுரியன.

உற்றவர் இகுளை நட்டோர் உறவுஒக்கல் கிளையே சார்ந்தோர்
பற்றினர் சிறந்தோர் நட்புப் பந்தமே பரிசனம் கேள்
குற்றமில் நண்பு கூளி குடும்பமே கடும்பு நள்ளி
சுற்றம் மூவாறு பேரும் சூழ்ந்த பாசனமும் சொல்லும்.
(நிகண்டு)

சுற்றத்துக்கு இவ்வாறு பத்தொன்பது பெயர்கள் இதில் வந்துள்ளன. யாவும் காரணப் பேர்கள். கருதி உணர்ந்து கொள்க. சொல்லுக்கு உரிய பொருள்களைத் துருவி அறிந்து கொள்வது நல்ல கல்விப் பயிற்சியாம்.

பெருங் கொடையாளன் ஆயினும் வெகுளியைப் பேணிவரின் அவன் பக்கத்தே உறவினர் உரிமையாய் உவந்து கூடார் ஆதலால் வெகுளி பேணுமை அவர் கூடி வருதற்கு ஏதுவாய் வந்தது.

கொடுத்தலையும் இன்சொல்லையும் முன்பு குறித்தார்; வெகுளாமையை இதில் சேர்த்தார். உலோபமும் கோபமும் கடுஞ் சொல்லும் சுற்றத்தாரைச் சுற்றவிடா; அயலே எற்றிவிடும் ஆதலால் அவற்றை உடையான் உறவினங்களின் உரிமைகளை அடையான். கிளைகள் கிளர்ந்து வளர்ந்துவர வாழ்வதே உயர்ந்த வாழ்வாம்.

ஈகையும் இதமும் அமைதியும் உடையவன் தன் மருங்கே பெருங்கிளைகள் பல பெருகி நிற்கப் பெருமேன்மைகளுடன் உயர்ந்து விளங்குவான். சுற்றத்தார்

உவந்து சூழ்ந்துவர வாழ்ந்து வருபவன் யாண்டும் வெற்றித் தார் வேந்தனுய்ச் சிறந்து திகழ்கின்ருன்.

சுற்றம் சுற்றிவரும் அளவே கொற்றவன் கொற்றம்.

நல்ல நீர்மையாளன்பால் எல்லாரும் கேளிராவர்.

இவ்வுண்மை வரகுணபாண்டியன்பால் தெரிய வந்தது.

**சரிதம்.**

இம்மன்னன் மதுரையம்பதியிலிருந்து அரசு புரிந்தவன். சவுந்தரேசபாண்டிய மன்னனுடைய அருமைத் திருமகன். அழகு அறிவு அருள் அமைதி நீதி வீரம் கொடை நேர்மை முதலிய நீர்மைகள் எல்லாம் இவனிடம் சீர்மையாய் நிறைந்திருந்தன. தன் பெயரியல்புக்கேற்ப உயர் குணங்கள் உடையவன் என்று உயர்ந்தோர் இவனைப் புகழ்ந்து வந்தனர். ஈசன்பால் பேரன்புடையவன். கண்ணுதற் கடவுளைக் கருதுந்தோறும் உள்ளம் உருகிக் கண்ணீர் வெள்ளமெனச் சொரிந்து மெய்ம் மறந்து நிற்பன். இவனது அன்பு அதிசயம் உடையது.

வேந்தர் சேகரன் வரகுணன் விண்ணிழி கோயில்
ஏந்தல் சேவடி யிறைஞ்சிநின் றிறையருட் பெருமை
ஆய்ந்த வாவுதன் னகம்புக இன்பமோடு அன்பு
தோய்ந்து தாரைநீர் துளும்பநாக் குழறிடத் துதிப்பான்.
(திருவிளையாடல் 40)

இவனது பத்திப் பரவச நிலையை இதில் உய்த்து உணர்ந்து கொள்கிருேம். மதுரைமா நகர் போலவே திருவிடைமருதூரில் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்குத் திருப்பணிகள் பல விருப்புடன் புரிந்து தொழுது வழிபட்டு வந்தான். இவனது பத்திநிலை அதிசய நிலையில் பெருகியிருந்தது. முற்றத் துறந்த பட்டினத்தடிகளும் இவனுடைய அன்பின் பரவச நிலைகளை உள்ளம் உவந்து வியந்து புகழ்ந்துள்ளார்.

வெள்ளை நீறு மெய்யில் கண்டு
கள்ளன் கையில் கட்டவிழ்ப் பித்தும்;
ஓடும் பல்நரி ஊளைகேட்டு அரனைப்
பாடின என்று படாம்பல அளித்தும்,
குவளைப் புனலில் தவளை அரற்ற

ஈசன் தன்னை ஏத்தின என்று
காசும் பொன்னும் கலந்து தூவியும்,
வழிபடும் ஒருவன் மஞ்சனத் தியற்றிய
செழுவிதை எள்ளைத் தின்னக் கண்டு
பிடித்தலும் அவனிப் பிறப்புக் கென்ன
இடித்துக் கொண்டவன் எச்சிலை நுகர்ந்தும்,
மருத வட்டத்து ஒருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி
உம்மைப் போல எம்இத் தலையும்
கிடக்க வேண்டுமென் றடுத்தடுத் திரந்தும்,
கோயில் முற்றத்து மீமிசைக் கிடப்ப
வாய்த்த தென்று நாய்க்கட்டம் எடுத்தும்,
காம்பவிழ்ந் துதிர்ந்த கனியுருக் கண்டு
வேம்புகட் கெல்லாம் விதானம் அமைத்தும்,
விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று
புரிகுழல் தேவியைப் பரிவுடன் கொடுத்த
பெரிய அன்பின் வரகுண தேவர்.

(திருவிடைமருதூர் மும்மணி 28)

பெரும் பொருளும் பெருங்கொடையும் உடைய இவ்வேந்தன் பரம்பொருள்பால் பத்திப் பிரமையோடு புரிந்துள்ள வித்தகச் செயல்களை இதில் வியந்து காண்கின்றோம். துறவிகளும் முனிவர்களும் துதித்துப் போற்றும் குணநீர்மைகள் இம்மதிமானிடம் அதிசயமாய் மருவி யிருக்கின்றன. இந்தப் பாடலில் பதிந்துள்ள பொருள் நயங்களையும் நிகழ்ச்சிகளையும் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். இக் குலமகனுடைய குணநலன்கள் எவரையும் வசமாக்கி நின்றன. மரபு முறையில் மருவிய கிளைஞர்களோடு உலக மாந்தரும் இவ்வேந்தனுக்கு உறவினங்களாய்ச் சூழ்ந்து நின்றனர். பெருங்கொடையோடு பெருங்குணங்களும் உடையவன் மருங்கே சூழ்ந்து பெருங்கிளைகள் பெருகி நிற்கும் என்பதை உலகம் காண இவன் நேரே உணர்த்தி நின்றான்.

**அறநீர்மை ஈகை அமையின் அவன்பால்**
**உறவாகி நிற்கும் உலகு.**

எல்லாரும் உறவுற இனியன் ஆகுக.

527 பூதன் உயர்பந்தன் புண்ணியன்முன் ஈந்துவந்தேன்
கோதறுசீர் கொண்டார் குமரேசா-யாதெனினும்
காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள. (எ)

இ-ள்.

குமரேசா! ஈந்துவந்த பூதன் பந்தன் புண்ணியன் என்பவர் ஏன் ஆக்கம் மிகப் பெற்று உயர்ந்து வாழ்ந்தார்? எனின், காக்கை கரவா கரைந்து உண்ணும் ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள என்க.

ஆக்கம் அடையும் வழி அறிய வந்தது.

காகம் இரையை மறையாமல் தன் இனத்தை அழைத்து உண்டு வரும்; அந்த இயல்பை உடைய உயர் நிலையாளர்க்கே செல்வங்கள் உளவாம்.

ஆக்கம் வேண்டும் என்று யாவரும் ஆசையுறுகின்றனர்; அதனை அடைதற்குப் படாத பாடுகள் படுகின்றனர். வருந்தி முயன்றாலும் சிலரிடமே சிறிது அது வந்து சேர்கிறது. அத்தகைய அருமைத் திரு உரிமையாக ஒருவனிடம் பெருகிவர வேண்டுமானல் அவன் என்ன செய்ய வேண்டும்? தனது உறவினரை உரிமையோடு பேணி ஊட்டி உபசரித்து வரவேண்டும். இவ்வுண்மை ஈண்டு நுண்மையாய் உணர வந்தது. ஒக்கல் உவந்து வருவதில் உயர்ந்த தருமங்கள் மருமங்களாய் மருவி வருகின்றன. அவ்வரவுள் திரு பெருகி வருகிறது.

ஆக்கமும் என்றதிலுள்ள உம்மை அதன் அருமையையும் சிறப்பையும் குறிப்பா உணர்த்தி நின்றது. ஆக்கமே அன்றி அறமும் புகழும் இன்பமும் உளவாம் என்பதும் இதில் உணர வந்துள்ளது. முன்னது சிறப்பும்மை; பின்னது எச்சவும்மை.

கரவா=மறையாததாய். கரத்தல்=மறைத்தல்.
கரைந்து=அழைத்து. கரைதல்=கூவுதல்; கத்தல்.
கரவா கரைந்து என இயல்பாய் இயைந்தது.

அல்வழி ஆமா மியாமுற்று முன்மிகா. (நன்னூல் 171)

இந்த இயல் விதியை இங்கே சிந்தித்துக் கொள்க.

கரைதலும் கரவாமையும் உண்ணலுக்கு அடையாய் நின்று காக்கையின் இயல்பான நீர்மையை விளக்கின.

அன்னநீரார் = காக்கை போலக் கரவாது கரைந்து உண்ணும் நன்மையான தன்மையாளர்.

**பகுத்து உண்டு பல்லுயிர் ஓம்பும் பண்பு** எல்லா அறநிலைகளையும் இன்ப நலங்களையும் ஒருங்கே நல்கி யருளும் ஆதலால் அந்தச் செல்வ நிலை இங்கே உரிமையாய்த் தெரிய வந்தது.

உள்ளதை ஒளியாமல் காக்கை போலத் தமர்க்கு உண்ண உதவி ஒருவன் வாழ்வான் ஆயின் எல்லாச் செல்வங்களையும் அவன் எளிதே எய்தி எவ்வழியும் இசை மிகப் பெற்று எவரையும் இனிதே ஆள்வான்.

இனத்தை உடன் அழைத்து உண்ணும் உயர்வை நோக்கியே காக்கைகளை மக்கள் ஆர்வத்தோடு அழைத்து நல்ல உணவுகளை நயமா யிடுகின்றனர்.

தாம் நுகர்வனவற்றைத் தமரும் நுகருமாறு செய்து வாழும் தரும நீரரை உரிமையுடன் உவந்து நோக்கித் தரும தேவதை இருமையும் இன்புறச் செய்தருளும். உறவினர் உவந்துவர வாழ்ந்து வருபவன் அறவினை யாளனாய் உயர்ந்து வருகிறான்.

நல்லது புரிபவர் நலம் பல பெறுகிறார்.
அல்லது செய்பவர் அவலம் உறுகிறார்.

கரவாது கரைந்து உண்ணும் காக்கைகளை மனிதர் உவந்து உணவூட்டிப் பேணுகின்றனர். கரந்தும் கடிந்தும் உண்ணுகிற நாய்களை இகழ்ந்து வெறுத்து ஓட்டுகின்றனர். இந்த நிலைமைகளை நேரே சிந்திக்க வேண்டும். இதம் புரிபவர் எங்கும் இனியராகின்றார்.

பறவையாயிருந்தும் இனத்தைத் தழுவி நிற்கும் ஓர் இயல்பினால் உயர்ந்த மனிதரும் உணர்ந்து ஒழுக வேண்டிய உறுதி நிலைக்கு ஓர் உவமையாய் நின்றது.

காகத்துக்குப் பலியிடுவதை ஒரு தெய்வ பூசை போல் மாந்தர் யாண்டும் செய்து வருகின்றனர். தேவதையிடம் வரம் வேண்டுவது போல் அதனிடமும் உரிமையோடு முறையிட்டு வழிபாடு புரிகின்றனர்.

மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை!
அன்புடை மரபின்நின் கிளையோடு ஆரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்தில் தருகுவென் மாதோ!
வெஞ்சின விறல்வேல் காளையொடு
அஞ்சில் ஓதியை வரக்கரைந் தீமே.

(ஐங்குறுநூறு 391)

தலைவனுடன் சென்றுள்ள தனது அருமை மகள் சுகமாய் மீண்டுவந்து சேரவேண்டும் என்று காக்கையை நோக்கி ஒரு தாய் இவ்வாறு வேண்டியிருக்கிறாள். "அழகிய சிறகுகள் உடைய கரிய இனிய காக்கையே! என் மகள் இங்கு விரைந்து வரும்படி கரைந்தருள்; அன்புடைய உன்கிளைகளோடு நீ உண்டு மகிழ நல்ல சுவை உணவை பொன் கலத்தில் உனக்கு நான் ஊட்டுவேன்" என்று அந்த அன்னை இவ்வண்ணம் பரவி யிருத்தலால் காகத்தின் வழிபாடு பண்டைக் காலந் தொட்டே இந்நாட்டில் நடந்து வந்துள்ளதைத் தெளிந்துகொள்கிறோம். **அன்புடை மரபின் நின் கிளையோடு ஆர** என்று குறித்திருப்பது இங்கேகூர்ந்து சிந்திக்கவுரியது. ஆர = உண்ண.

ஆர்க்கும் இடுமின்! அவரிவர் என்னன்மின்!
பார்த்திருந் துண்மின்! பழம்பொருள் போற்றன்மின்!
வேட்கை யுடையீர்! விரைந்தொல்லை உண்ணன்மின்!
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே!

(திருமந்திரம் 250)

உயிர்களுக்கு ஊட்டி உண்ணும்படி திருமூலர் இவ்வாறு கூறியிருக்கிறார். **காக்கை கரைந்து உண்ணும்** என்பதை இங்ஙனம் எடுத்துக் காட்டியுள்ளார். உறவோடு கலந்து உண்டு வருவதில் காகம் உயர்வடைந்து வந்துள்ளதை உயர்ந்தோரும் உவந்து வியந்துள்ளனர்.

காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர் அகண்டா காரசிவ
போகம்எனும்பேரின்பவெள்ளம்பொங்கித்ததும்பிப் பூரணமா
ஏக வுருவாய்க்கிடக்குதையோ! இன்புற்றிட நாம்இனிஎடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாரும் செகத்தீரே!

(தாயுமானவர்)

இரையைக் கண்ட காகம் தன் இனத்தை அழைப்பதுபோல் இறைவனது பேரின்பபோகத்தைக் கண்ட தாயுமானவர் எல்லாரையும் இவ்வாறு அழைத்திருக்கிருர். **காகம் உறவு கலந்து உண்ணக் கண்டீர்!** என்றது அவரது பரந்த அருள் நீர்மையைக் காட்டியுள்ளது.

தன் கிளைஞரை ஒருவன் ஊட்டி உண்டால் அவன் வளம் பெற்றுச் செழித்து வாழவேண்டும் என்று அவரனைவரும் உள்ளம் உவந்து கருதுவர்; அதனல் உரிமையான செல்வம் பெருகிவரும் ஆதலால் **அன்ன நீரார்க்கே ஆக்கம் உள** என்ருர். அறத்தின் வழி ஆக்கம் என்பது இங்ஙனம் நோக்க வந்தது. காக்கையின் இயல்பும் உறவை ஓம்பி வரும் உயர்வும் தருமநீர்மைகளாயுள்ளன.

கண்ட இரையைக் கரைந்து கிளைக்கூட்டி
உண்டு வருதலால் ஊர்க்காக்கை—அண்டர்க்குச்
செய்யும் பலிபூசை செய்துவர நேர்ந்ததுகாண்
உய்யும் வழிதெரிக ஓர்ந்து.

இதன் குறிப்புகளைக் கூர்ந்து தேர்ந்து கொள்க.

காலை துயில்எழுதல் காணுமலேகலத்தல்
மாலை குளித்து மனைபுகுதல்—சீலமுடன்
உற்ருரோ டுண்ணல் உறுவதை முன்னுரைத்தல்
கற்ருரோ காக்கையிடம் காண்.

காகத்தின் விவேகங்களை இதனல் உணரலாம்.

காகத்து இரு கண்ணிற்கு ஒன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்துள் ஓருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமாம்
ஏகத் தொருவன் இரும்பொழில் அம்பல வன்மலையில்
தோகைக்கும் தோன்றற்கும் ஒன்ருய் வருமின்பத்
துன்பங்களே. (திருக்கோவையார் 71)

இவள்வயின் செலினே இவற்கு உடம்பு வறிதே;
இவன்வயின் செலினே இவட்கும் அற்றே;

காக்கை இருகணின் ஒருமணி போலக்
குன்றுகெழு நாடற்கும் கொடிச்சிக்கும்
ஒன்றுபோல் மன்னிய சென்றுவாழ் உயிரே.
(தொல்-களவு-கோள் 114)

ஓர் உயிர்க்கு ஈருடல்போலத் தலைவனும் தலைவியும் ஆர்வமாய் மருவி யுள்ளனர். ஒருமையான அவ்வுண்மைக்குக் காகத்தின் கண்ணை இங்ஙனம் உவமை கூறி யுள்ளார். ஒரு கண் ஒளி இரு விழிகளிலும் மருவியுளது.

கருங்கொடி இருவிழிக் கண்ணும் ஓர்மணி
திரிந்திடு செயலெனத் திரித லின்றியே
பொருந்துறும் அகமொடு புறமும் தீர்வற
இருந்தில குறும் அருள் இட்ட லிங்கமே.
(பிரபுலிங்கலீலை 16-16)

இருகண்ணுக்குஒருமணி காகம் கொண்டுள்ளதைஇதன் கண்ணும் தெரிந்து கொள்கிறோம். கரும்கொடி=காகம்.

கரையாய் காக்கைப் பிள்ளாய்!
கருமா முகில்போல் நிறத்தன்
உரையார் தொல்புகழ் உத்தமனை வரக்
கரையாய் காக்கைப் பிள்ளாய்! (திருமொழி 10-10)

திருமங்கையாழ்வார் திருமாலைக் கண்டு மகிழ விழைந்து காக்கையை இங்ஙனம் வேண்டி யிருக்கிறார்.

காக்கையின் நீர்மைகளைக் கவிகள் எவ்வாறு கருதி எவ்வகையில் உணர்ந்து வந்துள்ளனர் என்பதை நூல்களில் பலவாறு நாம் அறிந்து வருகிறோம்.

செஞ்சோற்றுப் பலி மாந்திய
கருங் காக்கை. (பொருநர் 183)

உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை
புன்கண் அந்திக் கிளைவயின் செறிய. (நற்றிணை 343)

பணங்கள் அஞ்சாலும் பருவர வார்த்தவன் தில்லையன்ன
மணங்கொளஞ்சாயலும்மன்னனும்இன்னே வரக்கரைந்தால்
உணங்கல்அஞ் சாதுண்ண லாம்ஒள் நிணப்பலி ஒக்குவல்மாக்
குணங்கள்அஞ்சாற்பொலியும்நல சேட்டைக்குலக்கொடியே!
(திருக்கோவையார் 235)

பாவிரி மாபுகழ் வெங்கை புரேசர் பனிவரைமேல்
பூவிரி வான்பொழில் காப்பதற் காகப் பொருதிரைத்தண்
காவிரி மாதை வருவித்த காக்கையும் காக்குங்கொலோ?
மாவிரி மாகுழல் நன்மாதை யீங்கு வரவழைத்தே.
(திருவெங்கைக் கோவை 336)

கூர்க்கும் பலிதரு வேன்கொடியே! என் கொடி திரும்ப
ஏற்கும் படிகரைந்து என்னுயிர் தாவிருங் கூற்றிலங்கை
ஊர்க்குமுன் ஏவும் குலோத்துங்க சோழன் உறந்தைவெற்பில்
ஆர்க்குமங் காக்கையன் றேவுயிர் தாங்கும் அகிலத்திலே.
(குலோத்துங்கசோழன் கோவை 382)

மின்னார் சடையண்ணல் கோடீச் சுரமன்ன மெல்லியலை
உன்னு எளியேன் கரையாமல் நீகரை வுற்றுதவின்
பொன்னார் கலந்தனில் பாயச வூனுமென் போனகமும்
மன்னு தரவொ டுனக்களிப் பேன்கொம்பில் வாழ்கொடியே!
(கோடீச்சுரக்கோவை 344)

கரவாமல் கரைந்துண்ணும் நீர்மையால் காக்கை எவ்வளவு சீர்மை அடைந்துள்ளது என்பதை இவற்றால் ஓர்ந்து கொள்கிறோம். மாக்குணங்கள் அஞ்சால் பொலி குலக்கொடியே! = சிறந்த குணங்கள் ஐந்தால் உயர்ந்துள்ள மேலான காகமே! என்று **மாணிக்கவாசகர்** இவ்வாறு காகத்தைப் புகழ்ந்திருக்கிறார். இக் கவிகளில் கனிந்து வந்துள்ள கலையின் சுவைகளையும் பொருள்களையும் நயங்களையும் கருதி யுணர்ந்து கொள்ள வேண்டும்.

உரிய சுற்றத்தாரை மனிதன் பிரியமாய் அணைத்து ஆதரித்து வரவேண்டிய கடமையைக் காக்கையிடமிருந்தாவது கற்றுக்கொள்ள வேண்டும் என அடிகள் ஈண்டு அறிவுறுத்தி யுள்ளார். கருத்துக்களைக் கருதி உணர்க.

கிளைஞரை ஓம்பிவரின் செல்வம் கிளர்ந்து வரும்.

இவ்வுண்மை பூதன் ஆதியர்பால் தெரிய வந்தது.

**சரிதம்.**

பூதன் என்பவன் புள்வேளூர் என்னும் ஊரில் இருந்தவன். உழு தொழிலாளன். தனக்கு உரிய சிறிய நில வருவாயைக் கொண்டே பலர்க்கும் உபகாரியாய் இவன்

வாழ்ந்து வந்தான். உற்ற கிளைஞரை உரிமையுடன் தழுவி எவ்வழியும் இனிது உபசரித்து வந்தமையால் உறவினர் எல்லாரும் இவன்பால் பிரியமும் மதிப்பும் பெருகி நின்றனர். உள்ளதைப் பிறர்க்கு ஊட்டிய பின்பே இவன் உண்டு வருவது வழக்கமாயிருந்தது ஔவையார் ஒருநாள் இவனிடம் வந்தார். அந்தக் கல்விச் செல்வியைக் கண்டதும் உள்ளம் உவந்து உபசரித்தான். நல்ல விருந்து செய்ய வேண்டும் என்று விரைந்தான். "எனக்காகப் புதிதாய் யாதும் சமைக்க வேண்டாம்; பழையது தந்தாலும் போதும்" என்று பாட்டி பரிந்து கூறினள். இருந்த உணவை இவன் மகிழ்ந்து படைத்தான். கிழவி உண்டு உவந்தாள். அந்த உவகையோடு ஒரு கவியும் சுவையாய்க் கூறினள்.

வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரென வேபுளித்த மோரும்—திரமுடனே
புன்வேளூர்ப் பூதன் புகழ்ந்துபரிந் திட்டசோறு
எல்லா உலகும் பெறும். (ஔவையார்)

உள்ளன்புடன் இவன் உபசரித்து இட்டமையால் இந்த உணவு எல்லா உலகும் பெறும் என்று அந்த அம்மை பாடியருளினள். அருட் புலமையுடைய அவர் இவ்வாறு பாடிப்போகவே பின்பு இவனுடைய விளைபுலங்கள் பெரு வளங்களை நல்கின. பெரியபாக்கியவானுய் இவன் விளங்கினன். கரவாமல் பிறர்க்கு ஊட்டி வருபவன் வரமான ஆக்கம் பெறுவான் என்பதை உலகம் இவன்பால் நோக்கி உணர்ந்து உவந்து வந்தது.

### 2. பந்தன்.

இவன் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்தவன். வணிகர் மரபினன். பெரிய உபகாரி. தன் உறவினர் வந்து தன் இல்லில் உண்டு மகிழ்வதைக் கண்டு மகிழவே இவன் காதல் கொண்டான். தனக்கென வாழான் பிறர்க்குரியாளன் என்னும் பேரை யாரும் கூறிவர இவன் சீரோடு வாழ்ந்து வந்தான். ஔவையாரை ஒருமுறை இவன் கண்டான். தொழுது துதித்தான். சிறந்த

விருந்து புரிந்தான். எந்தப் பொருளைத் தந்தாலும் அவர் விரும்பார் என்று தெரிந்தான். நாகவேந்தன் நல்கியிருந்த அரிய ஒரு பொன்னுடையை அந்தப் பாட்டிமீது பரிவுடன் போர்த்தினன். "உன் சால்பை இந்தச் சால்வை நன்கு விளக்கிக் கிழவியாகிய என்மேல் கிழமையோடு விளங்குகிறது" என்று உளம் மகிழ்ந்து புகழ்ந்தாள். இவன்மீது பல பாடல்கள் பாடினள். அந்நூல் **பந்தன் அந்தாதி** என்று வழங்கப்படுகிறது. உற்ற உறவினர்க்கும் பிறர்க்கும் ஊட்டி உபசரித்து வந்தமையால் பெருந்திரு வாளனைப் பெரும் புகழுடன் சிறந்து யாவரும் வியந்து வர இவன் விளங்கி நின்றான்.

3. புண்ணியன்.

இவன் சூரிய குலத்து அரசன், **பூமி சந்திரன்** என்னும் மன்னனுடைய அருமைத் திருமகன். சாவக நாட்டிலே நாகபுரம் என்னும் நகரில் இருந்து அரசு புரிந்தவன். இவன் முற்பிறப்பில் **ஆபுத்திரன்** என்னும் பெயருடன் மதுரையில் இருந்தவன். தனக்குக் கிடைத்த உணவைப் பலர்க்கும் பகுந்துகொடுத்து உயிரினங்களின் துயரங்களை நீக்கி உயர் அருள் புரிந்தவன்.

ஐயக் கடிஞை கையின் ஏந்தி
மையறு சிறப்பின் மனைதொறும் மறுகிக்
காணார் கேளார் கால்முடப் பட்டோர்
பேணுநர் இல்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருக; என்று இசைத்துடன் ஊட்டி
உண்டொழி மிச்சில் உண்டு. (மணிமேகலை 13)

இதனால் இவனுடைய உள்ளப் பண்பையும் உயிரிரக்கத்தையும் உபகார நிலைகளையும் உணர்ந்து கொள்கிறோம். வறிய நிலையில் இருந்தும் இரந்தும் பிறர்க்கு ஊட்டி வந்தமையால் தருமம் இவனிடம் பெருகி வந்தது. அந்தப் புண்ணியத்தால் மறுபிறப்பில் பெரிய அரசன் ஆகி இரு நிலம் புரந்து பெருநலம் அடைந்தான்.

நாக புரமிது நன்னகர் ஆள்வோன்
பூமிசந் திரன்மகன் புண்ணிய ராசன்;

ஈங்கிவன் பிறந்த அந்நாள் தொட்டும்
ஓங்குயர் வானத்துப் பெயல்பிழைப் பறியாது;
மண்ணும் மரனும் வளம்பல தரூஉம்;
உண்ணின் றுருக்கும் நோயுயிர்க்கு இல்லெனத்
தகைமலர்த் தாரோன் தன் திறங் கூறினன்
நகைமலர்ப் பூம்பொழில் அருந்தவன்.

(மணிமேகலை 24)

தருமசாவகர் என்னும் முனிவர் இந்த அரசனுடைய மகிமை மாண்புகளை இவ்வாறு கூறியிருக்கிறார். முன்பு அன்னம் ஊட்டி வந்த அந்தப் புண்ணியத்தால் பின்பு மன்னர் பெருமானாய் இன்னவாறு இவன் விளங்கி நின்றான். கரவாது கரைந்து காக்கைபோல் பிறர்க்கு ஊட்டி வருபவனிடம் ஆக்கங்கள் பலஉளவாம் என்பதை உலகம் காண இவன் நன்கு உணர்த்தி நின்றான்.

**உரிய உறவினர் உண்ண உதவின்**
**அரிய அரசாம் அவன்.**

ஒக்கல் மகிழ உதவுக.

---

528 பூதவழுதி புகழ்நோக்கி ஏன்பலரும்
கோதறமுன் சூழ்ந்தார் குமரேசா—ஏதும்
பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர். *(அ)*

இ-ள்.

குமரேசா! வரிசையறிந்த பூதப் பாண்டியனை ஏன் பலரும் வந்து சூழ்ந்து உவந்து வாழ்ந்து வந்தார்? எனின், பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின் அது நோக்கி வாழ்வார் பலர் என்க.

அரசனது மதிப்பு வகை அறிய வந்தது.

எல்லாரையும் ஒன்றாக நோக்காமல் அவரவரது தகுதி கண்டு அரசன் மதித்துவரின் அதை நோக்கிப் பலர் அவனைச் சூழ்ந்து மகிழ்ந்து வாழ்ந்து வருவார்.

தன்னைச் சூழ்ந்து தமர் விரும்பிவர வுரிய வழிகளை வேந்தனுக்குப் பலவகையிலும் நலமா உணர்த்தி வரு கிறார். ஈகை இன்சொல் அமைதி உதவி உபசாரம் முதலிய செயல்கள் அவரை நயமா செப்படுத்தி வரும்; அந்த நீர்மைகளைப் பேணி அவரைச் சீர்மையாகத் தழு விக் கொள்க என உரைத்து வந்தவர் இதில் வரிசை நோக்கை விரித்து வசமாக் குறித்துள்ளார்.

உரிய தகுதிகளை ஓர்ந்து நோக்காவிடின் பெரிய வர்கள் பிரிய நேர்வர்; கொடை விருந்துகளால் அவரை அடைய முடியா. அவருடைய மேன்மைகளை அறிந்து மதித்த போதுதான் அவர் மகிழ்ந்து நெருங்குவர்.

பொதுநோக்கு = எல்லாரையும் ஒரு நிலையராய்ப் பார்ப்பது. இது மதி நோக்கு ஆகாது.

சிறப்பாகக் கூர்ந்து நோக்காமல் வெளி முகமாக் காண்பது **பொது நோக்கு** என வந்தது. தரம் தெரியாத இந்தப் பார்வை அரசுக்கு உரம் தராது ஆதலால் அவ் வாறு அவன் நோக்கலாகாது. தன் நோக்கு ஆக்கம் உடையதாய் ஊக்கிவரின் அவன் பாக்கியவானாகின்றான்.

வரிசை நோக்கு=குறிப்பான சிறப்புக் காட்சி.

உண்மையான தகுதிகளை நுண்மையாய் ஓர்ந்து கண்டு தேர்ந்து கொள்வது வரிசைநோக்கு என வந்தது.

வரிசை = தரம்; தகுதி; மேன்மை.

மனிதர் உருவத்தால் ஒத்திருந்தாலும் அறிவு குணம் செம்மை சீலம் முதலிய சால்புகளால் வேறுபட்டிருப்பர். நீர்மை சீர்மைகளில் உயர்ந்துள்ள மேலோரைக் கூர்மை யாய் ஓர்ந்து மதித்து உவந்து போற்ற வேண்டும்; அவ் வாறு போற்றாமல் எல்லாரையும் போல் அவரையும் எண்ண நேரின் **தரம் தெரியாதவன்** என்று அரசனை அகத்தே இகழ்ந்து புறத்தே அவர் ஒதுங்க நேர்வர்.

தகுதிகண்டு தழுவின் அவ்வண்ணம் அவர் ஒதுங் கார்; உள்ளம் உவந்து மிகுதியாக வந்து வேந்தனை

விழைந்து சூழ்ந்து நிற்பர் ஆதலால் **வரிசையா நோக்கின் அது நோக்கி வாழ்வார் பலர்** என்றார்.

அது என்றது வரிசை அறிந்து செய்த அந்த மரியாதையை. அறிவு நோக்கு பெரிய பாக்கியம்.

பொதுநோக்கு மடமை மருவியது.
வரிசைநோக்கு மதிநலம் உடையது.

வரிசை அறிதலும் வரையாது கொடுத்தலும்.
(சிறுபாண் 217)
வரிசையின் நல்கி. (புறம் 6)
வரிசைப் பெரும் பாட்டு. (கலித்தொகை)
வரிசைக்கு வருந்தும். (புறம் 206)
வரிசையின் அளவளாய். (இராமா 1-18)

இவற்றுள் வரிசை உணர்த்தி நிற்கும் பொருளை அறிக.

ஊனுண் டுழுவை நிறம்பெறூஉம்; நீர்நிலத்துப்
புல்லினுல் இன்புறூஉம் காலையம்;—நெல்லின்
அரிசியான் இன்புறூஉம் கீழெல்லாம்; தத்தம்
வரிசையான் இன்புறூஉம் மேல். (நான்மணி 68)

புலி ஊன் உண்டு களிக்கும்; பசு புல் உண்டு உவக்கும்; கீழ்மக்கள் சோறு உண்டு மகிழ்வர்; மேன் மக்கள் **வரிசையான் இன்புறுவர்** என **விளம்பிநாகனுர்** இங்ஙனம் விளம்பியுள்ளார். வரிசைக்கும் மேலோர்க்கும் உள்ள உறவுரிமைகளையும் உள நிலைகளையும் இதனல் உணர்ந்து கொள்கிறோம்.

புலவர் பெருமானுன **கபிலர்** ஒரு முறை **மலையமான் திருமுடிக்காரி** என்னும் குறுநில மன்னனைக் கண்டார். அவன் சிறந்த கொடையாளியே; ஆயினும் புலவர்களுடைய தலைமை நிலைமைகளைச் சரியாய்த் தெரிந்து கொள்ளவில்லை; பொருள் பெற வருபவர் தானே என்ற சிறுமையான நோக்கம் அவனிடம் சிறிது மருவியிருந்தது. அதைக் குறிப்பால் உணர்ந்த இப்பெருந்தகை அவனுக்கு உறுதி நலன்களைத் தெளிவாக அறிவுறுத்தினர். அந்த அறிவுரைகள் உணர்வின் ஒளிகளாய் வெளியே விரைந்து வந்தன. அயலே வருவன காணுக.

ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசில் மாக்கள்;
வரிசை அறிதலோ அரிதே; பெரிதும்
ஈதல் எளிதே; மாவண் தோன்றல்!
அது நற்கு அறிந்தனை யாயின்
பொதுநோக்கு ஒழிமதி புலவர் மாட்டே. (புறம் 121)

"ஒரு வள்ளியோனை நினைந்து பல இடங்களிலுமிருந்து பலரும் வருவர்; அவரவரது தகுதியை அறிந்து மதிக்க வேண்டும்; அந்த மதிப்பே அவர்க்குப் பெரிய வெகுமதியாம்; நீ கொடுக்கும் எந்தப் பொருளும் அதற்கு ஈடு ஆகாது; இதனை நீ சிந்தித்துத் தெளிந்து கொள்ள வேண்டும்; இதனால் நலம் பல உளவாம்" என்று இங்ஙனம் அந்த மேதை போதித்துள்ளார்.

**பொது நோக்கு ஒழி; வரிசை அறிந்து தெளி!** என்னும் இது தேவர் வாய்மொழியோடு ஒத்து வந்துள்ளமையை ஈண்டு உய்த்துணர்ந்து உவந்து கொள்கிறோம்.

மாகம் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையின் ஏக்கழுத்த மிக்குடைய—மாகொல்
பகைமுகத்த ஒள்வேலான் பார்வையில் தீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு. (நீதிநெறி 39)

பெரும் பொருள்களை அள்ளிக் கொடுப்பதினும் அரசன் வரிசை அறிந்து நோக்குவதில் உண்டாகும் இன்பம் தன்னை நோக்கிவரும் அறிஞர்க்கு உயர்ந்ததாம் என இது உணர்த்தியுளது. **பார்வையில் தீட்டும் நன்கு மதிப்பை** இங்கே பார்த்து மகிழ்கின்றோம்.

பெருங்கொடை இரும்பொறை இன்னுரை வரிசை நோக்கு வேந்தனுக்கு மேன்மை பயந்து மேலான கிளைஞர்களை வளமா விளைத்து நலமா வளர்த்தருளுகின்றன.

தகுதியறிந்து ஆதரிக்கும் தன்மையாளன் மிகுதியான உறவினங்களை மேவி எவ்வழியும் மேலோனாய் எங்கும் இனிது சிறந்து விளங்குவான்.

இவ்வுண்மை பூதப்பாண்டியன் பால் தெரிய வந்தது.

## சரிதம்.

இம்மன்னன் மதுரையம்பதியிலிருந்து ஆட்சிபுரிந்த மாட்சிமை யாளன். பல கலைகளிலும் தலைமையான புலமை யுடையவன். சிறந்த போர்வீரன். அருந்திறலும் பெருந்தகவும் பேராண்மையுமுடைய இவன் மதிநலமுடையாரை எவ்வழியும் இனிது பேணி வந்தான். அந்துவஞ்சாத்தன், ஆதனழிசி, மாவன் முதலிய புலவர் பலர் இவன்பால் பேரன்புடையவராய் மருவியிருந்தார். தகுதிகண்டு தக்கவரை ஆதரித்து வந்தமையால் மிக்க கிளைஞர்கள் இவனைச் சூழ்ந்து வாழ்ந்து வந்தனர். இவனது இசை திசைகள் தோறும் பரவி வந்தது. மறுபுலமன்னர் பொறாமை கொண்டு இவனைப் பொருது வெல்லக் கருதி நின்றனர். அதனை அறிந்ததும் வீர சபதம் கூறி இவன் வீறுடன் எழுந்தான். போர்மேல் மூண்ட பொழுது இவன் கூறிய வீர மொழிகள் விவேக ஒளிகளாய் வெளி வந்தன. அயலே வருவன அறிக.

மடங்கலிற் சினைஇ மடங்கா உள்ளத்து
அடங்காத் தானை வேந்தருடங் கியைந்து
என்னொடு பொருதும் என்ப; அவரை
ஆரமர் ஆலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறம் காணேன் ஆயின், சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக;
அறனிலை திரியா அன்பின் அவையத்துத்
திறனில் ஒருவனை நாட்டி முறை திரிந்து
மெலிகோல் செய்தேன் ஆகுக; மலிபுகழ்
வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பின்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவனும், மன்னெயில் ஆந்தையும், உரைசால்
அந்துவஞ் சாத்தனும், ஆதனழிசியும்,
வெஞ்சின இயக்கனும், உளப்படப் பிறரும்
கண்போல் நண்பின் கேளிரொடு கலந்த
இன்களி மகிழ்நகை இழுக்கியான் ஒன்றோ
மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த
தென்புலம் காவலின் ஒரீஇப் பிறர்
வன்புலம் காவலின் மாறியான் பிறக்கே. (புறம் 71)

இந்தப் பாடலை ஊன்றிக் கவனியுங்கள். மான வீரம் மதிமாண்பு உள்ளப் பண்பு உழுவலன்பு தழுவிய நண்பு கோக்குடிச் சிறப்பு ஆட்சிமுறை முதலிய நிலைமைகள் எல்லாம் தலைமைகளாய் இதில் காட்சிக்கு வந்துள்ளன. கற்பரசியான தனது அருமை மனைவிபால் உரிமையுடன் இவன் ஆர்வம்மீக் கூர்ந்து வந்துள்ளான்.

**சிறந்த பேர் அமர் உண்கண் இவள்** என்று இங்ஙனம் சுட்டியிருத்தலால் இவன் அருகிலேயே அப்பதிவிரதை மருவியிருந்துள்ள வுண்மை தெரிய வந்தது. **கண்போல் நண்பின் கேளிர்** என்றதனால் உறவினர்பால் இவன் கொண்டிருந்த அன்பும், இவனை அவர் உரிமையோடு சூழ்ந்து வாழ்ந்து வந்துள்ள பண்பும் காண வந்தன. **வேந்தன் வரிசையா நோக்கின் அது நோக்கி வாழ்வார் பலர்;** அந்த நோக்கு அரசுக்கு அதிசய பாக்கியம் என்பதை உலகம் இவன் பால் கண்டு மகிழ்ந்தது.

**தரந்தெரிந்து பேணும் தகவுடையான் கேளிர்**
**உரந்தொடர்ந்து நிற்பன் உயர்ந்து.**

*தகுதி அறிந்து தழுவுக.*

---

529 திண்டோட் குலேசனைமுன் தீர்ந்தகன்றோன் பின்பன்பு
கொண்டுவந்தான் என்னே குமரேசா—பண்டு
தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்
காரண மின்றி வரும். (கூ)

இ-ள்.

குமரேசா! குலேச பாண்டியனைப் பிரிந்து போன இடைக்காடர் பின்பு ஏன் உறவாகி உவந்து வந்தார்? எனின், தமர் ஆகித் தன் துறந்தார் சுற்றம் அமராமைக் காரணம் இன்றி வரும் என்க.

*அயல் அகன்றவர் இயல்பு அறிய வந்தது.*

உறவாயிருந்து தன்னைப் பிரிந்து போனவர் பின்பு சுற்றமாய் வருதல் முன்பு நீங்க நேர்ந்த காரணம் தீர்ந்து போவதால் தானாகவே உண்டாம்.